# சாசனமும் தமிழும்




வரிவடிவம், மொழி, இலக்கியம், பண்பாடு,
வழக்காறுகள், இலங்கை.



கலாநிதி ஆ. வேலுப்பிள்ளை,
சிரேஷ்ட விரிவுரையாளர்,
தமிழ்த்துறை,
இலங்கைப் பல்கலைக்கழகம்,
பேராதனை.

[விலை ரூ. 10

முதற் பதிப்பு, ஏப்ரில், 1971.


# Inscriptions and Tamil Studies

— Palaeography,
— Language,
— Culture,
— Literature,
— Usages,
— Ceylon.

By

A. VELUPPILLAI, PH. D. (Cey.); D. Phil. (Oxon.),
Senior Lecturer in Tamil,
University of Ceylon,
Peradeniya (CEYLON).

அச்சிட்டோர்:-
நேஷனல் பிரிண்டர்ஸ்,
241, கொழும்பு வீதி,
கண்டி.

சாசனத் தமிழ்மொழி

ஆராய்ச்சியில் முதல்வராக விளங்கியவரும்

இலங்கைப் பல்கலைக்கழகத்திலே சாசனத்

தமிழை முதலிலே கற்பித்தவரும்

என் ஆசிரியருமான

காலஞ்சென்ற

**பேராசிரியர் க. கணபதிப்பிள்ளைக்குச்**

சமர்ப்பணம்.

ஆசிரியரின் பிறநூல்கள்:-

1. தமிழ் வரலாற்றிலக்கணம்: (1966)

2. தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும் (1969)

# வுரை

''பழமை பழமையென்று
பாவனைபேச லன்றிப்
பழமை இருந்த நிலை — கிளியே
பாமர ரேதறிவார்''

— சுப்பிரமணிய பாரதியார்

'கல்வி கரையில கற்பவர் நாள்சில' என முன்னோர் கண்ட உண்மை, காலப்போக்கிலே, இன்னும் இன்னும் வலுப்பெற்று வருகின்றது; கல்வியின் பரப்பு விரிந்து விரிந்து செல்லக் கற்பவர் ஒருவர் கற்கக்கூடிய கலைகள் எண்ணிக்கையிலே குறுகிக் குறுகிச் செல்லுகின்றன. திறமைபெறவேண்டுமானால் ஒருவர் ஒரு கலை மட்டுமே கற்கவேண்டும் என்ற நிலை தோன்றுகிறது. ஒரு கலையிலுள்ள பலதுறைகளிலேதானும் ஒருவர் சிறப்பான திறமை பெறமுடியாது என்ற நிலை தோன்றியுள்ளது. சிறப்பான திறமையை நாடிச் செல்பவர் குறுகிய நோக்குள்ள கல்வியைப் பெறும் அபாயம் இன்று தோன்றியுள்ளது: பரந்த கல்வியைப் பெறுபவர் எதிலும் திறமைசாலியாக விளங்குவது வில்லலங்கம்: இந்த இரண்டு நிலைகளுக்குமிடையில் அமைதிகாணவேண்டும். சிறப்பான திறமை ஒரு கலையில் அல்லது அதன் ஒரு துறையில் மட்டுமே ஏற்படக்கூடுமாயினும் அறிவு வளர்வதற்குப் பல கலையறிவும் பல துறையறிவும் அவசியம்: தமிழ் அல்லது தமிழோடு தொடர்புடைய கலைகளைக் கற்பவருக்கு இந்த நூல் பயன்படும்;

தமிழ்க்கல்வி தமிழ்ச் சாசன அறிவு இன்றிப் பூரணத்துவம் பெறாது: தமிழ் இலக்கிய வளத்துக்குத் தமிழ்ச்சாசன வளம் குறைந்ததன்று; தமிழ் இலக்கிய இலக்கண நூல்கள், தமிழ்ச்சாசனங்கள், தமிழ்நாட்டுத் தொல்பொருட் சின்னங்கள் என்பன பண்டைக்கால, இடைக்காலத் தமிழகத்தை அறிந்துகொள்வதற்கு வேண்டிய முக்கியமான மூன்றுவகை மூலாதாரங்களெனலாம். சாசனம் என்பது வடமொழிச் சொல். சாசனம் என்பதற்குப் பதிலாகக் கல்வெட்டு என்ற தமிழ்ச்சொல் வழங்கப்படுவதுண்டு. சாசனங்களில் மிகப்பெரும்பாலன, கல்லில் வெட்டப்பட்டனவாதலால் இப்பெயர் வழக்குக்கு வந்திருக்கவேண்டும். கல்லில் வெட்டப்படாத செப்புப் பட்டயம் முதலியனவற்றையும் உள்ளடக்கக்கூடிய தமிழ்ச் சொல்லின்மையால், சாசனம் என்ற வடசொல் இங்கே எடுத்தாளப்படுகிறது. தமிழ்ச் சாசனங்கள், சில ஆயிரக் கணக்கில் வெளிவந்துள்ளன, சில ஆயிரக்கணக்கில் வெளிவரவேண்டியுள்ளன. இது வரை கண்டுபிடிக்கப்படாத தமிழ்ச் சாசனங்களும் பல இருக்கலாம்.

கடந்த பதினைந்து ஆண்டுகளாக நான் சாசனக் கல்வியில் ஈடுபட்டு வருகிறேன். 1957 ம் ஆண்டு, காலஞ் சென்ற தமிழ்ப் பேராசிரியர் க. கணபதிப்பிள்ளையிடம் சாசனம் பயிலத்தொடங்கினேன். பேராசிரியர் கணபதிப்பிள்ளையின் மேற்பார்வையிலே, பிற்காலப் பாண்டிய மன்னர்சிலர் காலத்துத் தமிழ்ச்சாசனங்களின் மொழிநடையை ஆராய்ந்து இலங்கைப் பல்கலைக்கழகத்தின் கலாநிதிப்பட்டத்திற்கான ஆராய்ச்சி நூலை 1962 ல் எழுதி முடித்தேன். இன்னொரு கலாநிதிப் பட்டம் பெற்றுக்கொள்வதற்காக அரசாங்க உபகாரப்பணம் பெற்று நான் ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகம் சென்றபோது திராவிடமொழியியலிலே துறைபோகியவர்களில் ஒருவ



ராக மதிக்கப்படும் பேராசிரியர் ரி. பரோ (T. Burrow) இன்னொரு காலத் தமிழ்ச் சாசனங்களையும் ஆராய்வது பெரும் பயனளிக்கும் என்று கூறி அத்துறையிலே என்னை ஊக்கினார். எனவே அவருடைய மேற்பார்வையிலும் சாசனங்களின் மொழிநடையை ஆராயும் வாய்ப்பு எனக்குக் கிட்டிற்று. பேராசிரியர் கணபதிப்பிள்ளை 1965 ம் ஆண்டு இலங்கைப் பல்கலைக்கழகத்திலிருந்து இளைப்பாறியபோது தமிழ்ச் சிறப்புக்கலை மாணவருக்குச் சாசனங்களைப் பயிற்றும் பொறுப்பு எனக்குக் கிடைத்தது. இலங்கைத் தமிழ்ச் சாசனங்களைப் பதிப்பிப்பதற்குச் சாசனவியலிலே சிறப்பான பயிற்சி வேண்டும் என்பதை உணர்ந்த இளைப்பாறிய தமிழ்ப்பேராசிரியர் வி. செல்வநாயகம் 1967 ம் ஆண்டு மைசூரிலுள்ள இந்திய அரசாங்கச் சாசனவியலாளர் அலுவலகத்துக்கு என்னைப் பயிற்சிக்கு அனுப்பிவைத்தார்.

1968 ம் ஆண்டு இலங்கை அரசாங்கப் புதைபொருளாராய்ச்சித் திணைக்களத்தோடு தொடர்பு கொண்டு இலங்கைத் தமிழ்ச் சாசனங்களைப் பதிப்பிக்கும் முயற்சியைத் தொடங்கினேன். சில சாசனங்களை ஆராய்ந்து கட்டுரைகள் எழுதினேன். 1969 அக்டோபரில், அரசாங்கப் புதைபொருளாராய்ச்சித் திணைக்களம் அக்கட்டுரைகளை இலங்கைச் சாசனவியல் (Epigraphia Zeylanica) என்ற சஞ்சிகையில் வெளியிட உடன்பட்டது. அச் சஞ்சிகை வெளிவரக் காலதாமதமாகியது. சாசனங்களைச் சொந்த முயற்சியாகப் பதிப்பிப்பதிலும் சில வில்லங்கங்கள் இருந்தன. பதிப்பு வெளியிடுவதனால், அது தக்கமுறையில் அமையவேண்டும் என்று விரும்பினேன். சாசனங்களைப் புகைப்படம் முதலியவற்றோடு வெளியிடுவதேமுறையாகும். சாசனங்களிலே காணப்படும் கிரந்த எழுத்துக்கள், தமிழ் எண்கள் என்பனவற்றுக்கும் அச்செழுத்துக்கள் பெற்றுக்கொள்வது இலங்கையிலே

சிரமமானது: சுருக்கமாகக் கூறுவதானால், சாசனங்களை நல்லமுறையிலே பதிப்பிப்பதற்குப் பெரும்பொருட் செலவும் பெருஞ்சிரமமும் ஏற்படும். சாசனங்களைப் பதிப்பிப்பதிலுள்ள சிரமங்கள் புலப்படத்தொடங்க, எனக்கு இலங்கைச் சாசனங்களை ஆராய்வதிலுள்ள ஈடுபாடு குறையத் தொடங்கியது. 1970 ம் ஆண்டுத் தொடக்கத்தில், இந்த நூலை எழுதத் தொடங்கினேன்.

இந்த நூல் எழுதுவதில் என்னுடைய நோக்கம் தமிழ்ச்சாசனக் கல்வி எவ்வெவ்வகையிலே தமிழ்க் கல்விக்கு உதவுகிறதென்பதை எடுத்துக்காட்டுவதேயாகும்; வரிவடிவம், மொழி, பண்பாடு, இலக்கியம், வழக்காறுகள் என்ற பகுதிகள் சாசனங்கள் எவ்வெவ்வகை ஆராய்ச்சிகளுக்கு இடந்தந்து நிற்கின்றன என்பதை எடுத்துக்காட்டுவன. இலங்கையராகிய எமக்கு இலங்கைத் தமிழ்ச்சாசன ஆராய்ச்சி முக்கியத்துவம் வாய்ந்ததால், அதனைப்பற்றியும் ஒரு தனிப்பகுதி இந்த நூலிலே இடம்பெறுகிறது.

இந்த நூலிலே கிரந்த எழுத்துக்களும் தமிழ் எண்களும் இயன்றவரை தவிர்க்கப்பட்டுள்ளன; கிரந்த எழுத்துக்களுக்குப் பதிலாக அவற்றுக்கினமான தமிழெழுத்துக்கள் தரப்படுகின்றன. பழைய தமிழெண்களுக்குப் பதிலாக இன்றைய தமிழில் வழங்கும் அரபு எண்கள் கையாளப்படுகின்றன. கிரந்த எழுத்துக்களில் தமிழில் பிறமொழிச் சொற்கள் சிலவற்றை எழுதும் போது சிலரால் வழங்கப்பட்டுவரும் ஷ, ஜ, ஸ, க்ஷ முதலியன மட்டுமே சாசன உதாரணங்களிலே எடுத்தாளப்படுகின்றன. கிரந்த எழுத்துக்களைப் பயன்படுத்தாத தமிழ்ச் சாசனங்கள் மிகச் சிலவே; அச்செழுத்துக்கள் கிடையாமையால், இந்நூல் இவ்வாறு ஆக்கப்பட்டுள்ளபோதிலும் கிரந்த எழுத்துக்களை வழங்க முடி

யாமை சாசனத்தின் உண்மையியல்பையும் சங்கத மொழிச்சொல் தமிழில்வந்து அமையுமாற்றையும் தெளிவாக விளக்கமுடியாமற் செய்கிறதென்பதை நான் உணருகிறேன்.

இந்த நூலின் முதற்பகுதியாக அமைந்துள்ள வரிவடிவம் என்ற பகுதி தமிழ்நாட்டிலிருந்த வரிவடிவங்களைப் பற்றிய பொதுவான குறிப்புகளைக் கொண்டது. தொல்வரிவடிவவியல் என்பதற்குப் பதிலாகத் தொல்லெழுத்தியல் என்ற சொற்றொடர் வழங்குவதுண்டு: எழுத்தியல் என்பது எழுத்திலக்கணத்தைக் குறிக்க வழங்குவதுண்டு: எழுத்து என்பது ஒலிவடிவம், வரிவடிவம் என்ற இரண்டையும் குறிக்கும். நன்னூலில், எழுத்தியல் என்பது ஒலிவடிவத்தின் இலக்கணத்தையே உணர்த்துகிறதெனலாம். எனவே, இங்கு தொல்வரிவடிவவியல் என்ற சொற்றொடர் வழங்கப்படுகிறது. வரிவடிவத்தைப்பற்றிய பகுதியிலே கூறப்படுகிற குறிப்புகள் பல, எழுத்துக்களின் பல்வேறுகால வரிவடிவங்களை நோக்கும்போதே தெளிவாக விளங்கும்; எழுத்துக்களின் வெவ்வேறுகால வரிவடிவங்களை உணர்த்தக்கூடிய அச்செழுத்துக்களின்மையால், அவற்றை இந்நூலிலே வெளியிடும் முயற்சி பெரும்பொருட் செலவுக்கு ஏதுவாகும்; அதனால், அவை இந்நூலிலே தரப்படவில்லை. இவ்வகையில் ஈடுபாடுடையோர், தமிழ்நாட்டுத் தொல்வரிவடிவவியலைப்பற்றி எழுந்த நூல்களை இந்த நூலோடு சேர்த்துப் பயன்படுத்த வேண்டும். தமிழ்நாட்டு வரிவடிவங்களின் தோற்றம், வளர்ச்சிபற்றிய கருத்துக்கள் விமர்சனஞ் செய்யப்பட்டுள்ளன. தமிழ்நாட்டு வரிவடிவங்களிலே காணப்படும் வடஇந்தியச் செல்வாக்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. தமிழ்வரிவடிவத்திலே காலப்போக்கில் எவ்வெத்தகைய காரணங்களாலே எவ்வெம்மாற்றங்களேற்பட்டனவென்பது சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

மொழி என்ற இரண்டாவது பகுதியிலே என்னுடைய கலாநிதிப்பட்டங்களுக்கான ஆராய்ச்சி நூல்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன; மொழி காலப்போக்கில் மாற்றமுற்றுச் செல்வது என்ற உண்மையை உணர்த்த வேண்டும் என்ற நோக்கத்தை முன்வைத்துள்ளேன்: இங்கு முந்திய சாசனங்களெனப்படுவன, சோழப்பேரரசு காலத்தின் நுழைவாயில் எனத் தக்க காலத்துக்கும், பிந்திய சாசனங்களெனப்படுவன, சோழப் பேரரசுகாலத்தின் கடைவாயில் எனத்தக்க காலத்துக்கும் உரியன. இரண்டு காலச் சாசனங்களுக்குமிடையே முன்னூற்று முப்பது ஆண்டுகள் இடைவெளி உண்டு. தமிழ் இலக்கியம் பல துறைகளிலும் வேகமாக வளர்ச்சி பெற்ற காலம் சோழப் பெருமன்னர் காலமாதலால், மொழியிலும் மாற்றம் ஏற்பட்டிருக்கவேண்டுமென்பதை எதிர்பார்க்கலாம். பேச்சுவழக்கு மொழி வடிவங்களின் தொன்மையை உணர்த்தக்கூடிய பகுதிகளையும் இக்கட்டுரையிலே சேர்த்துள்ளேன்; பேச்சு வழக்கு வடிவங்கள் தரப்பட்டபோது அவை பேச்சு வழக்கு வடிவங்களென்று சுட்டிக் கூறப்படவில்லை. வாசகர்களின் பொது அறிவு பேச்சு வழக்கு வடிவங்களை இனங்கண்டுகொள்ளப்போதுமானது; இப்பகுதியிற் கூறப்படும் விடயங்கள் சில, என்னுடைய முதல் நூலாகிய தமிழ் வரலாற்றிலக்கணத்தில் இடம்பெற்றுள்ளன. அங்கு எடுத்தாளப்படாத சாசன மொழி பற்றிய விடயங்களும் இப்பகுதியிலே இடம் பெறுகின்றன. மேலும் இந்நூலிலே சாசனமொழி உதாரணங்களுக்கு அடிக்குறிப்புகள் தரப்பட்டுள்ளன.

பண்பாட்டைப் பற்றிய பகுதியிலே சாசனங்கள் கூற எடுத்துக்கொண்ட பொருளை ஆராய்வதையே நோக்கமாகக்கொண்டேன். வரலாறு எழுதப்படும்முறை இங்கு பின்பற்றப்படவில்லை. பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரி 'சோழர்' என்ற தம்முடைய வரலாற்று ஆங்

இல நூலிலே, அரசியல் வரலாறு, ஆட்சிமுறை, சமூக வாழ்க்கை என மூன்று முக்கிய பிரிவுகளைக் கொண்டுள்டுள்ளார். சாசனங்களை முக்கிய ஆதாரமாகக்கொண்டே இந்த நூலை யாத்துள்ளார். இடைக்காலத் தமிழ்நாட்டை ஆண்ட மன்னர் பெயர்கள், அவர் அருஞ்செயல்கள் என்பன சாசனங்களிலிருந்தே அறியவேண்டியுள்ளன; ஆனால் அரசியல் வரலாறு பண்பாட்டின் அமிசமாகக் கொள்ளப்படுவதில்லை. ஆட்சிமுறை, சமூக வாழ்க்கை என்பன பண்பாட்டின் அமிசங்களாகக் கொள்ளப்படுகின்றன. இந்த முறையிலே பல்லவர் ஆட்சிமுறை, சமூகவாழ்க்கை என்பனவற்றை டாக்டர் மீனாட்சியும் விசயநகரின் கீழ் ஆட்சிமுறை, சமூக வாழ்க்கை என்பனவற்றைப் பேராசிரியர் மகாலிங்கமும் ஆராய்ந்துள்ளனர். இந்த வரலாற்றாசிரியர்கள் தங்களுக்குத் தேவையான செய்திகளைப் பெற்றுக்கொள்ளச் சாசனங்களைப் பயன்படுத்தியுள்ளனர். நான் சாசனம் கூற எடுத்துக்கொண்ட பொருளையே வகுத்துக் கூறியுள்ளேன்; சாசன மொழியை ஆராயப்பயன்பட்ட சாசனங்கள் இங்கும் பயன்பட்டன; சோழப் பேரரசின் புகழ்மிக்க மன்னர் இருவரின் சாசனங்கள் சிலவும் ஆராயப்பட்டுள்ளன. முந்திய பகுதியிலும் இப்பகுதியிலும் தேவையான அடிக்குறிப்புகள் யாவும் தரப்படவில்லை. சாசனச் செய்திகளைப்பற்றிய அடிக்குறிப்புகள் பெருந்தொகையின. சாசனச் செய்திகளை எடுத்துத்தருவதே இந்நூலை எழுதியதன் நோக்கமாகும். எனவே அடிக்குறிப்புகளின் எண்ணிக்கையைக் குறைப்பதற்காக அவசியமான இடங்களிலே சாசனங்கள்பற்றிய அடிக்குறிப்புகளே பெரும்பாலும் தரப்பட்டுள்ளன;

இலக்கியத்தைப் பற்றிய கட்டுரையொன்று 'இளங்கதி'ரில் வெளியிடுவதற்காக 1970 மார்ச்சு மாதம் கொடுத்துள்ளேன். அக்கட்டுரை இங்கு விரிவாக எழுதப்பட்டுள்ளது. சாசனங்களிலும் இடம்பெறும் மெய்க்

கீர்த்தியிலக்கியம் ஓரளவு விரிவாக ஆராயப்படுகிறது; மெய்க்கீர்த்தி தவிர்ந்த பிற செய்யுள்கள் மண்டல ரீதியிலே அறிமுகப்படுத்தப்படுகின்றன; இலக்கிய வரலாற்றுக்குத் தேவையான செய்திகள் சாசனங்களிலிருந்து அறியப்படுமாற்றைக் காட்டியுள்ளேன்; உரைநடை வரலாற்றிலே சாசன உரைநடையின் முக்கியத்துவம் உணரப்படாமை எடுத்துக்காட்டப்படுகிறது.

இலக்கிய வழக்கிலிருந்தல்லாமல் சாசன வழக்கிலிருந்துமட்டும் தெரியவரும் வழக்காறுகள் பல உள; அவற்றுட் சிலவற்றின் பொருள் தெளிவாக அறியக்கூடியதாயுள்ளது; வேறுசிலவற்றின் பொருள் இன்னும் தெளிவாகவில்லை. சிலவற்றின் பொருள் தக்க காரணமின்றி ஊகிக்கப்படுகின்றது; 'சாசன வழக்காறுகள்' என்பதும் தமிழாராய்ச்சிக்குரிய ஒரு பகுதியாக இருக்கிறது. இப்பகுதியிலே தரப்பட்ட வழக்காறுகளுட் பெரும்பாலன 'Indian Epigraphical Glossary,' 'South Indian Temple Inscriptions, Volume III, Part II' என்னும் நூல்களிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளன; சாசன வழக்காறுகள் சிலவற்றின் வடிவம், அமைப்பு, பொருள் என்பன இப்பகுதியிலே விளக்கப்படுகின்றன.

இலங்கைத் தமிழ்ச் சாசனங்கள் என்ற பகுதியிலே தமிழ்ச் சாசனங்கள் காணப்படும் பகுதிகளும் அச்சாசனங்கள் எழுந்த சூழலும் மாவட்ட ரீதியிலே ஆராயப்படுகின்றன. சாசன ஆராய்ச்சி இன்றுள்ள நிலையும் இதுவரை நடந்த ஆராய்ச்சியும் இனி நடக்கவேண்டிய பணியும் எடுத்துக்கூறப்படுகின்றன.

இந்நூலிலே மிகச் சில இடங்களிலே 'கூறியது கூறல்' இடம்பெறுகிறது. 'கூறியது கூறல்' அவ்வவ் விடத்துப் பொருள் விளக்கத்துக்கு உதவுவதால், அதை நான் நீக்க முயலவில்லை;

அகரவரிசை, பிழைதிருத்தம் என்ற பகுதிகளும் சுருக்கமாக அமைந்துள்ளன. பக்கங்களை அதிகரித்துச் செல்ல விரும்பாமை சுருங்கிய அகரவரிசைக்குக் காரண மாகிறது; இந்த நூலைச் சில மாதங்களிலே அச்சிற் பதிப்பித்துவிடவேண்டும் என்ற என்னுடைய விருப்பத்தி னாலே அச்சுக் கோர்க்கப்பட்ட தாள்களின் பிழைதிருத தத்தை ஒருமுறையே என்னால் பார்க்கமுடிந்தது. எழுத் துப் பிழைகள், சில காணப்படுகின்றன. பிழைகள் சில நூலிலே திருத்தடபட்டுள்ளன; சில பிழைதிருத்தத்தில் இடம்பெறுகின்றன. சாசன வழக்காறுகளிலே காணப் பட்ட அச்சுப் பிழைகள் யாவும் திருத்தப்பட்டுள்ளன.

இந்த நூல் ஒருவகையில் ஒரு அறிமுக நூல் மட்டுமே. இந்த ஆறுவகை ஆராய்ச்சிகளையும் தமிழ்ச் சாசனங்களைக்கொண்டு நடாத்தி விரிவான நூல்கள் வெளியிட என்னால் இயலும். பல்கலைக் கழகத் தமிழ்த் துறையினர் சிறந்த ஆராய்ச்சி நூல்களை வெளியிடவேண் டும் என்ற குரல் கேட்கின்றது. இக்குரல் நான் பல்கலைக் கழகத்தில் உதவி விரிவுரையாளரானபோதே எனக்குக் கேட்டது. 1961-ம் ஆண்டு, நான் என்னுடைய தொழில் பற்றி ஒரு முடிவுக்கு வருவதற்கு இந்தக்குரல் காரண மாக இருந்தது. 1960-61ம் ஆண்டு நடந்த இலங்கைச் சிவில் சேர்வீசு போட்டிப் பரீட்சையில் இலங்கை முழு வதிலுமிருந்து தெரிவுசெய்யப்பட்ட ஐவருள் நானும் ஒருவன். அக்காலத்தில் சிவில் சேர்வீசு நியமனம் பெற்ற வர்கள் பொருள்வருவாய், அதிகாரம், அந்தஸ்து என் பன மிகுந்த பதவிகளை இன்று வகிக்கின்றனர். தமிழ்க்





கல்வியிலும் தமிழாராய்ச்சியிலும் தொடர்ந்து ஈடுபடுவதற்குப் பல்கலைக்கழக விரிவுரையாளர் பதவி உதவும் என்ற நம்பிக்கையே என்னைச் சிவில் சேர்விசு நியமனத்தை நிராகரிக்கச் செய்தது. சிறந்த ஆராய்ச்சி நூல்களை எழுதி வெளியிட வழியில்லை என்ற கவலை எனக்கு உண்டு.

சிறந்த ஆராய்ச்சி நூல்களை நாம் வெளியிடவில்லை என்று குறை கூறுபவர்கள் ஆராய்ச்சி நூல்களை வெளியிடுவதில் மூன்று பெரும்பணிகள் அடங்குகின்றன என்பதை உணர்வதில்லை. நூல்களை எழுதுவது; நூல்களை அச்சிடுவதிலுள்ள பொருட்செலவு, நேரக்கழிவு முதலியன; நூல்களை விற்பனை செய்வது என்பனவே அவை. தமிழ் ஆராய்ச்சியாளர் இம்மூன்று பணிகளையும் ஒருங்கே ஆற்றக்கூடியவராக இருக்கவேண்டும் என்று எதிர்பார்க்கக்கூடாது. நூல்களை எழுதுவதே ஆராய்ச்சியாளரின் பணியாக இருக்கவேண்டும்; பிற பணிகளைப் பொருள் வசதியும் பிற வசதியுமுள்ளோர் ஏற்க முன்வருவராயின், இந்த ஆறுவகை ஆராய்ச்சிகளிலே எதிலும் ஈடுபட்டு விரிவான ஆராய்ச்சி நூல் எழுத என்னால் இயலும்.

இந்த நூலை எழுதும்போதே எனக்குப் புலப்பட்ட குறைகளிலே சிலவற்றை மேலே எடுத்துக்காட்டியுள்ளேன். எனக்குப் புலப்படாத குறைகளும் பல இருக்கலாம். அவற்றை அறிஞர்கள் எனக்கு அறிவிப்பாராயின் அவர்களுக்கு நன்றியுள்ளவனாக இருப்பேன். இந்த நூலின் அல்லது இந்த நூற் பகுதிகளின் இரண்டாவது பதிப்பு வெளியிடக்கூடிய நிலைதோன்றுமாயின் அவர்களுக்கு நன்றி தெரிவித்து அவர்கள் கூறும் திருத்தங்களில் ஏற்றுக் கொள்ளக்கூடியனவற்றை ஏற்று நூலைத் திருத்தி வெளியிடுவேன்.

21-4-71 ஆ. வேலுப்பிள்ளை

# பொருளடக்கம்

# சாசனத்துத் தமிழ் வரிவடிவம்

தமிழ் வரிவடிவம் பற்றிய ஆராய்ச்சி தமிழ்ச் சாசனங்களைக்கொண்டே நடத்தப்படவேண்டியுள்ளது; பழந்தமிழ்நாட்டிலே பனையோலையே எழுதுவதற்குப் பெரிதும் பயன்பட்டது: பனையோலை விரைவில் அழிந்து போகும் தன்மையது; சில நூற்றாண்டுகள்தானும் தக்கவாறு பாதுகாக்கப்பட்டாலன்றி நிலைபெறக்கூடியதல்ல; மிகப் பழைய பனையோலைச் சுவடிகள் தஞ்சாவூர்ச் சரசுவதி மகாலிலும் சென்னை கீழைத்தேயக் கையெழுத்துப் பிரதிகள் நூல் நிலையத்திலும் ஆதீனங்கள் மடாலயங்களிலும் காணப்படுகின்றன: இச்சுவடிகள் யாவும் கடந்த நான்கு அல்லது ஐந்து நூற்றாண்டுகளுக்குக் காலத்தால் மேற்படாதவை; தமிழெழுத்து ஏறத்தாழ தற்கால வரிவடித்தையடைந்த பின்னரே இச்சுவடிகள் யாவும் எழுதப்பட்டன; ஏட்டில் எழுதப்பட்ட தமிழ் எழுத்துக்களுக்கும் அச்சுப் புத்தகத்தில் இடம்பெற்ற தமிழ் எழுத்துக்களுக்கும் சிற்சில வேறுபாடுகளுண்டு; எனினும், தமிழ் எழுத்தின் பழைய வரிவடிவத்தை யறிய, ஏட்டுச் சுவடிகள் உதவமாட்டா. பழைய தமிழிலக்கண நூல்களுள், வரிவடிவத்தைப்பற்றி யறிந்து கொள்வதற்கு உதவக்கூடியனவாக மிகச் சில குறிப்புகளே உண்டு. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தமிழ் மொழியை எழுதுவதற்கு வரிவடிவம் இருந்திருக்கிறது என்பது உண்மையாகும். பனையோலைச் சுவடிகள் காலத்திற்குக் காலம் பிரதிசெய்யப்பட்டபோது பிரதி செய்யப்பட்ட காலத்திற்குரிய எழுத்திலேயே புதிய பிரதிகள் ஆக்கப்பட்டன; சாசனங்கள் அவ்வக்காலத்

திற் பொறித்தபடியே இன்றும் காணப்படுகின்றன. எனவே சாசனவியலின் துணைகொண்டே, தமிழின் பழைய வரிவடிவத்தைப் பற்றி அறிந்து கொள்ளமுடியும். வரிவடிவம்பற்றிய நூல்கள், பண்பாடும் வரிவடிவமும், வரிவடிவில் மாற்றங்கள் என மூன்று கூறுகளாக இவ்விடயம் ஆராயப்படுகிறது;

## 1. வரிவடிவம்பற்றிய நூல்கள்

காலத்துக்குக்காலம் வரிவடிவங்கள் சிறிது சிறிதாக மாற்றமுற்று வந்தவற்றைப்பற்றிக் கற்பது தொல் வரிவடிவவியல் எனப்படுகின்றது: இந்தியத் தொல்வரிவடிவவியலைப் பற்றிய ஆராய்ச்சி, கல்கத்தாவில், பதினெட்டாம் நூற்றாண்டு இறுதியில் இடைக்காலச் சாசனங்கள் சிலற்றை ஆராய்வதுடன் தொடங்கிற்று. பத்தொன்பதாம் நூற்றாண்டில், பழைய இந்திய வரிவடிவங்களைப் பற்றிய அறிவு விரைவாக வளர்ச்சியடைந்து இந்திய உபகண்டம் முழுவதிலுமுள்ள எல்லாச் சாசனங்களையும் வாசிக்கக்கூடிய நிலைதோன்றியது. நூறு ஆண்டுகளுக்கு மேலாக வளர்ந்த இந்திய வரிவடிவங்களைப் பற்றிய அறிவு 1896 ம் ஆண்டில் 'இந்தியத் தொல் வரிவடிவஇயல்' என்ற பெயரில் பூலர் என்பவரால் நூல்வடிவில் வெளியிடப்பட்டது. 1918 ல் ஜி. எஸ். ஓஜா என்பவர் இந்திமொழியில் 'பாரதீய லிபிமாலா' என்ற நூலின் இரண்டாவது பதிப்பை வெளியிட்டார். பூலர், ஓஜா என்பவர்கள் காலத்தில் அறியப்படாதிருந்த பல சாசனங்களைப் பயன்படுத்தி, ஏ; எச். தானி என்பவர் 'இந்தியத் தொல்வரிவடிவவியல்' என்ற புதிய ஆராய்ச்சி நூலொன்றை 1963 ல் வெளியிட்டுள்ளார். தானி ஒரு புது முறையில் ஆராய்ச்சி நிகழ்த்தியுள்ளார்; பண்பாட்டுவளர்ச்சியின் ஒரு அமிசமே வரிவடிவமாற்றம் என்று அவர் கொண்டுள்ளார்; அவ்வாறு கொள்ளாத

போது, எழுத்துக்கள் வடிவங்களை அவ்வாறும் இவ்வாறும் காரணமின்றி மாற்றிக்கொள்வனபோலத் தோன்றும் என்றும் எழுத்துமுறை எதுவும் அவ்வாறு அமைவதில்லை என்றும் தம்முடைய நூலின் முகவுரையில் மேலும் கூறுவர்; இப்புதுமுறை ஆராய்ச்சி போற்றப்படவேண்டியது, கி. பி. எட்டாம் நூற்றாண்டு வரையிலான காலப்பகுதியைச் சேர்ந்த வரிவடிவங்களை அவர் தம்முடைய நூலில் ஆராய்ந்துள்ளார். அவருடைய முடிபுகள் சில கருத்து வேறுபாடுகளுக்கு இடந்தருகின்றன. இந்தியத் தொல் வரலாறுபற்றிய கருத்து வேறுபாடுகள் சில நீங்கும்வரை, அந்த முடிபுகள் அவ்வாறே கருத்து வேறுபாடுகளுக்குரியனவாக இருக்கும். ஆனால் அவருடைய ஆராய்ச்சிமுறை, 'இந்தியத் தொல்வரிவடிவவியல்' ஆராய்ச்சியில் ஒரு வளர்ச்சிப்படியாகும் எனத் துணிந்து கூறலாம். பிற இந்திய வரிவடிவங்களின் பின்னணியில் வைத்து கி. பி. எட்டாம் நூற்றாண்டு வரையிலான தென்னிந்திய எழுத்துக்களைத் தானி ஆராய்ந்துள்ளார். ஆனால் அவருடைய கூற்றுக்கள் சில, ஏற்கக்கூடியனவல்ல.

இந்தியத் தொல்வரிவடிவவியலைப் பற்றிய ஆராய்ச்சி வங்காளத்திலே தோன்றியபோதிலும் கடந்த நூற்றாண்டிலே தென்னிந்திய வரிவடிவங்களும் ஓரளவு கவனிக்கப்பட்டன. 1834 ல் பபிங்டன் என்பவர் மாமல்லபுரத்திற் காணப்பட்ட சாசனங்களிலுள்ள எழுத்துக்களை அட்டவணை செய்தார்.[1] 1837 ல் கப்டன் எச். ஹார்க்கின்ஸ் என்பவர் தென்னிந்தியத் தீபகற்பத்திலுள்ள மொழிகளின் பழைய வரிவடிவங்களையும் புதிய வரிவடிவங்களையும் தொகுத்தார்; ஜேம்சு பிரின்

1. Babington - Journal of the Asiatic Society of Bengal (1837), pp. 219-20. Plate XIII.

செப் என்பவர் 'கி: மு: 543 லிருந்து கி. பி: 1200 வரை சங்கத மொழி நெடுங்கணக்கு அடைந்த மாற்றங்கள்' என்ற தலைப்பில் அட்டவணை ஒன்று தயாரித்து, காலம் தெரியாத சாசனங்களின் காலத்தை நிர்ணயிப்பதற்கு இந்த அட்டவணை உதவக்கூடும் என்ற கருத்தை வெளியிட்டார்.[2] இந்தியத் தொல்வரிவடிவவியல் இந்தக் கருத்தை மையமாகக் கொண்டே வளரத் தொடங்கிற்று; அக்காலத்திலிருந்து இந்தத்துறையிலெழுதப்பட்டவையாவும், எழுதப்பட்ட காலம் தெரியவராத பெருந்தொகையான சாசனங்களின் காலத்தை நிர்ணயிப்பதற்குப் பயன்படக்கூடிய கால அட்டவணையைத் தயாரிப்பதையே நோக்கமாகக் கொண்டன; 1874 ல், ஏ. சி. பர்ணல் என்பவர் வெளியிட்ட 'தென்னிந்தியத் தொல் வரிவடிவவியலின் மூலாதாரங்கள்' என்ற நூல் அத்தகையதே.[2a] தென்னிந்தியச் சாசனங்களையும் சுவடிகளையும் கற்பதற்கு ஒரு முன்னுரையாக அமையக்கூடிய வகையில் இந்நூல் எழுதப்பட்டதாக நூலாசிரியரே கூறியுள்ளார்; ஒப்பியல் மொழிநூல் அறிஞரான கால்டுவெல் தென்னிந்தியச் சாசனங்களிலும் ஈடுபாடு உள்ளவராதலினால் பர்ணலினுடைய கருத்துக்கள் சிலவற்றைப் பற்றிய தம்முடைய விமரிசனத்தை வெளியிட்டுள்ளார்.[3] பர்ணலின் நூல் வெளிவந்ததற்கு அடுத்த ஆண்டில் கால்டுவெல்லின் விமரிசனம் அவருடைய திராவிட மொழி ஒப்பிலக்கண நூலின் இரண்டாவது பதிப்பில் வெளிவந்தது, கால்டுவெல்லின் அபிப்பிராயங்கள் பிற்காலத்தில் வந்த தொல்வரிவடிவவியலாரால் ஏற்கக் கூடியனவாயுள்ளன:

---

2. Prinsep J, - Essays on Indian Antiquities, Edited by E. Thomas, London, 1858.

2a. Burnell, A. C. - Elements of South Indian Palaeography.

3. Caldwell - Comparative Grammar of the Dravidian Languages (1875)

தமிழ்த் தொல்வரிவடிவவியலைப் பற்றி இருப தாம் நூற்றுண்டு ஆராய்ச்சிகளை நோக்குவது போது மானது; இந்த நூற்றுண்டில் முதன்முதல் ஆராய்ச் சியை வெளியிட்ட ரி. ஏ. கோபிநாதராவ் என்பவர் இந்தியத் தொல்வரிவடிவவியலாரிடம் தென்னிந்தியா தனக்கு உரிய கவனத்தைப் பெறவில்லையென்று குறைப் பட்டுக்கொள்கின்றுர்.[4] இந்தியாவைப்பற்றியும், இந் திய வரலாற்றைப் பற்றியும் ஆராய்பவர்களைப் பற்றித் தென்னிந்தியாவில் பொதுவாகத் தெரிவிக்கப்படும் குறை பாடுதான் இது; வட இந்தியா அல்லது வட இந்தியப் பண்பாட்டோடு தொடர்பு ஏற்படும்போது மட்டுமே தென்னிந்தியா குறிப்பிடப்படுகிறது; பூலருடைய நூலில் தென்னிந்தியாவிற்குக் கிடைத்த முக்கியத்துவம் போதாது என்பதையே கோபிநாதராவ் மேற்கண்டவாறு குறிப்பிட்டிருக்கவேண்டும்; திருவாங்கூர் புதைபொரு ளாராய்ச்சி வெளியீடு முதலாம் தொகுதியில் 'தமிழ்-கிரந்த நெடுங்கணக்கின் வளர்ச்சி பற்றி ஒரு அத்தியா யம்' என்றும் 'வட்டெழுத்துச் சாசனங்களின் மாதிரி கள்' என்றும் இரண்டு கட்டுரைகள் கோபிநாதராவ் எழுதியுள்ளார்; தமிழ்-கிரந்த எழுத்துமுறை பற்றியும் எண்கள் பற்றியும் ஆராயும்போது, அவர் பிராமிச் சா சனங்களிலிருந்து ஓர் எழுத்தை அல்லது எண்ணைத் தந்து அது பிற்காலங்களில் எவ்வாறு மாறிவந்தது எனக் காட்டுகின்றுர்; கிரந்தம், தமிழ் என்பவைகளை அவர் தனித்தனியே ஆராய்கின்றுர். அந்த அத்தியாயத்தின் இறுதியில், வெவ்வேறு காலக் கிரந்த எழுத்துக்களின் அட்டவணைகளையும் தமிழ் எழுத்துக்களின் அட்டவணை களையும் தருகிறுர். வட்டெழுத்தைப்பற்றி ஒரு முன் னுரை தந்து அதன் பின்பு வட்டெழுத்துச் சாசனங்க

---

4. Gopinatha Rao T. A. - Travancore Archaeological Series Vol. I, p. 201.

ளின் மாதிரிகளைத் தருகிறார்3 நீண்ட காலமாக வட்டெழுத்து வழங்கிய பிரதேசம் திருவாங்கூரேயாதலால் அப் பிரதேசத்துப் புதைபொருளாராய்ச்சி வெளியீட்டில் இடம்பெறவேண்டிய வட்டெழுத்துச் சாசனங்கள் பல, அவருக்குக்கிடைத்திருக்கும். ரி. என். சுப்பிரமணியம் தமிழ்த் தொல்வரிவடிவ இயலைப்பற்றி ஆராய்ந்து கலைமகளில் தமிழ்க்கட்டுரைகள் எழுதிவந்தார்.[5] சிறிது காலத்தின்பின் அக் கட்டுரைகள் நூல் வடிவத்தில் வெளிவந்தன.[6] சிவராமமூர்த்தி தென்னிந்தியத் தொல்வரி வடிவவியலை ஆராய்ந்து 'இந்தியச் சாசனவியலும் தென்னிந்திய வரிவடிவங்களும்' என்ற நூலை 1957 ல் வெளியிட்டார். இந்திய வரிவடிவங்கள் யாவற்றிலும் ஒவ்வோர் எழுத்தும் பெற்றுவந்த வளர்ச்சிப் படிகளை இந் நூலிலே தந்துள்ளார். ஒவ்வோர் எழுத்தின் பல்வேறு வடிவங்களையும் ஒவ்வோர் அட்டவணையிற் காட்டமுயலும் இவர் ஒவ்வோர் அட்டவணைக்கும் நூலில் ஒவ்வொரு பக்கம் ஒதுக்கியுள்ளார். ஒவ்வோர் அட்டவணைக்கும் எதிர்ப்பக்கத்தில் அவ்வவ்வெழுத்து வெவ்வேறு வரிவடிவங்களில் வெவ்வேறு காலங்களில் அடைந்த மாற்றங்களை விளக்கியுள்ளார்; வடிவ மாற்றங்களுக்குக் காரணங்கள் கூறுது வடிவ மாற்றங்களை மட்டுமே அவர் கூறிச் சென்றுள்ளதால், அவருடைய நூல், எழுத்துக்களின் வடிவங்கள் மாறிவந்ததைப் பழம்பொருட்காட்சிச்சாலையில் வைத்துக்காட்டுவதற்கு மட்டுமே உதவக்கூடியது என்று தானியாற் கண்டிக்கப்படுகின்றது; ரி. என். சுப்பிரமணியம் தென்னிந்தியக் கோவிற் சாசனங்களைப் பற்றிய தம்முடைய வெளியீட்டில், தம்முடைய கருத்துக்களை வளர்த்து 'தமிழ்த் தொல்வரிவடிவ

---

5. கலைமகள் (சென்னை) in the late 1830's.
6. பண்டைத் தமிழ் எழுத்துக்கள்.

வியல்' என்ற பகுதியை ஆங்கிலத்தில் எழுதியுள்ளார்.[7] இவ்வாங்கிலப் பகுதி அண்மையில் வெளியிடப்பட்ட தாதலால், அதுவே இங்கு ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது; தமக்கு முந்திய தொல்வரிவடிவ வியலாரைப்போல ஒவ்வோரெழுத்தாக ஆராயாமல், ஒவ்வொரு வரிவடிவமாக ஆராய்ந்துள்ளார்; ஒவ்வொரு வரிவடிவத்தின் வளர்ச்சியையும் தென்னிந்திய அரசியல் வரலாற்றுக்காலப் பிரிவுகளோடு ஒத்த காலப் பிரிவுக ளாகப் பிரித்து ஆராய்கிறார். கடைசியாக, தானியின் நூல் 1963 ல் வெளிவந்தது; அதற்கு ஒரு விமர்சனம் எழுதும் சந்தர்ப்பம் அப்பொழுது இந்நூலாசிரியருக்குக் கிடைத்தது.[8]

தமிழ் வரிவடிவத்தின் தோற்றம் இந்துவெளி வரிவடிவத்திலிருப்பதாகக் கூறப்படுவது உண்டு: இஸ் பெயின் நாட்டிலிருந்து கத்தோலிக்க மதம் பரப்பவந்த பிதா எச். ஹீராஸ் என்பவர் இந்துவெளி மக்கள் திரா விடரெனக் கொண்டு அங்கு வழங்கிய மொழி பழந் திராவிடமெனக் காட்டமுனைந்தார். ஆனால் இந்துவெளி வரிவடிவம் இன்னும் திருப்திகரமாக வாசிக்கப்படவில்லை; அந்த மொழியும் அறியப்படாததாகவே இருக்கிறது. இந்துவெளி மக்கள் இந்திய ஆரியரெனக்கொண்டு அந்த வரிவடிவத்தை அதற்கேற்ப வாசிப்பவர்களும் இருக்கின் றார்கள்; ஆரியரும் சுமேரியரும் ஒரினத்தார் என்று கொண்ட எல். ஏ. வாட்டெல் என்பவர் சுமேரிய வரி வடிவத்துக்கும் இந்துவெளிவரிவடிவத்துக்கும் சில ஒற்று மைகளைக் கண்டு மிகுதியை ஊகித்து வாசித்துள்ளார்; பரணவிதான என்பவர் இந்துவெளியில் வழங்கிய மொழி பழைய சிங்களம் என்று கொண்டு வாசிக்க முயன்றுள்

7. South Indian Temple Inscriptions, Vol. III, Part II.

8. Oriental Art. Oxford. Volume X, p. 190.

ளார்; தெரியவராத வரிவடிவத்தில் தெரியவராத மொழியை வாசித்து உணர்தல் அரிது; இதுவரையிலான வாசிப்புகள் யாவும் தகராறுக்குரிய வாசிப்புகளாகக் காணப்படுகின்றன; இதை வாசித்துப் பயன்பெற முடியுமா என்ற நிலையே தோன்றிவிட்டது; இங்கு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டுள்ள தமிழ்த் தொல்வரிவடிவவியல் பற்றிய நூல்களில் ஒன்றும் இந்துவெளி எழுத்துத் திராவிட எழுத்து என்று குறிப்பிடாமை போற்றத்தக்கது: கோபிநாதராவ் காலத்தில் இந்துவெளிச் சின்னங்கள் கண்டுபிடிக்கப்படவில்லை. சிவராமமூர்த்தி இந்துவெளி எழுத்தைப் பற்றி ஆராயவில்லை, ரி: என்: சுப்பிரமணியம் இந்துவெளி எழுத்தை வாசிக்கமுடியவில்லை என்று உடன்பட்டுள்ளார். தானியும் இதே கருத்தினரே. ஆனால், தானியும் சிந்தித்திராத புது முறைகளால், இந்துவெளி எழுத்து வாசிக்கப்படக்கூடும் என்ற நிலை தோன்றியுள்ளது. இஸ்காந்தினேவிய ஆசிய கல்விக் கழகம் இந்து வெளி எழுத்தின் இரகசியங்களைக் கண்டறிவதற்காக 'கணனி' முறையைப் பயன்படுத்துகிறது: அக்கழகத்தின் வெளியீடுகளிலிருந்து சில பிழைகளைக் கண்டறிந்து கூறலாம். இந்துவெளிமொழி பழந்திராவிடமாகவே இருந்திருக்கவேண்டும் என அது ஊகித்துள்ளது.[9] அது இந்திய ஆரியமொழியாக அல்லது இந்தியாவில் இருந்து பிற்காலத்தில் மறைந்துவிட்ட மொழியாக ஏன் இருந்திருக்கக்கூடாது? அந்த ஊகத்தை வைத்துக்கொண்டு அதற்கேற்றமுறையில், அதன் வாசிப்பு நடைபெறுகிறது. ஒரே வடிவம் வெவ்வேறு சந்தர்ப்பங்களில் வெவ்வேறாக வாசிக்கப்பட்டுள்ளது.

---

9. Decipherment of the proto-Dravidan Inscriptions of the Indus Civilization. Three Announcements 1969-70. Copenhagen.

திராவிட மொழியின் சிறப்பியல்புகள் என்று கூறமுடியாத சில வழக்காறுகள் அது பழந்திராவிட மொழியாக வாசித்த பகுதியிற் காணப்படுகின்றது.[10] இந்த வாசிப்பிற் குறைகாணப்படுகிறபோதிலும் 'கணனி' முறை நன்கு விருத்தியடைந்து தக்கமுறையிற் பயன்படுத்தப்பட்டால், இந்துவெளி எழுத்தினது இரகசியங்கள் புலப்படக்கூடும் என்ற நம்பிக்கை இன்று காணப்படுகின்றது.

இந்துவெளி வரிவடிவம் பழைய திராவிட வரிவடிவம் என்று உடன்படும் நிலை அறிஞரிடையே ஏற்படுமானால், பிராமியின் தோற்றம் இந்துவெளி வரிவடிவத்திற் காணப்படுகின்றது என்று கூறத்தக்க நிலை வரலாம்; பிராமி வரிவடிவத்தின் தோற்றம் அபிப்பிராய பேதத்துக்கு இடமாயிருக்கிறது; பிராமி இந்தியாவிலேயே தோன்றியிருக்கவேண்டும் என்று இந்திய அறிஞர்கள் பொதுவாக நம்புகிறார்கள்; பிராமி மேற்காசியாவிலிருந்து பெறப்பட்டிருக்கவேண்டும் என்று ஐரோப்பிய அறிஞர்கள் பொதுவாகக் கூறுகிறார்கள்; வடசெமிதிக் வரிவடிவங்களிலிருந்து அதிலும் சிறப்பாக அரமெய்க் வரிவடிவத்திலிருந்து பிராமி பெறப்பட்டதாக வேண்டும் என்று டேவிட் டிறிஞ்சர் கருதுகிறார்.[11] பிராமியின் தோற்றம் பற்றித் தானியும் இதே கருத்துடையவர்; ஆனால், பிராமி செமிதிக் வடிவங்களை அப்படியே பின்பற்றவில்லை; செமிதிக் தூண்டுதலால் தோன்றியிருக்கலாம் என்று தானியும் உடன்படுகிறார். பிராமி

---

10. B.B. Lal, Director General of Archaeology, India, made these observations at the Second International Conference Seminar on Archaeology, Colombo 1969.

11. David Diringer - The Alphabet, pp. 336-37.

சங்கத மொழிக்கென்று வகுக்கப்பட்ட வரிவடிவம் அல்ல என்றும் சங்கத மொழிக்கு என்று எடுத்துக் கொள்ளப்பட்ட வரிவடிவம் மட்டுமே என்றும் தானியும் சுப்பிரமணியமும் சுட்டிக்காட்டியுள்ளனர்; பிராமி ஒரு திராவிடமொழிக்குரிய வடிவமாக இருந்து பாரதம் அகில இந்திய மொழியானபோது அம்மொழிக்கு ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கவேண்டும் என்று சுப்பிரமணியம் கூறுவர்; பிற்காலத்திற் புகுந்த சங்கதமொழிச் செல்வாக்காலேயே அவ்வரிவடிவ முறையில் எகர ஏகாரங்களுக்கும் ஒகர ஓகாரங்களுக்கும் வேறுபாடு இல்லாமற் போனது என்பர். இந்தச் சந்தர்ப்பத்தில், வரலாற்றுக் காலத்துக்கு முந்திய சித்திர எழுத்து முதலியவற்றுக்குத் தமிழ் நூல்களிலுள்ள சான்றுகள் என்று தாம் கருதுவனவற்றைத் தொகுத்துக்கூறியுள்ளார்.[12] இந்திய உபகண்டத்திலுள்ள மக்கட்குழுவினருள் தமிழரிடம் மட்டுமே இத்தகைய சான்றுகளைக் காணமுடியும் என்று மேலும் சுட்டியுள்ளார். இந்துவெளி எழுத்துக்கள் 'கணனி' முறையில் ஆராயப்படும் நிலை வரும்வரையில் இந்த வாதங்களில் இந் நூலாசிரியருக்கும் நம்பிக்கை ஏற்படவில்லை. இந்துவெளிவரிவடிவம் திராவிட வரிவடிவம் என்பது நிரூபிக்கப்பட்டால், இந்தியத் தொல்வரிவடிவியலையும் தமிழ்த் தொல்வரிவடிவவியலையும் முறையாகக் கற்பதற்குச் சுப்பிரமணியத்தின் வாதங்கள் பெருந்துணை புரியலாம்.

இந்தியத் தொல்வரிவடிவவியலில் பட்டிப்புரோலு சாசனமும் தமிழ் நாட்டுக்குகைச் சாசனங்களும் பெறும் இடமும் அபிப்பிராயபேதங்களைத் தோற்றுவித்துள்ளது:

---

12. T.N. Subramaniam-South Indian Temple Inscriptions Vol. III, Part II, History of the Art of writing and the Antiquity and origin of the Brāhmī.

தென்னிந்தியக்குகைச் சாசனங்களைப் பற்றிய அபிப்பிராயபேதங்கள் இருவகையிற் காணப்படுகின்றன. சாசனங்கள் கூறும்பொருளைப்பற்றியும் எழுந்த காலத்தைப் பற்றியும் வேறுபாடுகள் உள. இவற்றை ஒத்த சாசனங்கள் இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலும் இலங்கையிலும் காணப்பட்டபோதிலும் அச் சாசனங்கள் சிரமமின்றி வாசிக்கப்பட்டன. பாண்டிநாட்டுக் குகைச்சாசனங்களிற் பாகதம் தவிர்ந்த பிறிதொரு மொழி எழுதப்பட்டிருப்பதாகத் தெரிவதாலும் இச் சாசனங்களுக்கும் பல்லவர் காலத்திலிருந்து தொடர்ச்சியாகக் காணப்படும் தமிழ் நாட்டுச் சாசனங்களுக்குமிடையே பெரிய கால இடைவெளி இருப்பதாலும் இச் சாசனங்களை வாசிப்பது சிரமமாகிறது. எச். கிருஷ்ணசாஸ்திரி 1919லும் கே. வி. சுப்பிரமணிய ஐயர் 1924 லும் சி. நாராயணராவ் 1936லும் இச்சாசனங்களை வாசித்து விளக்கமுயன்றனர். இச்சாசனங்களின் மொழி பாகதமும் பழந்திராவிடமும் கலந்தது என்று கிருஷ்ணசாஸ்திரி கருதினர்; சில பாகதச் சொற்கள் கலந்த தமிழ்மொழி என்று சுப்பிரமணிய ஐயர் கருதினர்; பைசாச பாகதம் என்று நாராயணராவ் கருதினர்; ஐராவதம் மகாதேவன் உலகத் தமிழாராய்ச்சி மகாநாடு முதல் இரண்டிலும் இச் சாசனங்களைப்பற்றி ஒவ்வொரு கட்டுரை வாசித்துள்ளார்; குகைச்சாசனங்கள் சிலவற்றைத் தமிழ்ச் சாசனங்களாக அவர் கொண்டுள்ளார்; சங்க இலக்கியத்துச் செய்திகள் சில, இச்சாசனங்கள் சிலவற்றிலும் இடம்பெறுவதாக அவர் காட்டியுள்ளார். அவருடைய வாசிப்புகள் அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டால், தமிழ்த் தொல்வரிவடிவவியலில் ஒரு முக்கிய அத்தியாயமாகத் தென்னிந்தியக் குகைச் சாசனங்கள் விளங்கும். இச் சாசனங்களின் காலத்தைப்பற்றியும் அபிப்பிராயபேதம் உண்டு. அசோகனுடைய சாசனங்களின் காலமாகிய கி. மு. மூன்றும் நூற்றுண்டே குகைச் சாசனங்களின் காலம் என்று முடிவுகட்டினர்

சுப்பிரமணிய ஐயர். கி: பி: முதலாம் நூற்றாண்டின் முற்பாதிக்கு முன்பு இச்சாசனங்கள் பொறிக்கப்பட்டிருக்க முடியாது என்பர் தானி; கி. பி: இரண்டாம், மூன்றும் நூற்றாண்டுகளுக்குரியன இச்சாசனங்கள் என்பர் இளைப் பாறிய இந்திய அரசாங்கச் சாசனவியலாளரான டி: சி; சேர்க்கார்,[13] சாசனங்களிலுள்ள தமிழ் சங்க காலத் தமிழின் நிலைக்கு வளரவில்லையென்ற கருத்தினூற்போலும் சிவராமமூர்த்தியும் சுப்பிரமணியமும் கே: வி. சுப்பிரமணிய ஐயருடைய காலக்குறிப்பை ஏற்றுக்கொண்டனர்; ஆனுல், ஐராவதம் மகாதேவனுடைய விளக்கங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டால், குகைச் சாசனங்களும் சங்க இலக்கியமும் சம காலத்தன எனக்கொள்ளலாம். சங்க காலம் கி: பி; மூன்றும் நூற்றாண்டில் முடிகிறது என இன்றைய தமிழறிஞர்கள் கொள்வர்: அப்படியானுல், வரிவடிவ ஆராய்ச்சி மூலமாகத் தானி கூறிய காலம் ஏற்றுக்கொள்ளத்தக்கதாகலாம்;

இந்தியப் பண்பாடு எப்பொழுதும் வட இந்தியாவிலிருந்து தென்னிந்தியாவுக்கும் இலங்கைக்கும் சென்றது என்ற தமது நம்பிக்கையோடு தென்னிந்தியாவும் இலங்கையும் மிகப்பழமையான பண்பாடுடையன என்ற நிலைமை முரணியதால் தென்னிந்தியாவையும் இலங்கையையும் குறிக்கும்போது தானி கடுமையான வார்த்தைகளைக்கூறியுள்ளார்; இவ்விரு பிரதேசங்களைப் பற்றித் தானி கூறுவன, யாவரும் உடன்படத்தக்கனவாக இல்லை. தென்னிந்திய வரிவடிவம், பிராமியிலிருந்து வேறுபட்டதால், மேற்காசியாவிலிருந்து வந்திருந்தது என்று பர்னல் கூறியதைத் தானி நிராகரித்தது ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்கிறது; திராவிடி என்று பெயரிடப்படக்கூடிய

---

13. D.C. Sircar – Indian Epigraphy, p. 46.

தென்னிந்திய வரிவடிவம் ஒன்று - முதல் பூலரால் கூறப் பட்டுப் பின்பு சிவராமமூர்த்தியாலும் சுப்பிரமணியத் தாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது - தானியால் நிராகரிக் கப்படும்போது, அது நியாயமாகத் தோன்றுகிறது. இலங் கைச் சாசனவியல் என்ற சஞ்சிகையைக் குறிக்கும்போது அது இந்தியச் சாசனவியலின் 'போலி'யாகச் செய்யப் பட்டது என்று கூறும் தானி பர்மாச் சாசனவியலைப் பற்றிக்கூறும்போது 'போலி' என்ற வார்த்தையைப் பயன்படுத்தவில்லை. தானி குறிப்பிடும் இலங்கையின் 'பழமை போற்றும் எழுத்து'ச் சில வரிவடிவங்களில் அசோ கனுடைய பிராமி எழுத்தை ஒத்துக்காணப்படுகின்றது; அசோகனுடைய காலத்தில் அந்த வடிவங்கள் வந்து சேர்ந்திராவிட்டால் இலங்கையர் எவ்வாறு அந்தப் பழைய வடிவங்களைப் போற்றியிருந்திருக்கலாம்? மரபு வழி இலங்கை வரலாற்றைக் கவனியாது தொல்வரி வடிவவியல் முறையில் மட்டும் இலங்கைப் பழைய சாச னங்களைப் பற்றிக் கூறுவதாகத் தானி சொல்வர்; இலங் கைக் குகைச் சாசனங்களின் காலம் தென்னிந்தியக் குகைச் சாசனங்களின் சமகாலம் அல்லது பிற்காலம் என்று தானி கொள்வர்; வடஇந்திய எழுத்துவடிவங்களை ஒத்த சில வடிவங்கள் சித்தண்ணவாசற் சாசனத்தில் வந்தமைந் திருத்தலால் அந்த வடஇந்தியச் சாசனங்களின் கால மாகிய கி. பி. முதலாம் நூற்றுண்டைச் சேர்ந்தது சித் தண்ணவாசற் சாசனம் என்பர் தானி. சில எழுத்து வடிவங்களை 'ஒழுங்கற்ற முறையில் வரையப்பட் டன' என்று தானி குறிப்பிடுவர்; பட்டிப்புரோலு சாசனத்தில் 'பிழைகள்' இருப்பதாகக் குறிப்பிடுவர். இலங்கைப் பழைய சாசனங்களைப் பற்றிக் குறிப்பிடும் போதும் இந்தச் சொற்பிரயோகங்களை வழங்குவர். தென் னிந்திய வரிவடிவங்களினதும் இலங்கை வரிவடிவத்தின தும் தொன்மையைத் தானி இவ்வாறு தட்டிக்கழித்து விடுகின்றார்; ஒருவகைச் சான்றைமட்டும்கொண்டு ஒருவன்

மையான மதிப்பீடு செய்வது சில சமயங்களிற் சிரமமாக் இருக்கும்; அதுவும் மூலாதாரங்கள் அருகிக் காணப்படும் பண்டைக்கால வரலாற்றைப்பற்றி இவ்வாறு செய்யப் படும் மதிப்பீடு பெரும்பாலும் தவருகவே அமையும்; மரபுவழியிற் சங்க இலக்கியம் என்று கூறப்பட்டுவந்தது இன்று முற்சங்க இலக்கியம் என்றும் பிற்சங்க இலக்கி யம் அல்லது சங்க மருவிய கால இலக்கியம் என்றும் பாகுபடுத்தப்படுகின்றது. முற்சங்க இலக்கியம் வீரயுகம் அல்லது இயற்கை நெறிக்காலத்தைப்பாடும் இலக்கிய மாகும். அக்காலத்திலேயே சிறந்த பண்பாட்டோடு விளங்கிய தமிழ்நாட்டுமக்கள் வாழ்க்கையில் வடஇந்தியச் செல்வாக்கு அதிகம் இருந்திருக்கவில்லை. ஆகவே பண் பாடு எப்போதும் வடக்கிலிருந்து தெற்குக்கு வந்தது என்று தானி கொள்வதை ஏற்கமுடியாது. தானிக்குத் தமிழ் மூலாதாரங்களிலும் மரபுவழி இலங்கை வரலாற் றிலும் பயிற்சியிருந்திருந்தால், அது அவருக்கு ஒரு பரந்த நோக்கைக் கொடுத்திருக்கும்.

தானி தென்னிந்திய வரிவடிவத்தின் தொன் மையை நிராகரிக்கிருர். ஆனல், உண்மையைக் கூற விரும்புகிருர். அதனல், அவருடைய நூலில் முரண் பாடுகள் காணப்படுகின்றன. 53 ம் பக்கத்தில் அவர் கூறுவது, 'மேற்குத் தெக்கணத்திலிருந்து பண்பாடு தெற்கு நோக்கிச் சென்றதை அமராவதியிலும் அதன் சுற்ருடலிலும் காணலாம். இந்த இடத்திலிருந்து எழுத்து முறை தென்னிந்தியாவின் மிலேச்சனத்தனமுள்ள மலைக் குகைகளுக்குள் புகுந்தது'. கிறீத்தவ ஆண்டுத் தொடக் கத்துக்குரியதும் தென்னிந்தியச் சாசனங்கள் மிகப் பழையவற்றுள் ஒன்றும் என்று தானி கருதிய ஒரு சாச னத்தைப் பற்றிக் கூறும்போது 73 ம் பக்கம், 'அமரா வதியிலும் அறியப்படாத வட இந்திய எழுத்து வடி உங்கள், சில தென்னிந்தியாவிலுள்ள சித்தன்னவாசற்

சாசனத்தில் இடம்பெறுகின்றன. இந்தச் சாசனத்திற் காணப்படும், இரண்டு பக்கங்களிலும் புள்ளி கொண்ட நேர்கோட்டையுடைய இகர வடிவம் அக்காலத்திலே தென்னிந்தியாவுக்கு வெளியில் எங்கும் காணப்படவில்லை; இந்த வடிவம் ஈகாரமாக வட இந்தியாவிலும் மேற்கிந்தியாவிலும் வழங்கத் தொடங்குகிறது; இது தெற்கிலிருந்து வடக்குக்கு வந்திருக்கலாமா?' பண்பாட்டுப் பரவுதல் இரு வழிகளிலும் நிகழ்ந்தது என்று அவர் கருதினுல் தெற்கை 'மிலேச்சத்தனமான' என்று அவர் ஏன் குறிப்பிட்டார்? 171ம் பக்கத்தில் அவர் கூறுவது 'வட இந்திய வடிவங்கள் கீழைமால்வா என்ற பாதையினூடாக வந்து கோதாவரி கிருஷ்ணு என்ற ஆறுகளின் வழியாகப் பரவித் தென்னிந்தியாவினுட் புகுந்தன; தெற்கிலிருந்து வடக்குக்கு வந்த வடிவங்கள் நேர் எதிர் வழியில் வந்தன.' தானியின் கருத்துப்படி பார்த்தால், தெற்கிலிருந்து வடக்குக்குச் சென்றது 'மிலேச்சத்தனமா?'

தமிழ் நாட்டிலுள்ள குகைச்சாசனங்களுக்கும் பல்லவர்காலச் சாசனங்களுக்கும் இடையே காலஇடைவெளி காணப்டுகின்றது. குகைச்சாசனங்களுள் மிகவும் பிந்தியன கி. பி. நான்காம் நூற்றுண்டுக்குரியதாகக் கொள்ளப்படும் திருநாதர் குன்றுச் சாசனமும் கி. பி. இரண்டாம் நூற்றுண்டைச் சேர்ந்ததாகக் கொள்ளப்படும் அரச்சலூர்ச் சாசனமுமாகும்; பெரும்பாலான குகைச்சாசனங்களின் காலம் கி. பி. மூன்றும் நூற்றுண்டாகக் கொள்ளப்பட்டதால், அவற்றிற்குப் பிந்தியனவாகவும் பல்லவர் காலச் சாசனங்களுக்கு முந்தியனவாகவும் இவை இருந்திருக்கவேண்டுமாதலால், இவையிரண்டு பகுதிகளுக்கும் இடைப்பட்டனவாக இவற்றின் காலம் நிர்ணயிக்கப்பட்டன; பழைய குகைச் சாசனங்களின் காலம் இன்று பின்னுக்குக் கொண்டுவரப்படுவ

தால், இந்தச் சாசனங்கள் இரண்டினது காலமும் இன்னும் பின்னுக்குக் கொண்டுவரப்படவேண்டும்; பல்லவர் காலம் என்பது கி. பி. ஆறும் நூற்றுண்டினிறுதியிலே தொடங்குகிறது என்று கொண்டால், அக்காலத்திற்கு முன்பே பல்லவர் வெளியிட்ட பாகதச் சாசனங்கள் சிலவும் சங்கதச் சாசனங்கள் சிலவும் கிடைத்துள்ளன வெனக்கொள்ளவேண்டும். கி. பி. ஏழாம் நூற்றுண்டிலிருந்து தமிழ் வரிவடிவத்திலும் கிரந்த வரிவடிவத்திலும் எழுதப்பட்ட சாசனங்கள் கிடைத்துள்ளன; கி. பி. எட்டாம் நூற்றுண்டிலிருந்து வட்டெழுத்துச் சாசனங்களும் கிடைத்துள்ளன. இந்த மூன்றுவகை வரிவடிவங்களும் தமிழ் நாட்டுக்கே பிரத்தியேகமாக உரியவை; இந்த மூன்று வரிவடிவங்களுக்கிடையிலான உறவும் பிற வரிவடிவங்களோடு அவற்றுக்குள்ள உறவும் ஆராயப்படவேண்டும்;

இந்த மூன்று வரிவடிவங்களோடு தெலுங்கு கன்னட வரிவடிவங்கள் மிக நெருங்கிய உறவுள்ளவையாகும்; இவற்றுக்கிடையிலான உறவை இன்றைய எழுத்து வடிவங்களிலும் காணலாம். தமிழ் வரிவடிவத்துக்கும் கிரந்த வரிவடிவத்துக்குமிடையிலான தொடர்பே மிக நெருக்கமானது; உ, ஊ, க, ங, த, ந, ய, வ என்பன இரண்டு வடிவங்களிலும் ஒரே விதமாக எழுதப்படுகின்றன. அ, ஆ, ஈ, ஓ, ஔ, ட, ற, ர, ல, ள என்னும் எழுத்துக்கள் இரண்டு வரிவடிவங்களிலும் மிகச் சிறிதளவே வேறுபடுகின்றன; கி. பி. பதினோராம் நூற்றுண்டுவரையில் இவ்விரு வரிவடிவங்களும் பல்லவருடைய நாட்டிலேயே வழங்கப்பட்டன. எனவே, இன்றைய அறிஞர் சிலர் இவ்விரு வரிவடிவங்களும் தோற்றத்தில் ஒன்றாக இருந்திருக்கலாம் என்பர். கிரந்தமும் தமிழும் அடைந்த வளர்ச்சிகூட கிட்டத்தட்ட ஒரே வகையினது; எனவே, இவையிரண்டையும் சேர்த்து

'கிரந்தத் தமிழ் வரிவடிவம்' என்பது உண்டு: சாசனத்தின் சங்கதப் பகுதியைக் கிரந்தத்திலும் தமிழ்ப் பகுதியை வட்டெழுத்திலும் எழுதிய பாண்டியர் சங்கதப் பகுதிக்கு இடையில் வந்த தமிழ்ச் சொற்களை எழுதத் தமிழ் வரிவடிவத்தையே பயன்படுத்தினர்; இவ்வழக்காற்றைப் பாண்டிய மன்னன் இராசசிம்மனுடைய பெரிய சின்னமனூர்ச் சாசனத்திற் காணலாம். எனவே, அந்தக் காலத்திலும் கிரந்தமும் தமிழும் ஒரே வரிவடிவமாகக் கணிக்கப்பட்டிருக்கவேண்டும். பல்லவ மன்னன் பரமேஸ்வரவர்மனுடைய கூரம் சாசனத்திலுள்ள கிரந்த வரிவடிவத்தையும் தமிழ் வரிவடிவத்தையும்ஒப்பிட்டால், உ, ட, ண, த, ந, ய, வ என்பனவும் உயிர் மெய் வடிவங்களில் வரும் ஆ, இ, ஈ, ஏ, ஓ என்னும் எழுத்துக்களின் குறிகளும் வரிவடிவங்கள் இரண்டிலும் ஒத்திருக்கக் காணலாம். க, ர என்ற எழுத்துக்களும் உகர உயிர்மெய்க் குறியும் மிகச் சிறிதளவே வேறுபடுகின்றன; நகர மெய் கொள்ளும் வடிவங்களும் ஓகார உயிரும் ஒத்திருக்கின்றன; கிரந்த வரிவடிவம் தமிழ்ப்பகுதிகளில் சங்கத மொழியை எழுதுவதற்குப் பயன்படுத்தப்பட்டது. இவ்விரு வரிவடிவங்களுக்குமிடையிலான மிக நெருங்கிய தொடர்பு பல்வேறு கருத்துக்களைத் தோற்றுவித்தது. ஆரியர் தமிழ் வரிவடிவத்தை ஏற்று, சங்கத மொழிக்குப் பிரத்தியேகமாக வேண்டிய புதிய எழுத்துக்களையும் அதனோடு சேர்த்துக் கிரந்தம் என்று பெயரிட்டனர் என்றார் எல்லீசு; பல்லவர் கிரந்த வரிவடிவத்தையும் தமிழ் வரிவடிவத்தையும் தென்னிந்தியாவிற் புகுத்தினர் என்று கொண்டார் ரி. என். சுப்பிரமணியம்;

கி. பி. எட்டாம் நூற்றாண்டில் வட்டெழுத்து நல்லமுறையில் அமைந்திருந்தது: வடிவத்தில் ஒப்புமையுள்ள பகரத்துக்கும் வகரத்துக்குமிடையிலான வேறுபாடும் ஙகரத்துக்கும் லுகரத்துக்கும் இடையிலான வேறு

பாடும் விளக்கமாகத் தோன்றின; பினீசிய எழுத்து, அரமெய்க் எழுத்து என்ற மேற்காசிய எழுத்துக்களி லிருந்து வட்டெழுத்துத் தோன்றியிருக்கவேண்டும் என்று பர்ணல் கொண்டார். அசோகனுடைய எழுத்து வேறு, வட்டெழுத்து வேறு என்ற கொள்கை அவரது; 'தமி ழெழுத்திலும் வட்டெழுத்து மிகத் தொன்மையானது. தமிழெழுத்து வட்டெழுத்தைக் காலப்போக்கில் ஒதுக்கி விட்டது' என்பது அவர் அபிப்பிராயமாகும். இந்த அபிப்பிராயத்தைக் கால்டுவெல் கண்டித்துள்ளார்; கோபிநாதராவ் கால்டுவெல்லோடு உடன்படுகிறார். கோபிநாதராவின் காலத்திலே தமிழ் நாட்டிலிருந்த குகைச்சாசனங்கள் அறியப்படவில்லை. வட்டெழுத்துப் பிந்திய காலத்ததாயிருப்பினும் அது குகைச்சாசன எழுத் திலிருந்து வளர்ச்சியடைந்திருக்கலாம். தென்னிந்தியாவி லுள்ள பிறவரிவடிவங்களைப்போல, வட்டெழுத்தும் அசோகன் காலப் பிராமியிலிருந்து வளர்ச்சியடைந்திருக்க வேண்டும் என்று கோபிநாதராவ் கருதினர். பல அமி சங்களில் வேறுபாடு இருந்தபோதிலும் வட்டெழுத்துத் தமிழெழுத்தை அடிப்படையாகக் கொண்டெழுந்த ஒரு செவ்வையற்ற வடிவம் என்று சிவராமமூர்த்தி கருதினர். தமிழ் நாட்டின் தென் மாவட்டங்களில் வட்டெழுத்துத் தமிழெழுத்தை ஒதுக்கிவிட்டது என்பது அவர் கூற்று. ரி. என். சுப்பிரமணியத்தின் நோக்கு வேறாகும். வட் டெழுத்தும் தமிழெழுத்தும் கலந்து எழுதப்பட்ட சாச னங்களை அவர் துணைக்கொள்கிறார். கி. பி. 950க்கு முற் பட்ட இத்தகைய சாசனங்கள் கங்கபாடி, வாணகப்பாடி, வடகொங்கு ஆகிய பிரதேசங்களிற் காணப்பட்டுள்ளன. பாண்டியர் அல்லது சேரரின் செல்வாக்குக்கு அப்பாற் பட்ட பிரதேசத்தில் ஒரு குறிப்பிட்ட காலத்தலைவயாக இத்தகைய சாசனங்கள் காணப்படுவதால், வட்டெழுத் துத் தமிழ்நாடு முழுவதும் முந்திய காலத்தில் வழக்கி லிருந்திருக்கவேண்டுமென்றும் பல்லவர்கள் தம்முடைய

பிரதேசத்திலே கிரந்தத் தமிழைப் புகுத்திய பின்பு இது வழக்கொழிந்திருக்க வேண்டுமென்றும் பல்லவருடைய நேரடி ஆட்சிக்குட்படாத கங்கபாடி, வாணகப்பாடி, வடகொங்கு என்னும் பிரதேசங்களில் கிரந்தத் தமிழ் சிறிது சிறிதாக மேனிலையடைந்தபோதும், இதுவும் வழங்கியதென்றும் முடிவுகட்டுகிறார்; ஆனால், கிரந்த வரிவடிவம் தமிழ்நாடு முழுவதும் வழங்கிவந்தது என்பதை ஞாபகத்திலிருத்தல் வேண்டும்; கிரந்த எழுத்துத் தமிழ் நாட்டிலேயே தோன்றியிருக்கவேண்டும் என்று தானி கூறுவர். எனவே, கிரந்தத் தமிழும் வட்டெழுத்தும் தமிழ் நாட்டின் வெவ்வேறு பகுதிகளிலே தோன்றியிருக்கலாம்.

கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து, கிரந்தத் தமிழின் வளர்ச்சி, ஆராய்ச்சியாளர் யாவராலும் விபரமாகக் கூறப்படுகிறது; தமிழ்த் தொல் வரிவடிவவியலிலுள்ள அபிப்பிராயபேதங்கள் அக்காலத்திலிருந்து ஆறுப் போகின்றன; ஆனால் ஒவ்வொருவரும் ஒவ்வொருவகையில் ஆராய்ந்துள்ளனர். கோபிநாதராவ் தமிழ் வரிவடிவத்திலுள்ள ஒவ்வோரெழுத்தையும் எடுத்து அது அசோகன் காலப் பிராமியில், திருநாதர் குன்றுச் சாசனத்தில், பல்லவர் காலத்தில், சோழர் கால முற்பகுதியில், சோழர் காலப்பிற்பகுதி - பாண்டியர் காலத்தில், இக்காலத்தில் எவ்வெவ் வடிவங்களில் வழங்கியுள்ளன எனச் சுட்டிக்காட்டுகிறார். பல்லவர் காலத் தொடக்கத் தமிழெழுத்து (கி. பி. ஏழாம் நூற்றாண்டு), நந்திவர்மன் பல்லவமல்லனுடைய சாசனங்கள் (கி. பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி), பல்லவர் காலப் பிற்பகுதி சோழர் கால முற்பகுதிச் சாசனங்கள் (கி. பி. ஒன்பதாம் பத்தாம் நூற்றாண்டுகள்), முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் காலத்துச் சாசனங்கள், (கி. பி. பத்தாம் நூற்றாண்டின் இறுதியும் பதினோராம் நூற்றாண்

டின் தொடக்கமும்), பிற்காலப் பாண்டிய சாசனங்கள் (கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டு) என வெவ்வேறு காலத் தமிழெழுத்துக்களை வரிசைப்படி தொகுத்துத் தருகிருர். கிரந்தத் தமிழ் வரிவடிவத்துக்கும் தெலுங்கு கன்னட வரிவடிவத்துக்கும் உள்ள ஒற்றுமைகளைச் சுட்டியுள்ளார்; இவருடைய கட்டுரையின் வளர்ச்சியே சிவராமமூர்த்தியின் நூல் எனலாம். ஒவ்வோர் எழுத்தின் வளர்ச்சியையும் ஒவ்வொரு பக்கத்திலே காலமுறையிலே தந்துள்ளார். அனைத்திந்தியப் பின்னணியில் வைத்து ஒவ்வோரெழுத்தின் வளர்ச்சியையும் அறிந்துகொள்ளச் சிவராமமூர்த்தியின் முறை உதவுகிறது. ரி. என். சுப்பிரமணியத்தின் நூல் ஒருவகையில் இன்னும் சிறந்தது; சுப்பிரமணியம் வரிவடிவ மாற்றங்களைத் தமிழ் நாட்டு அரசியல் வரலாற்ருேடு தொடர்புபடுத்த முயல்கிருர்; அவர் தமிழெழுத்துக்களின் வளர்ச்சியைப் பல்லவர் காலத்துக்கு நிகரான பழையகாலம் (கி. பி. 900க்கு முந்தியது) சோழர் காலத்துக்கு நிகரான இடைக்காலம் (கி. பி. 10-ம் நூற்ருண்டிலிருந்து 1250 வரை), இக்காலம் என மூன்று காலப் பிரிவுகளாகப் பிரிக்கிருர்; தமிழெழுத்து வளர்ச்சியை இரண்டாகப் பிரிப்பதே பொருத்தமானது; எகரத்தை ஏகாரத்திலிருந்தும் ஒகரத்தை ஓகாரத்திலிருந்தும் பிரிப்பதற்கான புள்ளி பதினேராம் நூற்ருண்டுவரை சாசனங்களிற் காணப்படுவதைக் கோபிநாதராவ் சுட்டிக்காட்டுகிருர்; பதினேராம் நூற்ருண்டுக்குப் பின் இப்புள்ளி காணப்படவில்லை; குறுமையும் நெடுமையும் சந்தர்ப்பத்தை நோக்கியே கணிக்கப்படவேண்டியுள்ளன; தமிழ்க் கிரந்த வரிவடிவங்களின் மாற்றங்கள் இருவகையில் நடைபெற்றன என அவர் மேலும் குறிப்பிடுவர்; நேர்கோடுகளுக்குப் பதிலாக வளைகோடுகளும் வளைகோடுகளுக்குப் பதிலாக நேர்கோடுகளும் எழுதப்பட்டமையே அவையிரண்டுமாகும்; சிவராமமூர்த்தியின் கூற்றுக்களிலிருந்து முதல்வகை மாற்றம்

கி. பி. பதினோராம் நூற்றாண்டுவரையிலும் இரண்டாம் வகை மாற்றம் கி. பி. பதினோராம் நூற்றாண்டிலிருந்தும் நடைபெற்றன என்பது தெளிவாகத் தெரியவருகிறது: 'நந்திவர்மனுடைய திருவெள்ளறைச் சாசனத்திலுள்ள தமிழெழுத்து சோழர் கால முற்பகுதியில் வளர்ச்சி யடைந்திருந்த தமிழ் வரிவடிவத்தின் வளர்ச்சிப் படிகளுள் ஒன்றாகும் (பக்கம் 228) 'உத்தம சோழனுடைய சென்னை நூதனப் பொருட்காட்சிச்சாலைச் சாசனம் பிற்காலம் பல்லவக் கிரந்தத் தமிழெழுத்து பெருமாற்றங்களின்றியே சோழர்கால முற்பகுதி எழுத்தாக வளர்ந்ததைக் காட்டு கிறது.' 'எட்டாவது நூற்றாண்டிலிருந்து கிரந்த எழுத்தில் ஏற்பட்ட முக்கியமான மாற்றம் எல்லா எழுத்துக் களின் வலப்பக்கக் கோணங்களும் வட்டங்களாக மாறி யமையே.' (பக்கம் 233) 'முதலாம் குலோத்துங்கன் காலத்திலிருந்து எழுத்துக்கள் அதிக அளவில் கோணங் களைப் பெற்று நீள்சதுர வடிவம் கொள்ளத்தொடங்கின.' (பக்கம் 234). 'கிரந்தத் தமிழ் வரிவடிவ எழுத்துக்கள் கோணங்களைப்பெற்ற நிலையில் விசயநகர்ப் பேரரசுச் சாசனங்களில் வளர்ச்சியின் கடைசி நிலையையடைந்தன'. சிவராமமூர்த்தி இந்தக் கருத்துக்களை வளர்த்துச் சென்று பண்பாட்டுப் பின்னணியோடு தொடர்புபடுத்தியிருப் பாரேயானால், அவர் தமிழ்நாட்டு வரிவடிவவியலுக்குப் பெருந்தொண்டாற்றியிருந்திருக்கலாம்.

கோபிநாதராவ் வட்டெழுத்தைப் பற்றிக் கூறும் போது, எட்டாம் நூற்றாண்டிலிருந்து அது சீர்கே டடைந்து வந்ததும் பதினோராம் நூற்றாண்டில் அது பாண்டிநாட்டிலிருந்து மறைந்ததும் கிரந்தத்தை மாற்றி யெழுதிய மலையாள எழுத்துக்கு எதிர்நிற்கலாற்றாது கேரளத்தில் ஒடுங்கி வந்ததும் விளக்கியுள்ளார். ரி. என். சுப்பிரமணியம் தமிழெழுத்தை ஆராய்ந்தமாதிரியே, வட்டெழுத்தையும் ஆராய்ந்துள்ளார்:- பழைய முறை,

கி. பி. 700-950 வரை (முதற் பாண்டிய அரசு காலம்), இடைக்கால முறை, கி. பி. 950-1350 வரை (மலையாள வரிவடிவத்தின் தோற்றம் வரை கேரளத்தில் வழக்கு மிகுதி), பிற்கால முறையும் சீர்கேடும். சிவராமமூர்த்தி வட்டெழுத்து உதாரணங்களைக் கி. பி. எட்டாம் நூற்றாண்டுக்கும் வட்டெழுத்துப் பாண்டி நாட்டிலிருந்து மறைந்த பதினோராம் நூற்றாண்டுக்கும் மட்டுமே தந்துள்ளார்; சிவராமமூர்த்தி பதினோராம் நூற்றாண்டோடு ஏன் நிறுத்தினார் என்பது விளங்கவில்லை. கேரளத்தில், கி. பி. பதினான்காம் நூற்றாண்டுவரை வட்டெழுத்து முக்கியத்துவம் பெற்றிருந்தது. இந்த வரிவடிவம் இன்னும் விரிவாக ஆராயப்படவேண்டும். தானியின் புது முறையும் பயன்படுத்தப்படவேண்டும்.

இந்திய வரிவடிவங்கள் இலங்கையிலும் தென்கிழ் ஆசியாவிலும் உள்ள வரிவடிவங்களைத் தோற்றுவிக்கவும் உதவின. கி. பி. 8-வது நூற்றாண்டுவரையிலே ஆராய்ச்சி நடத்தியுள்ள தானி இந்திய வரிவடிவங்களுக்கும் இப்பிரதேசத்திலுள்ள வரிவடிவங்களுக்கும் இடையிலான உறவை ஆராய்வதற்குத் தனித்தனி அத்தியாயங்கள் ஒதுக்கியுள்ளார். கோபிநாதராவும் ரி. என். சுப்பிரமணியமும் தமிழ்த் தொல்வரிவடிவவியலின் இந்த அமிசத்தைப்பற்றி எதுவுமே கூறவில்லை. சிவராமமூர்த்தி இந்தியச் சாசனவியலின் செல்வாக்குப் பிறநாடுகளிற் காணப்படுமாற்றை ஆராய்ந்து இத்துறையிலே தென்னிந்தியாவின் தொண்டுக்கு முக்கியத்துவம் வழங்குகிறார். பெரிய அளவிலான ஒரு பக்கத்தில் இந்தியா, இலங்கை, தென்கிழ் ஆசியா, மத்திய ஆசியா என்பனவற்றிலுள்ள பழைய வரிவடிவங்கள் அனைத்தையும் தருகிறார். பண்பாட்டு இயக்கம் சென்ற வழியே வரிவடிவமும் சென்

திருக்கவேண்டும்; ஆதலால், தமிழ்த் தொல் வரிவடிவ வியலின் இந்த அமிசத்துக்கும் உரிய முக்கியத்துவம் வழங்கப்படவேண்டும்;

'ஆரம்பகாலத் தென்னிந்தியத் தொல் வரிவடிவ வியல்' என்ற புது நூலொன்று சமீபத்தில் வெளியாகியுள்ளது.[14] ஆறு அத்தியாயங்களும் ஆறு அனுபந்தங்களும் கொண்டதாக அந்நூல் வெளிவந்துள்ளது; இந்தியாவில் எழுத்தின் தோற்றுவாய், இந்தியாவில் எழுத்தின் தொன்மை, தென்னிந்தியாவில் எழுத்தின் தொன்மை என முதல் மூன்று அத்தியாயங்கள் பொது விடயங்களைப்பற்றிக் கூறுகின்றன. இந்தியாவில் பாறை ஓவியங்களும் வரைவுகளும், இந்துவெளி எழுத்து என முதலிரண்டு அனுபந்தங்களும் இத்தகைய விடயங்களையே கூறுகின்றன. பிராமிச் சாசனங்கள் எழுதப்பட்ட மொழியைப் பற்றி ஓர் அத்தியாயமும் அச்சாசனங்களை எழுதியவர்களைப்பற்றி இன்னோர் அத்தியாயமும் கூறுகின்றன; இப்பகுதிகளில் முன்னோர் கருத்துக்கள் சிலவற்றை இவர் விமர்சித்துள்ளார். ஆறுவது அத்தியாயத்திலும் அதனைத் தொடர்ந்துவரும் அனுபந்தங்களிலுமே தமிழ் நாட்டுப் பிராமிச்சாசனங்களைப் பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார்; கே. வி. சுப்பிரமணிய சாஸ்திரியிடம் இரண்டு குறைகளை இவர் கண்டார்: பழைய சாசனங்களை வாசித்தபோது பழந்தமிழிலக்கியங்களை அவர் பயன்படுத்தவில்லை என்பது ஒன்று. குகைச் சாசனங்களில் இரண்டுவித எழுத்து முறைகள் இருப்பதை அவர் கவனிக்கவில்லை என்பது இரண்டாவது. குகைச்சாசனங்களின் காலத்தைக் குறிப்பிடும் அனுபந்

14. T. V. Mahalingam - Early South Indian Palaeography. Madras 1967.

தத்தில் தானி குறிப்பிட்ட காலத்தைக் கண்டித்து கி மு. 3 ம் நூற்ருண்டிலிருந்து கி. பி. 3ம் அல்லது 4ம் நூற்ருண்டுவரை அவற்றின் காலம் என்று கூறுகிருர்; இந்த வகைகளில் மகாலிங்கத்தினது ஆராய்ச்சி தமிழ்த் தொல்வரிவடிவவியல்பற்றி முன்னெழுந்த நூல்களிலும் சிறப்பானது எனலாம். குகைச்சாசனங்களின் முன்னேர் வாசிப்புகளையும் தந்து விரிவாகத் தான் ஆராய்ந்ததே ஒரு தனித்தொண்டு எனலாம்; ஆனுல் அவருடைய வாசிப்புகள் யாவும் ஏற்றுக்கொள்ளப்படக்கூடியனவா என்று இப்பொழுது கூறமுடியாதுள்ளது.

தானியின் புதுமுறையைக் கடைப்பிடித்தால் தமிழ்த் தொல்வரிவடிவவியல் சிறப்பதற்கு இடமிருக்கிறது. காலம் தெரியாத தமிழ்ச் சாசனங்களுக்குக் காலம் குறிப்பதிலுள்ள சிரமம் தெரியவருவதற்கும் தானியினுடைய முறை உதவக்கூடும்.

## 2. பண்பாடும் வரிவடிவமும்

தமிழ் நாட்டுத் தொல்வரிவடிவங்களின் வளர்ச்சிப் படிகளுக்கும் தமிழ் நாட்டுப் பண்பாட்டு இயக்கங்களுக்கும் இடையிலான நெருங்கிய தொடர்பு இதுவரை ஆராயப்படாத ஒன்ருகவே இருக்கின்றது. தானி தென்னிந்தியத் தொல்வரிவடிவவியலின் பழைமைபற்றி ஆராய்ந்தது திருப்தியாக இல்லை. எனவே, தமிழ்நாட்டு வரிவடிவங்களின் ஆரம்பகாலத்திலிருந்தே வரிவடிவ வளர்ச்சிக்கும் பண்பாட்டு வளர்ச்சிக்கும் இடையிலான தொடர்பை நோக்கலாம்.

தொல்லிந்திய வரலாற்றின் காலமுறை அபிப்பிராயபேதத்துக்குரியதாகவேயிருக்கிறது. தொல்லிந்திய வரலாற்று முக்கிய நிகழ்ச்சிகள் பலவற்றின் காலம் அறி

ஞர்களிடையே மிகப் பெரிய அபிப்பிராயபேதங்களைத் தோற்றுவிக்கின்றன. இந்திய இலக்கியங்கள், சாசனங்கள், தொல்பொருட் சின்னங்கள் என்பவற்றுட்பல, தோன்றிய காலம் எதுவெனக் குறிக்கமுடியாமலுள்ளன. இந்தியா ஓர் உபகண்டமாக இருப்பதால், நூற்றுக் கணக்கான ஆண்டுகளாகவாவது தனித்தனி [illegible] பிரதேசப்பண்பாடுகள் பல காணபபடுகின்றன பிரதேச உணர்ச்சி இந்தியாவில் வலுவுள்ளதாகக் காணப்படுகின்றது: பல விடயங்களில் ஆரிய வடக்குக்கும் திராவிடத் தெற்குக்கும் இடையிலான தொடர்பு பிரச்சினையை உண்டாக்குகின்றது: திராவிட மொழிகளுள் மிகத் தொன்மையான இலக்கியச் செல்வமுள்ளது தமிழானதால், திராவிடத் தெற்கின் கட்சியைத் தமிழறிஞரே பெரும்பாலும் வற்புறுத்துவர். இந்தியப் பண்பாடு திராவிடரிடையே தோன்றியதென்றும் ஆரியர் அதைத் தமிழரிடமிருந்து பெற்றுவளர்த்து வந்தனரென்றும் தமிழறிஞர் சிலர் கூற, வட இந்திய அறிஞர் சிலர் இக் கருத்துக்களை முற்முக ஒதுக்கி இந்தியப் பண்பாடு ஆரியரிடையே தோன்றியதென்றும் திராவிடர் அதைத் தழுவிவந்தனரென்றும் கூறுவர். இந்த விவாதத்தில் ஒவ்வொரு சாராரும் தம்முடைய கட்சியை நிலைநிறுத்த வேண்டுமென்ற நோக்கில் உண்மைகளை மறப்பதுண்டு; கவனியாமல் விடுவதுண்டு; அல்லது திரித்துக் கூறுவதுண்டு; பாகிஸ்தானத்தைச் சேர்ந்த தானி வட இந்திய அறிஞர்களுடைய நோக்கைக்கொண்டவராகக் காணப்படுகின்ருர்; பண்பாட்டிலும் மொழியிலும் ஓரளவு தனித்தன்மையைத் தென்னிந்தியா, அதிலும் சிறப்பாகத் தமிழ்நாடு பேணி வந்துள்ளதால், தென்னிந்தியாவுடைய, விசேடமாகத் தமிழ்நாட்டினுடைய தொன்மைச் சிறப்பை நிராகரிக்கும்போது, வெறுப்புமிக்க வார்த்தையைத் தானி பயன்படுத்துகிருர்; தமிழ்நாட்டுக்கு மிக அண்மையிலுள்ள இலங்கையிலே திருந்திய

பண்பாடு தொன்மையானதாக இருந்ததென்பதைத் தானி ஏற்றால், தம்முடைய வாதத்துக்கு எதிர்வாதம் தோன்றிவிடுமாதலால் அவர் இலங்கைச் சாசனங்களின் தொன்மையை மறுத்து அவற்றின் காலத்தைக் கி. பி. வரும் ஆண்டுகளாகக் கொள்வர்; இவ்வாறு கொண்டால், அவற்றின் காலம், இலங்கை மரபுவழி வரலாற்றுக் காலங்களோடு முரண்படும்; தமது நோக்குத் தொல்வரிவடிவவியல் மட்டுமே சம்பந்தமானதென்றும் மரபு வழி வரலாறோ காலமுறையோ சம்பந்தப்பட்டதல்ல வென்றும் தானி சமாதானம் கூறுவர்.[15] 'பண்பாட்டின் ஓர் அமிசமே தொல்வரிவடிவவியல்' என்ற புதுமுறையில் ஆராய்ச்சி செய்யப் புகுந்த ஒருவர் இவ்வாறு கூறுவது நகைப்புக்கிடமானது. பழந்தமிழிலக்கியம் இலங்கையின் மரபுவழி வரலாறு என்பவற்றை அறிந்து கொள்ளாமல் தமிழ் நாட்டினதும் இலங்கையினதும் தொல்வரிவடிவவியலின் பழைமையை அகில இந்திய உபகண்டப் பின்னணியில் வைத்துக் கற்று மதிப்பீடு செய்யவியலாது;

காலத்துக்குக்காலம் எழுத்துவடிவங்களில் ஏற்பட்ட மாற்றங்களை மட்டும் கற்கும்போது தென்னிந்தியாவை மட்டும் தனியே நோக்கும் இயல்பு வளர்ந்து ஆராய்ச்சி ஒருதலைப் பட்சமானதாக அமையும் நிலை தோன்றுகின்றது. மனம் விரும்பியவெறல்லாம் கற்பனை செய்யும் போக்குக்கு உதாரணமாகச் சென்னை அரசாங்கத் தொல்பொருட்காட்சிச்சாலை அறிக்கையாக வி. கண்ணையன் என்பவரால் வெளியிடப்பட்ட 'இந்தியாவிலும் அதனைச் சுற்றிலும் உள்ள வரிவடிவங்கள்' என்ற நூலைக் குறிப்பிடலாம்; அவருடைய கருத்துக்களில் மாதிரிக்கா

15. A. H. Dani - Indian Palaeography - pp. 216, 217.

கச் சில:- 'இந்தியாவில் இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ள எழுத்துக்களில் மிகப் பழையவை தமிழ் நாட்டுக் குகைச் சாசனங்கள்'; 'இந்தியாவின் தென்கோடியிலிருந்தே அசோகன் தன்னுடைய வரிவ்டிவத்தைப்பெற்றான்'; 'இந்தியா முழுவதையும் வென்றவன் என்று கூறத்தக்க அசோகன் தமிழ்நாட்டை வெல்லத் துணியாததற்கான காரணம் தமிழ்நாடு அடைந்திருந்த நாகரிக வளர்ச்சியாகும்'. இத்தகைய கருத்துக்கள் எடுத்துக்காட்டுகளாகப் பயன்படுமேயன்றி நுண்ணிய ஆராய்ச்சிக்குப் பயன்படமாட்டா. எழுத்துமுறை உட்படப் பண்பாட்டுக் கூறுகளை வட இந்தியா தமிழ் நாட்டிலிருந்து பெற்றிருக்கவேண்டும் என்று கண்ணையன் நம்புகிறார். இவரோடு ஒப்பிடும்போது, ரி.என். சுப்பிரமணியம் நிதானம் உள்ளவராகக் காணப்படுகிறார். பிராமி வரிவடிவம் இந்தியாவிலேயே தோன்றியதென அவர் வாதிக்கிறார். இந்துவெளி எழுத்துக் கண்டுபிடிக்கப்பட்ட பின்பு இவ்வாறு வாதிப்பதற்கு ஓரளவு இடமிருக்கிறது; ஆரியமொழியும் திராவிட மொழியும் கலந்தே பாகத மொழி உருவாகியதெனவும் பாகதமொழி பிராமி வரிவடிவத்தைத் தமிழிடமிருந்து பெற்றுக்கொண்டதெனவும் அவரும் கருதுகிறார்.[16] இன்று ஆராய்ச்சியுள்ள நிலையில், பாகத மொழியின் தோற்றம் பற்றியும் பாகத மொழி தமிழிடமிருந்து பிராமி வரிவடிவத்தைப் பெற்றுக்கொண்டது பற்றியும் சுப்பிரமணியம் கூறுவனவற்றை ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்று இத்துறையிற் கடைசி நூலின் ஆசிரியரான ரி. வி. மகாலிங்கம் கூறுகிறார்.[17] பிராமியின் தோற்றம்பற்றி அபிப்பிராய

16. T.N. Subramaniam-South Indian Temple Inscriptions, Vol. III, Part II, p. 1607.

17. T.V. Mahalingam-Early South Indian Palaeography, pp. 80-81

பேதம் இன்னும் நிலவுகின்றது: இந்தியாவிலேயே பிராமி தோன்றியதென்றும் செமிதிக் மூலமாயே பிராமி உருவாகியதென்றும் வாதிப்பவர் இன்றும் பலர் உளர். கிறீத்தவ ஆண்டுக்கு வெகுமுன்பும் இந்தியப் பண்பாடு பிற நாட்டார் தொடர்பின்றி ஏகாந்தமாக இருந்த தென்று கொள்ளவேண்டியதில்லை. இந்துவெளிநாகரிக காலத்திலும் இந்தியாவுக்கும் மேற்காசியாவுக்கும் தொடர்பு இருந்திருப்பதால், இதில் ஆச்சரியப்படுவ தற்கு எதுவுமில்லை; செமிதிக் செல்வாக்கும் தூண்டுத லும் இருந்திருக்கலாம். பிராமி வரிவடிவம் வடஇந்திய இலக்கணகாரராலேயே உருவாக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை இன்றைய அறிஞர் பொதுவாக ஏற்றுக்கொள் கின்றனர். இன்று ஆராய்ச்சியுள்ள நிலையிலே, செமிதிக் செல்வாக்கு இல்லை என்று கூறமுடியாது.

இந்துவெளிச் சித்திரங்களைத் தவிர இந்தியாவில் இத்துறையிற் கண்டுபிடிக்கப்பட்டுள்ள காலத்தால் மிகப் பழைய சாசனங்கள் யாவும் பிராமி வரிவடிவத்திலேயே எழுதப்பட்டுள்ளன: அதிட்டவசமாக, அசோகனுடைய சாசனங்களின் காலம் நிர்ணயிக்கப்படக்கூடியதாக இருக் கிறது: ஆகவே, இந்தியாவிலும் இலங்கையிலும் காணப் படும் மிகப்பழைய பிராமிச் சாசனங்கள் அசோகனுடைய சாசனங்களுடன் ஒப்பிடப்பட்டு வரிவடிவங்களிலுள்ள ஒப்புமை வேற்றுமைகளை அடிப்படையாகக்கொண்டே கால நிர்ணயம் செய்யப்படுகின்றன. தமிழ்நாட்டுக்குகைச் சாசனங்களின் காலம் கி. மு. மூன்றாம் நூற்றாண்டு என்று முதன் முதலிற் கூறியவர் கே. வி. சுப்பிரமணிய ஐய ராகும்.[18] பண்பாட்டின் பிறகூறுகளிலிருந்து ஆதரவான

---

18. K.V. Subrahmanya Ayyar-Proceedings and Transactions of the Third all India Oriental Conference p. 280

சான்று கிடையாத் வரையில் இந்த முறை திருப்தியற்ற தென்பது தெளிவாகப் புலப்படும்; இம்முறையிலிருந்து பெறப்பட்ட ஊகங்களை அடிப்படையாகக்கொண் டெழுந்த வாதங்கள், இந்தியத் தொல்வரிவடிவவியலின் பழமை பற்றிய பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு உதவாமல் குழப்புவதற்கே உதவுகின்றன. தானி இந்த முறையை நிராகரித்தது சரியே; ஆனால் தானியும் பண்பாட்டின் பிற கூறுகளைக் கவனியாத பிழையைச் செய்கிறார்; குகைச் சாசனங்களின் காலம் கிறீத்தவ ஆண்டுக்குப் பிந்தியது என்று தானி வாதிக்கும் வரையில், சுப்பிரமணிய ஐயர் ஊகித்த காலமாகிய கி; மு; 3-ம் நூற்றாண்டு அறிஞர்க ளால் ஏற்கப்பட்டுவந்திருக்கிறது; புதைபொருளாராய்ச் சிச் சான்று கொண்டு அரிக்கமேட்டுச் சாசனங்கள் கி. பி. முதலாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை யெனத் தீர்மானிக் கப்பட்டுள்ளது. குகைச் சாசனங்களுக்கும் அரிக்கமேட்டுச் சாசனங்களுக்குமிடையிலான ஒற்றுமைகள் சிலவற்றைச் சுட்டிக்காட்டிய தானி அவை சம காலத்தனவாகலாம் என்று முடிவுசெய்தனர்.[19] இதனால், குகைச்சாசனங்க ளைப் பற்றிய விரிவான புதிய ஆராய்ச்சிக்குத் தானி தூண்டுகோலாக விளங்கினார் எனலாம்; குகைச்சாசனங் களை விரிவாக ஆராய்ந்த மகாலிங்கம் தானியின் கூற்றி லுள்ள நியாயத்தை ஏற்றுக்கொள்ள வேண்டியவராகின் றார்; குகைச்சாசனங்களுக்குப் புதிய காலமுறையை வகுக்கும் மகாலிங்கம் அவற்றுள் மிகப்பழையவை கி. மு; 3-ம் நூற்றாண்டினவென்றும் மிகப் பிந்தியவை கி. பி. மூன்றும் அல்லது நான்காம் நூற்றாண்டினவென்றும் கூறியுள்ளார்[20] ஆனால், அசோகனுடைய பிராமியே

---

19. A.H. Dani - Indian Palaeography – p. 73.

20. T.V. Mahalingam - Early South Indian Palaeography p. 200.

குகைச் சாசனத்தை எழுதுவதற்குப் பயன்பட்டது என்று மகாலிங்கம் கூறவில்லை. அசோகன் பிராமியிலிருந்து தமிழுக்கேற்ப மாற்றியமைக்கப்பட்டதே குகைச்சாசன எழுத்து என்ற தானியின் கருத்து ஏற்கப்படக்கூடியது போலத்தெரிகின்றது. அசோகனுடைய வரிவடிவத்துக் கும் குகைச்சாசன வரிவடிவத்துக்கும் இடையிலான வேறுபாடுகளிற் சில, தானி கூறுவதுபோல 'எழுதிய வரின் 'தவறுக'ளாகவும் 'பிழைக'ளாகவும் மட்டும் இருக்கவேண்டியதில்லை; பிரதேச வளர்ச்சியாலேற்பட்ட மாற்றங்களாகவும் இருக்கலாம்.

கி. பி. ஏழாம் நூற்றுண்டிலிருந்து தமிழ் நாட்டு வரிவடிவங்களின் தொடர்ச்சியான வளர்ச்சியை ஆராய் வதற்குப் போதிய அளவு சான்றுகள் கிடைக்கின்றன. கிரந்த வரிவடிவம், தமிழ் வரிவடிவம், வட்டெழுத்து என்பனவற்றின் தொடர்பான வளர்ச்சியைக் காட்ட உதவக்கூடிய சாசனங்கள் பெருந்தொகையாகக் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. கண்ணையன் பாண்டிமண்டலத்தில் வழங்கிய வரிவடிவம் கோலெழுத்து எனக்கூறுவர்.[21] சேர நாட்டு எழுத்து வட்டம் என்று கூறும் அவர் சோழ நாட்டு எழுத்து இந்த இரண்டு வரிவடிவங்களின் கலப் பாக இருக்கலாம் என்ற கருத்துடையவர். மூவகை வரி வடிவங்களும் இவ்வாறு வழங்கியதற்குச் சாசனச் சான் றுகள் கிடைத்துள்ளன என்பர் அவர். ஆனல், பாண்டி யச் சாசனங்களிற் கோலெழுத்து வழங்கியதற்குச் சாச னச் சான்றில்லை. கி. பி. எட்டாம் நூற்றுண்டு நடுவி லிருந்து பாண்டியர் சாசனங்களும் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டு முடிவிலிருந்து சேரர் சாசனங்களும் காணப்

21. V. Kannaiyan - Scripts in and around India - Introduction page five.

படுகின்றன. தென்னிந்தியாவில் அந்தக்கால எழுத்துக்கள் பெற்றுவந்த மாற்றத்தினை நோக்கும்போது, சேருடைய மிகப்பழைய சாசனங்களிலுள்ள எழுத்துக்கள் பாண்டியருடைய மிகப்பழைய சாசனங்களிலுள்ள எழுத்துக்களிலும் வட்டமாக இருந்ததில் வியப்பதற்கு எதுவுமில்லை. எனவே, வடிவத்திலுள்ள வேறுபாடு காலத்தாலேற்பட்ட வேறுபாடாகவேண்டும்; பழைய வட்டெழுத்துச் சாசனங்கள் சிலவற்றில், வளைகோடுகள் சிலவாகவும் நேர்கோடுகள் பலவாகவும் காணப்படுகின்றன வென்றும் அத்தகைய சாசனங்கள் காலத்தால் முந்தியனவென்றும் தொல்வரிவடிவவியலாளர் சிலர் கொள்வரென்றும் கோபிநாதராவ் கூறியுள்ளார்.[22] அத்தகைய சாசனங்கள் கோலெழுத்திலுள்ளவையென்றும் அக்கோலெழுத்துப் பாண்டிய நாட்டுக்குச் சிறப்பாக உரியதென்றும் கண்ணையன் கருதியிருக்கலாம். கோபிநாதராவ், சிவராமமூர்த்தி, ரி. என்: சுப்பிரமணியம், மகாலிங்கம் ஆகியோர் சேர நாட்டுவரிவடிவமும் பாண்டிநாட்டு வரிவடிவமும் வேறு என்று கொள்ளவில்லை. இத்தொல் வரிவடிவவியலாளர் அனைவரும் இரு நாட்டெழுத்துக்களும் வட்டெழுத்தே என்று கூறும்போது, அதை நிராகரிக்க இடமில்லை. பாண்டி நாட்டில் வழங்கி வந்த வரிவடிவம் வட்டம் என்பதற்குத் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள குற்றாலச் சாசனம் ஒன்று சான்று பகருகின்றது.[23] சேரநாட்டிலிருந்த வரிவடிவம் வட்டம் என்பதில் அபிப்பிராயபேதமில்லை.

---

22. T. A. Gopinatha Rao - Travancore Archaeological Series, Vol. I, p. 286.

23. T. A. Gopinatha Rao - Travancore Archaelogical Series, Vol. I, p. 286.

இடைக்காலத் தமிழ்நாட்டில் வழங்கிய மூன்று வரிவடிவங்களுள், கிரந்த வரிவடிவமும் தமிழ் வரிவ்டிவமும் மிக நெருங்கிய உறவுள்ளவை. இரு வரிவடிவங்களிலும் சில எழுத்துக்கள் ஒரே மாதிரி எழுதப்படுகின்றன; இவ்வுண்மைகளை இவ்வாறு நிகழ்காலத்தில் எழுதுவதிலே சிறப்பான பொருள் உண்டு. இவ்வரிவடிவங்களுக்கிடையில், கி. பி. ஏழாம் நூற்றாண்டில் ஒற்றுமைகள் இருந்த மாதிரி இன்றும் ஒற்றுமைகள் காணப்படுகின்றன. இவ் வரிவடிவங்களின் வளர்ச்சிகூட ஒரே நெறியிலே சென்றது என்பதற்கு இக்கூற்றே சான்றுபகரும். இவ்விரு வ்டிவங்களும் வேறுபட்டன என்று கொள்வதற்கு தமிழ் வரிவடிவம் தமிழ் மொழியை எழுதப் பயன்பட்டதும் கிரந்த வரிவடிவம் சங்கத மொழியை எழுதப் பயன்பட்டதும் முக்கிய காரணமாகும்; சங்கதமொழிக்குரிய எல்லா ஒலிகளுக்குமான எழுதுக்கள் கிரந்த வரிவடிவத்திற் காணப்படுகின்றன. இந்தியத் தொல்வரிவடிவவியலாளர் இவ்விரு வரிவடிவங்களுக்குமிடையிலான ஒற்றுமையைக் கவனித்து அவை இரண்டுக்கும் சேர்த்துக் கிரந்தத் தமிழ் வரிவடிவம் என்று பெயரிட்டனர். கிரந்தப் பகுதியில் வந்த தமிழ்ப் பெயர்களை எழுதுவதற்கு வட்டெழுத்துப் பயன்படுத்தப்படாது தமிழ் வரிவடிவம் பயன்படுத்தப் பட்டிருக்கின்றமை, இடைக்காலத்திலேயே இவ்விரு வரிவடிவங்களும் ஒரே வடிவமாகக் கொள்ளப்பட்டிருக்கலாம் என்பதற்குச் சான்றாகும்.[24]

தமிழ் வரிவடிவமும் வட்டெழுத்தும் தமிழ் மொழியை எழுதுவதற்கே பயன்பட்டன. இவையிரண்டுக்குள்ள தொடர்பு அபிப்பிராய பேதத்துக்கு உரிய

---

24. T.N. Subramaniam-South Indian Temple Inscriptions Vol. III, part II, p. 1536.

தாகக் காணப்படுகின்றது; கடந்த நூற்றாண்டில் தமிழ்த் தொல்வரிவடிவவியலை ஆராய்ந்த ஐரோப்பிய அறிஞர்களுக்கிடையிலேற்பட்ட இந்த அபிப்பிராயபேதம் இந்த நூற்றாண்டில் தமிழ் நாட்டு அறிஞர்களுக்கிடையே தொடர்கிறது. வட்டெழுத்துப் பிராமியிலிருந்து வேறுபட்ட தோற்றமும் வளர்ச்சியுமுடையதென்று கலாநிதி பர்னல் கருதினர்.[25] சங்க இலக்கியத்தின் தொன்மை பற்றி அக்காலத்தில் வழங்கிய கதைகள் அவரை அவ்வாறு நம்பச்செய்திருக்கவேண்டும். கிரந்தத் தமிழ் பல்லவரோடு நெருங்கித் தொடர்புபடுத்தப்பட்டதாலே பாண்டிநாட்டில் வழங்கிய வட்டெழுத்து மிகவும் தொன்மையானதாக இருக்கவேண்டும் என்று அவர் கொண்டிருப்பர்; பர்ணலின் காலத்தில் இந்தியத் தொல்வரிவடிவவியல் வளர்ச்சிபெருத நிலையிலிருந்ததால் அவரைக் கண்டிப்பது பொருந்தாது: இந்தியத் தொல்வரிவடிவவியல் பற்றிப் பர்ணல் நூலின் பின்வந்த நூல்களை அறியாத தமிழறிஞர் சிலர் பர்ணல் கூற்றுக்களையே போற்றி வருகின்றனர்: வட்டமே மிகப் பழைய தமிழ் வரிவடிவம் என்பர் பர்ணல்: பூலர் இக்கருத்தை நிராகரித்து வட்டெழுத்துத் தமிழ் வரிவடிவத்தின் செவ்வையற்ற வடிவம் என்ற புரட்சிக் கருத்தை வெளியிட்டார்.[26] இது விடயத்தைப் பற்றிய புதுச் சிந்தனையை ஊக்கியது; கோபிநாதராவ் வட்டெழுத்துப் பிராமியிலிருந்து வேறு

---

25. Burnell - Elements of South Indian Palaeography- pp. 49 – 52. His views were refuted by Dr. Caldwell- Comparative Grammar of the Dravidian Languages- p. 9 and Prof. P. Sundaram Pillai - Some Milestones in the History of Tamil Literature.

26. Buhler-Indian Palaeography, Vol, XXXIII, Appendix p. 75.

பட்ட தனித்தோற்றமுடையது என்ற கொள்கையை நிராகரித்தார். வட்டெழுத்தும் தமிழ் வரிவடிவமும் ஏனைய இந்திய வரிவடிவங்களைப்போலப் பிராமியிலிருந்தேதோன்றினவாயினும், இரண்டும் தனித்தனி வளர்ச்சியுடையன என்று அவர் கொண்டார்; தென்னிந்திய வரிவடிவங்களின் வளர்ச்சியைச் சுட்டும்போது வட்டெழுத்துக்குத் தனித்துவம் வழங்கும் சிவராமமூர்த்தி, தமது குறிப்புகள் மூலம், வட்டெழுத்துத் தமிழ் வரிவடிவத்தின் செவ்வையற்ற வடிவம் எனத் தெரிவித்துள்ளார். ரி. என். சுப்பிரமணியம் கோபிநாதராவின் கருத்தை ஏற்றுக்கொள்கிறார்; பல்லவர்களோடு நெருங்கிச் சம்பந்தப்படுத்தப்பட்ட கிரந்தத்தமிழ் வடஇந்தியத் தோற்றம் உடையதாகலாம் என்று அவர் கருதினார்; அதனால் அவருடைய கருத்து ஓரளவுக்குப் பர்னலின் கருத்தையும் ஒட்டிச்செல்கிறது. வட்டெழுத்தே தமிழ் நாடு முழுவதும் வழங்கிய பழைய தமிழ் வரிவடிவம் என்றுகொள்ளும் அவர் தமிழ் வரிவடிவம் சிறிதுசிறிதாக அதை ஒதுக்கிவிட்டதென்பர்.[27] வட்டம் பிராமியிலிருந்து தோன்றி வடஇந்தியத் தொடர்பு அதிகமில்லாமல், தென்னிந்திய இயற்கைச் சூழலுக்கேற்ப வளர்ந்த ஒரு வரிவடிவம் என்ற கருத்தே ஏற்கக் கூடியது. இவ் வரிவடிவத்திற் சில எழுத்துக்கள் தமிழ் நாட்டுக்குத் தெற்கிலுள்ள சிங்கள வரிவடிவ எழுத்துக்கள் சிலவற்றோடும் தமிழ் நாட்டுக்கு வடக்கிலுள்ள தெலுங்கு கன்னட வரிவடிவ எழுத்துக்கள் சிலவற்றோடும் ஒத்துள்ளன.

இவ்வரிவடிவங்கள் யாவுமே பிராமியிலிருந்து தோன்றியவை; அந்நிய மூலாதாரத்திலிருந்து அமைத்துக்

---

27. T.N. Subramaniam-South Indian Temple Insoriptions, Vol. III, Part II, p. 1562,

கொள்ளப்பட்டபோதும் பெரும்பாலும் தமிழ் நாட்டுச் சூழலுக்கேற்ப வளர்ந்த வரிவடிவமே வட்டெழுத்தென லாம். தமிழ்க்குல மன்னரான சேரரும் பாண்டியரும் இவ் வரிவடிவத்தைக் கையாண்டமைக்கு இதுவே காரணமாக லாம். தமிழ்மொழிக்கு வரிவடிவம் இருந்ததற்குத் தொல் காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் சான்றுண்டு; இந் நூல்களின் காலத்தைப்பற்றி அபிப்பிராயபேதம் இருந்த போதிலும், இவை கிறீத்தவ ஆண்டுத் தொடக்க காலத்து நூற்றுண்டுகளைச் சேர்ந்தவை என்று பொதுவாகக் கொள்ளலாம். தமிழ் மொழியை எழுதுவதற்கு ஒன்றுக்கு மேற்பட்ட வரிவடிவம் இருந்ததற்குச் சான்று இல்லை; பழைய வட்டெழுத்தின் முன்னேடி எனத் தக்க தமிழ்ப் பிராமியைக் குறிப்பனவே பழைய சான்றுகளாகவேண்டும்.

கிரந்த வரிவடிவம் தென்னிந்தியப் பிராமணர் களோடு நெருங்கிய தொடர்புடையது. சங்க கால இலக் கியத்திலேயே தமிழ்நாட்டு அந்தணர்களைப் பற்றிக் குறிப்புகள் காணப்படுகிறபோதிலும் தமிழ் நாட்டில் வைதிக சமய மறுமலர்ச்சி தொடங்கிய கி. பி. ஏழாம் நூற்றுண்டிலிருந்து சங்கதப் பெயர்களுடைய பெருந் தொகையான பிராமணர் தமிழ்நாட்டின் பல்வேறு பகுதி களிலும் குடியேற்றப்பட்டமைக்குச் சாசனச் சான்று காணப்படுகின்றது. பல்லவர் தம்முடைய பழைய சாச னங்கள் சிலவற்றில் பழைய நாகரி வரிவடிவத்தைப் பயன்படுத்தியுள்ளனர்; அவர்கள் தங்களுடைய பழைய சாசனங்கள் சிலவற்றில், சில வட்டெழுத்து வடிவங்களை யும் பயன்படுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கது.[28] தமிழ்ப் பிராமி அல்லது பழைய வட்டத்துக்கும் பழைய நாகரிக்

---

28. T.N. Subramaniam–South Indian Temple Inscriptions, Vol. III, Part II p. 1561.

கும் இடையிலான ஓர் இணக்கமாகவே கிரந்தத்தமிழ் பல்லவர் நாட்டிலே தோன்றி வளர்ந்தது என்றுகொள்ள மனம் உந்துகின்றது; தமிழ்மொழிக்கு வழங்கிய பழைய வட்டத்தோடு சங்கத மொழிக்குரிய சிறப்பொலிகளுக்கான எழுத்துக்கள் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும். கோணமான வடிவங்களையுடைய பழைய நாகரி எழுத்துக்கள் வளைவான வடிவங்களையுடைய பழைய வட்டெழுத்துக்களைச் சிறிது மாற்றப் பல்லவர் நாட்டில் புதிய கிரந்த வடிவம் தோன்றியிருக்கவேண்டும்; கிரந்த வரிவடிவத்தை வழங்கியோரே பழைய வட்டத்தையும் வழங்கிவந்தனர்; அதனால், கிரந்த வரிவடிவ எழுத்துக்களைப் போலவே பழைய வட்டெழுத்துக்களும் எழுதப்படத்தொடங்கியிருக்கவேண்டும். கிரந்தத் தமிழ் வரிவடிவம் இவ்வாறே தோன்றியிருக்கவேண்டும்.

இவ்வாறு நோக்கும்போது, பழைய வட்டமும் பழைய தமிழ் வரிவடிவமும் ஒன்றாகவும் கிரந்தம் பெரும்பாலும் பழைய வட்டத்தின் தழுவலாகவும் தெரியவருகின்றன; கிரந்த வடிவம் தென்னிந்தியாவிலேயே விருத்தியடைந்திருக்கவேண்டும் என்று தானியும் கூறுகிறார்; பல்லவர் நாட்டு வரிவடிவத்துக்குத் தமிழ் வரிவடிவம் என்ற பெயர் ஏற்பட்டதற்குக் காரணம் ஊகத்தால் மட்டுமே அறியமுடிகின்றது; சங்கத மொழியை எழுதப் பயன்பட்ட வரிவடிவத்திலிருந்து தமிழ்மொழியை எழுதப்பயன்பட்ட வரிவடிவத்தை பிரித்துணர்வதற்காகத் 'தமிழ் வரிவடிவம்' என்ற பெயர் கையாளப்பட்டிருக்கவேண்டும்; தமிழ் நாட்டிற் பெரும்பகுதியை உள்ளடக்கிய பல்லவர் நாட்டில், பல்லவமன்னர் ஆதரவுடன் கிரந்தத்தமிழ் முதன்மை பெற்றிருக்கவேண்டும்; வைதிக சமய மறுமலர்ச்சி பல்லவர் நாட்டிலே தொடங்கிச் சேர நாட்டுக்கும் பரவியது. வைதிக மறுமலர்ச்சியோடு கிரந்தத் தமிழ் வரிவடிவமும், இப் பகுதி

களுக்குச் சென்றிருக்கவேண்டும்; ஆகவே பாண்டியரும் சேரரும் சங்கதமொழியை எழுதக் கிரந்தத்தையும் தமிழ் மொழியை எழுத வட்டத்தையும் பயன்படுத்தினர்.

கி. பி. பதினோராம் நூற்றாண்டுவரையில், கிரந்தத் தமிழுக்கும் வட்டத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது. பனையோலையில் எழுத்தாணிகொண்டு எழுதும்போது ஓலை கிழியாமல் இருப்பதற்காக நேர்கோடுகளைக் குறைத்து வளைகோடுகளைப் பெருக்கியே எழுதுவது வழக்கமாதலால் வட்டெழுத்தின் வளைவுத் தன்மை அதிகரித்துக்கொண்டு வந்தது. இதே காரணத்தினுலும் வட்டெழுத்தின் செல்வாக்கினுலும் கிரந்தத் தமிழும் இதே மாதிரியான மாற்றத்தைப் பெற்றுக்கொண்டு வந்தது. பல்லவர் காலத்தில், அடுத்தடுத்துள்ள இரு பிரதேசங்களில் இரு வரிவடிவங்கள் ஒரு மொழியை எழுத வழங்கப்பட்டன; மேலும் அக்காலப் பல்லவர் நாட்டினதும் பாண்டிய நாட்டினதும் எல்லை நன்கு வரையறுக்கப்பட்டதாக அமையவில்லை; ஈர் அரசுகளுக்குமிடையே பல போர்கள் நடைபெற்று ஒவ்வொரு போர்க்காலத்திலும் ஆட்சி எல்லை மாறிக்கொண்டிருந்தது; கிரந்த வரிவடிவம் இரு நாடுகளிலும் பயன்படுத்தப்பட்டுவந்தது. ஆகவே ஒன்றின் செல்வாக்கு மற்றதிற் காணப்படுவதில் வியப்பில்லை; கிரந்தத் தமிழ் வரிவடிவமும் வளைவான கோடுகளைப் பெற்றுவந்தது.

11-ம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து இப்போக்கு மாறுகிறது. இந்நூற்றாண்டின் தொடக்கத்திலேயே, சோழப் பேரரசு நன்கு அமைக்கப்பட்டுத் தமிழ்நாடு முழுவதும் சோழருடைய வலுவுள்ள ஆட்சிக்குக் கீழ்வந்துவிட்டது; சில நூற்றாண்டுகளாகப் பல்லவருக்குக் கீழ்ச் சிற்றரசராக வாழ்ந்த சோழர் கிரந்தத் தமி

மையே வழங்கிவந்தனர்: கிரந்தத் தமிழ் வரிவடிவமே பேரரசின் வரிவடிவமாதலால், பாண்டிநாட்டிலும் அதுவே வழக்குக்கு வந்தது. தமிழ் நாட்டின் பிற பகுதிகளிலிருந்து மலைகளாற் பிரிக்கப்பட்டுத் தனித்துவம் பெற்றுவிளங்கிய சேர நாட்டில் மட்டும் வட்டம் வழங்கப்பட்டு வந்தது. அடுத்து வந்த சில நூற்றுண்டுக் கேரளச் சாசனங்களில் இவ்வரிவடிவமே பெருவழக்குப் பெற்றிருந்தது; மலையாள மொழியின் தோற்றம் இந்த வட்டெழுத்துச் சாசனங்களிற் காணப்படுகின்றது. மலையாள மொழியிற் பெருந்தொகையான சங்கத மொழிச் சொற்கள் வழக்குப் பெற்றுள்ளன; காலப்போக்கில் இந்த இயல்பு மலையாள மொழியில் அதிகரித்து வந்திருக்கின்றது. சங்கதமொழிச் சொற்களை எழுதுவதற்கு வட்டம் ஏற்றவடிவமல்ல. அதனால், கி. பி. 13-ம் நூற்றுண்டிலிருந்து கிரந்த வரிவடிவம் மலையாள மொழியை எழுதுவதற்கு வழங்கப்படத்தொடங்கியது. வைதிக சமயத்தவர்கள் அநேக சங்கதச் சொற்களை வழங்கியதால், அவர்கள் கிரந்த மலையாள வரிவடிவத்தை ஆர்வத்தோடு ஏற்றுக்கொண்டனர். கி. பி. 18-ம் நூற்றுண்டு வரையில் கேரள முஸ்லீம்கள் வட்டெழுத்தை வழங்கிவந்தனர்; வட்டெழுத்து அதனுடைய ஒடுக்ககாலத்தில் கோலெழுத்தாக மாறியது. வட்டெழுத்து வழக்குக் குறையக் குறைய அவ் வரிவடிவம் சீர்கேடடையத் தொடங்கிற்று. 15-ம், 16-ம் நூற்றுண்டுச் சாசனங்களில் வட்டெழுத்திலுள்ள வெவ்வேறு எழுத்துக்கள் ஒரே வரிவடிவத்தில் எழுதப்படத்தொடங்கியதால், அச்சாசனங்களை வாசிப்பது சிரமமாக இருக்கிறது. இச்சீர்கேடு வட்டெழுத்தை விரைவாக வழக்கொழியச் செய்தது.

கி. பி. பதினோராம் நூற்றுண்டுவரை, வட்டத்தின் செல்வாக்குக் கிரந்தத் தமிழ் வரிவடிவ மாற்றத்திற்கு உதவியிருக்கவேண்டும் என்ற ஊகம் பிறிதோர்

உண்மையால் உறுதிப்படுகின்றது. பதினோராம் நூற்றாண்டின் பிற்பகுதிலிருந்து கிரந்தத் தமிழெழுத்தில் மறுபடியும் கோணங்கள் தோன்றத் தொடங்குகின்றன.[29] முதலாம் குலோத்துங்கனோடு புதிய சோழ - சாளுக்கிய அரசகுலம் சோழர் சிம்மாசனத்துக்கு வருகின்றது. கீழைச் சாளுக்கியர் நாட்டில் வழங்கப்பட்ட தெலுங்கு வரிவடிவம் வட்டவடிவமான எழுத்துக்களைக்கொண்டிருந்த போதும் தெலுங்கர்கள் சங்கத மொழியை எழுதுவதற்கு நாகரி வரிவடிவத்தையும் பயன்படுத்தினர். சங்கதமொழி, அக்காலத்தில் அகில இந்திய மொழியாக வளர்ந்துவிட்டது. முதலாவது குலோத்துங்கன் சோழ மன்னனது காலந்தொடக்கம், சோழப் பேரரசில், நாகரி வரிவடிவத்தின் செல்வாக்கு அதிகரித்து வந்திருக்கவேண்டும்; ஆனால், பேரரசின் வரிவடிவமாக நன்கு நிலைபெற்றுவிட்ட கிரந்தத் தமிழ் வழக்கு வீழ்வதற்கு இடமில்லை. இந்த மன்னனுடைய காலத்திலேயே, வளைவுகளுக்குப் பதிலாகக் கோணங்களை எழுதும் இயல்பு மறுபடியும் தொடங்கியதாகக் கூறப்படுகின்றது. தமிழ் நாட்டில் சோழப் பேரரசு வீழ்ச்சியடைந்து பாண்டியப் பேரரசு எழுச்சிபெற்றபோது, தலைநகரமும் அரசகுலமும் மட்டுமே மாறின எனக்கொள்ளலாம். அந்தக் காலத்தில், கிரந்தத் தமிழ் பாண்டி நாட்டில் நன்கு நிலைபெற்றுவிட்டது. பண்பாட்டில் எவ்வாறு மாற்றமெதுவும் ஏற்படவில்லையோ அவ்வாறே அதன் ஒரு கூறுகிய வரிவடிவத்திலும் மாற்றம் எதுவும் ஏற்படவில்லை. தமிழ் நாட்டில் விசய நகரப் பேரரசின் ஆட்சியும் நாயக்கர் ஆட்சியும் ஏற்பட்டபோது மாற்றம் ஒன்று ஏற்படுகின்றது. சாசனங்கள், சிறப்பாகச் செப்புத் தகடுகள், நாகரியின் ஒரு

---

29. C. Sivaramamoorti - Indian Epigraphy and South Indian Scripts p. 233.

வகையான நந்தி நாகரியில் எழுதப்படுகின்றன; கிரந்த எழுத்துக்களும் கிரந்த எழுத்துக்களால் எழுதப்பட்ட சொற்களும் தமிழ்ச் சாசனங்களுள் மட்டுமே இடம் பெறத்தொடங்குகின்றன; தமிழ் நாட்டில் கிரந்தத்தின் முக்கியத்துவம் குறைய நந்தி நாகரியின் முக்கியத்துவம் கூடுகிறது. கி. பி. 18-ம் நூற்றுண்டில் தஞ்சாவூர்ப் பகுதியை ஆண்ட மராட்டியரும் சங்கத மொழியை எழுத நாகரியையே பயன்படுத்தினர். கிரந்தம் தமிழ்ப் பிராமணரிடம் மட்டுமே சிலகாலம் வழங்கிவந்தது: ஆனல் இன்றைய இந்திய அரசாங்க மொழியான இந்தியும் இக்காலச் சங்கதப் பாடப்புத்தகங்களும் தேவநாகரி எழுத்தையே வழங்கிவருவதால், கிரந்த வரிவடிவம் ஒடுங்கி வருகிறது எனலாம்.

இடைக்காலச் சாசனத் தமிழின் இயல்புகளுள் ஒன்று, தமிழிலக்கணகாரரின்படி புள்ளி பெறவேண்டிய எழுத்துக்கள், நாற்றுக்கணக்கான ஆண்டுகளாகப் புள்ளியில்லாது எழுதப்படுவதாகும்; தமிழிலுள்ள தனிமெய்யெழுத்துக்கள் யாவும் புள்ளிபெறவேண்டும்; புள்ளியென்ற பெயர் மெய் யெழுத்தைக் குறிக்க வழங்குவதுண்டு. ஆனல் உயிரெழுத்துக்களாகிய எகர ஒகரக் குற்றெழுத்துக்கள் புள்ளிபெற வேண்டும் என்று கூறப்படுகின்றது. சங்கதமொழியில், எகர ஒகரக் குறில்கள் இல்லை. சங்கத மொழிக்கு வழங்கப்பட்ட பிராமி வரிவடிவத்தைத் தமிழுக்கு அமைத்துக்கொண்டபோது, தனிமெய் யெழுத்துக்களுக்கும் சங்கத மொழியில் வழங்காத எகர ஒகரக் குறில்களுக்கும் புள்ளியிட்டு எழுதும் வழக்கம் தொடங்கியது. ஆகவே, இடைக்காலச் சாசனங்கள் பெரும்பாலானவற்றுள் வடிவத்தில், எகார ஏகாரங்களுக்கிடையிலும் ஒகர ஓகாரங்களுக்கிடையிலும் வேறுபாடு காண இயலாது. தமிழ் நாட்டில் சங்கத மொழிச் செல்வாக்கு முதன்மை பெற்றிருந்தவரையில், மெய்

யெழுத்தை உணர்த்தப் பயன்படும் புள்ளி இரண்டு உயி ரெழுத்துக்களை உணர்த்துவதிற் காணப்படும் பொருந் தாமை கவனிக்கப்படவில்லை. ஆனால் தமிழுக்கு மேனாட்டு மொழிகளின் தொடர்பு ஏற்பட்டபோது, பழைய ஏகார ஓகார வடிவங்களை எகர ஒகரக் குறில் வடிவங்களாகக் கொண்டு பழைய வடிவங்களின் கால்களில் சிறிது மாற் றஞ்செய்து நெடில்களாகக்கொண்டு வரிவடிவம் திருத் தப்பட்டது. வீரமாமுனிவரே இந்த மாற்றத்தைச் செய் தவர் என்று பொதுவாக நம்பப்படுகின்றது: ஆனால், கோபிநாதராவ் இந்த மாற்றம் வீரமாமுனிவருக்கு முந் திய தமிழ்ச் சாசனங்களிற் காணப்படுவதாகக் கூறியுள் ளார்.[30] இந்த மாற்றம் எந்தச் சாசனங்களிற் காணப் படுகின்றதென்பதனை அவர் குறிக்கவில்லை;

தமிழ்நாட்டில் நான்கு வரிவடிவங்களை வழங்கி வந்தது, தமிழருடைய விவேகத்துக்கு அறிகுறி என்பர் கண்ணையன்; ஆனால், தமிழருடைய வரிவடிவத்தின் வர லாற்றையும் பண்பாட்டின் வரலாற்றையும் இணைத்துப் பார்க்கும்போது, அங்கு பெருமைப்படுவதற்கு எதுவு மில்லை. அரசியல் ஒற்றுமையில்லாமையாலே தமிழர் தமிழ் மொழியை எழுத வெவ்வேறு வரிவடிவங்களைப் பயன்படுத்தினர்: சோழப் பெருமன்னரின் கீழ் அரசியல் ஒற்றுமை ஏற்பட்டபோது, தமிழ்மொழிக்கு ஒரு வரிவடி வமே வழங்கத்தொடங்கியது. இடைக்காலத் தமிழர் பண்பாட்டில் வட இந்தியாவின் செல்வாக்குச் சிறப்பிடம் பெற்றது. சங்கத மொழி மூலமாகவே அச் செல்வாக்குத்

30. T. A. Gopinatha Rao - Travancore Archaeological Series, Vol. I, p. 202, footnote 3. He rejects the view of Burnell - South Indian Palaeography - pp. 4, 5, footnote 4.

தமிழரிடையே இடம்பெற்றது. தமிழ் நாட்டிற் சங்கத மொழியை எழுதுவதற்காகக் கிரந்தம் தோற்றுவிக்கப் பட்டது. இக்காலச் சூழ்நிலையிற் பண்பாட்டு முக்கியத்து வத்தை இழந்துவிட்ட கிரந்தம் ஒடுங்கிவருகிறது.

## 3. வரிவடிவத்தில் மாற்றங்கள்

தொல் வரிவடிவவியலாளர்கள் வரிவடிவம் காலப் போக்கில் மாறிச் செல்வதற்கான பொதுக் காரணங்களை ஆராய்ந்திருக்கின்றார்கள். அக்காரணங்களை எடுத்துக் காட்டுவதில் அவர்களுக்குள் அதிக வேறுபாடு இல்லை. எழுதும்முறை, அலங்கார விருப்பு, எளிமையான போக்கு என அவற்றை மூன்றாகக்கொள்ளலாம். எழுதும் முறை என்பதற்குப் பதிலாக எழுது கருவிகள் என்பதும் எளி மையான போக்கு என்பதற்குப் பதிலாக கைலாவகம் என்பதும் கூறப்படுவதுண்டு. பிறநாட்டார் தொடர்பை யும் ஒரு காரணமாக எடுத்துக்காட்டுவர். தி நா. சுப் பிரமணியம் காரணங்களைக் கூறிச் சில உதாரணங்கள் தந்துள்ளார். தமிழ் எழுத்துக்கள் காலப்போக்கில் அடைந்துவந்த மாற்றங்களை வகைப்படுத்தி அம்மாற்றங் களுக்கு என்ன காரணங்களாக இருக்கலாம் என்ற முறை யில் இதுவரை யாரும் ஆராய்ந்ததாகத் தெரியவரவில்லை. காரணங்கள் கூறுவதிற் கருத்து வேறுபாடுகள் ஏற்படு மென்ற அச்சம் ஒரு காரணமாகலாம். எனினும் மாற் றங்களை வகைப்படுத்தி மிகவும் பொருந்தக்கூடிய கார ணத்தைக் கூறுவதிலே தவறில்லை.

கி. பி. ஏழாம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துக் களையும் கி. பி. பதினோராம் நூற்றாண்டுத் தமிழ் எழுத் துக்களையும் முதலில் ஒப்பிட்டு நோக்கலாம். முதலில் மெய்யெழுத்துக்களை நோக்கினால், அவற்றுட் சில மேலே கிடைக்கோடும் இடது பக்கம் குத்துக்கோடும் பெற்றமை

வதைக் காணலாம்; இத்தகைய மாற்றம் ஏழாம் நூற்றுண்டு வரிவடிவத்திலிருந்து பதினோராம் நூற்றுண்டு வரிவடிவம் பெற்ற எழுத்துக்களாக க, ங, ச, த, ந, ர என்பனவற்றைக் கூறலாம். பதினோராம் நூற்றுண்டில் சில எழுத்துக்களின் கால் அல்லது கீழ்ப்பகுதி நீண்டமையத் தொடங்குகின்றன; பதினோராம் நூற்றுண்டிலே, ஞ, ண, ல, ள என்ற எழுத்துக்கள் சுழிகளோடு காணப்படுகின்றன. ள, ண என்ற எழுத்துக்களில், வளைவுகள் தேவையான இடங்களில், வளைவுகள் தெளிவுற அமைந்துள்ளன. இவை யாவற்றுக்கும் அலங்கார விருப்பே காரணம் என்று கூறலாம்; எழுதும் முறை அல்லது எழுது கருவிகள் காரணமாகத் தமிழ் வரிவடிவமாற்றம் பெரிய அளவில் நிகழ்ந்ததாகக் கூறமுடியாது; தமிழ் நாட்டில் இடைக்காலத்தில் எழுது கருவிகளில் மாற்றம் நிகழவில்லை. அச்சுயந்திரம் வரும்வரையில் எழுதுகருவிகள் மாறியதற்குச் சான்றில்லை. எனவே தமிழ் வரிவடிவ மாற்றங்களுக்குக் காரணங்களாக அலங்கார விருப்பையும் எளிமையான போக்கையுமே கூறலாம்; எழுதும் முறையால் மாற்றம் ஏற்பட்டிருக்கக் கூடுமானால் அகரம் ஆகாரம் என்பவற்றில் அக்காலத்தில் ஏற்பட்ட மாற்றம் அப்பிரதட்சிணமாக எழுதிவந்ததை மாற்றிப் பிரதட்சிணமாக எழுதியதனால் ஏற்பட்டவை எனலாம். வ, ங, ய என்ற மெய்யெழுத்துக்களிற் காணப்படும் மாற்றமும் அத்தகைய எழுத்து முறையினாலேற்பட்டதேயெனலாம்.

எளிமையான போக்கினாலும், வரிவடிவத்தில் மாற்றங்கள் ஏற்பட்டன; அ, ஆ, இ என்ற உயிரெழுத்துக்களிலும் ட, ப, ம என்ற மெய்யெழுத்துக்களிலும் வளைவுகள் நீக்கி எழுதப்பட்டது எளிமையான போக்கினால் என்றும் கூறலாம்; ஏழாம் நூற்றுண்டிற் புள்ளியோடு எழுதப்பட்ட மெய்யெழுத்துக்கள் முதலியன, பதினோராம் நூற்றுண்டிலே புள்ளியின்றி எழுதப்பட்ட

தற்கும் எளிமையான் போக்கே காரணம் எனலாம்; து, ஞு, ஒு, டை என்ற உயிர்மெய்யெழுத்துக்கள் ஒவ்வொன்றும் ஏழாம் நூற்றாண்டில் இரண்டு வடிவங்களைப் பெற்றுப் பதினோராம் நூற்றாண்டில் ஒரே வடிவத்தைப் பெறுகின்றன; இங்கும் எளிமையான போக்கையே காரணமாகக் கூறலாம்;

கி. பி. பதினோராம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துக்களையும் கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துக்களையும் இனி ஒப்பிட்டு நோக்கலாம். இடப் பக்கத்தில் ஒரு குத்துக்கோட்டுடன் தொடங்கும் க, ங, ச, த, ந, ர என்பன - பதினோராம் நூற்றாண்டில் குத்துக் கோட்டைச் சிறிதளவு வளைவாகப் பெற்றிருந்தவை பதினைந்தாம் நூற்றாண்டில் நேர்த்தன்மையுள்ள நீளமான குத்துக்கோட்டைப்பெற்றன; இந்த மாற்றத்திற்கும் அலங்கார விருப்பே காரணம் என்று கூறவேண்டும்; குத்துக்கோடுகளுக்குமேலே ஒரு கிடைக்கோட்டினைப் பெற்று விளங்கும் இம் மெய்யெழுத்துக்களும் ஏகார உயிரெழுத்தும் - பதினோராம் நூற்றாண்டிலே கிடைக்கோட்டினை வளைவாகப் பெற்றனவாகவும் அதனை வலப்பக்கக் குத்துக்கோட்டுக்கப்பால் நீட்டாது வலப்பக்கக் குத்துக் கோட்டோடு முடிவடைவனவாகவும் இருந்தவை-பதினைந்தாம் நூற்றாண்டில் நேரான கிடைக்கோட்டைக் கொண்டனவாகவும் அக்கிடைக்கோட்டினை வலப்பக்கக் குத்துக்கோட்டுக்கப்பால் சிறிது நீட்டி அமைத்துகொண்டனவாகவும் காணப்படுகின்றன; இந்த மாற்றத்துக்கும் அலங்கார விருப்பையே காரணமாகக் கூறலாம்.

அலங்கார விருப்பால் ஏற்பட்ட மாற்றம் என்று இன்னொன்றையும் கூறலாம்; கீழே வளைவுகள் பெற்றமையும் எழுத்துக்கள் பதினைந்தாம் நூற்றாண்டிலே தெளிவான வளைவுகளை உடையனவாக அமைந்துள்ளன;

க, ச, த ஆகிய எழுத்துக்களின் வளைவுகளும் ங, ந, ம, ழ ஆகிய எழுத்துக்களின் வலப்பக்க வளைவுகளும் பதிஞேராம் நூற்றுண்டிலும் பார்க்கப் பதினேந்தாம் நூற்றுண்டிற் செம்மையாக அமைந்துள்ளன; அதாவது, சிறிய வளைவுகளின்றி ஒரே வளைவாகத் தெளிவாக அமைந்துள்ளன.

அலங்கார விருப்பு அல்லது எழுதுவோர் கைலாவகம் அல்லது இவையிரண்டும் காரணம் என்று கூறத்தக்க மாற்றமும் காணப்படுகின்றது. தொடக்கத்தில் சுழியைக்கொண்டு ஆரம்பமாகும் எழுத்துக்கள் பதிஞேராம் நூற்றுண்டிலே சிறிதளவாகப் பெற்றிருந்த சுழிக்கும் தன்மையினைப் பதினேந்தாம் நூற்றுண்டிலே தெளிவாகப் பெற்றமைந்துள்ளன. அ, ஆ, எ, ஞ, ஞ, ல, ள என்ற எழுத்துக்கள் உதாரணங்களாம்; ணகரத்தில் உள்ள சுழிகள் யாவும் தெளிவாகச் சுழிக்கப்பட்டுள்ளமையையும் பதினேந்தாம் நூற்றுண்டிற் காணமுடிகிறது.

எளிமையான போக்கும் ஒருவித மாற்றத்திற்குக் காரணமாகின்றது பதிஞேராம் நூற்றுண்டுச் சில எழுத்துக்களிற் காணப்பட்ட வளைவுகள் சில, நீக்கப்பட்டமையைப் பதினேந்தாம் நூற்றுண்டு எழுத்துக்களிற் காணமுடிகின்றது. அ, ஆ, உ, ய, ள, ட என்ற எழுத்துக்களில் இந்த மாற்றத்தினை அவதானிக்கலாம்; இவ்விதமான எழுத்துக்கள், சில வளைவுகள் நீக்கப்பட்டு அமைந்தமை எழுதுவோர் நுணுக்கமான வளைவுகளைக் கவனிக்காது எளிமையை விரும்பி எழுதியமையால் ஏற்பட்டிருக்கலாம்.

இன்னும் சில மாற்றங்களைக் குறிப்பிட்டுக் காரணங்களை ஊகிக்கலாம்; ஐகார உயிர் எழுதப்படும் முறையிலும் ஐகார உயிர்மெய் எழுதப்படும் முறையி

லும் ஏற்பட்டுவந்த மாற்றத்திற்கு அலங்கார விருப்பே காரணம் என்று கூறவேண்டும். ஐகார உயிர்மெய்யிலே வரும் சங்கிலிக் கொம்பில், முதலிலும் நடுவிலும் சுழிகள் அமைந்து காணப்பட்டது பதினைந்தாம் நூற்றாண்டிலேதான். உயிர்மெய் இகரத்தின் அடையாளம் பதினோராம் நூற்றாண்டில் அரைப்பிறை வடிவமாக மெய்யெழுத்துக்குமேலே தனித்து எழுதப்பட்டது. பதினைந்தாம் நூற்றாண்டில், இன்றுள்ள மாதிரி எழுதப்படத் தொடங்கிவிட்டது. விரைவாக எழுதும்போது, எளிமை கருதி இந்த மாற்றம் தோன்றியிருக்கலாம்.

தமிழ்மொழியைக் கன்னித் தமிழ் என்று அதன் இளமை மாறாத இயல்பைச் சுட்டிக்காட்டுவதுண்டு. தமிழ்மொழி காலப்போக்கில் வேகமாக மாறிச் செல்லாததுபோல, தமிழ் வரிவடிவமும் காலப்போக்கிலே சிறிது சிறிதாகவே மாறிச் சென்றிருக்கின்றது.

# சாசனத்துத் தமிழ்மொழி

தமிழ்மொழி வரலாறு இன்னும் திருப்திகரமாக எழுதப்படவில்லை; சென்னைப் பல்கலைக்கழகத்திலே தமிழ் வரலாற்றிலக்கணத்தைப் பற்றி விரிவுரைகள் நிகழ்த்திய கமீல் சுவெலிபில் தமிழ்மொழி வரலாறு இதுவரை நன்கு அமையாததற்கான காரணங்களையும் தாமும் தம்முடைய ருஷ்ய நாட்டுச் சகாக்களான ஆண்ட்ரநோவ், கிளாசோவ் என்போரும் தமிழ் வரலாற்றிலக்கணம் அமைப்பதற்கு எவ்வெவ்வகைகளிலே திட்டமிட்டனரெனவும் தங்களுடைய ஆராய்ச்சி நெறி எத்தகையதெனவும் விளக்கியுள்ளார்[1] உத்தேசத் தமிழ்மொழி வரலாற்றிலக்கணத்திலே சாசனத்துத் தமிழ்மொழி பற்றிய ஆராய்ச்சிக்குப் பொறுப்பேற்றுள்ள கமீல் சுவெலிபில் சிறு பழந்தமிழ்ச் சாசனமான திருநாதர் குன்றுச் சாசனத்தை ஆராய்ந்து தம்முடைய ஆராய்ச்சி முறையை விளக்கியுள்ளார். கி. பி. 550 ஐச் சேர்ந்ததாகக் கருதப்படும் பள்ளன்கோவிற் சாசனத்தை ஆராய்ந்து ஒரு சிறு நூல் வெளியிட்டுள்ளார். பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் ஐக்கிய அமெரிக்காவிலுள்ள சிக்காகோப் பல்கலைக்கழகத்திலே தமிழ்மொழி வரலாறு பற்றி ஆங்கிலத்தில் நிகழ்த்திய

---

1. Kamil Zvelebil-Lectures on the Historical Grammar of Tamil, Madras.

விரிவுரைகளைத் தொகுத்து நூலாக வெளியிட்டுள்ளார்.[2] தமிழ்மொழி வரலாற்றுக்கான மூலாதாரங்களிலே சாசனத்துக்கு உரிய இடத்தை விளக்கிச் சாசனத் தமிழைத் தம்முடைய நூலிற் பயன்படுத்தியும் உள்ளார்.

தென்னிந்தியாவிலும் இலங்கையிலும் பனையோலையே நூல்கள் எழுதப்பயன்பட்டுவந்தது. இப்பிரதேசங்களிலுள்ள சுவாத்தியம் ஓலைச் சுவடிகள் நீண்டகாலம் நிலைப்பதற்கு ஏற்றதல்ல. குறுகிய கால இடைவேளையில் நூல்கள் புதிய ஓலைகளிற் பிரதிகள் செய்யப்படாவிட்டால், அந்நூல்கள் அழிந்துவிடும். எனவே, இரண்டாயிரம் ஆண்டு வரலாறுடையனவாக இன்று கிடைக்கும் பழந்தமிழ் நூல்கள் யாவும் இவ்வாறு காலத்துக்குக் காலம் பிரதிசெய்யப்பட்டுவந்தனவே; பிரதிசெய்பவர் தவறுமிடங்கள் சில இருந்திருக்கும்; வேண்டுமென்றே காலத்துக்கேற்ற மாற்றங்களைப் புகுத்தலும் நிகழ்ந்திருக்கும் பழந்தமிழ்ச் சுவடிகள் பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பிற்பாதியிலிருந்து அச்சுவாகனமேறுகின்றன. ஓலைச் சுவடிகள் இருந்த சீர்கெட்டநிலையைப் பதிப்பாசிரியர்கள் பலர் குறித்துச் சென்றுள்ளனர்; பதிப்பாசிரியர்கள் திருத்தம் செய்தபோது பழைய வழக்குகளை முழுவதாக உணர்ந்து திருத்தஞ்செய்தனர் என்று கொள்ளக்கூடவில்லை. ஆனால், தமிழ்ச்சாசனங்களில் இந்த நிலையில்லை. அவ்வக்காலத்து எழுதப்பட்ட சாசனங்கள் அவ்வவ்வாறே அமைந்துள்ளன; எனவே, காலமுறையிலே தமிழ்மொழி வரலாற்றை உணர்ந்துகொள்வதற்குச் சாசனங்கள் பேருதவி புரிகின்றன.[3]

---

2. T.P. Meenakshisundaram-A History of Tamil Language. Poona 1965.

3 S. V. Shanmugam - Seminar on Inscriptions, 1966, Madras 1968 - Epigraphy and Tamil Linguistics.

தமிழ்மொழி வழக்கை இலக்கிய வழக்கு, பேச்சு வழக்கு என்று பகுத்து நோக்கும்போது சாசன வழக்குப் பேச்சு வழக்கோடு ஒத்தியல்வது தெரியவருகின்றது; தமிழ்மொழியின் இலக்கிய வழக்குக்கு இரண்டாயிரம் ஆண்டுகால வரலாறுண்டு. இலக்கிய வழக்கில் காலத்துக்குக்காலம் ஏற்படும் மாற்றம் மிகச் சிறிய அளவிலேயே ஏற்பட்டு வந்திருக்கின்றது; மக்களுடைய நாவில் வழங்கிய உயிர்த் துடிப்புடைய மொழியாகிய பேச்சு வழக்கில், காலத்துக்குக்காலம் மாற்றம் ஏற்பட்டே வந்திருக்கின்றது; மொழி வழக்கு மாற்றமும் சமுதாய மாற்றமும் நெருங்கிய தொடர்புடையன; தமிழ்ச் சமுதாயம் வேகமாக மாற்றமுற்றுச் செல்லாமையால், தமிழ்மொழி வழக்கும் வேகமாக மாற்றமுற்றுச் செல்லவில்லை. பழமை போற்றும் இயல்பைத் தமிழ்ச் சமுதாயமும் தமிழ்மொழியும் பிரதிபலித்துவந்துள்ளன; இலக்கிய வழக்குத் தமிழ் கற்றவராலே போற்றப்பட்டுவந்தது. கற்றோர் இலக்கிய வழக்குத் தமிழினைக் கற்று அதனைக் கையாண்டே பெரும் பாலும் இலக்கியம் செய்துவந்தனர். சோழப்பெரு மன்னர்கால முடிவுவரையிலான இலக்கியங்களில், பேச்சு வழக்குச் சொற்கள் மிக அருகியே காணப்பட்டன. பத்தொன்பதாம் இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்களிலேயே பேச்சுவழக்குச் சொற்கள் சிறப்பிடம் பெறுகின்றன. தமிழிலக்கியங்களிலும் மரபுவழித் தமிழிலக்கணங்களிலும் மட்டும் பரிச்சயமுள்ள தமிழறிஞர்கள் பலர் இலக்கிய வழக்கே தமிழ் வழக்கென்றும் பேச்சு வழக்குச் சமீபகாலத்தில் இலக்கிய வழக்கில் ஏற்பட்ட திரிபென்றும் தப்பாகக் கருதிவந்தனர். சாசனத்துத் தமிழ்மொழி ஆராய்ச்சி பேச்சு வழக்குத் தமிழின் நீண்டகால வரலாற்றை அறியத் துணைபுரிகிறது. இன்றைய பேச்சு வழக்கிலுள்ள வடிவங்கள் சில, இலக்கிய வழக்கிலுள்ள மிகப்பழைய வடிவங்களைப்போன்ற தொன்மையுடையவை என்பது சாசன ஆராய்ச்சியாலே தெரியவருகின்

றது; பேச்சுவழக்கும் இலக்கிய வழக்கும் தனித்தனி வரலாறுடையவை, ஒன்றன் செல்வாக்கு மற்றதில் உண்டு என்ற உண்மைகள் இன்று நிரூபணமாகித் தமிழ்மொழி வரலாறு தெளிவுறும் நிலை இன்று காணப்படுகின்றது;

தமிழ்மொழிக்கு அயல்மொழிகளான சிங்களம், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளில் இன்று கிடைக்கும் அவ்வம்மொழி இலக்கியங்களை விடப் பழமையான அவ்வம்மொழிச் சாசனங்கள் உள்ளன. எனவே, இம்மொழிகளின் வரலாற்றுத்தொடக்கம் சாசன வழக்கிலே காணப்படுகின்றது; கால ஆராய்ச்சியிலே தோன்றிய கருத்து வேறுபாடுகள் தமிழ்மொழியைப் பற்றியவரையில் இன்னும் மறையவில்லை. தமிழ்மொழியிலுள்ள மிகப் பழைய இலக்கியம், மிகப் பழைய இலக்கணம், மிகப்பழைய சாசனம் என்பவற்றுள் முந்தியது எது, பிந்தியது எது என்பதில் இன்றும் கருத்து வேறுபாடு உண்டு. தமிழ்நாட்டிலுள்ள குகைச்சாசனங்களே காலத்தால் மிகவும் முந்தியவை என்பதை வரலாற்றாசிரியர் வற்புறுத்திவர மொழியியலறிஞரும் இன்று ஏற்கின்றனர்; மீனாட்சிசுந்தரனார் குகைச் சாசனம், தொல்காப்பியம், சங்க இலக்கியம் என்ற முறையில் வைத்து மொழி வரலாற்றை ஆராய்ந்துள்ளார்; மீனாட்சிசுந்தரனாருடைய குகைச்சாசனம் பற்றிய மொழியாராய்ச்சி சாசனவியலாளரான கே. வி. சுப்பிரமணிய ஐயரின் வாசகங்களையும் விளக்கங்களையும் அடிப்படையாகக்கொண்டது. சுப்பிரமணிய ஐயரின் வாசகங்களும் விளக்கங்களும் முடிந்த முடிபாக அமையவில்லை. பேராசிரியர் மகாலிங்கம் குகைச் சாசனங்களின் திருத்திய பதிப்பு ஒன்று சமீபத்தில் வெளியிட்டுள்ளார். ஐராவதம் மகாதேவன் குகைச்சாசனங்களைப் புதிய முறையில் வாசித்து வருகின்றார்; எனவே குகைச்சாசனங்களின் மொழியை, இன்று அச் சாசனங்களின் ஆராய்ச்சி உள்ளநிலையில்,

ஆராய முயல்வது பயன்படாது. சாசனங்கள் தெளிவாக வாசிக்கப்பட்டுள்ளன என்ற நிலை ஏற்பட்ட பின்னரே, அவற்றின் மொழியை ஆராயப்புகவேண்டும்.

மீனாட்சிசுந்தரனாரின் தமிழ்மொழி வரலாறு சங்க இலக்கிய மொழி ஆய்வுக்குப்பின் மூன்று விரிவுரைகளையேகொண்டிருந்தது: கடைசி விரிவுரை இருபதாம் நூற்றாண்டுத் தமிழைப் பற்றியதாகும்; அதற்கு முந்தியது தமிழுக்கும் பிறமொழிக்குமிடையிலான தொடர்பாகும். சங்க இலக்கியத் தமிழுக்கும் இருபதாம் நூற்றாண்டுத் தமிழுக்கும் இடையே காலப்போக்கில் ஏற்பட்டுவந்த பிறமொழிக் கலப்புத் தவிர்ந்த மாற்றங்கள் யாவும் ஒரு விரிவுரையில் அடக்கப்பட்டுள்ளன, இவ்விரிவுரை பல்லவர் காலம், சோழர் காலம், நாயக்கர் காலம் என மூன்றாகப் பகுக்கப்பட்டுள்ளது. நாயக்கர் கால மொழியாராய்ச்சிக்கு அக்காலப் பகுதியிற் பேச்சு வழக்கைத் தழுவி எழுந்த ஒரு நூலை ஆதாரமாகக் கொண்டுள்ளார். பல்லவர் காலம், சோழர் காலம் என்பனவற்றின் மொழியை ஆராய்வதற்குச் சாசனங்களையே துணைக்கொண்டுள்ளார். அவ்வாறு கொள்வதில், நியாயம் இருக்கிறது. தமிழிலக்கியங்களின் பரப்பு மிகவும் விரிந்தது. தமிழில் எழுந்துள்ள நூல்கள் அனைவற்றையும் ஆராய்ந்த பின்பே தமிழ்மொழி வரலாறு எழுதுவது எனத் தீர்மானித்தால், தமிழ் மொழிவரலாற்றை எப்பொழுது எழுதலாம் எனக் கற்பனையே செய்யலாம். தமிழில் எழுதப்பட்டவை யாவற்றையும் மொழியியல் முறையில் ஆராய்வது எனத் தீர்மானித்தால், அவ்வாராய்ச்சியுச் [illegible] சில தலைமுறைகளாவது

செல்லும்;[4] இக்காலத்தில் விருத்திசெய்யப்பட்டுவரும் கணனியைத் துணைக்கொண்டாலும் இந்நூல்கள் யாவற்றையும் ஆராய நீண்ட காலம் செல்லும். இந் நூல்கள் முழுவதையும் ஆராய்ந்தாலும், மொழிமாற்றம் மிகச் சிறிய அளவிலேயே நிகழ்ந்துசென்றதைக் கணிக்கமுடியும். ஆனால், சாசனங்கள் பேச்சுவழக்கைத் தழுவிச் செல்வதால், சங்க இலக்கிய வழக்குகளிலிருந்து வேறுபட்ட வழக்குகளைச் சாசனங்களிற் காணக்கூடியதாக இருக்கும்; எனவே, வளர்ச்சி – மாற்றம் – வரலாறு என்ற கண்ணோட்டத்திலே சாசன வழக்காறுகள் முக்கியத்துவம் வழங்கவேண்டிய நிலையிலுள்ளன;

கி. பி. ஏழாம் எட்டாம் நூற்றாண்டுகளைச் சேர்ந்த சாசனங்களின் மொழியை ஆராய்ந்து தமிழ்ச் சாசனமொழி ஆராய்ச்சியில் முதல்வராக விளங்கியவர் காலஞ்சென்ற பேராசிரியர் கலாநிதி சு. கணபதிப்பிள்ளையாவர்; அவருடைய ஆராய்ச்சி நூல் சுமார் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு இலண்டன் பல்கலைக்கழகத்திற் சமர்ப்பிக்கப்பட்டது. மொழியாராய்ச்சியும் சாசன ஆராய்ச்சியும் தமிழகத்தில் விருத்தியடையக் காலம் பிந்தியதால் அவருடைய ஆராய்ச்சியின் பெருமை உணரப்படக்காலம் சென்றது. அவருடைய மேற்பார்வையில், பிற்காலப் பாண்டியர்களாகிய சடாவர்மன் சுந்தரபாண்டியன், மாறவர்மன் குலசேகரன் ஆகியோர் காலத்துச் சாசனங்களின் மொழியை ஆராயும் வாய்ப்பு இந்நூலாசிரியருக்குக் கிட்டியது.[4] ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகத்துப் பேராசிரியர் ரி. பரோ என்பவர் திராவிடமொழி

---

4. A. Veluppillai - A Study of the Language of Tamil Inscriptions of the reigns of Caṭāvarman Cuntara Pandya and Māṟavarmaṉ Kulacēkara, 1962, unpublished Ph. D. thesis.

ஆராய்ச்சியிலே தலைசிறந்து விளங்குபவர்; அவருடைய மேற்பார்வையில், கி. பி. 800-920 என்ற காலப்பகுதிக்குரிய சாசனங்களின் மொழியை ஆராயும் வாய்ப்பும் கிட்டியது.[5] இவ்விரு காலப் பிரிவுகளுக்குமுரிய சாசனங்களின் மொழிவழக்குகளைக்கொண்டே இக்கட்டுரை எழுதப்படுகின்றது:

## 1. எழுத்தியல்

சாசனத் தமிழிலுள்ள ஒலியன்களை நோக்கும்போது இவ்விரு காலச் சாசனங்களிலும் அ, இ, உ, எ, ஒ என்ற உயிரொலிகளும் அவற்றின் நெடில் ஒலிகளும் ஐகாரம் என்ற கூட்டொலியும் உயிரெழுத்துக்களாகக் காணப்படுகின்றன. மெய்யெழுத்துக்களில் க, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம, ய, ர, ல, வ, ழ, ள, ற என்ற பதினாறும் ஒலியன்களாகக் காணப்படுகின்றன. ஔகாரம் என்ற கூட்டொலி எச்சொல்லிலும் இடம்பெறவில்லை. ஙகரம் சொல்லுக்கு இடையில் மட்டும் ககர வெடிப்பொலிக்கு இன மூக்கொலியாக வருகிறது. சொற்கள் புணரும்போது வருமொழியிலுள்ள ககரமெய்க்கு இன ஒலியாகத் திரியும் மகரமெய்யே ஙகர மெய்யாக வழங்குகின்றது எனலாம்; எனவே, மகர மெய்யின் மாற்றொலியனாக ஙகர மெய்யைக் கொள்ளலாம்; பிற்காலப் பாண்டியர் சாசனங்களில் ஞகரமெய்யும் இந்நிலைக்கு வந்துவிட்டது. ஞகரமெய்யை முதனிலையாகவோ இறுதிநிலையாகவோ கொண்ட சொற்கள் எதுவும் கிடைக்கவில்லை; நகர மெய்யையும் னகர மெய்யையும் வெவ்வேறு

---

5. A. Veluppillai - A Study of the Language of Tamil Inscriptions ~~of the reigns~~ of the period 800 - 920 A. D., 1964 unpublished D. Phil. thesis.

ஒலியன்களாகக் கொள்ளவும் முடியவில்லை; பழைய தமிழில் இவ்விரு ஒலிகளும் ஒலியன்களாக வழங்கிவந்த நிலை மாறிவிட்டது. சொல்லுக்கு முதலில் நகரத்தையும் இடையிலும் கடையிலும் னகரத்தையும் எழுதும்மரபு தோன்றி விட்டது. இரண்டு ஒலிகளுக்கும் இடையிலான வேறுபாடு மறைந்துவந்தது, சாசன வழக்குகளில் இவ்விரு ஒலிகளும் மயங்கி வந்ததிலிருந்து அறியக்கூடியதாயுள்ளது; எனவே, மொழிக்கு முதலில் வரும் நகரத்தின் மாற்றொலியனாக னகரத்தைக் கொள்ளலாம்.

சாசனங்களிற் காணப்படும் நகரனகர மயக்கம் தமிழ்நாட்டு வடபகுதிச் சாசனங்களிலேயே ஆரம்பத்திற் காணப்படுகின்றது. நகர னகர வேறுபாடு தமிழ் மொழிக்கு இன்றியமையாததாக அமைந்திருந்திருக்க வேண்டும். ஆதித் தமிழினை எழுதப் பயன்பட்ட பிராமி எழுத்து, பாதகமொழி முதலிய வடமொழிகளுக்கு உரியதாக இருந்தது. வடமொழியில் ழ, ள, ற, ன என்ற தனியொலிகள் இல்லை. அதனாலேதான் தமிழ் மெய்யெழுத்துக்களைக் ககரவரிசையில் ஒழுங்குபடுத்திய இலக்கண ஆசிரியர் தமிழுக்கும் வடமொழிக்கும் பொதுவான மெய்யெழுத்துக்களை வடமொழி ஒழுங்கு முறைப்படி கூறித் தமிழுக்குச் சிறப்பாக உரிய நான்கு எழுத்துக்களையும் கடைசியிலே அமைத்தனர். ளகரம் வடமொழியை எழுதத் தென்னாட்டார் பயன்படுத்திய கிரந்தத்திலும் இடம்பெற்றதால், ழ, ற, ன என்பனவே தமிழுக்கு உரிய சிறப்பெழுத்து எனப்படுவதுமுண்டு. பல்லவர் காலத்திலே தமிழ்நாட்டிலே வடபகுதியிலே கிரந்தத் தமிழ் எழுத்தும் தென்பகுதியிலே வட்டெழுத்தும் வழங்கின. பாண்டியராட்சியிலே தமிழ் தூய்மையைப் பேணிப் பழைய வேறுபாட்டைக் காட்டிவந்தது. பல்லவராட்சியிற் செல்வாக்குப்பெற்ற கிரந்தத்தில் னகர மெய் இடம்பெறவில்லை. கிரந்த எழுத்தும் தமிழ் எழுத்தும்

நெருங்கிய ஒற்றுமையுடையனவாக விளங்கியதால் இரண்டு எழுத்து முறையையும் பயன்படுத்தியோருக்குத் தமிழ் எழுத்துமுறையிற் சிறப்பாகக் காணப்பட்ட னகரம் மிகை எழுத்தாக இருந்திருக்கும்; அதனால் அவையிரண்டையும் மயங்க எழுதியிருக்கவேண்டும். சோழப் பெருமன்னர் காலத்திலே தமிழ்நாடு முழுவதும் ஓராட்சியின் கீழ் வந்தது. பாண்டிநாட்டு வட்டெழுத்து வழக்கு வீழச் சோழ நாட்டுத் தமிழெழுத்துத் தமிழ்நாடு முழுவதும் ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. பிற்காலப் பாண்டியராட்சியிலே, தொண்டை மண்டலம், சோழ மண்டலம், கொங்கு மண்டலம், பாண்டி மண்டலம் ஆகிய தமிழ் நாட்டின்எல்லாப் பகுதிகளிலும். சாசன வழக்குகளில் நகர னகர மயக்கம் காணப்படுகின்றது;

தனித்தமிழ் எழுத்துக்களில் வரையப்பட்ட சாசனங்கள் மிகச் சிலவாம். பெரும்பாலான தமிழ்ச் சாசனங்களிலுள்ள சங்கத மொழிச் சொற்கள் கிரந்த எழுத்தில் வரையப்பட்டுள்ளன. சங்கத மொழிச் சொற்கள் சங்கத மொழியொலிப்போடு கிரந்த எழுத்தில் எழுதப்படுவது ஒரு வகையாகும். சங்கத மொழிச் சொற்கள் தமிழ் விகுதிகளைப்பெற்ற பின்பும் முழுவதும் கிரந்த எழுத்தில் எழுதப்படுவது இன்னொருவகையாகும்; சங்கத மொழி ஈறாகிய ஆகாரம் முதலியவை தமிழில் ஐகாரம் முதலியவையாகத் திரிந்த பின்பும் கிரந்தத்தில் எழுதப்பட்ட இடங்கள் சில உள. சங்கதச் சொற்கள் தமிழ்ப் பாலறி கிளவிகளைச் சேர்ந்தபின்பும் சங்கதப் பகுதியைக் கிரந்தத்திலும் தமிழ்ப் பகுதியைத் தமிழிலும் எழுதும்வழக்குப் பயின்று காணப்படுகின்றது. வடமொழிச் சொற்கள் சொற்றொடர்களில் சில ஒலிகளைக் கிரந்தத்திலும் சில ஒலிகளைத் தமிழ் எழுத்திலும் எழுதும் வழக்கம் பயின்று காணப்படுகின்றது, இவற்றுட் சில இடங்களில் வடமொழிக்குரிய சிறப்பொலிகளை

அவற்றுக்கினமான தமிழ் ஒலிகளாக மாற்றவிரும்பாது கிரந்தம் பயன்படுத்தப்பட்டிருக்கிறது போலத் தெரிகின்றது; சாசன மொழியிற் கிரந்த வழக்காற்றை ஆராய்வது சங்கத மொழிச் சொற்கள் தமிழில் வந்து கலந்த போது உச்சரிக்கப்பட்டவாற்றை உணர்த்துகின்றது. சங்கதம் கற்ற தமிழர் சங்கதச் சொற்களைச் சங்கதமாக உச்சரித்துத் தமிழ் ஒலி மரபுக்கேற்ற மாற்றங்களையும் இடையிடையே புகுத்துவதைக் காணலாம். இந்த வகையில் இது பேச்சுவழக்கைத் தழுவியது என்றே கொள்ள வேண்டும். வடமொழிச் சொல் வந்து தமிழில் அமையுமாற்றை ஆராய்ந்து கூறுவதற்கு வீரசோழியத்தாருக்கும் நன்னூலாருக்கும் சாசனத்தமிழ் உதவியிருக்கவேண்டும். தமிழ்ச் சொற்கள் சிலவற்றை அல்லது தமிழ்ச் சொற்கள் சிலவற்றின் சில ஒலிகளை எழுதுவதற்கும் கிரந்த எழுத்து மிக அருகிய வழக்காகப் பயன்படுத்தப் பட்டது. அக்காலத்திற் கிரந்த எழுத்துக்கு இருந்த செல்வாக்கு அல்லது தமிழ்ச் சொற்கள் தவறுதலாக வட சொற்களாகச் சிலராற் கருதப்பட்டமை இதற்குக் காரணமாகவேண்டும்;

மொழி வரலாற்றில் எழுத்தொலி மாற்றங்கள் மிகவும் முக்கியத்துவம் பெறுகின்றன. எழுத்தொலி மாற்றங்கள் இலக்கிய வழக்குத் தமிழில் அருகியே இடம் பெறுகின்றன. பேச்சுத் தமிழிற் காலத்துக்குக் காலமும் இடத்துக்கிடமும் எழுத்தொலி மாற்றங்கள் ஏற்பட்டு வந்துள்ளன. இன்னொருவிதமாகக் கூறுவதானால், பேச்சுத் தமிழில் இந்த மாற்றங்கள் எப்போதும் இருந்து வந்தனவென்றும் ஒரு பிரதேசப் பேச்சுத் தமிழே செம்மை செய்யப்பட்டுச் செந்தமிழாக்கப்பட்டு இலக்கிய வழக்காகியதென்றும் கூறலாம்; சாசனத் தமிழில் இலக்கிய வழக்காறுகளிலிருந்து எழுத்தொலி மாற்றங்கள் பெற்ற பல வழக்காறுகளைக் காணலாம். அவ்வாறு

காணப்படும் எழுத்தொலி மாற்றங்கள் யாவும் பேச்சு வழக்கிற் காணப்பட்ட மாற்றங்களா அல்லது எழுதுப வரின் அறியாமையால் ஏற்பட்ட தவறுகளா என நிச்ச யிக்கமுடியாதுள்ளன. இவ்விரு வகையிற் சாசனவழக்கு களிற் காணப்படும் எழுத்தொலி மாற்றங்கள் ஏற்பட் டிருக்கலாம்; பிற்காலப் பேச்சுவழக்கை ஒத்தியல்கின்ற மாற்றங்களை அக்காலப் பேச்சுவழக்கிற் காணப்பட்ட ஒலி மாற்றங்களெனவும் பிற்காலப் பேச்சுவழக்கை ஒத்தி யலாத மாற்றங்களை எழுதுபவரின் தவறுகள் என்றும் பிரிப்பது ஒருவகையாகும்.[6] பேராசிரியர் மீனாட்சி சுந்தர ஞர் ஒலி மாற்றங்களையும் தவறுகளையும் எவ் வகையாக வேறுபடுத்தியுள்ளார் என அறியக்கூட வில்லை. உயிரொலிகள் அளவிலும் தன்மையிலும் வேறு படுகின்றன எனக்கூறும் அவர் உயிரொலிகள் அளவில் வேறுபடுவதற்கான காரணத்தை விளக்குவது வில்லங்க மாக இருக்கிறது என்றும் கூறியுள்ளார். உயிரொலிகள் தன்மையில் வேறுபடுமிடங்களில் இகரம் எகரமாகவும் உகரம் ஒகரமாகவும் மாறுபடுவதைக் கால்டுவெல் விளக்கியுள்ளதை எடுத்துக்காட்டும் அவர் பிற உயிரொலி கள் இகரமாகவும் உகரமாகவும் மாறுவதை விளக்க முனைந்துள்ளார். கால்டுவெல் பேச்சுவழக்கை ஆராய்ந்தே விதிகள் வகுத்தார்; கால்டுவெல் கூறுததாக மீனாட்சி சுந்தரனர் புதிதாகக் கூறும் விதிகளையுள்ளடக்கிய உதா ரணங்கள் தவறுகளாக இருக்கலாமா என்பது ஆராயப் படவேண்டும். பிற்காலப் பேச்சுவழக்கை மட்டும் கொண்டு தவறுகளைக் கணிப்பதிற் குறை கூறுவதற்கு இடமிருக்கிறது. ஒலிமாற்றங்கள் சில, மொழி வரலாற் றில் ஒரு காலத்தில் நிகழ்ந்து இன்னெரு காலத்தில் நிகழாதிருப்பது உண்டு; இங்கு முடிந்த முடிபாகக்கூறு வதற்கு எதுவுமில்லை;

---

6. A. C. Sekhar - Evolution of Malayalam - p. 15.

எழுதுபவரின் தவறுகளாக இருந்திருக்கக்கூடியவற்றை முதலில் எடுத்துக்கொள்ளலாம்; ஆகாரத்துக்குப் பதிலாக அகரம், ஈகாரத்துக்குப் பதிலாக இகரம் ஊகாரத்துக்குப் பதிலாக உகரம் எழுதப்பட்ட இடங்கள் பல காணப்படுகின்றன; அகரத்துக்குப் பதிலாக ஆகாரம் உகரத்துக்குப் பதிலாக ஊகாரம் எழுதப்பட்ட இடங்கள் சில காணப்படுகின்றன; பண்டைத் தமிழிலும் இடைக்காலத் தமிழிலும் புள்ளியினால் வேறுபடுத்தப்பட்ட எகர ஏகாரமும் ஒகர ஓகாரமும் இடைக்காலத் தமிழ்ச் சாசனங்களிற் புள்ளியிடும் வழக்கமில்லாததால், வேறுபாடின்றியே சாசனங்களில் எழுதப்பட்டுள்ளன; இவற்றை நோக்கும்போது இடைக்காலத் தமிழ்ச் சாசனங்களிலே குறில் நெடில் வேறுபாடு நன்கு பேணப்படவில்லையென்றே கூறலாம். எகர ஏகாரங்களையும் ஒகர ஓகாரங்களையும் எழுதும்போது குறில் நெடில் வேறுபாடு பேணப்படாமையால் ஏனைய குறில் நெடில் வேறுபாடுகளையும் பேணாத இயல்பு வளர்ந்திருக்கவேண்டும்.

ஒருயிர்மெய்யெழுத்துக்குப் பதிலாக இன்னோர் உயிர்மெய்யெழுத்தை எழுதும் இடங்கள் சில, தவறுகள் என்றே கொள்ளப்படவேண்டியன. தரத்து (தரித்து), நந்திபுரத்த (நந்திபுரத்து), நல (நெல்), திரா (திரு), வேம்பனிட்டு (வேம்பனூட்டு) முதலிய உதாரணங்கள் அடைப்புக்குறிக்களுக்குள் உள்ள சொற்களைக் குறித்து வரும்போது தவறுகள் என்றே கொள்ளவேண்டும்; அ ஆயின் (ஆயின்), ஆ அடுக்கு(அடுக்கு), இ இட்டு (இட்டு) நெஇல்லால் (நெல்லால்) என அமைவன கல்லில் அல்லது செம்பில் படி எடுக்கப்பட்டபோது தவறுதலாக எழுதப்பட்டவற்றை அழிக்கமுடியாமையால் விடப்பட்டனவாக இருக்கவேண்டும்;

இரண்டு உயிரெழுத்துக்கள் உடம்படுமெய்யில்லாது எழுதப்படும் முறை சாசனங்களிற் காணப்படுகின்றது. திசைஓர்[7], இறைஇலி[8], வழிஇலார்[9] என்பன ஒரே சொல்லில் அமைந்துகாணப்படும் உதாரணங்களாம். கரைஇன்[10], குறிஇல்[11], தளிஉடைய[12], முடிஒடு[13], நெற்றிஇல்[14] முதலியன பெயர்ச் சொல்லுக்கும் வேற்றுமையுருபுக்குமிடையில் உடம்படுமெய் அமையாமைக்கு உதாரணங்களாம். இத்தகைய சொற்கள் ஒலிக்கப்படும் போது உடம்படுமெய் அமையவேண்டிய இடத்தில் விட்டிசை இருந்திருக்கவேண்டும். தமிழ் இலக்கணகாரர் சொல்லுக்கு விரிவான வரையறை கொண்டுள்ளனர்; இடைச்சொல், உரிச்சொல் யாவற்றையும் சொல்லாகக் கொண்டுள்ளனர். எனவே சொல், சொல்லும் உருபும் என மேலே காட்டியனபோன்ற வடிவங்களில் வெவ்வேறு சொற்களுள்ளன என்ற கருத்து நிலவியிருக்க வேண்டும். உயிரொலிகளுக்கிடையே உடம்படுமெய் வர வேண்டியது கட்டாயமில்லை என்று தொல்காப்பியர் கூறியுள்ளார்;

எழுதுபவரின் தவறுகள் மெய்யெழுத்துக்களை எழுதுவதிலும் காணப்படுகின்றன. சதையம்த்து (சதையத்து), பதினைஞ்ங்கழஞ்சு (பதினைங்கழஞ்சு) முட்டால்

---

7. S. I. I, Vol. III, p. 454, line 79.
8. S. I. I., Vol. XII, p. 42, line, 6.
9. S. I. I, Vol. III, p. 224, line 5.
10. S. I. I., Vol. XII, p. 48, line 6.
11. S. I. I., Vol. XII, p. 48, line 42.
12. S. I. I., Vol. XII, p. 21, line 5.
13. S. I. I, Vol. III, p. 454, line 86 / 87.
14. S. I. I, Vol III, p. 454, line 98.

மல் (முட்டாமல்), கொண்ட்டு (கொண்டு), காசும் முதல் (காசும்முதல்) முதலிய உதாரணங்கள் கல்லிலே அல்லது செம்பிலே தவறாக ஒரு மெய்யெழுத்தை எழுதி அதை அழிக்கமுடியாமையால் தொடர்ந்து சரியாக எழுத்தை எழுதிக்கொண்டுபோனமையால் ஏற்பட்டன; இதேமாதிரியான பிழை உயிர்மெய்யெழுத்து எழுதப் பட்ட இடங்களிற் காணப்படுவதற்கு உதாரணங்கள்:- இருரண்டாவது (இரண்டாவது), பரிசசு (பரிசு), பபா வம் (பாவம்) என்பன; சத்திராதித்தர் (சந்திராதித் தர்), தொந்தா (நொந்தா), துரற்றில் (துரவில்), கொட்ட (கொண்ட) முதலியன, ஓர் மெய்யெழுத்துக் குப் பதில் இன்னோர் மெய்யெழுத்து தவறுதலாக எழு தப்பட்டதற்கு உதாரணங்கள் என்றே கொள்ளத்தக் கன. எழுத்துக்கள் மட்டுமன்றி அசைகளும் இவ்வாறு எழுதப்பட்டுள்ளன; நந்தாந்தா (நந்தா), பொப்பொன் (பொன்), கந்டுண்டு (கண்டு) என்பன உதாரணங்களாம்; சொற்களை எழுதும்போது சில எழுத்துக்களைத் தவறுத லாக விட்டு எழுதுவதும் உண்டு; ஆடு (ஆண்டு), நாகு (நான்கு), பன்னிண்டு (பன்னிரண்டு) என்பன இல உதா ரணங்களாம்;

எழுத்தொலிமாற்றங்களை ஆராயும்போது உயி ரொலி மாற்றங்கள் மெய்யொலிமாற்றங்கள் என இரண்டாக வகுத்து ஆராயலாம்; உயிரொலி மாற்றங் கள் இரண்டு வகைப்படும். ஒலியைச்சேர்ப்பது ஒருவகை; சொற்களுக்கு இடையிலும் சொற்களின் இறுதியிலும் யகர மெய் சேர்க்கப்படுகின்றது; முந்தியகாலச் சாச னங்களில் இ, ஈ, ஏ, ஐ என்ற நான்கு எழுத்துக்களை யும் தொடர்ந்து உயிர், மெய், கிரந்தம் என்ற வேறு பாடின்றி என்ன எழுத்து வந்தாலும் இடையில் யகர மெய் எழுதப்படும் வழக்குக் காணப்படுகின்றது. பிற் காலச் சாசனங்களில் இ, ஏ, ஐ என்ற மூன்று எழுத்

துக்களையும் தொடர்ந்து வல்லெழுத்துக்களும் மெல்லெழுத்துக்களும் வந்தபோது யகரமெய் எழுதப்பட்டதற்கு மட்டும் உதாரணங்கள் கிடைத்துள்ளன; குறிப்பிட்ட சூழலில் யகரமெய் எழுதப்படாமைக்கும் உதாரணங்கள் உள; முன்னுள்ள உயிர்களாகிய இகரம் முதலியவை அண்ணச்சாயல் பெறுவதை இந்த யகரம் உணர்த்துவதாகக் கொள்ளவேண்டும்;

உயிரொலியொன்று பிற உயிரொலியாக எழுதப்படுவதைப் பல இடங்களிலே காணலாம்; இலக்கிய வழக்கில் அகரம் வருமிடங்களிலே சாசனவழக்கில் இகரம் வருகிறது: பிடிகை (படிகை),[15] மிலாட்டு[16] (மலாட்டு), விளாகத்தின்[17] (வளாகத்தின்) முதலியன முந்திய சாசனங்களிலுள்ள உதாரணங்களாம்; நாயிஞர்[18] (நாயஞர்), பழிம்பதி[19] (பழம்பதி), ஐப்பிசி[20] (ஐப்பசி) முதலியன பிந்திய சாசனங்களிலுள்ள உதாரணங்களாம்; இலக்கிய வழக்கில் அகரம் வருமிடங்களிலே சாசன வழக்கில் உகரம் வருவதுமுண்டு; தேவன் கேசுவன்[21] (தேவன் கேசவன்), திருமழுவாடி[22] (திருமழபாடி) என்பன முந்திய சாசனங்களிலும் மாறுபன்மர்[23] (மாறபன்மர்) ஆவுது[24] (ஆவது) என்பன பிந்திய சாசனங்களிலும் உள்ள எடுத்துக்காட்டுகளாம்; அகர

---

15. S. I. I., Vol. XII, p. 50 line 4.
16. E. I., Vol. VII, p. 139, Line 1 / 2.
17. S. I. I., Vol. XII, p. 48 Line 27.
18. S. I. I.. Vol. VIII, p. 82 Line 9.
19. S. I. I., Vol. IV, p. 128, Line 6.
20. S. I. I., Vol. VIII, p. 107, Line 1.
21. S. I. I., Vol. V, p. 226, Line 4.
22. S. I. I., Vol. XIII, p. 172 Line 2.
23. S. I. I., Vol. V, p. 380, Line 1.
24. S. I. I., Vol. IV, p. 107, Line 7.

வுயிர் ஒலிப்பதற்குச் சிரமமானதென்றும் பிற உயிர்க ளாக மாற்றி ஒலிக்கப்படுவதென்றும் கால்டுவெல் கூறு வர். அகரம் கெட்டுவிடுகிறதென்றும் அவ்வாறு கெடும் போது மெய்யெழுத்துக்கள் தொடர்ந்து ஒலிக்கப்படும் நிலையேற்படுகிறதென்றும் கூட்டெழுத்துக்களை ஏற்காத தமிழ் 'ஸ்வர பக்தி'யாக இகரம் அல்லது உகரத்தைப் புகுத்துகிறதென்றும் மீனாட்சிசுந்தரனார் விளக்குவர். அகரம் ஐகாரமாக மாறி ஒலிக்கும் இடமும் உண்டு. தமிழ் இலக்கணம் ஐகாரம் அகாரமாக ஒலிக்கப்படும் ஐகாரக் குறுக்கத்தைப்பற்றிக் கூறும். ஐகாரம் அகர மாக ஒலிக்கப்படுவதைக் கண்டவர்கள் அகரத்தை ஐகார மாகவும் ஒலித்திருப்பர். குவலையம்[25] (குவலயம்), மதி சூதன் கலையன்[26] (மதிசூதன் கலயன்) அரைசர்[27] (அர சர்) முதலியன முந்திய சாசனங்களிலும் ஐஞ்சாதான்[28] (அஞ்சாதான்), திருக்காளைப்பேர்[29] (திருக்காளப்பேர்), தவமழைகியார்[30] (தவமழகியார்) முதலியன பிந்திய சாசனங்களிலும் காணப்படுகின்றன. ஆகாரம் செய்யு ளில் ஒகாரமாக மாறலாம் என இலக்கணம் கூறும்; ஆனால், பேச்சுவழக்கில் இந்த மாற்றம் காணப்படுகின் றது. இந்தியத் தமிழையும் யாழ்ப்பாணத்தமிழையும் ஒப்பிடும்போது இந்த ஒலி மாற்றம் யாழ்ப்பாணத் தமிழிற் பயின்று வழங்குவதனைக் காணலாம். பெற் றோன்[31] (பெற்றான்), என்றோம்[32] (என்றாம்) என்பன

25. S. I. I., Vol. III, p. 454, Line 114.
26. S. I. I , Vol. V, p 226, Line 6.
27. S. I I., Vol. III, p. 454, Line 113.
28. S. I. I,. Vol. III, p 36, Line 5.
29. S. I. I., Vol. VIII, p. 86, Line 3.
30. S. I. I., Vol. VIII, p. 76, Line 39.
31. S. I. I., Vol. III, p. 454, Line 153.
32. E. I., Vol. XI, p. 227, Line 30.

முந்திய சாசனங்களிலும் நாட்டோரோம்[33] (நாட்டாரோம்) என்பது பிந்திய சாசனங்களிலும் காணப்படுகின்றன.

ஏனைய உயிரொலிகளில், இகரம் அகரமாக ஒலிக்கப்படுவதுண்டு. ஞாயற்று[34] (ஞாயிற்று) காவதிப்பாக்கம்[35] (காவிதிப்பாக்கம்) என்பன முந்திய சாசனங்களிலும் புரசை[36] (புரிசை) கழான்[37] (கிழான்) முதலியன பிந்தின சாசனங்களிலும் உள்ள உதாரணங்களாகும். இகரம் உகரமாக ஒலிக்கும் இடமும் உண்டு; அமுர்துக்கு[38] (அமிர்துக்கு), பருசு[39] (பரிசு) என்பன முந்திய சாசனங்களிலும் முகுழ்த்து[40] (முகிழ்த்து), பண்டுதர்[41] (பண்டிதர்) என்பன பிந்திய சாசனங்களிலும் உள்ள எடுத்துக்காட்டுகளாம். இங்கு மாற்றமடையும் இகரத்துக்கு முன்பு அல்லது பின்பு வரும் உயிரெழுத்தின் செல்வாக்கால் இம்மாற்றம் ஏற்பட்டிருக்கவேண்டும். வீதியில் என்பது 'வுதியில்'[42] என எழுதப்பட்டுள்ளது. வகரமாகிய இதழின எழுத்து ஈகாரத்தை ஊகாரமாக மாற்றியிருக்கும். ஊகாரத்துக்குப் பதிலாக உகரம் இங்கு எழுதப்பட்டுள்ளது. உகரம் அகரமாக ஒலிப்பதற்கு நந்தா[43] (நுந்தா) என்பது முந்திய சாசனங்களி

---

33 S. I. I., Vol. V, p. 248, Line 5.
34. E. I., Vol. XXIII, p. 42, Line 5.
35. S I., Vol. XII, p. 48, Line 1.
36. S. I. I., Vol. V, p 179, Line 10.
37 S. I. I., Vol. V, p 192, Line 11.
38. E. I, Vol. VII, p 192, Line 3.
39. E. I, Vol. XI, p. 226, Line 39.
40. S. I. I., Vol. V, p. 179, Line 16.
41. S. I. I., Vol. V, p. 191, Line 1 / 2.
42. S. I. I., Vol. V, p. 362, Line 2.
43. S. I. I., Vol. XII, p. 45, Line 5.

லும் ஊரணி[44] (ஊருணி) என்பது பிந்திய சாசனங்களி லும் இடம்பெறும் உதாரணங்களாம்; ஊரணி என்பது திசைச் சொல்லாக இன்றும் வழங்குகிறது; உகரம் இகரமாக எழுதப்பட்ட இடங்களும் உண்டு; ஒன்றி நிக்கு[45] (ஒன்றினுக்கு), பிரட்டாதி[46] (புரட்டாதி) என் பன முந்திய சாசனங்களிலும் சதிரக்து[47] (சதுரத்து) அரிளிச்செயல்[48] (அருளிச்செயல்), எழுந்தருளிவித்த[49] (எழுந்தருளுவித்த), திருவிள்ளம்[50] (திருவுள்ளம்) என் பன பிந்திய சாசனங்களிலும் உள்ள எடுத்துக்காட்டுக்க ளாம். நொந்தா[51] (நுந்தா) என்பதில் உகரம் ஒகரமா கத் திரிந்துள்ளது; பூதூர்[52] (புதூர்) என்பதில் உகரம் ஊகாரமாகியுள்ளது; உகரம் இகரமாகத் திரிவதற்கு எடுத்துக்காட்டுகள் முந்திய சாசனங்களில் மட்டும் காணப்படுகின்றன; அவை பியர்[53] (பெயர்), சிலவு[54] (செலவு), பிருதோம்[55] (பெருதோம்) என்பன; இந்த ஒலிமாற்றத்துக்குப் பிற்காலச் சாசன வழக்கில் உதா ரணம் கிடைக்கவில்லை. இந்த ஒலிமாற்றங்களுட் பெரும் பகுதி, முன்பு அல்லது பின்பு அயலிலே வரும் உயிரொ லிகளுக்கேற்ப அடைந்த மாற்றங்களாம்;

---

44. S. I. I., Vol. VIII, p. 87, Line 18.
45. S. I. I., Vol. VI, p. 7, Line 7.
46. S. I. I., Vol. XIII, p. 169, Line 28.
47. S. I. I , Vol. VII, p. 255, Line 9.
48. S. I. I., Vol. VIII, p. 226, Line 15.
49. S. I. I., Vol. VIII, p. 226, Line 7.
50. S. I. I , Vol. V, p. 320, Line 9.
51. E. I , Vol , VII, p. 139, Line 4.
52. S. I. I., Vol. XII, p. 46, Line 4.
53. S. I. I , Vol. III, p. 221, Line 6.
54. S. I. I , Vol. XIII, p. 160, Line 32,
55. S. I. I., XIII, p. 160, Line 35.

ஐகாரம், ஔகாரம் ஆகிய உயிரொலிகளும் மாற்றங்களைப் பெற்றுள்ளன; ஐகாரம் ஒரு மூல உயிரொலி அல்ல. இது சந்தியக்கரம் அல்லது கூட்டெழுத்து எனப் படுகின்றது; அகர இகரம் அல்லது அகரயகரம் ஐகாரமாகும் எனப்படுகின்றது; இகரமும் யகரமும் அண்ணத்திலிருந்து பிறப்பவை; இதனால், ஐகாரத்திற்குப் பதிலாக அய் என்பது எழுதப்படுவதுண்டு. அய்ஞ்நூறு[56] (ஐஞ்னூறு), அய்ம்பத்திரண்டாவது[57] (ஐம்பத்திரண்டாவது) என்பன முந்திய காலச் சாசனங்களிலும் வயிராக்கிய தேவன்[58] (வைராக்கியதேவன்) வய்த்த[59] (வைத்த) முதலியன பிற்காலச் சாசனங்களிலும் உள்ளன; ஐகாரம் ஒரு மாத்திரையும் பெறுவதுண்டு; அவ்விடத்தில் அது அகரமாகவே ஒலிக்கும்; குறத்தலை[60] (குறைத்தலை), அம்பத்தொன்ருவது[61] (ஐம்பத்தொன்ருவது) என்பன முந்திய சாசனங்களிலும் அம்பது[62] (ஐம்பது), வத்த[63] (வைத்த) என்பன பிந்திய சாசனங்களிலும் வழங்கியுள்ளன. அகர இகரம் ஏகாரமாக ஒலிப்பதுண்டு. அதனால், ஐகாரத்துக்குப் பதில் ஏகாரம் வழங்குவதுண்டு. ஊட்டாமே[64] (ஊட்டாமை) வழுவாமே[65] (வழுவாமை)

---

56. S. I. I , Vol. III, p. 8, Line 2.
57. S. I. I , Vol. I, p. 130 Line 3.
58. S. I. I., Vol. V, p. 192, Line 7.
59. S I. I., Vol. V, p 380, Line 5.
60. S. I. I., Vol. III, p. 4'4, Line 101.
61. S. I. I , XII, p. 17 Line 1.
62. S. I. I , Vol. VIII, p. 76, Line 33.
63. S. I. I., Vol. V., p. 320, Line 7.
64. S. I. I., Vol. III, p. 2, Line 10.
65. S. I. I., Vol. XII, p. 45, Line 23.

கெடாமே[66] (கெடாமை) எனப் பல உதாரணங்கள் முந்திய சாசனங்களிற் காணப்பட இற்றேவரை[67] (இற்றைவரை) என ஒருதாரணம் மட்டும் பிந்திய சாசனங்களிற் காணப்படுகின்றது. இந்த மாற்றம் முந்திய சாசனங்கள் காலத்தில் பெருவழக்காக இருந்து பிந்திய சாசனங்கள் காலத்தில் அருகியிருக்கவேண்டும். ஒகரம் அகரமாக மாறுவதற்கு இரண்டு காலங்களிலும் பலிசை[68] (பொலிசை) என்ற ஒருதாரணமே கிடைத்துள்ளது. ஒகரம் உகரமாக வழங்குவதற்கு குடு[69] (கொடு) என்பது இரண்டு காலத்திற்கும் பொது. குணர்ந்து[70] (கொணர்ந்து) என்பது முந்திய காலச் சாசனத்திற் காணப்படுகின்றது.

மெய்யெழுத்தொலிகளின் மாற்றங்களைச் சொல்லின் முதலில் மாற்றம், சொல்லின் இடையில் மாற்றம் என இரண்டாக வகுக்கலாம். சொல்லின் முதலில் ஞகரம் வந்த இடங்களில் நகரம் வரத்தொடங்கியது. முந்திய காலச் சாசனங்களில் நான்று[71] (ஞான்று) நெகிழ்த்து[72] (ஞெகிழ்த்து) என்ற வடிவங்கள் காணப்படுகின்றன. சில சொற்கள் ஞகர முதல் வடிவமும் நகர முதல் வடிவமும் பெற்றுக்காணப்படுகின்றன.

---

66. S. I. I, Vol XIII, p. 162, Line 2.
67. S I. I., Vol. V, p. 320, Line 4.
68. S. I. I., Vol V, p 320, Line 5
S. I. I., Vol. III, p. 227, Line 8
69. S. I. I, Vol. V, p. 223, Line 4.
S. I. I., Vol. VII, p. 312, Line 11.
70. S. I. I., Vol. XII, p. 34, Line 3.
71. E. I., Vol. XIX, p. 81, Line 6
72. S. I. I., Vol. III, p. 454, Line 112.

எடுத்துக்காட்டுகள்:- ஞாயற்று[73] - நாயற்று;[74] ஞாட்டு[75] நாட்டு;[76] ஞிலம்[77] - நிலம்;[78] ஞெய்[79] - நெய்[80] பிந்திய காலச் சாசனங்களில் நாயிற்று[81] முதலிய வடிவங்களே காணப்படுகின்றன. அண்ணமெய் பல்லின மெய்யாகி யதை இது உணர்த்துகின்றது.

சொல்லின் இடையிலேற்பட்ட மெய்யெழுத் தொலி மாற்றங்களை நோக்கும்போது, ககரம் யகரமாக மாறுவதை இரண்டு காலங்களிலும் காணலாம்; பதி யம்[82] (பதிகம்) என்பது முந்திய சாசனத்திலிடம் பெறத் தியதி[83] (திகதி) பிந்திய சாசனத்திற் காணப்படுகின்றது. ககரம் நிலை கொள்ளாது கெட யகரம் அண்ணமெய் யாக இடையில் வருகிறது. யகரத்துக்குப் பதிலாகக் ககரம் வருமிடங்கள் என வாரிகம்[84] (வாரியம்), நிகதி[85] (நியதி) என முந்திய சாசன உதாரணங்களைச் சுட்ட லாம். ககரம் மகரமாக மாறியதற்குப் பிந்திய சாச னங்களில் 'சந்திவிக்கிரமப்பேறு[86] (சந்திவிக்கிரகப்பேறு) என ஒருதாரணம் கிடைத்தது; நிகதி நிசதி[87] எனவும்

---

73. E. I., Vol. XXIII, p. 42, Line 5.
74. E. I , Vol XX, p. 52, Line 1.
75. S. I. I., XII, p. 25, Line 2.
76. E. I., Vol XXI, p. 109, Line 48.
77 E. I., Vol. XX, p 53, Line 12.
78. E. I., Vol. XX, p. 53, Line 11.
79. E. I., Vol. XX, p. 52, Line 6.
80. E. I., Vol. IX, p. 88, Line 23.
81. S. I. I., Vol. V, p. 223, Line 1.
82. S. I. I., Vol. III, p 93, Line 33.
83. S. I I , Vol. V, p. 149, Line 4.
84. S. I. I, Vol. III, p. 231, Line 2.
85. E. I , Vol. XXI, p. 109, Line 23.
86. S. I. I., VIII, p. 86, Line 20.
87. S. I. I , Vol. XII, p. 25, Line 4.

வருகின்றது. இதுவும் அண்ணமெய்யாக மாறுதலாகும்: கோற்சடைபன்மர்[88] (கோச்சடைபன்மர்) என்பதில் பல்லினமெய்யாகிய சகரம் அண்பல் தடையொலியாகிய றகரமாக மாறுகிறது; பல்லின ஒலியாகிய - ந்த் - அண்ண ஒலியாகிய ஞ் - ச் - ஆக மாறுவதற்கு உதாரணங்கள் ஒழிஞ்சி[89] (ஒழிந்து) இசைஞ்ச[90] (இசைந்த), ஐஞ்சாவது[91] (ஐந்தாவது) என்பன; லகரம் நாமடி ஒலியாகிய ளகரமாகியதற்கு மதிள்[92] (மதில்) துளை[93] (துலை) என்பன முந்திய சாசனங்களில் உதாரணங்களாம்; இவையும் நிலம் - நிலன்[94] முதலிய அக்கால வழக்காறும் தமிழ் இலக்கணத்திற் போலி எனப்படுகின்றன. ளகர, ழகர மெய் மயக்கமும் சாசனங்களிற் காணப்படுகின்றது. களஞ்சு[95] (கழஞ்சு) என்பது முந்திய சாசனத்தில் வருகின்றது. வேழ்வி[96] வீரப்புலி நாடாழ்வார்க்கு[97] (வீரப்புலிநாடாள்வார்க்கு), திருவாய்க்கேழ்வி[98] (திருவாய்க்கேள்வி) என்பன ளகரத்திற்குப் பதில் ழகரம் எழுதப்பட்டுவந்தமைக்குப் பிந்திய சாசனங்களிலுள்ள உதாரணங்களாம்; செவ்வித்த[99] (செய்வித்த) என்பதில் தொடர்ந்து வரும் வகரத்தின் செல்

---

88. S. I. I , Vol. VIII, p. 137, Line 1.
89. E. I , Vol. XXVIII, p. 91, Line 31.
90. S I. I , Vol. V. p. 151, Line 18.
91. E. I., Vol, VII, p. 140, Line 1.
92. S. I. I., Vol III, p. 454, Line 93.
93. S. I. I., Vol. III, p. 95, Line 13.
94. S. I. I , Vol XII, p. 48, Line 59.
95. E. I., Vol. VII, p. 139, Line 5.
96. S. I. I., Vol. V, p. 179, Line 4.
97. S. I I., Vol. VIII, p. 217, Line 5 / 6.
98. S. I. I., Vol. V, p. 138, Line 1.
99. S. I. I., Vol. IV, p. 18, Line 6.

வாக்கால் அடிச்சொல் யகரம் வகரமாகத் திரிந்திருக்கிறது: கோ+இல் என்பது கோயில்[100] எனவே சாசன வழக்கில் வருகின்றது. கோயில் என்பதில் இகரத்தின் செல்வாக்கால் யகரமெய்யும் கோவில் என்பதில் ஒகாரத்தின் செல்வாக்கால் வகர மெய்யும் வந்தனவாகக் கொள்ளவேண்டும். னகரமெய் தொடர்ந்து வரும் வல்லொலிக்கு இனமான மெல்லொலியாக மாறுவதற்குப் பிந்திய சாசனங்களிற் காணப்படும் உதாரணங்களாவன:- நஞ்செய்[101] (நன்செய்), அம்பிலுடையார்[102] (அன்பிலுடையார்); இன்றைய இந்தியத் தமிழிற் காணப்படும் ரகர றகர மயக்கம் பிந்திய சாசனங்களிலே காணப்படுகின்றது. நாச்சியாற்க்கு,[103] பிறிந்த[104] (பிரிந்த), பயிற் (பயிர்)[105] முதலியன எடுத்துக்காட்டுகளாம்;

மெய்யொலிகள் சேர்ந்தொலிக்கும்போது ஒரு மெய்யொலியை ஒத்ததாக மற்ற மெய்யொலி மாறுவதுண்டு. - ர்க்க் - என்பது - ற்க் - ஆகமாறுகிறது:- நாயனாற்கு[106] (நாயனார்க்கு), கண்ணனூற் கொப்பம்[107] (கண்ணனூர்க்கொப்பம்), தேவற்கு[108] (தேவர்க்கு) முதலியன; - ர்ப்ப் - என்பது - ற்ப் - ஆக மாறுகிறது:- எப்

---

100. S. I. I., Vol. III, p. 221, Line 4.
101. S. I. I , Vol. IV, p. 152, Line 6,
102. S. I. I., Vol. VIII, p. 95, Line 5.
103. S. I. I., Vol. V, p. 166, Line 2.
104. S. I. I , Vol. V, p. 273, Line 2.
105. S. I. I , Vol. VIII, p. 217, Line 11.
106. S. I. I., Vol. VIII, p. 82, Line 12.
107. S. I. I., Vol. V, p. 179, Line 9.
108. S. I. I., Vol. VIII, p. 76, Line 2.

பேற்பட்ட[109] (எப்பேர்ப்பட்ட), கற்பூரம்[110] (கர்ப்பூரம்) முதலியன. -ர்த்- என்பது -ற்த்- என மாறியுள்ளது:- ஊற்தெற்கு[111] (ஊர்த்தெற்கு). இவற்றை நோக்கும் போது றகரம் அண்பல் தடையொலி என்ற தொல்காப்பியர் கால நிலையை இழந்து இடைக்காலத்தில் உரப்பொலியாக மட்டும் வருகிறது எனக்கொள்ளவேண்டும். -ற்க்- என்பது -க்க்- என மாறுகிறது:- தெக்கு[112] (தெற்கு), மேக்கு[113] (மேற்கு). -ங்க்- என்பது பல்லின -ஞ்ச்- ஆக மாறுகிறது:- கலிஞ்சு[114] (கலிங்கு). -ட்க்- என்பது -க்க்- என மாறியுள்ளது:- திருநாக்கள்[115] (திருநாட்கள்). -ன்ம்- என்பது -ம்ம்- ஆக தேவகம்மி[116] (தேவகன்மி) என்பதிற் காணப்படுகின்றது. -ர்ப்ப்- என்பது -இப்ப்- என நலிந்து கைப்பூரவிலை[117] (கர்ப்பூரவிலை) வந்திருக்கிறது. அழைப்பிச்சு[118] (அழைப்பித்து), எடுப்பிச்ச[119] (எடுப்பித்த) என்பன பல்லினமெய் அண்ணமெய்யாக மாறியமைக்கு முந்திய சாசனங்களில் எடுத்துக் காட்டுகளாம். விடுவோம் என்பது உடுவோம்[120] என வந்துள்ளது. யகரத்துக்கான இதழ் முயற்சியில் உகரத்தின்

---

109. S. I. I., Vol. VII, p. 254, Line 30.
110 E. I., Vol. XXI, p 109, Line 146.
111. S. I. I., Vol. V, p. 138, Line 7.
112. S. I. I, Vol. IV, p. 154, Line 21.
113. S. I. I., Vol. V, p. 380, Line 5.
114. S. I. I., Vol. XII, p. 27. Line 6.
115. S I. I., Vol. V, p. 320, Line 8.
116. S. I. I, Vol. IV, p. 128, Line 16.
117. S. I. I, Vol. IV, p. 107, Line 3.
118. S. I. I., Vol. XIII, p. 163, Line 2.
119. S. I. I., Vol. III, p. 228, Line 5.
120. E. I., Vol. XI, p. 226, Line 38.

ஒலிப்பு முயற்சி சம்பந்தப்படும்போது உகரம் முதனிலையாக வந்துவிடுகின்றது. எய் என்பது ஐ என்பதுபோல ஒலிக்கப்படுகின்றது. முந்திய சாசனத்தில் எண்ணெய் என்பது எண்ணை[121] என எழுதப்பட்டுள்ளது; பிந்திய சாசனங்களில் அந்த உதாரணத்தோடு நஞ்சை[122] (நன்செய்), புஞ்சை[123] (புன்செய்) என்பனவும் காணப்படுகின்றன; ஐகாரம் ஏகாரமாக ஒலிக்கப்படுவதால், எய் என்பதும் ஏயென எழுதப்படுகின்றது. புன்சே[124] (புன்செய்), சேது[125] (செய்து), சேஇல்[126] (செய்யில்) என்ற எடுத்துக்காட்டுகள் யாவும் முந்திய சாசனங்களில் மட்டுமே காணப்படுகின்றன;

ஒலி இடம் மாறிநிற்றல், சொல்லின் முதலில் புது ஒலி தோன்றல், ஒலி கெடுதல், சொல்லின் இடையில் புது ஒலி தோன்றல், சொல்லின் முடிவில் புது ஒலி தோன்றல் முதலியனவும் சாசனத் தமிழில் இடம்பெறுகின்றன: மரதகம்[127] (மரகதம்), செவ்வித்தான்[128] (செய்வித்தான்) முதலியன ஒலி இடம் மாறிநிற்கும் உதாரணங்களாம்; ய, ர, ழ, முதலிய ஒலிகள் நலிவொலிகளாகக் கெடுகின்றன. இரண்டுக்கு மேற்பட்ட மெய்யெழுத்துக்கள் மயங்கிவருவதை ஏற்காத தமிழ் ய, ர, ழ என்ற மெய்யெழுத்துக்களைத் தொடர்ந்து அவ்வாறு

---

121. S. I. I., Vol. III, p. 95, Line 10.
122. S. I. I., Vol. VII, p. 10 Line 3.
123. S. I. I., Vol. IV, p. 107, Line 4.
124. S. I. I., Vol. V, p. 288, Line 6.
125. S. I. I., Vol. III, p 227, Line 2.
126. S. I. I., Vol. V, p. 226, Line 7.
127. S. I. I , Vol. XIII, p. 170, Line 12.
128. E. I., Vol. VII, p. 192, Line 4.

வர மட்டும் விதிவிலக்கு வழங்குகின்றது; யாப்பிலக்கணத்திலும் வேண்டிய இடங்களில் இந்த ஒலிகள் இடம்பெற்றனபோலவும், வேண்டாத இடங்களில் இடம்பெறாதன போலவும் அசைசீர் வகுக்கும்போது கொள்ளப்படுகின்றன. போது[129] (போழ்து) என்பதில் ழகரமும் குணந்து[130] (கொணர்ந்து) என்பதில் ரகரமும் ஆண்டு[131] (யாண்டு) என்பதில் யகரமும் முந்திய சாசனங்களிலே கெட்டுள்ளன. பிந்திய சாசனங்களில் ழகரமெய் கெடுவதற்கு உதாரணம் கிடைக்கவில்லை. கீத்தி[132] (கீர்த்தி), காத்திகை[133] (கார்த்திகை) என்பனவற்றில் ரகரமெய்யும் வாக்கால்[134] (வாய்க்கால்) சேதருளி[135] (செய்தருளி) என்பனவற்றில் யகரமெய்யும் கெட்டுள்ளன; சொல்லின் முதலிலே புது ஒலி வருவதற்கு ஆ, இ, ஏ, முதலிய ஒலிகள் யாளும்[136] (ஆளும்), யிறையான்சேரி[137] (இறையான்சேரி), யேத்துவோம்[138] (ஏத்துவோம்) என யகரமெய் பெற்றுவருவனவற்றையும் வடமொழிச் சொற்கள் தமிழில் வந்து வழங்கும்போது தமிழொலி மரபுக்கேற்ப இகர உயிரை முதலிற் பெற்று இரக்ஷை[139], இரக்ஷித்தார்[140] என வருவனவற்

---

129. E. I., Vol. XXI, p. 109, Line 78.
130. S. I. I., Vol. XII, p. 34. Line 3.
131. E. I., Vol. V, p. 42, Line 3
132. S. I. I, Vol. IV, p. 107, Line 1 .
133 S. I. I, Vol. VIII, p. 137, Line 10.
134. S. I. I., Vol IV, p. 133, Line 5.
135. S. I. I., Vol. VIII. p. 107, Line 2.
136. S. I. I, Vol. XIII, p. 156, Line 4.
137. S. I. I, Vol. III, p. 96, Line 1.
138. E. I., Vol. XI, p. 226, Line 32.
139. S. I I., Vol., XIII, p. 110, Line 9.
140. S. I. I., Vol. XII, p. 43, Line 32.

றையும் முந்திய சாசனங்களிலிருந்து காட்டலாம். பிந்திய சாசனங்களிலே இகரம் பல்லினச் சார்புபெற்று யிப்படி[141] (இப்படி), யிற்றைவரை[142] (இற்றைவரை) என வருவதையும் உகரம் இதழினச் சார்புபெற்று வுலகுணிமங்கலத்து[143] (உலகுணிமங்கலத்து) என வருவதையும் காட்டலாம். தற்கால இந்தியப் பேச்சுவழக்கிலும் இவ்வியல்பு நிலைபெற்றுள்ளது. வடமொழிச் சொற்கள் தமிழில் வந்து வழங்கும்போது தமிழொலி மரபுக்கேற்ப இராமன்[144], இரேபதி[145], என எழுதப்பட்டுள்ளன. யகரமெய்யிலே தொடங்கும் சொல் இகரத்தை முதலெழுத்தாகப்பெற்று இயாண்டு[146] என வருகின்றது; யகரம் கெடுவதைத் தடுப்பதற்காக இகரம் முதலில் ஒலிக்கப்படுகின்றது. ஆமைதவழி[147] (ஆமை எய்த வழி) என்பதில் எய் என்ற அசை கெட்டுள்ளது. ஐ, எய் என்ற ஒலிகள் நெருங்கிய தொடர்புள்ளனவாதலால் ஒரொலியை ஒலித்ததும் அடுத்த ஒலியையும் ஒலித்துவிட்டதாக மனத்தில் தோன்றிவிடுகின்றது. செயிது[148] (செய்து), செயிவித்து[149] (செய்வித்து) என்ற முந்திய சாசன உதாரணங்களில் யகரம் இடையிலே கெடுவதைத் தடுப்பதற்காக இகரம் சேர்த்து வலியுறுத்தப்படுகிறது. சொல்லின் இறுதியில் உகரத்தைச் சேர்க்கும் இயல்பு திராவிட மொழிகளுக்

---

141. S. I. I, Vol. VII, p. 9, Line 5.
142. S. I. I, Vol. V, p 320, Line 4.
143. S. I. I, Vol. IV. p. 107, Line 10.
144. S. I. I., Vol, V. p. 118, Line 26.
145. S. I I., Vol. VIII, p. 76, Line 3.
146. S. I. I., VIII, p. 76, Line 2.
147. S. I. I., VIII, p. 87, Line 24.
148. E. I., Vol. XX, p. 53, Line 12.
149. S. I. I., Vol. XII, p. 56, Line 6.

குப் பொதுவானது: வல்லின ஈறு கொண்டசொற்கள் திராவிடமொழிகளில் இல்லை. சொல்லின் இறுதியிலுள்ள வல்லொலியை உச்சரிப்பதற்காகவே குற்றியலுகரம் என்ற சார்பொலி தோன்றியது. இடையின, மெல்லின ஈறுகளுள்ள சொற்களுக்கும் உகரம் சேர்க்கப்படுவதனைச் சாசனங்களிலே காணலாம். நெல்லு[150] (நெல்), எள்ளு[151] (எள்), திருக்கானப்பேரு[152] (திருக்கானப்பேர்) என்பன உதாரணங்கள். மெய்யீறுகள் பல, உகர ஈறுவதைக் கண்டவர்கள் உயிரீறுகளுக்கும் உகர ஈற்றைச் சேர்க்கின்றனர். காவு[153] (கா), செறுவு[154] (செறு) என்பன உதாரணங்களாம்.

ஒரே சொல் சிறிது வேறுபட்ட இருவடிவங்களை உடையதாயிருப்பதுண்டு: வெள்ளிலை[155] – வெற்றிலை[156] வென்றி[157] - வெற்றி, ஆண்டு - ஆட்டு - ஆட்டை[158] முதலியன எடுத்துக்காட்டுகளாம். வெவ்வேறு பிரதேசங்களில் வெவ்வேறு வடிவம் வழங்கிப் பின் இரு வழக்காறுகளும் எழுத்துவழக்கிற் புகுந்திருக்கவேண்டும்.

சொல்லும் சொல்லும் புணருமிடத்து வருமொழி முதலொலியும் நிலைமொழி ஈற்றொலியும் பலவிகாரங்களை

---

150. S. I. I., Vol, V, p. 320, Line 5
151. S. I. I., Vol, VIII, p. 217, Line 14.
152. S. I. I., Vol, VIII, p. 82, Line 3.
153. S. I. I., Vol, II, p. 507, Line 59.
154. S. I. I., Vol, XII, p. 19, Line 4.
155. E. I., Vol. IX, p. 88, Line 26
156. S. I. I., Vol, III, p. 222, Line 7.
157. S. I. I., Vol, III, p 454, Line 88.
158. S. I I, Vol, XII, p. 34, Line 5.

அடைவதுண்டு; விகாரங்களை அடையாத நிலையை இயல்புப் புணர்ச்சி என்றும் விகாரங்களை அடையும் நிலையை விகாரப் புணர்ச்சி என்றும் தமிழிலக்கணகாரர் வகுப்பர்; உடம்படுமெய் புகுதல், மெய்யிரட்டுதல், மெய்திரிதல், மெய்கெடுதல் என நான்குவகையாக விகாரங்களை ஆராயலாம்; நிலைமொழியீற்று உயிரொலியும் வருமொழிமுதல் உயிரொலியும் விகாரமின்றி நிற்க அவற்றுக்கிடையே அவற்றை உடன்படுத்தவல்ல உடம்படுமெய்யாகிய யகரம் அல்லது வகரத்தை எழுதுதல் உடம்படுமெய் வழங்குதல் எனப்படும். முன்னண்ணை உயிர்களைத் தொடர்ந்து உயிரொலிகள் வரும்போது யகரமும் அகர ஆகாரங்களையும் பின்னண்ண உயிர்களையும் தொடர்ந்து உயிரொலிகள் வரும்போது வகரமும் உடம்படுமெய்களாகின்றன: உடம்படுமெய்யின் வடிவத்தை எழுதுவதைத் தவிர்க்கமாட்டார் என்று மட்டும் உடம்படுமெய் பற்றி எதிர்மறை வாய்பாட்டாலே தொல்காப்பியர் கூற உடம்படுமெய்யிலக்கணத்தை முதலில் ஆராய்ந்து வீரசோழியத்தார் கூறினர். எவ்வெவ் வெழுத்துக்களைத் தொடர்ந்து எவ்வெவ் வெழுத்துக்கள் உடம்படுமெய்யாக வரும் என்பதைப்பற்றிச் சாசனவழக்குக்கும் வீரசோழியத்துக்கும் வேறுபாடில்லை. ஆனல் உடம்படுமெய்யில்லாமலே உயிரொலிகள் தொடர்ந்து வரும்முறை தொல்காப்பியச் சூத்திரத்தை நினைவூட்டுகின்றது. உடம்படுமெய் எழுதப்படாத இடங்களை இலக்கணமுறையில் வகுத்துப் பார்த்தால், இறந்தகால வினையெச்சம், இறந்தகாலப் பெயரெச்சம், செயவெனெச்சம், எழுவாய், செயப்படுபொருள், பண்புச்சொல், பெயரடை, தொழிற்பெயர், இடப்பொருள் என்பனவற்றை நிலைமொழியாகக்கொண்ட சொற்களாகவும் அளவுப்பெயரைத் தொடர்ந்து வரும் அளவுப் பெயராகவும் என், இடு, ஆ என்னும் வினையடிகளாலான சொற்களை வருமொழிகளாகக் கொண்ட சொற்களாகவும் காணப்படு

கின்றன; இவையாவற்றுக்கும் பொதுத்தன்மையாக ஒன்று கூறவேண்டுமானால் நிலைமொழியீற்றுக்கும் வருமொழி முதலுக்குமிடையே விட்டிசை ஏற்படுகின்றது என்று கொள்ளவேண்டும். நிலைமொழியை உச்சரித்து இடைவிட்டு வருமொழியை உச்சரிக்கும்போது உடம்படுமெய் தேவையில்லாது போகின்றது.

நிலைமொழியீற்றுக் குற்றியலுகர ஈறு வருமொழி முதலில் உயிர் வரும்போது உயிரேற இடம்கொடுத்து நிற்கும். இத்தகைய புணர்ச்சி ஏற்படாத இடங்களும் பலவாம். அத்தகைய இடங்களை இலக்கண முறையில் வகுத்துப் பார்த்தால் பெயர்ச்சொல்லைத் தொடர்ந்து எண்ணுப் பெயர் வரும்போதும் எண்ணுப் பெயரைத் தொடர்ந்து பெயர்ச்சொல் வரும்போதும் பெயர்ச் சொல் டகரமெய் றகர மெய் யிரட்டி உருபேற்கும் நிலையை அடையும்போதும் குகரவுருபு, அத்துச் சாரியை, இறந்தகால வினையெச்சம், தொழிற்பெயர் முதலிய பெயர்ச்சொல் ஆகியவற்றின் முன் உயிரொலி வரும் போதும் என எடுத்துக் கூறக்கூடியதாயுள்ளது: இங்கும் நிலைமொழியையும் வருமொழியையும் கூட்டி ஒலிக்காது ஒன்றை ஒலித்து இடைவிட்டு மற்றதை ஒலிப்பதாலேயே குற்றியலுகர ஈறு உயிரேற இடம் கொடுக்கவில்லை என்று கூறவேண்டும். சாசன வழக்கில், குற்றியலுகர ஈறு வருமொழி முதலில் யகரமெய் வரும் போது குற்றியலிகர ஈறகத் திரிவதுண்டு; இயல்பாக நிற்பதும் உண்டு. குற்றியலுகரம் மொழியின் ஈற்றில் வல்லினமெய்யை ஊர்ந்து வருவது என்று இலக்கணம் கூறும், வகரமெய்யை ஊர்ந்து வருவதுண்டு என்றும் கூறவேண்டியுள்ளது. இரவும்,[159] ஒழிவின்றி,[160] செல

159. E. I. Vol, VII, p. 139 Line 4.
160. S. I, I , Vol, XII, p. 48 Line 30.

வாசு,[161] கைச்செலவற,[162] பொருட்செலவோலை[163] முத லிய பல வழக்காறுகள் சாசனங்களிற் காணப்படுகின் றன. வாழ்கென[164] (வாழ்க என) என்பதில் அகரம் குற்றியலுகரத்தைப் போல வருமொழி உயிரேற இடம் கொடுத்துள்ளது. இது என்பதிலுள்ள முற்றியலுகரமும் சில இடங்களில் குற்றியலுகரம்போல விளங்குவதால், இதில்,[165] இதென்று,[166] இதிறக்குவான்[167] முதலிய எடுத் துக்காட்டுகள் காணப்படுகின்றன. குற்றியலுகரத்தைத் தொடர்ந்து யகரம் வரும்போது அக்குற்றியலுகரம் குற்றியலிகரமாக மாறும் என்பது தமிழ் இலக்கணவிதி; யகர மெய்யின் செல்வாக்கால், ஒலித்துணை உகரம் இகரமாக மாறுகின்றது. சாசன வழக்கில் இவ்விதி எல்லா இடங்களிலும் பின்பற்றப்படவில்லை.

மெய்யிரட்டுதலும் இரண்டு வகைப்படும்; வரு மொழி முதல் இரட்டுவது, நிலைமொழியீறு இரட்டுவது என்பனவே அவையாகும். வருமொழி முதலாக இரட்டு வன க, ச, த, ப என்ற வல்லின மெய்களாம்; நிலை மொழியீற்றில் உயிர் அல்லது ய, ர, ழ என்ற எழுத் துக்கள் வரும்போது, வருமொழி முதல் வல்லினம் இரட்டுகின்றது; இந்தச் சூழலில் இவ்வொலிகள் வரும் போது இரட்டும் இடமும் உண்டு; இயல்பாக வரும் இடமும் உண்டு. இரட்டும் இடம் எது, இயல்பாக

---

161. S. I. I., Vol, XII, p. 24. Line 5.
162. S. I. I., Vol, VIII, p. 87, Line 30.
163. S. I. I., Vol, V, p. 118, Line 18.
164. S. I. I., Vol, V. p. 179, Line 13.
165. S. I. I., Vol, p. 82, Line 19.
166. E. I., Vol, XI, p. 227, Line 30.
167. A. R. on S. I. E., 1936, p. 73, Line 6.

வரும் இடம் எது என்பதை வேறுபடுத்திக் காட்டுவ தற்காக இலக்கணகாரர் வேற்றுமைப்புணர்ச்சி அல்வழிப் புணர்ச்சி என்ற பாகுபாட்டைத் துணைக்கொண்டுள்ள னர். சாசன வழக்கை நோக்கும்போது இந்தப் பாகு பாடு இயல்புப் புணர்ச்சி விகாரப் புணர்ச்சி என்பன வற்றை விளக்க உதவுவதாக இல்லை. அதனாலேதான் வீரசோழியமும் புணர்ச்சி இலக்கணம் கூறும்போது இப்பாகுபாட்டைக்கூறவில்லை. வேற்றுமைப் புணர்ச்சி யில் இயல்பும் இரட்டுதலும் பயின்று வழங்குவதுபோல அல்வழிப் புணர்ச்சியிலும் இயல்பும் இரட்டுதலும் பயின்று வழங்குகின்றன. ய, ர, ழ எழுத்துக்கள் பெறும் புணர்ச்சியை அனுசரித்துப்போலும் சாசனங்களிலே லகர எழுத்தும் வல்லினம் வந்து இரட்ட இடம் கொடுத்து நிற்கிறது. மேல்ப்படி,[168] பல்க்குளத்து,[169] சொல்க்குற்றம்,[170] கோயில்த் திருநடைமாளிகையில்[171] என்பன பிந்திய காலச் சாசனங்களிலும் பால்க்கருகா வூர்[172] முதலியன முந்தியகாலச் சாசனங்களிலும் காணப் படுகின்றன ளகர மெய்யின் பின் வல்லினம் இரட்டு வதற்கு நாள்த்திருவமுது[173] என்ற எடுத்துக்காட்டு முந் திய சாசனத்திற் காணப்படுகின்றது.

மகர வீற்றுச்சொற்களின் முன்பு வல்லினம் வரும் போது மகரம் கெட, வரும் வல்லினம் இரட்டுகின்றது; புணர்ச்சியில் மகர வீறு நிலைபெறுமற் போவதை நோக்கும்

---

168. S. I. I , Vol VII. p. 9, Line 2.
169. S. I. I., Vol, VIII, p. 87, Line 14.
170. S. I. I., Vol, VIII, p. 87, Line 39.
171. S. I. I , Vol, V, p. 380, Line 2.
172. S. I. I., Vol, III, p. 233, Line 2.
173. S. I. I., Vol, III, p. 96, Line 2.

போதுமகரம் ஆதிவடிவங்களில் இடம்பெறுமலிருந்திருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகின்றது. மகரம் அற்ற எஞ்சிய வடிவமே ஆதி வடிவமாகலாம். சங்கத மொழியில் மகர வீறுபெறுத பல சொற்கள் தமிழில் வந்து வழங்கும்போது மகர வீறு புதிதாகப் பெறுவதும் அஃறிணைச் சொற்கள் பல தமிழில் மகரவீற்றனவாக விளங்குவதும் கவனிக்கப்படவேண்டியன. பலர்பாலைக் குறிக்கும் ரகரவீறும் புணர்ச்சியில் மகரவீறுபோலக் கெடுவதை, சண்டாளப்பேறு,[174] தண்டேசுவரப்பெருவிலை,[175] மாகேசுவரக் கண்காணி[176] எனவரும் பிந்திய காலச் சாசன வழக்காறுகளிலே காணலாம. நிலைமொழி யீறு வெறும் பெயர்ச்சொல்லிலான போதிலும் வேற்றுமையுருபேற்ற பெயர்ச்சொல்லிலானபோதிலும் இயல்புப் புணர்ச்சி இரட்டுதல் என்பனவற்றைப் பெறுவதில் எவ்வித வேறுபாடுமில்லை. அவ்வழிததொடரில் வினைத் தொகை, எழுவாய்த்தொடா என்பன இயல்புப் புணர்ச்சியே பெறுகின்றன. வினையெசசத்தொடா, பெயரெச்சத்தொடர், பண்புத்தொகை, உம்மைத்தொகை, இடைச்சொற்றொடர் என்பன சில இடங்களில் இயல்பாயும் சில இடங்களில் இரட்டியும் உள்ளன: வருமொழி முதல் நகரமெய்யும் மகரமெய்யும் ஐகாரவுயிருக்குமுன் அருகிய வழக்காக இரட்டுகின்றன:- கைம்மாட்டானமையால்,[177] கைந்நிலம்,[178] கைம்மாட்டாங்கானகையால்,[179] தைம்மாதம்.[180]

---

174 S. I I., Vol, V, p. 138 Line 21.
175. S. I. I., Vcl, IV, p 128, Line 10
176. S. I. I., Vol, IV, p 107, Line 1
177 S I. I., Vol, XII, p. 48, Line 44
178. S. I I , Vol, III, p 454 Line 117.
179. S. I. I, Vol VII, p. 9, Line 7
180. S I. I., Vol, IV, p. 128 Line 7.

சுட்டு, வினா முதலிய ஓரெழுத்தொரு மொழியின் முன் மெய் முதன் மொழி வரும் போது அம்மெய்யிரட்டுகிறது. சுட்டு, வினா என்பவற்றைத் தொடர்ந்து உயிர்முதல் மொழி வரும் போது இடையில்வரும் உடம்படுமெய் இரட்டுகின்றது: ஐவ்வுழக்கு,[181] கைய்யெழுத்து[182] என இரண்டு உடம்படுமெய்யுள்ள வடிவங்கள் காணப்படுகின்றன; கைய்யெழுத்து என்பதில் ஐகாரத்தின் செல்வாக்கால் யகரம் உடம்படுமெய்யாக வர ஐவ்வுழக்கு என்பதில் உகரத்தில் செல்வாக்கால் வகரம் உடம்படுமெய்யாக வருகிறது: நிலைமொழியீற்றுமெய் இரட்டுமிடங்கள் சிலவேயுள்ளன வல்லினம் குற்றியலுகரம் பெற்றே நிலைமொழியீற்று ஈறுகவரும். புதுஏரி என்பது புத்தேரி[183] எனவரும். பொதுவாக நிலைமொழியீற்று மெல்லின இடையின ஈறுகள் வருமொழி முதலில் உயிர்வரும் போது இரட்டும் எனககூறலாம். குற்றெழுத்தைத் தொடர்ந்து மெய்யெழுத்துவரும் ஓரசைச் சொற்களிலுள்ள மெய, உயிர்வரும்போது இரட்டும் என்பது இலக்கணவிதி. அவ்வாறு இரட்டும் உதாரணங்கள் இரண்டு காலங்களிலும் கிடைத்துள்ளன. பல அசைகளாலான சொற்களுக்கு முன் உயிர்வரும்போதும் இத்தகைய மாற்றம் ஏற்பட்டுள்ளதைச் சாசனங்களிலே காணலாம்.[184]

---

181. S. I. I, Vol, III, p. 2, Line 7.
182. S I. I., Vol, XII, p. 36, Line 6.
183 A. R on S I E, 1936, p. 73, Line 3/4
184. எரிபபோமயாளுமை, தணடம மிடபபெறுவது, 'புரவும மடங்க, கோயிலலெடுபபித்தார் எல்லையுளளுமை, அவனேனே, 'மகனனுடைய முதலியன முந்திய சாசனஙகளிலும தேவதானமமாக, தானம்மும, தடடான சூரியனனை எனபன பிந்திய சாசனஙகளிலும காணபபடுகின்றன,

மெய்யெழுத்துத் திரிதல் நிலைமொழியீற்றில் அல்லது வருமொழி முதலில் அல்லது இரண்டிடங்களி லும் நடைபெறலாம். நிலைமொழியீற்றில் மெல்லின மும் இடையினமுமே மெய்யீறாகவரும். மெல்லின எழுத் துக்களுள் மகரமே மிகப்பல சொற்களுக்கு ஈறாக வரு கின்றது: மகர வீறு வருமொழி முதல் க, ச, த, என்ற வல்லெழுத்துக்கேற்ப அவ்வெழுத்தின் இனவெழுத்தாக ங, ஞ, ந என முறையே திரியும்: பகரத்துக்கு மகரமே இன எழுத்தாதலால், பகரம் வருமொழி முதலில் வரும் போது மகரம் திரியாது: அல்வழிப் புணர்ச்சிக்கு இத் திரிபு தொல்காப்பியத்திற் சொல்லப்படுகின்றது: பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லும் தொடர்ந்துவரும் போது வினைச்சொல்லுக்குப் பெயர்ச்சொல் செயப்படு பொருள் அல்லது இடப்பொருள் என்ற வேற்றுமைப் பொருள்களாக வரும்போது இத்தகைய திரிபு வேற்று மைப் புணர்ச்சியிலும் இடம்பெறுகிறது ஆனால் அல் வழியிலும் வேற்றுமையிலும் சில இடங்களில் இயல்புப் புணர்ச்சியும் நிகழ்ந்துள்ளது: னகர வீறு வல்லினம் வரும்போது வேற்றுமையிலே றகரமாகிறது: ஆனால் வேற்றுமையில் எல்லா இடங்களிலும் இப்புணர்ச்சியில்லை. ணகர வீறு வல்லினம் வரும்போது வேற்றுமையில் டகரமாவதற்குப் பல உதாரணங்கள் முந்திய சாசனங் களிலே காணப்படப் பிந்திய சாசனங்களில் எதுவும் காணப்படவில்லை:

இடையின எழுத்துக்களில் ல, ள, ழ, வ என்பன சொல்லின் ஈற்றில் வந்து திரிபுகளுக்கு இடந்தந்து நிற்கின்றன. லகரம் வலலெழுத்து முதன் மொழி வரும்போது வேற்றுமையில் றகரமாகிறது. லக ரத்தின் முன் தகரம் வரும்போது லகரம் றகரமாகினால் தகரமும் றகரமாகும் என்பது இலக்கணவிதி: லகரம் றகரமாகியதும் தகரம் இயல்பாக நிற்றலுக்கு ஒருதார

ணமும் தகரமும் நகரமாவதற்கு எட்டு உதாரணங்களும் முந்திய சாசனங்களிற் கிடைத்துள்ளன. பிந்திய சாசனங்களிலே மொழி வழக்கிலே மாற்றம் காணப்படுகின்றது. தகரம் நகரமாவது ஓரிடத்திலும் தகரம் இயல்பாக நிற்பது மூன்று இடங்களிலும் காணப்படுகின்றன. அல்வழியிலும் லகரம் வல்லினம் வரும்போது றகரமாக மாறுகிறது. வேற்றுமையிலும் அல்வழியிலும் லகரம் வல்லினம் வரும்போது இயல்பாக நிற்கும் இடங்களும் பலவாம்; வகர வீற்றுச் சொல்லாகிய தெவ் என்பது முரசு என்ற சொல் முதன்மொழியாக வரத் தெம்முரசு என மாறுகிறது.[185] வகரம் மகரமாக மாறுகிறது. வருமொழி மகரமெய்ச் செல்வாக்கால், இதழ் முயற்சியுடைய வகரம் அதே முயற்சியுடைய மகரமாக மாறுகிறது; ளகரவீறு வருமொழி முதலில் வல்லினம் வரும்போது வேற்றுமையில் டகரமாக மாறும். இத்திரிபு மிகச்சில இடங்களிலேயே, இரண்டுகாலச் சாசனங்களில் இடம்பெற்றுள்ளது; அல்வழியிலும் வேற்றுமையிற் பெரும்பாலான இடங்களிலும் இத்திரிபு இல்லை; ளகரம் நகர முதன்மொழி வருமிடத்தில் ணகரமாக உண்ணிலம் என ஓரிடத்தில் மட்டும் திரிந்து காணப்படுகின்றது.[186] ழகரவீறு ளகர வீற்றை ஒத்த திரிபுகளைப் பெறுவதை வீரசோழியம் கூறியுள்ளது; ழகரவீறு பகர முதன்மொழிக்கு முன்னே டகரமாகத் திரிவதற்கு புகட் படர[187](புகழ் படர), கலுட்பெரும் பிணக்குன்றம்[188] (கலுழ்பெரும் பிணக்குன்றம்) என இரண்டு எடுத்துக்காட்டுகள் பிந்திய சாசனத்திற் கிடைத்துள்ளன;

---

185. S. I. I., Vol, V, p. 179, Line 3.
186. E I, Vol, XX, p. 53, Line 12.
187. S. I. I, Vol, V, p. 179, Line 2.
188. S. I. I., Vol, V, p. 179, Line 7.

உயிரீற்றுக்கு முன் வல்லினம் வேற்றுமையில் வரும்போது வரும் வல்லெழுத்தின் இனமெல்லெழுத்தான மூக்கொலி வருகின்றது. மாந்தளிர்[189] பூம்புனல்[190], புளிங்கறி[191] எனவரும். இதே அமைப்பில், கழுகந்தோட்டம்,[192] ஆற்றங்கரையில்[193] என்பன வருகின்றன; இவற்றிலிடம்பெறும் அகரம் உடைமைப் பொருளையுணர்த்துவதாகக் கொள்ளவேண்டும். லகர ளகரமும் னகர ணகரமும் புணரியலில் ஒரே வித மாற்றங்களைப் பெறுவதைக் காணலாம். னகர வீற்றினைக்கொண்ட சொற்கள் லகர வீற்றினையும் ணகர வீற்றினைக்கொண்ட சொற்கள் ளகர வீற்றினையும் கொள்வனவாகத் தமிழ்மொழி வரலாற்றில் மாறிவந்தமையே அதற்குக் காரணமாகும்; வருமொழி முதலெழுத்து மாற்றங்களை ஆராயும்போது லகர ஈற்றைத் தொடர்ந்து வரும் தகர முதல், றகர முதலாக மாறுகின்றது; அவ்வாறு திரியாத இடங்களும் உண்டு. னகர வீற்றைத் தொடர்ந்து வரும் நகர வீறு னகர வீறக மாறுகின்றது, முந்தின சாசனங்களில் இத்திரிபுக்கு ஒருதாரணமும் இயல்புக்குப் பல உதாரணங்களும் கிடைத்துள்ளன. பிந்திய சாசனங்களில் திரிபு பயின்று காணப்படுகின்றது. ணகர வீற்றைத்தொடர்ந்து வரும் தகரமுதல் டகரமுதலாக மாறுகின்றது. இத்திரிபுக்கு ஒரெடுத்துக் காட்டு மட்டும் முந்திய சாசனங்களிற் காணப்பட நான்கு எடுத்துக்காட்டுகள் பிந்திய சாசனங்களிற் கிடைத்துள்ளன. தந்தையும் மகவுமான உறவுகொண்ட

---

189. S. I. I., Vol, V, p 179 Line 15.
190. S. I. I., Vol, III, p. 454, Line 136.
191. E, I., Vol, IX, p. 88, Line 20.
192. S. I. I , Vol, V, p. 27, Line 4.
193. S. I. I., Vol, VIII, p. 300, Line 15.

இருவர் பெயர்கள் தொடர்ந்துவரும்போது தந்தையின் பெயரிறுதியிலுள்ள அன் ஈறுகெட அவ்விடத்து அம் மென்னும் சாரியை வரும் என்று தொல்காப்பியம் கூறும். ளகர மூக்கொலி, வரும் வல்லெழுத்துக்கு இன மான மூக்கொலியாகத் திரிவதே இந்த மாற்றம் என லாம். நக்கங்காடன்[194] (நக்கன் காடன்), சாத்தம்பழி யிலி[195] (சாத்தன் பழியிலி) என்பன முந்திய சாசனங் களிலுள்ள உதாரணங்களாம். பிந்திய சாசனங்களின் காலத்தில் இத்திரிபு நிகழவில்லை.

மெய்யெழுத்துக்கள் கெடுதல் நிலைமொழியீற்றில் நிகழ்கின்றது. ம, ன முதலிய மெல்லெழுத்துக்களும் ர, ல, ள, ழ முதலிய இடையெழுத்துக்களும் கெடும் எழுத்துக்களாம். ஈரசைச் சொல் அல்லது பல அசைச் சொல்லின் ஈற்றில் வரும் மகரம் வருமொழி முதலில் மகரம், நகரம் அல்லது வகரம் வரும்போது பெரும் பாலும் கெடுகின்றது. உயிரெழுத்து முதன்மொழி வரு மிடங்களிலும் இது கெடுவது உண்டு. அவ்வாறு கெடும் போது சில இடங்களில் உடம்படுமெய் எழுதப்படுகின் றது; சில இடங்களில் இயல்புப் புணர்ச்சி காணப்படு கின்றது. னகர ஈறு நகர ஈற்றுக்கு முன்னாலே கெடுகின் றது. அப்பொழுது வருமொழி முதலிலுள்ள நகரம் னகர மாகத் திரிகின்றது. முந்திய சாசனங்களில் னகர வீறு கெட்டபின் நகர வீறு னகர வீறாகத் திரிதல், எல்லா இடங்களிலும் காணப்படவில்லை. பிந்திய சாசனங்களில் இத்திரிபு எல்லா இடங்களிலும் காணப்படுகின்றது: னகர வீறு கெட வருமொழி வல்லினம் இரட்டும் அபூர் வப் புணர்ச்சி உடப்பிறந்தார் (உடன்பிறந்தார்) என

---

194. S. I. I., Vol, III, p. 454, Line 165.
195. S. I. I, Vol, XII, p. 26, Line 4.

முந்திய சாசனத்திற் காணப்படுகின்றது.[196] ரகர வீறு வருமொழி முதலில் பகரம் அல்லது மகரம் வரும்போது கெடுவதைப் புத்திர புத்திரர்[197] கைக்கோள முதலிகளில், [198] சண்டாளப்பேறு[199] என்ற பிந்திய சாசன எடுத்துக்காட்டுகள் புலப்படுத்துகின்றன. ல, ழ என்பன வருமொழி முதலில் நகரம் வரும்போது மேணேக்கிய[200] (மேல்நோக்கிய) கீழ்ஞேக்கிய[201] (கீழ் நோக்கிய) நகையாணன்னிலை[202] (நகையால் நன்னிலை) புனனூட்டை[203] (புனல் நாட்டை) என நிலைமொழியீறுகெட வருமொழி முதல் நகரம், ஏற்ற திரிபு பெற்றுவருவதை உணர்த்துகின்றன; வருமொழி முதல் நகரம் திரியாது இயல்பாக நிற்கும் எடுத்துக்காட்டுகள் சில, முந்திய சாசனங்களிற் கிடைத்துள்ளன. ல, ள என்பன வருமொழி முதலில் தகரம் வரும்போது நாடோறும்[204] (நாள்தோறும்) திங்கடோறும்[205] (திங்கள்தோறும்) கோறிசை[206] (கோல் திசை) என நிலைமொழியீறு கெட வருமொழி முதல் தகரம் ஏற்ற திரிபுபெற்று வந்துள்ளது;

## 2. பெயரியல்

சாசனத் தமிழ்ப் பெயர்ச் சொல்லாக்கம் பல வகையாக நடைபெறுகின்றது; அடிச் சொற்களில் ஒரு

---

196. E. I., Vol, XX, p. 53, Line 2.
197. S. I. I, Vol, VI, p. 136, Line 3.
198. S. I. I, Vol, V, p 380, Line 3.
199. S. I. I, Vol, V, p. 138 Line 21.
200. S. I. I, Vol, VIII, p. 82, Line 20.
201. S. I. I, Vol, VIII, p. 82, Line 21.
202. S. I. I, Vol, V, p. 179, Line 12.
203. S. I. I, Vol, V, p. 179, Line 9.
204. S. I. I, Vol, V, p. 149, Line 15.
205. S. I. I, Vol, XII, p. 30 Line 23.
206. S. I. I, Vol, III, p. 454, Line 138.

பகுதி பெயர்ச்சொல்லாக விளங்குகின்றன. ஆனால் அவை சாசனப் பெயர்ச்சொற்களில் ஒரு சிறு பகுதியேயாகும்; பெரும்பாலான பெயர்ச்சொற்கள் அடிச்சொற்களிலிருந்தும் வினைச் சொற்களிலிருந்தும் பிறபெயர்ச்சொற்களிலிருந்தும் அமைகின்றன; வினையிலிருந்து அமையும் பெயர்ச்சொற்களை முதனிலைத் தொழிற்பெயர், முதனிலை திரிந்த தொழிற்பெயர், தொழிற்பெயர், வினையடிப் பெயர், வினையாலணையும் பெயர் எனப் பலவாகப் பகுத்து ஆராயலாம். வினையடி வடிவமே பெயராகவும் வழங்குவது முதனிலைத் தொழிற்பெயரெனப்படுகின்றது; முதனிலை திரிந்த தொழிற்பெயர் என்பதை ஓரசை வினையடியின் உயிர் நீளல், வினைப்பகுதியின் ஈற்றுமெய் யெழுத்து இரட்டல், வினையடியின் நெடில் குறுகல் என மூன்றாக வகுத்து ஆராயலாம்;

வினைப்பகுதிக்குத் தொழிற் பெயர் விகுதி சேர்க்கத் தொழிற்பெயராகும் எனத் தமிழிலக்கணக்காரர் கூறுவர். தொழிற்பெயரைத் தொழிற்பெயர், வினையடிப்பெயர் என இரண்டாக வகுத்துக்காட்டியவர் கால்டுவெல்லாவர்; தொழிற்பெயர் தொழிலை மாத்திரம் உணர்த்துவது என்றும் வினையடிப் பெயர் வினைப்பகுதி யானது விகுதிபெறுவதாலே தோன்றுவதாயினும் தொழிலை உணர்த்துவதில்லை எனவும் அவர் காட்டியுள்ளார். தல்விகுதி தொழிற் பெயருக்குச் சிறப்பாக உரியது. அல் விகுதி தொழிற்பெயருக்கும் வரும்; வினையடிப் பெயருக்கும்வரும். தொழிற் பெயர் விகுதிகளெனப்படும் பிற விகுதிகள் யாவும் வினையடிப்பெயர் விகுதிகளாக வருகின்றன. வினையாலணையும் பெயர் வினைமுற்றின் அமைப்பை உடையதாகப் பெயராக வருவதாகும்; பெயரெச்சவடிவங்களுக்குப் பாலறிகிளவி அல்லது சுட்டுப்பெயரைச் சேர்க்க அவை தோன்றுகின்றன; தொழிற்பெயரோடு ஒப்பிடும்போது இவை காலத்தையும்

கருத்தாவையும் சிறப்பாக உணர்த்தும். வினைமுற்றுக்கும் வினையாலணையும் பெயருக்கும் இடையே வடிவ ஒற்றுமையால் ஏற்படும் மயக்கத்தைத் தீர்ப்பதற்காக, பாலறிகிளவிகள் சேர்ந்துவருமிடத்தும் குறுகிய உயிருடைய பாலறிகிளவியை உயர்திணை வினைமுற்றுக்கும் நீண்ட உயிருடைய பாலறிகிளவியை உயர்திணை வினையாலணையும் பெயருக்கும் மொழி பெரும்பாலும் பயன்படுத்துகின்றது; எடுப்பார்,[207] உள்ளிட்டார்,[208] செய்வார்கள்,[209] வேண்டுவது,[210] எப்பேர்ப்பட்டன[211] என்பன பாலறிகிளவியுடைய வினையாலணையும் பெயர்களுக்கு எடுத்துக்காட்டுகளாம்; து, மை என்ற விகுதிகளையுடைய பெயர்கள் சில, பெயரெச்சங்களைக் கொண்டமைவன: இவை அமைப்பில் வினையாலணையும் பெயரை ஒத்தன. ஆனால் இவை கருத்தாவை உணர்த்த வில்லை. தொழிற் பெயரைப்போலன்றி இவை காலத்தை உணர்த்துகின்றன. இவை காலங்காட்டும் தொழிற் பெயரெனத் தமிழிலக்கணகாரரால் வகுக்கப்படும்.

பெயர்ச் சொற்களுக்கும் பெயரடைகளுக்கும் விகுதிகள் ; சேர்ப்பதாலும் பாலறிகிளவிகள் சேர்ப்பதாலும் பெயர்ச் சொல்லாக்கம் நிகழும்; விகுதிகள் என்று இங்கு கொள்ளப்படுவது பாலறிகிளவிகள் தவிர்ந்த விகுதிகளையாகும். பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்ற அறுவகைப் பெயருக்கும் பாலறிகிளவியைச் சேர்ப்பதன் மூலம்

---

207. S. I. I, Vol, IV, p. 128 Line 9.
208. S. I. I, Vol, V, p. 328, Line 11.
209. S. I. I, Vol, VIII, p. 226, Line 4.
210. S I. I, Vol, V, p. 166, Line 2.
211. S. I I, Vol, V, p. 27, Line 22/23.

பெயர்ச் சொல்லாக்கப்படும்: அவ்வாறு ஆக்கப்பட்ட பெயர்ச் சொல்லைத் தன்மைப் பெயராக்குவதற்காகத் தன்மை விகுதியைத் தொடர்ந்து சேர்ப்பதுண்டு.[212] பெயரையும் பெயரையும் சேர்ப்பதன்மூலம் மேற்படி, கோயில், வாய்க்கால்[213] முதலிய பெயர்ச்சொற்களும் பெயரையும் வினையடியையும் விகுதியையும் சேர்ப்பதன் மூலம் மஞ்ஞள்,[214] காராண்மை,[215] மன்றுடி[216] என்னும் பெயர்களும் பெயரையும் இடப்பொருளுருபையும் பாலறிகிளவியையும் சேர்ப்பதன் மூலம் வழியிலார்[217] என்னும் பெயரையும் தொழிற்பெயரையும் எதிர்மறை இடைச்சொல்லையும் பாலறிகிளவி அல்லது விகுதியையும் சேர்ப்பதன் மூலம் விரவலர்,[218] இறையிலி[219] முதலிய பெயர்ச்சொற்களையும் வினையடியையும் பெயரையும் சேர்ப்பதன்மூலம் வெண்பா,[220] வெள்ளிலை முதலிய பெயர்களையும் சாசனத் தமிழ்மொழி அமைத்துக்கொள்கின்றது. செய்பவர் என்று பொருள்படும். க்ரு என்னும் சங்கதமொழிச் சொல் மூலத்திலிருந்து வந்த 'காரர்' என்பதைப் பெயர்ச்சொல்லோடு சேர்த்து நிவந்தக்காரர்,[221] வேட்டைக்காரர்[222] முதலிய பெயர்ச்சொற்களை ஆக்கும் மரபு பிந்திய சாசனங்களிலே காணப்படுகின்றது.

---

212. நாட்டோரோம, கணக்கரோம, அவையரோம என்பன பிந்திய சாசனங்களில் மட்டுமுள்ள உதாரணங்கள்.
213. S. I. I, Vol, V, p. 288. Line 7.
214. S. I. I, Vol, XII, p. 24 Line 8
215 S. I. I, Vol, III, p. 454, Line 159.
216 S. I. I, Vol, V, p. 276, Line 3.
217. S. I. I, Vol, III, p. 224. Line 5.
218. S I. I, Vol, III, p 454, Line 88/89.
219. E. I, Vol, XX, p. 53, Line 12.
220. S. I. I, Vol, XII, p. 42, Line 2
221. S. I I, Vol, V, p. 151, Line 13/14.
222. S. I I, Vol, VIII, p. 137, Line 13.

சாசனங்களிலுள்ள பெயர்ச்சொற்களைப் பாலறி கிளவிகள் உள்ள பெயர்ச்சொற்கள், பாலறிகிளவிகள் இல்லாத பெயர்ச்சொற்கள் என இரண்டாக வகுக்கலாம். பாலறிகிளவிகள் இல்லாத பெயர்ச்சொற்களும் இருதிணை ஐம்பாற் பாகுபாட்டினுள் அடங்குகின்றன: உயர்திணை அஃறிணை என்ற பாகுபாட்டைக்கூறும் தொல்காப்பியர் மனிதர் உயர்திணையென்றும் பிற யாவும் அஃறிணை யென்றும் கொண்டுள்ளார். நன்னூலார் தேவர், நரகர் என்போரையும் உயர்திணையாகக் கொள்வர். உயர்திணையில் மட்டுமே ஆண்பால், பெண்பால் என்ற வேறுபாடு உண்டு. அஃறிணை மிருகங்கள், பறவைகள், மரங்கள் என்பன ஆண் பெண் எனப் பிரித்துக் கூறப்படுகின்ற இடத்திலேகூட, ஆண்பால் பெண்பால் என்று கொள்ளப்படாது அஃறிணையாகவே கொள்ளப்படுகின்றன. அஃறிணைச் சொற்களிற் பெரும்பாலானவற்றில் ஒன்றன்பால், பலவின்பால், விகுதிகள் இடம்பெறுவதில்லை; ஒரே வடிவம் ஒன்றன்பாலாகவும் பலவின்பாலாகவும் அமைந்து பால்பகா அஃறிணைப் பெயர்களாகக் காணப்படுகின்றன. பாலறிகிளவிகள் திணைபால் எண் இடம் என்பனவற்றைத் தெளிவாக உணர்த்துகின்றன. திணைபால் எண் இடம் கூறல் பொருளைப் பொறுத்ததன்றி வடிவத்தைப் பொறுத்ததல்ல. ஆனால் பாலறிகிளவிகள் உள்ள வடிவத்திலிருந்து திணை பால் எண் இடம் முதலியனவற்றைச் சுலபமாக அறிந்து கொள்ளமுடியும். மூவிடப் பெயர்கள் அல்லது அவற்றின் உறுப்புகளே. பாலறிகிளவிகளென்றும் ஆதித்திராவிடப் பெயர்ச்சொற்கள் பாலறிகிளவிகளில்லாத நிலையிலிருந்தனவென்றும் காலப்போக்கிலேயே பாலறிகிளவிகள் அப்பெயர்ச் சொற்களோடு சேர்க்கப்பட்டனவென்றும் கால்டுவெல் கூறினார். தொல்காப்பியர் பாலறிகிளவியாக ஈற்றெழுத்தாகிய னகரம் முதலியவற்றைமட்டும் கூறுவதால் கால்டுவெல் கருதிய அன் முதலிய மூவிடப்

பெயர் ஈறுகள் ஏற்றுக்கொள்ளத்தக்கன அல்ல என்பர்; ஆனால், தொல்காப்பியம் வினையியலில் அன் முதலியன கூறப்பட்டுள்ளன; மேலும் உயர்திணை விகுதிபெறாத, பொருளால் உயர்திணையான சொற்கள் அஃறிணைபோல வழங்குமெனத் தொல்காப்பியர் சூத்திரம் செய்துள்ளார். திணைப் பாகுபாடு, சொல்லின் பொருளால் அறியப்படும் நிலைக்கும் சொல்லின் வடிவத்தால் அறியப்படும் நிலைக்கும் இடையே ஒரு மயக்கநிலைக் காலத்தை இச் சூத்திரம் சுட்டுகின்றது எனக் கூறலாம். எனவே கால்டுவெல் கூறுவது ஏற்கத்தக்கது.

ன், அன், ஆன் என்பன ஆண்பால் விகுதிகளாகவும் அள், ஆள், இ என்பன பெண்பால் விகுதிகளாகவும் காணப்படுகின்றன. கிழத்தி, மணவாட்டி என்ற எடுத்துக் காட்டுகளிலுள்ள அத்தி, ஆட்டி என்பன பெண்பால் விகுதிகளென்று வீரசோழியத்தார் கொள்வர்; இவற்றுள் - த்தி என்பதே விகுதி யென்றும் ளகர மெய்யீற்றுச் சொற்களின் முன் - த்தி என்பது புணர்ந்து - ட்டி என்பது தோன்றுகிறதென்றும் கொள்ளலாம். ஒன்றன் பாற் பெயர்களுட் பெரும் பகுதிக்குத் தனிவிகுதியில்லை. து, று, டு என்பனவே அதன் விகுதி என இலக்கணம் கூறும்; அம்மீற்றுச் சொற்களும் ஒன்றன் பாலையே பெரும்பாலும் உணர்த்துகின்றன. மரியாதைப் பன்மை, பலர்பாற் பன்மை, பலவின்பாற் பன்மை என மூன்றுவிதமான பன்மையைக் காணலாம்; பலவின்பாற் பன்மைக்குத் தனிவிகுதி உண்டு. பலர்பாலே தொல்காப்பியம் நன்னூல் முதலிய நூல்களிலே குறிப்பிடப்பட்டுள்ளது. வீரசோழியத்தில் மட்டுமே மரியாதைப் பன்மை வழக்காறுகள் கூறப்பட்டுள்ளன; மரியாதைப் பன்மையென்பது மரியாதை காரணமாக ஒருமையைப் பன்மையிலே கூறுவது. உயர்திணையிலேயே இது வரும். அஃறிணையில் ஏகதேசமாக இழிவுசிறப்பாக இது வழங்கப்படுவதுண்டு.

பன்மை விகுதிகள் மரியாதைப் பன்மைக்கு வழங்கப்படத் தொடங்கப் பலர்பாலை உணர்த்துவதற்கு இரட்டைப் பன்மை வடிவங்கள் தோன்றின: பழைய பலர்பால் வடிவங்களோடு பலவின் பாலுக்குக் கூறப்பட்ட கள் விகுதியை இணைப்பதன் மூலம் இரட்டைப் பன்மை வடிவங்கள் பெறப்பட்டன; ஆனால் இரட்டைப் பன்மை வடிவங்கள் தோன்றிய பின்பும் பழைய பன்மை வடிவங்களும் பன்மையைக் குறிக்க வழங்கப்பட்டுள்ளன; சாசனத் தமிழில் இந்த நிலையே காணப்படுகின்றது. நன்னூல் மரியாதைப் பன்மையையும் இரட்டைப் பன்மையையும் ஏற்கவில்லை. பழைய தமிழில் இவை இடம்பெறவில்லை. இடைக் காலத் தமிழ்ச் சமுதாயத்திலேற்பட்ட மாற்றத்தின் பிரதிபலிப்பாகவே, மரியாதைப் பன்மை இடம்பெறத் தொடங்கியது. பலர்பாலும் ஆண்பன்மை, பெண் பன்மை, பலர் பன்மை என மூன்றாகப் பிரிக்க இடந்தருகின்றது: ஆனால் இவையாவும் ஒரே வகை விகுதிகளைக் கொள்ளுகின்றன. அ, அவை என்ற பலவின் பால் விகுதிகளையுடைய பெயர்ச்சொற்கள் கிடைத்துள்ளன; பல என்பதும் காணப்படுகின்றது; தன்மை ஒருமை விகுதியாக ஏன் என்பதும் தன்மைப் பன்மை விகுதியாக ஓம் என்பதுமே சாசனங்களிலே காணப்படுகின்றன.

பெயர்ச்சொல்லுக்கும் மிகுதி வாக்கியத்துக்குமுள்ள தொடர்பைச் சொற்றொடர் முறை, பின்னிணைப்புகளின் பயன்பாடு என இரு கூறாக விளங்கிக்கொள்ளலாம். சொற்றொடர் முறையை எடுத்துக்கொண்டால், கருத்தா வினைக்குமுன் வருவதை அவதானிக்கலாம். சில இடங்களில் எழுவாய் இறுதியில் வருகிறது. வினை முன்னும் பெயர் பின்னும் வரும்போது வினை பாலறிகிளவி பெற்றேவரும். 'குடுத்தோம்.........பட்டர்களுக்கு இவ்

வினேவோம்,[223] 'சொன்ஞேம் சோழகுலவல்லி ஊரவ ரோம்',[224] 'இவ்வூர் விற்றுக்குடுத்தோம் ஸ்ரீலக்ஷ்மணச் சதுர்வேதிமங்கலத்துப் பட்டர்களுக்கு...... ... நாட்டவ ரோம்'[225] என்பன சில எடுத்துக்காட்டுகளாம். பழைய திராவிடமொழிச் சொற்ருெடர்முறை இதுவாகவே இருந்திருக்கவேண்டும். இன்றைய தமிழ் வினைமுற்றுத் தொழிலையும் காலத்தையுமன்றிக் கருத்தாவையும் உணர்த்துகின்றது: வினையின் இயல்பு தொழிலையும் காலத்தையும் உணர்த்துவதாக இருக்கவேண்டும். பெயர்ச்சொல்லே கருத்தாவை உணர்த்தவேண்டும். வினைமுற்று விகுதிகளே கருத்தாவை உணர்த்துகின்றன; வினைமுற்று பெயர்ச்சொல்லைக் கொண்டு முடியும் என்று தொல்காப்பியரும் நன்னூலாரும் கூறுவர். உரையாசிரியர் தரும் உதாரணங்கள் சாசன உதாரணங்களை ஒத்தன; திராவிட மொழி வினைமுற்றுகளில் பாலறிகிளவிக ளில்லாதவை சில, இன்றும் உண்டு. மலையாள வினைமுற்றுகளில் பாலறிகிளவிகளில்லை. தமிழ் வினையெச்சங்களை ஒத்த வடிவங்களே, அம்மொழியில் வினைமுற்றுகளாக விளங்குகின்றன. சங்க இலக்கியம் முதலியவற்றில் காணப்படும் வினையெச்சவடிவங்கள் சில, இடைக்காலத்தில் வாழ்ந்த உரையாசிரியரால் உரைகூறப்படும்போது வினைமுற்றுகளாகக் கொள்ளப்படுகின்றன. எனவே மலையாள வினைமுற்றை ஒத்த வடிவங்கள் பழைய தமிழிலும் வினைமுற்றுகளாகக் கொள்ளப்படுகின்றன. சொற்களைப் புணர்த்தி எழுதுவதே பழைய தமிழ்முறையாகும். பழைய வினைமுற்றுகளும் அவற்றைத்தொடர்ந்து வந்த பெயர்ச் சொற்களும் புணர்த்தி எழுதப்பட்டுவந்

---

223. S. I. I, Vol, VII, p. 9, Line 4
224. S. I. I, Vol, VII, p. 10, Line 3/4.
225. S. I. I, Vol, VII, p. 386, Line 12.

திருக்கவேண்டும்; வடமொழி மரபைத் தழுவிக் கருத்தாவை முதலிற் கூறும் மரபு தோன்றியிருக்கலாம்; வினைமுற்றுப் பெயர்ச்சொல்லாக அமைந்த பழைய வாக்கியம் ஒரே சொல்லாகக் கருதப்பட்டுப் புதியவினை முற்றாக ஏற்கப்பட்டிருக்கவேண்டும்;

பெயர்ச்சொல்லே பயனிலையாக அமைந்த, வினைமுற்று இடம்பெறாத வாக்கியங்களும் சாசனத்தில் உண்டு. வினையின் தொழிலை விளக்கிநிற்கும் செயப்படுபொருள், கருவிப்பொருள், எவ்விதம் எனச் சுட்டும்பொருள் என்பனவும் வினைக்கு முன்பேயே கூறப்படும்; உடைமைப்பொருளைத் தொடர்பாக உடைய இரண்டு பெயர்ச்சொற்கள் பக்கத்திலே வரும்போது, முதலாவது பெயர்ச்சொல் உடையவனை உணர்த்தும் அல்லது மற்றப் பெயர்ச்சொல்லுக்கு அடையாகவரும். முதலாவது பெயர்ச்சொல் பாலறிகிளவி உள்ளதாகவும் இருக்கலாம்; இல்லாததாகவும் இருக்கலாம்; ஆனால் அளவுப் பெயரும் பொருளுமாக அமைந்த தொடர்களில் அளவுப்பெயர் முதல்வரப் பொருள் பின் வருவதை உரிநெய்[226] நாழிபால்,[227] மாச்செய்[228] முதலியவற்றிற் காணலாம். முதற்பெயர் ஈறு குற்றியலுகரமாக அமைந்து டு, று என்றிருந்தால், அவை வருமொழிக்குமுன் இரட்டும்; முதற்பெயர் மகரவீற்றையுடையதாயிருந்தால், மகரவீறுகெடும்; அது உருபேற்கு முன்பு அத்துச் சாரியையைப்பெறும்; திணைபால் எண் என்பவற்றுக்கேற்பப் பின்னிணைப்புகள் தமிழில் வேறுபடுவதில்லை; மகரவீறு தவிர்ந்த மெய்யீற்றுமொழியும்

---

226. S. I. I, Vol, VII, p. 36, Line 8.
227. S. I. I, Vol. VII, p. 36, Line 7.
228. S. I. I, Vol. VIII, p. 86, Line 25.

உயிர்ற்று மொழியும் எவ்வித வேறுபாடுமடையாமலே பின்னிணைப்புகளை ஏற்றுக்கொள்ளுகின்றன.

நான்காம் வேற்றுமை உருபாகிய குகரம் ரகரத்துக்குப் பின் -க்குஎன்றும் றகரத்துக்குப் பின் -கு என்றும் வரும்; சாசனங்களில் ரகர றகர மயக்கம் நிகழ்வதால், ரகரம் வரவேண்டிய இடத்தில் றகரம் வர அதைத்தொடர்ந்து-கு எழுதப்படுகின்றது; முந்திய சாசனங்களில் ஓரிடத்தில் இப்படி வந்துள்ளது; பிந்திய சாசனங்களில் ஐந்து இடங்களில் இவ்வாறு காணப்படுகின்றது. றகரம் எழுதப்பட்ட பின்பும்-க்கு என்று வருவது நான்கு இடங்களிலே குறிக்கப்பட்டுள்ளது. டு, று என்ற குற்றியலுகரவீறுகள் இரட்டிய பெயர்ச்சொல் வடிவங்களே வேற்றுமை உருபை ஏற்கின்றன. மகரவீற்றுப்பெயர்கள் மகரம் கெட்டபின் வேற்றுமை உருபேற்பதற்குமுன் -த்து (அத்து) பெறுகின்றன. அத்துச் சாரியையின் அகரம் கெட்டுவிடுகிறது என்று தமிழிலக்கணக்காரர் கூறுவர். —த்து, -ட்டு, —ற்று என்பன தொடர்புடையன; உடைமைப் பொருளைக்குறிக்கும் அது என்பதுடன் இவ்வடிவங்கள் தொடர்புடையனவாக இருக்கவேண்டும்; ஒன்றுக்கு மேற்பட்ட பின்னிணைப்புகளைப்பெறும் பெயர்களும் உண்டு. பெயர்ச் சொற்களும் எண்ணுப்பெயர்களும் -இன் என்ற பின்னிணைப்பை முதலிற்பெற்று அதன்பின்பு பிற பின்னிணைப்புகளைப் பெறுகின்றன. -இன் என்பதும் -த்து, -ற்று, -ட்டு என்பனவற்றோடு பொருளில் தொடர்புடையதாகக் காணப்படுகின்றது; -இற்று என்னும் ஒரு வடிவம் உள்ளனவயிற்றுக்கு, உட்பட்டவையிற்றில், இவையிற்றுக்கு எனப் பிந்திய சாசனங்களில் மட்டும் காணப்படுகின்றது. இன் என்பதுபோல, அன் என்பதும் முக்கியமான பின்னிணைப்பாகப் பழைய தமிழில் இருந்தது. ஒன்றன்பாற் பெயர்ச்சொற்கள் அன்னைப் பின்னிணைப்பாகப் பெற்று அதன்

பின் பிற பின்னிணைப்புகளைப் பெறுவதை முந்திய சாச னங்களில் ஒன்பது இடங்களிலே காணலாம்; பிந்திய சாசனங்களிலே ஓரிடத்திலே மட்டும் காணலாம். ஒன் றன்பாற் சுட்டுப்பெயர்கள் மட்டும் பிந்திய சாசனங் களிலும் அன் என்பதைப் பின்னிணைப்பாகப் பெறும் முறையைப் பேணுவதைக் காணலாம்.

பின்னிணைப்புகள் சிலவற்றின் வடிவத்தில் வேறுபாடு ஏற்பட்டுவந்தது. தொல்காப்பியத்தில் ஆன் என்பது வேற்றுமை உருபாகக் கூறப்பட வீரசோழியத்தில் ஆல் என்பது கூறப்படுகின்றது. இது காலப்போக்கில் ஏற்பட்டுவந்த வேறுபாட்டைக் குறிக்கிறது; முந்திய சாசனங்களில் ஆன் உருபுக்கு இரண்டு எடுத்துக்காட்டுகள் கிடைக்கப் பிந்திய சாசனங்களில் எதுவும் கிடைக்கவில்லை. ஆல் உரு புக்கு முந்திய சாசனங்களில் ஒன்பது உதாரணங்கள் கிடைக்கப் பிந்திய சாசனங்களில் பன்னிரண்டு உதா ரணங்கள் கிடைத்துள்ளன. தொல்காப்பியத்தில் இன் என்பது வேற்றுமை உருபாகக் கூறப்பட வீரசோழியத் தில் இல் கூறப்பட்டுள்ளது. இன் உருபுவரும் ஐந்து உதாரணங்கள் முந்திய சாசனங்களிலும் நான்கு உதா ரணங்கள் பிந்திய சாசனங்களிலும் வந்துள்ளன. இல் உருபு வரும் ஏழு உதாரணங்கள் முந்திய சாசனங்களி லிடம்பெற ஒன்பது உதாரணங்கள் பிந்திய சாசனங் களிலிடம் பெற்றுள்ளன. இற் -, ஆற் - எனப் புணர்ச்சி யிலிடம்பெறும் வடிவங்கள் எவ்வுருபைக் குறிக்கின்றன வெனப் பிரித்துக்காட்ட முடியாதுள்ளன. -கு உருபு தான் சேர இடங்கொடுத்து நிற்கும் பெயர்ச்சொல்லின் ஈற்றுக்கேற்ப -கு -க்கு, -உக்கு என மூன்று வடிவங் களைக் கொள்ளுகின்றது. ஐகாரம் செயப்படுபொருளை உணர்த்துகின்றது. செயப்படுபொருளும் பயனிலையும் தொடர்புடையன. வாக்கியத்தை எழுவாய், பயனிலை

என இரண்டாகப் பிரித்தால், செயப்படுபொருள் பய னிலையில் அடக்கப்படுகின்றது. இரண்டு செயப்படு பொருள்கள் வருகின்ற வாக்கியத்தில் ஐகாரம் சேர்ந்து வரும் செயப்படுபொருள் மற்றச் செயப்படுபொருளும் வினையும் சேர்ந்து ஒன்றுபட்ட பயனிலைக்குச் செயப்படு பொருளாக வருகின்றது: சென்னியைத் திறை கொண்டு,[229] இலங்கை காவலனை இறைகொண்ட ருளி[230] என்பன உதாரணங்களாம்: தொல்காப்பியத் தில் ஒடுவென்பது வேற்றுமை உருபாகக் கூறப்படுகின் றது. இடைக்காலச் சாசனங்களில் ஒகரத்துக்கும் ஓகா ரத்துக்கும் வடிவத்தில் வேறுபாடில்லையாதலால் அங்கு வழங்குவது ஒடுவா அல்லது ஓடுவா எனக் கூறமுடியா துள்ளது. நன்னூலில் ஒடு, ஓடு இரண்டும் கூறப்பட் டுள்ளது. பழைய நூல்களைப் பதிப்பித்தவர்கள் மெய் யீற்றுப்பெயர்ச்சொற்களுக்கு முன் ஒடு வென்பதையும் உயிரீற்றுப் பெயர்ச்சொற்களுக்கு முன் ஓடு என்பதை யும் குறித்துள்ளார்கள். தொல்காப்பியத்தில் ஆறும் வேற்றுமை உருபாகக் கூறப்படும் 'அது' ஓரிடத்தில் முந்திய சாசனத்தில்மட்டும் காணப்படுகின்றது; திரா விட மொழிகள் பலவற்றில் ஆறும் வேற்றுமை உரு பாக வழங்கப்படுவதும் நன்னூலாரால் ஆறும் வேற் றுமை உருபுகளுள் ஒன்றாகக் கூறப்படுவதுமான அகரம் பிந்திய சாசனங்களில் இரண்டிடங்களில் வந்துள்ளது; உடைய என்பது சாசனத் தமிழில் ஆறும் வேற்றுமை உருபாக வழங்கிவந்துள்ளது.

இடப்பொருளைக் குறிக்கும் சொற்களாக வழி, வாய், இடை, உழை, கண், உள், மேல், கீழ், பக்கல்

---

229. S. I. I, Vol, V, p. 179, Line 6.
230. S. I. I, Vol, V, p. 179, Line 10.

என்பனவும் காலப்பொருளைக் குறிக்கும் சொற்களாக முதல், வரை என்பனவும் பிந்திய சாசனங்களிற் காணப்படுகின்றன. தொல்காப்பியத்தில் ஏழாம் வேற்றுமைப் பொருளையுணர்த்துவதாகக் கூறப்படும் 'கண்' முந்திய சாசனமொன்றில் மட்டும் வழங்கி வழக்கற்றுப்போய் விட்டது. சாசனத் தமிழில் பக்கல் என்பது பக்கம், இடம் என்ற பொருளிலே பயின்று வழங்குகின்றது; வீரசோழியம் ஒன்றே இந்த உருபைக் கூறியுள்ளது. ஐந்தாம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் நெருங்கிய தொடர்புடையன. ஐந்தாம் வேற்றுமை நீக்கற் பொருள் இடப்பொருளோடு சம்பந்தமுடையது; நின்று, இருந்து எனவரும் சொல்லுருபுகளே நீக்கற் பொருளையுணர்த்துவன. சாசனத்தில் நின்று என்ற சொல்லுருபு காணப்படுகின்றது.[231]

பெயரடை என்பது பழைய தமிழ் இலக்கணகாரராற் கூறப்படவில்லை. பெயரடை என்று ஒன்று தமிழில் உண்டா என்பது பற்றி இன்றைய திராவிட மொழியறிஞரிடையேயும் கருத்தொற்றுமை இல்லை; பெரும்பாலான அறிஞர் பெயரடை என்று ஒன்று வகுக்கப்படவேண்டுமென்கின்றனர். சாசனங்களிலுள்ள பெயரடைகளை மூன்றாக வகுக்கலாம் சில சந்தர்ப்பங்களில் மட்டும் பெயரடையாக விளங்கும் வினைப்பகுதிகள், பெயரடைகள், சிறப்பு ஈறுகளையுடைய பெயரடைகள் என்பனவே அவை. விரிபொழில்,[232] விளைநிலம்,[233]

---

231. S. I I, Vol, XII, p. 48.
232. S. I I, Vol, III, p. 454, Line 104.
233. S. I. I, Vol, XII, p. 46, Line 7.

குரைகடல்,[234] வருபுனல்[235] என்பனவற்றிலுள்ள வினைப் பகுதிகள் பெயரடைகளாக விளங்குகின்றன; வினைப் பகுதிகளின் தொழிலை விளக்கும் பெயர்ச்சொற்கள் அவ் வினைப்பகுதிகளுக்கு முன்பு வருகின்றன; அன்று ஆன் கோவுக்கு[236] மாகந்தோய் குடை,[237] நீர்ஓடுகால்,[238] மடைப்பகர்நீர்[239] முதலியன உதாரணங்களாம். வெம் முனை,[240] வெள்வளை,[241] தண்புனல்,[242] நல்விளக்கு[243] என்பனவற்றில் வரும் அடைகள் பெயரடைகளாம். வட, கீழ், தென், மேல் என்பன, திசைகளைக் குறிக்கும் பெயரடைகளாம்; பெரும்புகழ்,[244] நெடுங்காலம்[245] நறும்பூ,[246] பழங்காசு[247] என்பவற்றிலும் பழவரிசி,[248] பெரியஏரி,[249] உள்ள அளவு[250] என்பவற்றிலும் உள்ள அடைகள் சிறப்பு ஈறுகளையுடைய பெயரடைகளாம்.

---

234. S. I. I, Vol, III, p 454, Line 131.
235. S. I. I, Vol III, p. 454, Line 147.
236. S. I. I, Vol, XII, p 50 Line 9.
237. S. I I, Vol, III, p 454, Line 161.
238. S I I Vol, XII, p. 48 Line 32.
239 S. I. I, Vol III. p. 454, Line 129.
240. S. I. I, Vol, III, p. 454, Line 90.
241. S. I I, Vol, III, p. 454, Line 87.
242. S. I. I, Vol, III, p. 454, Line 157.
243. S. I. I, Vol, XII, p 41, Line 8.
244. S. I. I, Vol, III, p 454, Line 150.
245. E. I, Vol. IX, p 88, Line 79.
246. E. I, Vol, XXI. p. 109, Line 111.
247. E I, Vol, VII. p. 139, Line 4.
248. S. I I, Vol. III, p 228, Line 12.
249. S. I. I, Vol, III, p. 231, Line 3.
250. S. I. I, Vol, XIII, p. 136, Line 7,

பலமுறை,[251] பல்யாண்டு[252] என்பனவற்றிலுள்ள அடைகள் அளவைக்குறிக்கும் பெயரடைகளாகக் காணப்படுகின்றன;

சாசனங்களில் வழங்கிய இடப்பெயர்களைத் தன்மைப் பெயர், சுட்டிடப் பெயர், தற்சுட்டுப் பெயர் என மூன்றாக வகுக்கலாம். தன்மைப் பெயரில் ஒருமை பன்மை உண்டு. தன்மை ஒருமையிடப்பெயராக நான், யான் என்பன முந்திய சாசனங்களில் வழங்கப் பிந்திய சாசனங்களில் நான் என்பது மட்டுமே வழங்கியது; யாம், யாங்கள் என்பன பன்மையாக முந்திய சாசனங்களில் வழங்கப் பிந்திய சாசனங்களில் நாம், நாங்கள் என்பனவே காணப்படுகின்றன. உருபேற்கத் திரிந்தவடிவமாக என் என்பதே ஒருமையில் வழங்கிவருகின்றது. பன்மையில் எம், நம், எங்கள் என்பன காணப்படுகின்றன. யான், யாம், யாங்கள் என்பனவே என், எம், எங்கள் எனத் திரிந்தன. நாம் என்பது நம் எனத் திரிந்தது.

சுட்டிடப் பெயரே படர்க்கைப் பெயராக வழங்குகின்றது. அகரச் சுட்டடியாகப் பிறந்த பெயர்கள் தூரத்திலுள்ள பொருளையும் இகரச் சுட்டடியாகப் பிறந்த பெயர்கள் அண்மையிலுள்ள பொருளையுங் உணர்த்துகின்றன. அது என்பது உருபேற்கத் திரியும்போது அதன் பின்னிணைப்பாக அன் என்பதே முந்திய சாசனங்களிலே காணப்படுகின்றது. அவன், இவன் என்பனவே ஆண்பாற்படர்க்கை ஒருமைப் பெயர்களாம்; இவர் என்பது மரியாதைப் பன்மையாகவும் இவர்கள் என்பது பன்மையாகவும் காணப்படுகின்றன. வீரசோழியம் கூறு

251. S. I. I, Vol. III, p. 454, Line 88.
252. S. I. I, Vol. III, p. 221, Line 1/2.

வது இங்கும் பொருத்தமாகக் காணப்படுகின்றது. இவன் என்பது பெண்பாற்படர்க்கை ஒருமைப் பெயராம். இது என்பது திரியாமலே உருபு ஏற்ற இடங்கள் உண்டு; திரிந்தபோது இதன் என்பதே பெரும்பாலும் வழங்கியிருக்கிறது. இதின் என்ற வடிவமும் சாசனங்களில் வழங்குகிறது. இவை என்ற பலவின்பால் வடிவம் உருபேற்றபோது இவற்றுக்கு, இவைத்தில்[253] என முந்திய சாசனங்களிலும் இவையிற்றுக்கு,[254] இவற்றுள் எனப் பிந்திய சாசனங்களிலும் வழங்கியுள்ளன. இவற்றில் என்பதன் மாற்றுவடிவமாக இவைத்தில் என்பது வழங்கியிருக்கவேண்டும். இந்த என்ற சுட்டிடப்பெயரடை வடிவம் பிந்திய சாசனங்களில் மூன்றிடத்திற் காணப்படுகின்றது.[255] அனைத்தும் என்ற வடிவம் அகரச் சுட்டிலிருந்தும் ஏதும் என்ற வடிவம் எகரவினாவிலிருந்தும் தோன்றி முந்திய சாசனங்களிலேயே வழங்கின.

பழந் திராவிடமொழியில் படர்க்கையிடப்பெயராக வழங்கியவை தான், தாம் என்பன; சுட்டிடப்பெயர்கள் திணைபால் சுட்டும் இயல்பினால் படர்க்கையிடத்திலே போற்றப்பட, பழைய படர்க்கையிடப்பெயர் தற்சுட்டுப் பெயராக மாறியது. தான், தாம், தாங்கள் என்ற வடிவங்களும் உருபேற்கத் திரிந்த வடிவங்களான தன், தம், தங்கள் என்பனவும் சாசன வழக்கிலே காணப்படுகின்றன: இச்சொற்கள் சில இடங்களிலே தற்சுட்டுப் பொருளையும் இழந்து தேற்றப்பொருளில் வழங்குகின்றன. சில சந்தர்ப்பங்களிலே இவை இரண்டுபொருளும்

---

253. S. I. I, Vol, XII, p. 29 Line 8.
254. S. I, I, Vol, VIII, p. 300, Line 35.
255. S. I. I, Vol, VIII. p. 82, Line 31; S.I.I. Vol, VII, p. 386. Line 8; S. I. I, Vol. IV, p. 128 Line 15.

கொள்ளக்கூடியனவாக அமைந்துள்ளன. உங்கள் என்பதி லுள்ளதிலும் கூடிய அளவு மரியாதையைக் குறிப்பதற் காகத் தங்கள் என்பதை முன்னிலையில் கூறும் வழக்கு முந்திய சாசனத்திலேயே காணப்படுகின்றது.[256]

சாசனங்களிலுள்ள எண்களை எண்ணுப்பெயர்கள், எண்ணுமுறைப் பெயர்கள் என இரண்டாக வகுக்கலாம்; முதல் மூன்று எண்ணுப் பெயர்களுக்கும் ஒவ்வொன்றுக்கும் இவ்விரண்டு எண்ணுப்பெயரடைகள் காணப்படுகின்றன. ஒன்று என்பதற்கு ஒரு, ஓர் என்பனவும் இரண்டு என்பதற்கு இரு, ஈர் என்பனவும் மூன்று என்பதற்கு மு, மூ என்பனவும் பெயரடைகளாம். உயிர் முதல் மொழிக்குமுன்னர் நெட்டெழுத்தையுடைய பெயரடையும் மெய்முதன்மொழிக்கு முன்னர் குற்றெழுத்தையுடைய பெயரடையும் வழங்குகின்றன; நால் என்ற பெயரடையிலிருந்து நாலு, நான்கு என இரண்டு எண்ணுப் பெயர்வடிவங்கள் தோன்றியுள்ளன; நாலு என்பதே பேச்சுவழக்கு; பிற திராவிட மொழிகளிலும் நாலு என்பதே வழங்குகின்றது. நான்கு என்பது நால் என்பதுக்குக் குகரவிகுதிசேர்க்கவந்த அஃறிணை ஒன்றன் பாற்பெயராகும்; தமிழ் இலக்கிய வழக்கில் இவ்வடிவமே போற்றப்படுகின்றது; முந்திய சாசனங்களில் இரண்டு வடிவமும் காணப்படப் பிந்திய சாசனத்தில் நாலு என்பதே காணப்படுகின்றது; ஐ என்பதும் எண் என்பதும் ஒன்றன்பால் ஈறுகிய துவைப் பெற்றுப் பெயர்களாகின்றன. ஐகாரத்தைத் தொடர்ந்து தகரத்தின் இனவெழுத்தான மூக்கொலி ஒலித் துணையாகத் தோன்றுகின்றது; ஐந்து, அஞ்சு என்ற வடிவங்கள் முந்திய சாசனங்களிலும் அஞ்சு, ஐஞ்சு என்ற வடிவங்கள் பிந்

---

256. S. I. I, Vol, III, p. 224.

திய சாசனங்களிலும் காணப்படுகின்றன; அறு, எழு என்ற பெயரடை வடிவங்கள் முதல் நீளப்பெற்று ஆறு, ஏழு என்ற எண்ணுப்பெயர்களாகின்றன;

கூட்டெண்கள், பெருக்குதலாலும் கூட்டுதலாலும் உண்டாகின்றன. பெருக்குதலால் முப்பது, எழுநூறு, இரண்டாயிரம் என்பனவும் கூட்டுதலால் முப்பத்தொன்று, அறுபத்தேழு என்பனவும் தோன்றுகின்றன. ஒன்பதுக்கும் எண்பத்தொன்பதுக்கும் இடையிலான எண்கள் பத்து, பது என்பனவற்றைக் கொள்வதில் மூவகையினவாகக் காணப்படுகின்றன. இருபத்தைந்து, முப்பத்து நாலு என்பனவற்றில் பத்து இடம்பெறுகின்றது; பதினொன்றுக்கும்பதினெட்டுக்கும் இடையிலான எண்கள் பது என்பதுடன் பின்னிணைப்பாக இன் என்பதையும்பெறுகின்றன. ஒவ்வொரு பத்துக்களின் ஈற்றிலும் பது என்பது வருகின்றது. பத்து என்பதன் திரிபே பது. பதின் என்ற அமைப்புப் பிந்திய வழக்காக இருக்கவேண்டும்; பத்தொன்பது என்ற வழக்கை ஒப்பப் பத்தொன்று, பத்திரண்டு என்பன ஒரு காலத்தில் இருந்திருக்கவேண்டும்; எண்ணுப்பெயரடைகளைத் தொடர்ந்து இந்த வடிவங்கள் இன்றும் வழங்குவது இந்த வடிவங்கள் தனியேயும் வழங்கியிருக்கலாம் என்ற கருத்துக்கு அரண்செய்கின்றது; மேலும் சாசன வழக்கில் இருநூற்றிருபத்து நான்கு,[257] நானூற்றிருபத்தொரு[258] என்ற வழக்குகளும் காணப்படுவது கவனிக்கத்தக்கது. கூட்டெண்ணுப்பெயரடை ஒன்று முதல் எட்டுக்கான பெயரடைகளைப் பத்து அல்லது பதின் முதலியவற்றோடு சேர்ப்பதால் உண்டாகின்றது; பதினறு, இருபத்தெண், ஐம்பத்

---

257. E. I, Vol, XXI, p. 109, Line 183.
258. S. I. I, Vol, V, p. 105, Line 5.

தெழு என்பன உதாரணங்களாம்; பன்னிரு என்பதில் பன் என்பது பத்தைக் குறிக்க வருகின்றது. பதின் என்பதிலிருந்து பன் என்பது வந்திருக்கவேண்டும். பத்துக்குப் பதிற்று என்ற பெயரடையும் உண்டு;

எண்ணுப்பெயர்கள் பெயரடையியல்பின. அவை பெயருக்கு முன்புவரினும் பின்புவரினும் பெயரை விசேடிப்பதே அவற்றின் செயல் எனலாம்; ஒன்று என்ற எண், பெயருக்கு முன்பு வரமாட்டாது; ஒரு அல்லது ஓர் என்பதே பெயருக்கு முன்புவரும்; ஏனைய எண்கள் பெயருக்கு முன்பும் பின்பும் வரலாம். பெயருக்குப் பின்னால் வரும்போது எண்ணுப் பெயர்களே வேற்றுமை யேற்கின்றன. எனவே இவற்றைப் பெயர்களாக வழங்கு பவை எனவும் பெயர்களுக்கு முன்புவரும் எண்ணுப் பெயர்களைப் பெயரடைகளாக வழங்குபவை எனவும் இரண்டு வகைப்படுத்தலாம்; அடைக்காய் பத்து,[259] பழம் பதினாறு,[260] விளக்கு இரண்டுக்கு,[261] தடி நான்கினால்[262] எனவும் மூன்று மா[263] பதினேழுகழஞ்சு,[264] ஆயிரந்தலையால்,[265] ஆயிரம் வாழைப்பழத்தினுக்கு[266] எனவும் சாசன எண்ணுப்பெயர் வழக்காறுகள் அமைந்துள்ளன.

---

259. E. I., Vol, IX, p 88 Line 26.
260. E. I, Vol, IX, p. 88 Line 45.
261. S. I I, Vol, XII, p. 28, Line 3.
262. E. I, Vol, XX, p. 53, Line 11.
263 E I, Vol, XX, p 53, Line 8.
264. S. I. I, Vol, XII, p. 28, Line 3.
265. S. I. I, Vol, III, p. 454, Line 125.
266. E. I, Vol, XXI, p. 109 Line 31/32.

அரை அல்லது பாதி, கால் என்பன பின்னங்களாக வழங்கின. இரண்டரை, ஒன்பதரை என்பனவற்றில் எண்ணுப்பெயரைத் தொடர்ந்து பின்னம் வருகின்றது. கால் என்ற பின்னத்துக்கு முன் ஏகாரம் வருகின்றது. ஒன்றேகால், நாலேகால் என்பன உதாரணங்களாம்; எட்டிலொன்றைக் குறிக்க அரையையும் காலையும் சேர்த்து அரைக்கால் என எழுதப்படுகின்றது. காலே அரை என்ற வழக்கும் முந்திய சாசனத்தில் உண்டு[267] அரைக்கால் என்பதற்கு முன்வரும் எண்ணுப்பெயருக்கும் ஏழே அரைக்கால், நாலரையே அரைக்கால்[268] என ஏகாரம் சேர்க்கப்படுகின்றது. காலை நாலில் ஒன்று என்று கூறும் வழக்கமும் பிந்திய சாசனத்திற் காணப்படுகிறது. பின்னங்கள் எட்டரைக் காணம், காலே அரைமா, ஒன்றரை வேலி எனப் பெயர்ச்சொற்களுக்கு முன்புவரும். சில இடங்களில் எண்ணுப்பெயர்கள் முதலிலும் பிறபெயர்கள் தொடர்ந்தும் அவற்றைத் தொடர்ந்து பின்னங்களும் வருவதுண்டு. பதின் கழஞ்சரை,[269] இருகழஞ்சேகால்,[270] ஒரு மாமுக்காணி[271] என்பன உதாரணங்களாம். சாசனங்களிலுள்ள எண்ணுமுறைப்பெயர்கள் எண்ணுப்பெயர்களுக்கு ஆம் அல்லது ஆவது என்பதனைச் சேர்ப்பதால் உண்டாகின்றன. ஆம் என்பதைச் சேர்ப்பதால் உண்டாகும் எண்ணுமுறைப்பெயர்கள் பெயர்ச் சொற்களுக்கு முன்னும், ஆவது என்பதைச் சேர்ப்பதால் உண்டாகும் எண்ணுமுறைப்பெயர்கள் பெயர்ச்

---

267. S. I. I, Vol, V, p. 288, Line 6/7.
268. S I. I, Vol, V, p. 151, Line 25.
269. S. I. I, Vol, XII. p. 25, Line 3.
270. S. I. I, Vol, XII, p. 37, Line 15.
271. S. I. I, Vol, V, p. 105, Line 7.

சொற்களுக்குப் பின்பும் வருகின்றன; யாண்டு இருபதாவது எனவும் ஒன்பதாம் யாண்டு, இரண்டாந் தியதி எனவும் வந்துள்ளன; பெயர்ச் சொல்லாகிய எதிர் என்பதற்கும் இதே முறையில் ஆம் அல்லது ஆவது என்பதைச் சேர்த்து பதினுருவதுக்கு எதிராம் ஆண்டை[272] யாண்டு பதினுலாவதுக்கெதிராவது[273] என வழங்குவதைப் பிந்திய சாசனங்களிலே காணலாம். எண்ணுப்பெயர்களுக்குப் பாலறிகிளவிகளைச் சேர்ப்பதால், பன்னிருவர், நாற்பத்தொண்ணுயிரவர், ஐஞ்நூற்றுவர் முதலிய வடிவங்கள் தோன்றி உயர்திணையில் வழங்குகின்றன. எண்ணுப்பெயர்களை அங்கமாகவுடைய நாற்பத்தெண்ணுயிர நம்பி,[274] நாற்பத்தெண்ணுயிரபட்டர்,[275] நாற்பத்தெண்ணுயிரத்தொல்லாண்டான்[276] முதலியவை பிந்திய சாசனங்களில் வழங்கியுள்ளன. இவ்வெண்களுக்கும் இவ்வெண்ணுப்பெயர்களை அங்கமாகவுடைய பெயர்களைத் தரித்தவர்களுக்கும் ஏதாவது விசேட தொடர்பு இருக்குமா என்பதைத் தீர்மானிக்கமுடியவில்லை;

## 3. வினையியல்.

சாசனங்களிலுள்ள வினைச்சொற்களில் இரண்டு வினையாக்க முறைகளைக் காணலாம். இறந்தகால வினையெச்ச வடிவங்கள் கொண்டுமுடியும் உகரவீறு, இகரவீறு என்பனவற்றைக்கொண்டு இவ்வாறு வகுக்கலாம்;

---

272. S. I. I, Vol, VII, p. 255. Line 2.
273. S. I. I, Vol, VII. p. 9 Line 1
274 S. I. I, Vol, V, p. 192. Line 14
275 S. I. I, Vol, IV, p. 128, Line 17.
276. S. I. I, Vol, V, p. 192. Line 21,

உகரவிற்றில் முடியும் வினையமைப்புக்கள் முதலாம் வினையாக்க முறையைச் சேர்ந்தனவாகும். உகரவீறு டைய இறந்தகால வினையெச்சங்கள் இரண்டு வகையின. தகரவிடைநிலை அல்லது அதன் மூக்கொலிபெற்ற வடிவ மான -ந்த்- அல்லது அதன் இரட்டிய வடிவமான -த்த்- என்பனவற்றை இறந்தகாலம் காட்டுவதற்கு ஏற்கும் வினையடிகள், இறுதிமெய்யிரட்டி இறந்தகாலம் காட் டும் ஓரசை வினையடிகள் என்பனவே அவையாம்; முத லாம் வினையாக்க வினையமைப்போடு உயிர்முதன்மொழி சேரும்போது, உகரம் கெடுகின்றது. இந்த வினையாக்க முறையின் தனித்தன்மை எதிர்வு, நிகழ்வு - எதிர்வு முதலிய காலங்களை வெளிப்படுத்தும் முறையிலும் புலப்படுகின்றது. செயப்படுபொருள் குன்றுவினைகளுட் பெரும்பாலன இந்த வினையாக்கமுறையைச் சேர்ந்தன. -த்த்- என்பதனைக்கொண்டு இறந்தகாலம் உணர்த்தும் வினையடிகள் -க்க்- என்பதைக்கொண்டு நிகழ்வு- எதிர் வையும் -ப்ப்- என்பதைக்கொண்டு எதிர்வையும் உணர்த்துகின்றன. இறந்த காலத்தைக் காட்டுவதற்கு இகர இடைநிலையைச் சேர்த்துக்கொள்ளும் வினைப்பகுதி கள் இரண்டாம் வினையாக்கமுறையைச் சேர்ந்தன. இகர இடைநிலையே இறந்தகாலத்தைக் காட்டுவதாதலால், இது கெடுவதில்லை; இறப்பு, நிகழ்வு - எதிர்வு, எதிர்வு என்பனவற்றை உணர்த்தும் கால இடைநிலைகளை இந்த வினையாக்கமுறை வினைப்பகுதிகள் முதலாம் வினையாக்க முறை வினைப்பகுதிகளைப் போலன்றி ஒரே வடிவத்தில் ஏற்றுக்கொள்கின்றன; வினைப்பகுதியினுள் ஏற்படும் மாற்றமே பெரும்பாலும் செயப்படுபொருள் குன்றிய வினையிலிருந்து செயப்படுபொருள் குன்றா வினையைப் பிரித்து நிற்கிறது. வினைப்பகுதியில் மூக்கொலி யிடம் பெறும்போது அது பெரும்பாலும் செயப்படுபொருள் குன்றிய வினையாகவும் மூக்கொலிக்குப் பதிலாக வல் லொலியிடம்பெறும்போது அது பெரும்பாலும் செயப்

படுபொருள் குன்று-இயக்குவினையாகவும் அமைகின்றன. முதலாம் வினையாக்கமுறை இறந்தகால வினையமைப்புகளில் நான்கு பிரிவுகள் உள. வினைப்பகுதியின் ஈற்று மெய்யை இரட்டி -க்கு, -ட்டு, -ற்று எனவரும் வினையமைப்புகள், வினைப்பகுதியும் தனிக் கால இடைநிலையாகிய தகரமும் சேர்ந்து -து என்ற ஈறுகொள்ளும் வினையமைப்புக்கள், வினைப்பகுதியோடு மூக்கொலிபெற்ற தகரத்தைக் கொண்டு -ந்து என்ற ஈறுகொள்ளும் வினையமைப்புக்கள், வினைப்பகுதியோடு இரட்டிய தகரத்தைப் பெற்று -த்து என்ற ஈறுகொள்ளும் வினையமைப்புக்கள் என்பனவே அந்த நான்கு பிரிவுகளாம்.

இவற்றுள் முதலாவது பிரிவு, இரண்டாவது பிரிவு வினையமைப்புக்களைச் செயப்படுபொருள் குன்றிய வினை, செயப்படுபொருள் குன்றுவினை எனச் சுலபமாகப் பிரித்துவிடமுடியாது. மூன்றாவது பிரிவு வினையமைப்புக்கள் பொதுவாகச் செயப்படுபொருள் குன்றிய வினைகளாகவும் நான்காவது பிரிவு வினையமைப்புக்கள் பொதுவாகச் செயப்படுபொருள் குன்றுவினைகளாகவும் காணப்படுகின்றன. முதலாம் பிரிவில் ஓரசைச்சொற்களின் ஈற்றிலுள்ள -கு, -டு, -று என்பன மிக்கு, புக்கு, விட்டு, உற்று, பெற்று என ஈறிரட்டி இறந்த கால வினையமைப்புக்களாகின்றன. புகு என்பது புகுந்து எனவும் இறந்தகாலம் காட்டும் வினையமைப்பைப் பெறுவதுண்டு. இரண்டாம் பிரிவில் ன், ல், ய், ண், ள், ர், ழ் என்ற ஈறுகளையுடைய வினைப்பகுதிகள் தனித் தகர இடைநிலையைப் பெற்று இறந்த காலம் காட்டுகின்றன. இப்பிரிவை மூன்று உபபிரிவுகளாகப் பிரிக்கலாம். ன், ல், ள், ண் என்ற ஈறுகளோடு தகர இடைநிலை சேரும்போது ன் + த் = ன்ற்; ல் + த் = ற்ற்; ண் + த் = ண்ட்; ள் + த் = ட்ட் என்ற திரிபுகள் ஏற்பட்டு பூண்டு, விற்று, உண்டு, கேட்டு, என்று என்ற வினையமைப்புகள் தோன்

றுகின்றன; கண்டு என்பதில் வினையடியிலுள்ள நீண்ட உயிர் குறுகியுள்ளது; இரண்டாம் உபபிரிவில் யகர வீற்றோடு தகர ஈறு சேரும்போது செய்து, உய்து என இயல்பாக அமையும்; மூன்றாவது உபபிரிவில் ர, ழ வீற்றோடு தகர இடைநிலை சேரும்போது இடையிலே உகரம்பெற்று அழுது, பொருது என அமையும்; ஆனால் இரு என்ற வினைப்பகுதியிலிருந்து இருந்து என்ற வடி வமே அமைகின்றது. வினைப்பகுதிக்கு மூக்கொலி கலந்த தகரமெய்யைச் சேர்ப்பதால் உருவாகும் மூன்றாவது பிரிவில் நான்கு உபபிரிவுகள் உண்டு. அகரவீறு கொண்ட வினைப்பகுதிகள் இறந்த காலத்தில் -ந்த்- கொண்டு நிகழ்வு- எதிர்வில் —க்க்- உம் எதிர்வில் -ப்ப்- உம் கொள்ளுகின்றன. அளந்து, பயந்து, சிவந்து என்பன உதாரணங்களாம். இரண்டாம் உபபிரிவில் இ, ஐ, ர், ழ், ய் என்ற ஈறுகள் எறிந்து, பிரிந்து, வரைந்து, ஆராய்ந்து, சூழ்ந்து என இறந்தகால வினையமைப்புக் களைப் பெறுகின்றன. எதிர்ந்து, நிறைந்து, வீழ்ந்து என்பனவற்றிற்கு நேரிடையான —த்து- வடிவங்களும் உண்டு; மூன்றாவது உபபிரிவில் ல், ள் ஈறுகள் —ந்த்- என்பது சேரும்போது ல் + ந்த் = ன்ற் எனவும் ள் + ந்த் = ண்ட் எனவும் மாற்றமடைந்து ஆண்டு, கொன்று, நவின்று, கொண்டு முதலிய இறந்தகால வினையமைப் புக்களைப் பெறுகின்றன. நான்காவது உபபிரிவாக தா/ தர், வா/வர் என்ற இரண்டு வடிவங்களையுடைய ஓரசை யடிச் சொற்கள் தந்து, வந்து என்ற வினையமைப்பு களைக் கொள்வதைக் கூறலாம். இரட்டிய தகரத்தை வினைப்பகுதிக்குச் சேர்த்து இறந்த கால வினையமைப் பைப்பெறும் நான்காவது பிரிவில் மூன்று உபபிரிவுகள் காணப்படுகின்றன. உகரவீற்று வினைப்பகுதிகள், இகர, ஐகார ரகர, ழகர யகர வீற்று வினைப்பகுதிகள், நீண்ட உயிரொலிகளையுடைய ஓரசை வினையடிகள் என்பனவே அம்மூன்று உபபிரிவுகளாம்; முதலாம் உபபிரிவில்

எடுத்து, வகுத்து, அடுத்து என வருவனவும் இரண்டாம் உபபிரிவில் குறித்து, விழ்த்து, பிழைத்து, முகிழ்த்து என வருவனவும் மூன்றும் உபபிரிவில் காத்து, மூத்து, என வருவனவும் தமக்கு நேரிடையான -ந்த்- வடிவங்களைப் பெறுவதில்லை. முதலாம் உபபிரிவிலுள்ள அறுத்து என்பதும் இரண்டாம் உபபிரிவிலுள்ள தீர்த்து, ஒழித்து, நெகிழ்த்து, மீட்டு என்பனவும் தமக்கு நேரிடையான -ந்த்- வடிவங்களையுடையன:

நினைத்து என்பதற்கு நேரிடையான நினைந்து என்ற வடிவம் காணப்பட்டபோதும் இவ்விரு வடிவங்களுக்கும் பொருளில் வேறுபாடில்லை. இரண்டாம் வினையாக்கமுறையைச் சேர்ந்த வினைப்பகுதிகள் சொல்லின் இறுதிநிலையாக வரக்கூடிய மெய்யெழுத்துக்கள் எவற்றையும் இறுதிநிலையாகக்கொள்ளும் இயல்பின: -த்தி, -ப்பி, -ட்டி, -ற்றி, -ச்சி என்றுமுடியும் இறந்தகால வினையமைப்புகள் இயக்குவினைகளாம். ஒரே சொல், சிறிது வேறுபட்ட இரு வடிவங்களையுடையதாய், ஒன்று செயப்படுபொருள் குன்றிய வினையையும் ஒன்று செயப்படுபொருள் குன்றா வினையையும் உணர்த்திவருவதைச் சாசனங்களிலே காணலாம். ஒரே வினைச்சொல்லில் -ந்த்- என்பது அமையும்போது செயப்படுபொருள் குன்றிய வினையாகவும் -த்த்- என்பது அமையும்போது செயப்படுபொருள் குன்றா வினையாகவும் காணப்படுகின்றது. -ங்க்-/-க்க் என்பனவும் -ம்ப்/-ப்ப்- என்பனவும் இவ்வாறு வேறுபட்ட பொருளைத் தருவதுண்டு; இரண்டாம் வினையாக்கமுறை வினைப்பகுதிக்குள் ஏற்படும் வடிவ மாற்றமும் இவ்வாறு பொருள் மாற்றம் தருகின்றது: வடிவத்தில் மிகச் சிறிதே வேறுபட்டுள்ள இவ்வினைச்சொற்கள் மொழிவழக்கில் ஒரே பொருளில் வெவ்வேறு பிரதேசங்களில் இடம் பெற்றிருந்த இலக்கிய வழக்கிற் புகுந்திருக்கவேண்டும். அவற்றின் பொருளை

வேறுபடுத்தும் இயல்பு அதன்பின்பே தோன்றியிருக்க வேண்டும்.

இறந்தகால எச்சங்கள் பெயரெச்சம், வினையெச்சம் என இரண்டு வகைப்படும்; முதலாம், இரண்டாம் வினையாக்கமுறைக்குரிய இறந்தகால வினையமைப்புக்களே எச்சங்களாக வழங்குகின்றன. இறந்தகாலப் பெயரெச்சம் அகரவீறு கொள்கின்றது. முதலாம் வினையாக்கமுறை இறந்தகால வினையமைப்புக்களுக்கு அகரத்தைச் சேர்க்கும்போது நிலைமொழியீற்றுக் குற்றியலுகரம் அகரம் ஏற இடங்கொடுத்து நிற்பதால், விகாரம் எதுவும் நிகழ்வதில்லை. இரண்டாம் வினையாக்கமுறை வினையமைப்போடு அகரம்சேரும்போது, இடையில் யகர உடம்படுமெய் தோன்றுகின்றது. ஆனால் சாசனங்களில் -இய- என்பதற்குப் பதிலாக -இன- என இறும் வடிவங்களே பெரும்பாலும் வழங்குகின்றன. இரண்டாம் வினையாக்கமுறை இறந்தகாலத் தெரிநிலைவினைமுற்றுகளிலுள்ள ஈற்றெழுத்தை நீக்குவதன் மூலம் இவ்வடிவங்கள் பெறப்பட்டிருக்கலாம்.

ஒழிஞ்சு[277] என்பது ஒழிந்து என்பதன் அண்ணைச் சாயல்பெற்ற பேச்சுவழக்கு வடிவமாகும். ஆராதித்து[278] என்பது வடமொழி வினைப்பகுதியிலிருந்து தோன்றிய இறந்தகால வினையெச்சமாக முந்திய சாசனத்தில் வழங்கச் சம்மதித்து,[279] அனுபவித்து[280] என்பன பிந்திய சாசனங்களில் வழங்குகின்றன. செய்வித்து,

277. E. I., Vol, XXVIII, p. 91, Line 31.
278. S. I. I, Vol, III, p. 93, Line 25, 26.
279. S. I. I, Vol, VII, p. 9, Line 5
280. S. I. I, Vol, VIII, p. 107, Line 2.

எடுப்பித்து, அமைப்பித்து, புதுக்குவித்து என்பன இயக்குவினைப் பகுதிகளிலிருந்து முந்திய சாசனங்களில் அமைய அறிவித்து, செய்வித்து, பண்ணுவித்து, வெட்டுவித்து என்பன பிந்திய சாசனங்களில் அமைகின்றன. ஆய், போய் என்ற வடிவங்கள் இரண்டுகாலச் சாசனங்களிலும் காணப்படுகின்றன. வீரசோழியம் மட்டுமே இந்த யகரவிற்றைக் குறிப்பிடுகின்றது. இகரவிற்றின் திரிபே யகரவிறுகும். இறந்தகால வினையெச்சம், கொண்டுமுடியும் வினையின் எழுவாயையே தானும் கொள்ளுகின்றது. இது வினைமுற்று, தொழிற்பெயர், இறந்தகாலப் பெயரெச்சம், இறந்தகால வினையெச்சம், செயவெனெச்சம் என்பவற்றைக்கொண்டு முடிகின்றது. இது வினையெச்சத்துக்கு வினையடைபோலவும் விற்றிருந்து[281] முதலிய இடங்களில் வழங்குகின்றது. தமிழில் காலத்தைச் சுட்டி வரும் வினையெச்சங்கள் சில உண்டு. பெயரெச்ச வடிவங்களைத் தொடர்ந்துவரும் பெயர்கள் சில, ஒரு சொற்றன்மை பெற்று வினையெச்சப்பொருளைத் தருவதைத் தொல்காப்பியரும் குறித்துள்ளார்; இகந்தபின், [282] அடைந்தபின், [283] புகுந்தபோது, [284] முட்டின பொழுது[285] என்பன எடுத்துக்காட்டுகளாம்; அனுபவித்த[286] என்ற இறந்தகாலப் பெயரெச்சம் சங்கத மொழிப் பகுதியிலிருந்து தோன்றியதாக முந்திய சாசனத்திற் காணப்பட நிற்செயித்த[287] என்பது பிந்திய

---

281. E I, Vol, IX, p 88, Line 6.
282. S. I I, Vol, IV, p. 454 Line 104.
283. S. I I, Vol, III, p 454, Line 123.
284. E. I,. Vol, XX, p. 53, Line 15.
285. S I. I, Vol, XIII, p. 160, Line 37.
286. S. I I, Vol, III, p. 454, Line 140.
287. S. I. I, Vol, VIII, p. 87, Line 28.

சாசனத்திற் காணப்படுகின்றது. செய்வித்த, எழுந்தருளுவித்த, எடுப்பித்த, குடைவித்த என்பன இயக்குவினைப்பகுதிகளிலிருந்து தோின்றியனவாக முந்திய சாசனங்களிலே காணப்பட எழுந்தருளிவித்த, செய்வித்த, நாட்டுவித்த என்பன பிந்திய சாசனங்களிலே காணப்படுகின்றன; ஆகிய, எய்திய என்பன இரண்டாம் வினையாக்க முறையைச்சேர்ந்த -இய வடிவமாக முந்திய சாசனங்களில் வழங்க நோக்கிய, ஆகிய என்ற வடிவங்கள் பிந்திய சாசனங்களிலே வழங்கின. ஆகிய என்பது ஆய எனத் திரிந்தும் வழங்கியுள்ளது. -இன வடிவங்கள் எட்டு முந்திய சாசனங்களிலே காணப்படப் பத்துப் பிந்திய சாசனங்களிலே காணப்படுகின்றன; ஆ என்பதற்கு ஆஇன, ஆன என்ற வடிவங்களும் போ என்பதற்குப் போன என்ற வடிவமும் காணப்படுகின்றன. ஆயின, போயின என்பதன் திரிபுகளே இந்த வடிவங்கள் என்று கொள்ளவேண்டும். இந்த வடிவங்களும் வீரசோழியத்திலே குறிப்பிடப்பட்டுள்ளன; சொல்லின என்பது சொன்ன288 எனத் திரிந்து வந்துள்ளதை முந்திய சாசனத்திலேயே காணலாம்; இகரம் உச்சரிக்கப்படாதபோது -ல்ல்- தொடர்ந்து வரும் னகரத்தின் செல்வாக்கால் -ன்ன்- என மாற மூன்று மெய்கள் தொடர்ந்துவரும் இயல்பு தமிழில் இல்லையாதலால், ஒரு னகரம் கெடுகின்றது. வேண்டும்/வேணும் 289 என்ற வடிவங்கள் போல வேண்டின/வேண289a என்ற வடிவங்கள் வழக்கிலிருந்திருக்கின்றன. இறந்தகாலப் பெயரெச்சம் பெயரடைபோல வழங்குகின்றது.

---

288. S. I. I, Vol, XII, p. 46, Line 26.
289. S. I. I, Vol, VIII, p. 300, Line 35.
289a. E. I, Vol, IX, p. 88, Line 75.

இதனைத் தொடர்ந்து இதனாற் சிறப்பிக்கப்படும் பெயர்ச்சொல் வருகின்றது. கருத்தா தெரியாத போது, இறந்தகாலப் பெயரெச்சம் செயப்பாட்டுவினைப் பொருளைத் தருகின்றது என நம்பப்பட்டு வந்தது. மொழிபெயர்ப்பில் ஏற்பட்ட தவறுதலே இந்த நம்பிக்கைக்குக் காரணம் என்பது இப்போது தெளிவாகக் காட்டப்பட்டுவிட்டது.[289b] கூட்டுவினை வடிவங்கள் சில பெயரெச்சவடிவங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன: பெயர்ச்சொல்லும் படு என்பதும் சேர்ந்தமைந்த வடிவங்கள் விசேடமாகக் குறிப்பிடத்தக்கவை. பள்ளிப் படுத்த[290] எப்பேர்ப்பட்ட,[291] முற்பட்ட,[292] அகப்பட்ட,[293] மேற்பட்ட,[294] உட்பட்ட[295] என்ற வடிவங்கள் பழைய சாசனங்களிலும் தென்கரை வடகரைப்பட்ட,[296] நடுவுட்பட்ட,[297] எப்பேர்ப்பட்ட, உள்ப்பட்ட,[298] என்ற வடிவங்கள் பிந்திய சாசனங்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

நிகழ்கால வடிவங்களாகப் பெயரெச்சங்கள் மட்டுமே சாசனங்களிலே கிடைத்துள்ளன. முந்திய

---

289b. S. Agesthialingam and N. Kumaraswami Raja - Dravidian Linguistics (Seminar Papers) 1969 - Passive in Dravidian.
290. E. I, Vol, VII, p. 192, Line 4.
291. E. I, Vol, XX, p. 53, Line 13.
292. E. I, Vol, XX, p. 53, Line 15.
293. S. I. I, Vol, III, p. 50, Line 4.
294. S. I. I, Vol, XII, p. 45, Line 22.
295 S I. I, Vol, XIII, p. 173, Line 9.
296. S. I. I, Vol, V, p. 179 Line 17.
297. S. I I, Vol, V, p. 192, Line 5.
298. S. I. I, Vol, IV, p. 154, Line 31.

சாசனங்களிலுள்ள வடிவங்கள் அத்தனையும் கின்று என்ற இடைநிலையை வினைப்பகுதிக்குப் பின்சேர்ப்பதால் உண்டானவை; செய்கின்ற, அட்டுகின்ற, வருகின்ற, விற்கின்ற, அருளுகின்ற என்ற வடிவங்களே அவையாம்; பிந்திய சாசனங்களிலுள்ள வடிவங்கள் அத்தனையும் கிறு என்ற இடைநிலையை வினைப்பகுதிக்குப் பின் சேர்ப்பதால் உண்டானவை. போகிற, செய்கிற, வைக்கிற, பாய்கிற, கிடக்கிற, நிற்கிற, எழுந்தருளுகிற, கட்டுகிற, போருகிற, பண்ணுகிற, அனுபவித்துப்போதுகிற என்ற வடிவங்களே அவையாம்; கின்று என்ற வடிவத்தின் திரிபே கிறு என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும். வினைமுற்றின் காலத்தோடு சமகாலத்தில் நடந்த நிகழ்ச்சியை இது உணர்த்துகின்றது; நிகழ்கால வடிவங்கள் காலப்போக்கிலே பெருகிவந்தமையையும் இது காட்டுகின்றது.

நிகழ்வு – எதிர்வு வடிவமான செய்யும் என்பது பெயரெச்சமாக மட்டுமே சாசனங்களில் வழங்கப்பட்டுள்ளது: இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்பனவற்றிலும் பார்க்க, நிகழ்வு-எதிர்வு வடிவம் எளிமையானது. காலத்தை உணர்த்தும் தனி அமைப்பு இந்த வடிவத்தில் இல்லை. வினைப்பகுதியோடு உம் என்ற விகுதி நேரே சேர்க்கப்படுகிறது. சில வினைப்பகுதிகள் – க்க் - என்பதைச் சேர்த்துக்கொண்டபோதும், அந்த - க்க் - என்பதற்கு எவ்வித பொருட்சிறப்புமில்லை. இரண்டாம் வினையாக்கமுறைக்குரிய வினைப்பகுதிகளுள் மிகப்பெரும்பாலனவும் வினைப்பகுதியோடு உம்மையை நேரே சேர்க்கின்றன. முதலாம் வினையாக்கமுறையில் இறந்த காலத்தைக்காட்ட - த்த் - பெறும் வினைப்பகுதிகள் நிகழ்வு எதிர்வுக்கு – க்க் - கொள்ளுகின்றன; ஒக்கும், அரைக்கும் என்பன முந்திய சாசனங்களிலும் எடுக்கும், இறுக்கும் என்பன பிந்திய சாசனங்களிலும் காணப்படுகின்றன;

மூன்றும் பிரிவு முதலாம் உபபிரிவு வினைப்பகுதி யும் - க்க் - கொண்டு நிகழ்வு - எதிர்வாகவே வரு வதை அளக்கும், நடக்கும் என்ற எடுத்துக்காட்டுகளி லிருந்து அறியலாம்; உபாசரிக்கும்,[298A], ஆராதிக்கும்,[299] என்பன சங்கத மொழிச் சொல்லை வினைப்பகுதியாகக் கொண்டு நிகழ்வு - எதிர்வு வடிவங்கள் முந்திய சாசனங் களில் வழங்கியமைக்கும் பூசிக்கும்[300] என்பது பிந்திய சாசனத்தில் அவ்வாறு வழங்கியமைக்கும் எடுத்துக் காட்டுகளாகும். இறந்தகால, நிகழ்காலப் பெயரெச்சங் களைப்போல, இதுவும் பெயரடைபோல வழங்கியுள்ளது; இது தன்னைத் தொடர்ந்து வரும் பெயரை விசேடிக்கிறது;

பாலறிகிளவுகளைச் சேர்க்கப்பெற்ற வினையமைப் புக்கள் வினைமுற்றுகளாகின்றன. பாலறிகிளவிகளை இரண்டாக வகுக்கலாம். முதல்வகைப் பாலறிகிளவியில் குற்றெழுத்து உண்டு. முதலாம் இரண்டாம் வினையாக்க முறை வினையமைப்புகளுக்கு னகரத்தை அல்லது அன் என்பதைச் சேர்த்து அதன்பின் இவ்வகைப் பாலறி கிளவி சேர்க்கப்படுகின்றது. இவ்வகைப் பாலறிகிளவி களே தொன்மையானவையாம்; இரண்டாம் வகைப் பாலறிகிளவிகள் நெட்டெழுத்தை உடையவையாம்; முதலாம் வினையாக்கமுறை வினையமைப்புகளுக்கு இவை நேரே சேர்க்கப்படுகின்றன. இரண்டாம் வினையாக்க முறை வினையமைப்புகளுக்கு னகரத்தைச் சேர்த்தபின் இவ்வகைப் பாலறிகிளவிகள் சேர்க்கப்படுகின்றன; அஃறிணைப் பாலறிகிளவிகள் யாவும் குற்றெழுத்தை மட்டுமே கொண்டன. வினைமுற்று வடிவம் இயல்பாய்

---

298a. S. I. I, Vol, III, p 93, Line 26.
299. S. I. I, Vol, III, p. 96, Line 5.
300. S. I. I, Vol, V, p. 191, Line 1.

நின்றும் திரிந்து நின்றும் வினையாலணையும் பெயராவ துண்டு. வினை முற்றாக அமைந்துள்ள வடிவங்களை மட்டுமே இங்கு ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளலாம். உயர்திணை ஆண்பால் இறந்தகால வடிவங்களுள் அன் ஈறு ஓரிடத்திலும் ஆன் ஈறு ஐந்து இடங்களிலும் ஓன் ஈறு ஓரிடத்திலும் முந்திய சாசனங்களில் வர ஆன் ஈறு பிந்திய சாசனத்தில் ஓரிடத்தில் வந்துள்ளது; பெண் பாலையுணர்த்துவதற்கு ஆள் ஈறே இரண்டிடங்களில் முந்திய சாசனங்களிலே வந்துள்ளது. மரியாதைப் பன்மையை உணர்த்துவதற்கும் பலர்பாலையுணர்த்துவதற் கும் ஆர் விகுதியே முந்திய சாசனங்களில் வழங்கப் பிந்திய சாசனங்களில் அவற்றோடு ஆர்கள்[301] என்பதும் பலர்பாலை உணர்த்த வழங்கியுள்ளது;

இறந்தகால வினைமுற்றுகள்போல, எதிர்கால வினைமுற்றுகளும் எதிர்கால வினையமைப்புக்களுக்குப் பாலறிகிளவிகளைச் சேர்ப்பதால் உண்டாகின்றன. வ், ப் அல்லது -ப்ப்- என்பதை வினைப்பகுதியோடு சேர்க்க எதிர்கால வினையமைப்பு தோன்றுகின்றது. வினைப்பகுதி யோடு வ், ப் என்பன சேரும்போது செயப்படுபொருள் குன்றியவினையாகவும் -ப்ப்- என்பது சேரும்போது செயப்படுபொருள் குன்றா வினை அல்லது இயக்குவினை யாகவும் அமைகின்றன. இரண்டாம் வினையாக்கமுறை வினைப்பகுதிகளும் முதலாம் வினையாக்க முறை வினைப் பகுதிகளிற் பெரும்பாலனவும் வகரமெய்யைக் கொள்ளு கின்றன. முதலாம் வினையாக்கமுறை இரண்டாம் பிரி வைச் சேர்ந்த வினைப்பகுதிகளுட் பெரும்பாலன பகர மெய்யைக்கொள்ளுகின்றன. வகரமெய்யின் திரிபே இப் பகரமாகும்; முதலாம் வினையாக்கமுறை மூன்றும் பிரி

---

301. S. I. I, Vol, IV, p. 38, Line 7.

யில் முதலாம் உபபிரிவும் நான்காம் பிரிவும் - ப்ப் - என்பதைக் கொள்ளுகின்றன. தன்மை ஒருமையில் ஏன் என்ற ஈறும் தன்மைப் பன்மையில் ஓம் என்ற ஈறும் மட்டுமே முந்திய சாசனங்களிலும் வந்துள்ளன. உயர் திணை ஆண்பாலில் ஆன் என்ற ஈறும் பலர்பாலில் ஓரிடத்தில் அர் என்ற ஈறும் நான்கு இடங்களில் ஆர் என்ற ஈறும் முந்திய சாசனங்களில் வந்துள்ளன; எனவே பிந்திய வழக்காகக்கொள்ளப்படும் நெட்டெழுத்துடைய வடிவங்களே சாசனத் தமிழ் வழக்கிற் பெரும்பாலன எனலாம். எதிர்கால வினையெச்சவடிவம் விற்பான்[302] என ஒன்றே பிந்திய சாசனத்தில் இடம்பெற்றுள்ளது.

செயவெனெச்சம் அகரஈற்றினுல் ஆவது: பழைய தமிழிலக்கியத்தில் - அ, - ப, - ப்ப என்ற ஈறுகளை வினைப் பகுதிகள் பெற்றுள்ளன. சாசனங்களில்—அ, - க, - க்க என்ற வடிவங்களே பெரும்பாலும் காணப்படுகின்றன: எதிர்காலத்தைக் காட்ட வகரமெய் பெறும் வினைப்பகுதி கள் அகரத்தை நேரே சேர்த்துக்கொள்ளுகின்றன; இ, ஐ என்ற ஈறுகளையுடைய வினைப்பகுதிகளோடு அகரம் சேரும்போது இடையில் யகர உடம்படுமெய் தோன்று கின்றது; ஓரசை வினைப் பகுதிக் குற்றெழுத்தைத் தொடர்ந்துவரும் மெய்யெழுத்து, இரட்டிய பின்பே, அகரத்துடன் சேர்கிறது: எதிர்கால வினைவடிவங்களை யாக்கப் பகரமெய் பெறும் வினைப் பகுதிகளில் ணகர வீறுள்ளவை தவிர்ந்தவை ககரம் பெறுகின்றன. நிற்க என்ற வடிவம் முந்திய சாசனத்திலும் கேள்க[303] என்ற வடிவம் பிந்திய சாசனத்திலும் காணப்படுகின்றன;

---

302. S. I. I, Vol, V, p. 118, Line 4
303. S. I. I, Vol, IV, p. 139, Line 2. இதன் மாற்றுவடிவம் கேட்க என்பது.

எதிர்காலத்தைக் காட்ட - ப்ப் - என்பதைப்பெறும் வினைப்பகுதிகள் செயவெனெச்சத்தை யாக்குவதற்கு-ப்ப்- அல்லது - க்க் - பெறுகின்றன; முந்திய சாசனங்களில் குளிப்ப என - ப்ப் - உடைய ஒரு வடிவம் காணப்படப் பிந்திய சாசனங்களில் எடுப்ப, களிப்ப, சிறப்ப, கலப்ப, நடப்ப, இருப்ப என ஆறு வடிவங்கள் காணப்படுகின்றன. முந்திய சாசனங்களில் இறைக்க, பிழைக்க, துமிக்க, பொரிக்க, பணிக்க, வைக்க, ஒக்க, அரிக்க, அளக்க, குடுக்க எனப் பத்து வடிவங்கள் வழங்கப் பிந்திய சாசனங்களில் இறுக்க, கழிக்க, வைக்க, குடுக்க, அளக்க, சுமக்க என ஆறு வடிவங்கள் மட்டுமே வழங்கியுள்ளன. இக் கணக்கில் வடமொழிச்சொல்லை வினைப்பகுதியாகக் கொண்டு உருவான செயவெனெச்சத்தையும் இயக்கு வினைச்செயவெனெச்சத்தையும் எடுத்துக்கொள்ளவில்லை; நிவேதிக்க[304] என்பது வடமொழிச்சொல்லை வினைப்பகுதி யாகக்கொண்ட முந்திய வழக்கு; சேவிக்க[305] அனுப விக்க,[306] பூசிக்க,[307] என்பன அவ்வாறான பிந்திய வழக் குகள். அட்டுவிக்க, ஊட்டுவிக்க என்பன இயக்குவினைச் செயவெனெச்சமாக முந்திய சாசனங்களிலேயே வழங்கிய னவாம். இவற்றை நோக்கும்போது பழந்தமிழில் -ப்/ப்ப்- என்றிருந்த வடிவங்கள் - க்/க்க் - என முந்திய சாசனங் களிற் பெரும்பாலும் மாறிப் பிந்திய சாசனங்களில் இரு வகையாகவும் வழங்கப்படுவதைக்காணலாம்; -க்,க்க்-வடி வங்கள் ஒரு பிரதேசப் பேச்சுவழக்காக இருந்து சாசனங் கள் மூலமாக எழுத்துவழக்கிற் புகுந்திருக்கலாம்; பிந்திய சாசனங்களில் இருவகையமைப்புகளும் சமமாகப் போற்

---

304. E. I, Vol, IX, p. 88, Line 17.
305. S. I. I, Vol, V, p. 273, Line 2.
306. S. I. I, Vol. VII, p. 9, Line 5.
307. S. I. I, Vol, V, p. 191, Line 3.

றப்படும் நிலைதோன்றியது. செயவெனெச்சம், எழுவாய், செயப்படுபொருள் என்பனவற்றைத் தனியாயும் சேர்த்தும் கொள்வதுண்டு. இது முடிக்கும் சொல்லோடு தொடர்புறுத்திப் பார்க்கும்போது முக்காலங்களில் எதையும் காட்டவல்லது; செயவெனெச்சமாகிய ஆக என்பது வாக்கியக்கூறுகளை இணைப்பதற்குச் சாசனங்களிற் பயன்பட்டுள்ளது.

சாசனத் தமிழில் மூன்றுவகை வியங்கோள் வினைவடிவங்கள் காணப்படுகின்றன; முதலாவதாக, வியங்கோள் வினை விகுதிகளைப் பெற்ற வடிவங்களைக் கூறலாம். வீரசோழியம் ககரம் இசைவுப்பொருளை உணர்த்திவரும் என்கிறது. நன்னூல் இய, இயர் என்பன வற்றையும் சேர்த்துக் கூறுகின்றது. முந்திய சாசனங்களில் வளர்க, நிற்க, வாழியர்[308] என க, இயர் வடிவங்கள் காணப்படப் பிந்திய சாசனங்களில் வெட்டிக, வெட்டிக்கொள்க, அனுபவித்துப்போதுக என்ற ககர வடிவங்களே காணப்படுகின்றன. பிந்திய சாசனங்களிலே துணைவினைகொண்ட வடிவங்கள் பெருகிவருவதை அவதானிக்கலாம். இரண்டாவதாக, கடவன், கடவர் முதலியனவாக அமையும் வடிவங்களைக் கூறலாம். செயவெனெச்சத்தைத் தொடர்ந்து கடவன், கடவர் முதலிய வடிவங்கள் வரும்போது வியங்கோள் வினைப்பொருள் வெளிப்படுகின்றது. அட்டக் கடவான்[309] என்பது படர்க்கை ஆண்பால் ஒருமையிலும் அட்டுவிக்க கடவார்[310] என்பது பலர் பாலிலும் செலுத்தக்கடவது[311] என்பது

308. S. I. I, Vol III. p. 454, Line 83.
309. S. I. I, Vol, VI, p. 7, Line 8/9.
310. S. I. I, Vol, III, p. 8, Line 3.
311. E. I, Vol, XXI, p. 109, Line 196.

ஒன்றன் பாலிலும் செலுத்தக் கடவன்[312] என்பது பல வின்பாலிலும் முந்திய சாசனங்களிலே காணப்பட அளக்கக்கடவேன்[313] என்பது தன்மையொருமையிலும் இருக்கக் கடவோம்[314] என்பது தன்மைப் பன்மையிலும் அனுபவிக்கக் கடவர்கள்[315] என்பது பலர் பாலிலும் செல்லக்கடவது[316] என்பது ஒன்றன் பாலிலும் பிந்திய சாசனங்களிலே காணப்படுகின்றது; செயவெனெச்சம் இல்லாது வழங்கிய வடிவங்கள் பழையனவாக வேண்டும். முந்தி சாசனங்களில் கடவோம்[317] என்ற தன்மைப் பன்மை வடிவமும் கடவர்[318] என்ற பலர்பால் வடிவமும் காணப்படுகின்றன. பின்னர் பொருட்டெளிவு நோக்கிச் செயவெனெச்சம் சேர்க்கப்பட்டிருக்கவேண்டும்; செயவெனெச்சம் சேர்க்கப்பட்ட வடிவங்கள் மட்டுமே பிந்திய சாசனங்களிலே கிடைத்துள்ளன. மூன்றுவதாகப் பாலறிகிளவிகளை அங்கமாகவுடைய வினைமுற்றுகள் ஆக என்பதனோடு சேர்ந்து வியங்கோள்வினைப் பொருளை உணர்த்துகின்றன; ஆக என்பது ககர வீற்று வியங்கோள் வினை வடிவமாகத் துணைவினையாகிறது என்று கொள்ள வேண்டும்; ஊட்டுவிப்போமாக[319] என்பது தன்மைப் பன்மையிலும் தண்டப்படுவானாக[320] என்பது ஆண்பா

---

312. E. I, Vol, XXI, p. 109, Line 13.
313. S. I. I, Vol, VII, p. 36, Line 8/9.
314. S. I. I, Vol. V, p. 179, Line 22.
315. S. I. I, Vol, VII. p. 9, Line 5.
316. S. I. I, Vol, VII. p. 12, Line 3.
317. E. I, Vol. VII, p. 139, Line 5.
318. S. I. I, Vol, VII, p. 45 6, Line 12.
319. S. I. I, Vol, III, p. 231, Line 4.
320. S. I. I, Vol, XX, p. 54, Line 2/3.

விலும் ஊட்டுவிப்பாராக,[321] எய்துவாராக[322] என்பன பலர்பாலிலும் இழித்திடப்பெறுவதாக,[323] கொள்வ தாக[324] என்பன ஒன்றன் பாலிலும் முந்திய சாசனங் களிலே வழங்க, உண்பாராக,[325] இருப்பாராக,[326] கொள்வார்களாக[327] என்பன பலர்பாலிலும் குடுப்போ மாக[328] என்பது தன்மைப் பன்மையிலும் பிந்திய சாசனங்களிலே வழங்கியுள்ளன;

நிபந்தனைப்பொருளை உணர்த்தும் வினைவடிவங் கள் சாசனங்களிலே காணப்படுகின்றன. வினைப்பகு திக்கு இல் என்பதைச் சேர்க்க, சுருங்கில், முட்டில், செய்யில், ஏறில், குத்துக்காற்படில் முதலிய நிபந்தனை வடிவங்கள் தோன்றியுள்ளன. வினைமுற்றுகளுக்கு ஆகில் அல்லது ஆயில் என்பதனைச் சேர்ப்பதன் மூலமும் நிபந் தனைவினைகள் தோன்றியுள்ளன. ஆகில் அல்லது ஆயில் என்பதும் நிபந்தனை வினைவடிவமேயாம்; அது துணை வினையாக வழங்குகிறதெனலாம். குடோமாகில், குடோ மாயில், அஞ்சாணுயில், அளவோமாயில், முட்டுவதாயில், செய்வோமாயில், ஆராயோமாயில் என்பன முந்திய சாசனங்களிலும் உண்டாகில் என்பது பிந்திய சாசனத் திலும் காணப்படுகின்றன; நிபந்தனை வினையோடு நெருங்கிய சம்பந்தமுடையது காரணவினையாகும். நிபந்

---

321. S. I. I, Vol, III, p. 231, Line 5.
322. S. I I, Vol, III, p. 231, Line 5.
323. S. I. I. Vol, II, p. 507, Line 60.
324. S. I. I, Vol, III, p. 223, Line 32/33.
325. S I I, Vol, V, p 118, Line 17.
326 S. I. I, Vol, VIII, p. 217, Line 13.
327. S. I. I, Vol. VIII, p. 86, Line 28.
328. S. I. I, Vol, V, p. 320, Line 8.

தனை வினை செய்தால் என்ற வாய்பாட்டில் வரக் காரண வினை செய்தமையால் என்ற வாய்ப்பாட்டில் வரும்; முந்திய சாசனங்களில் இரண்டு வினைகளும் பயின்று வரப் பிந்திய சாசனங்களில் காரணவினையே பெரும்பாலும் காணப்படுகின்றது. தொழிற் பெயருக்கு இல் என்பதைச் சேர்ப்பதனால் வரும் கொண்டமையில், கொள்ளாதமையில், ஆதினமையில், ஆதனமையில், ஆதலில் என்பன முந்திய சாசனங்களிலும் வருகையில், குடுக்கையில், கழிக்கையில், ஒண்ணுமையில் என்பன பிந்திய சாசனங்களிலும் காணப்படுகின்றன. தொழிற் பெயருக்கு ஆல் என்ற உருபைச் சேர்ப்பதனால்வரும் முட்டியதனால், முட்டியமையால் என்பன முந்திய சாசனங்களிலும் வருகையால், குடுக்கையால், கிடக்கையால் ஆகையால் என்பன பிந்திய சாசனங்களிலும் வழங்கியுள்ளன: மையீற்றுத் தொழிற்பெயரை ஒத்த வடிவம் மையீற்றுக்குப் பதிலாகப் படி என்பதைப்பெற அதனைத் தொடர்ந்து ஆல் சேரவரும் வடிவம் காரணவினையாகிறது. கடமை செல்வாக்காதபடியால்,[329] ஓடிப்போனபடியால்[330] தன்மங்கள் செய்தபடியால்[331] என்ற பிந்திய சாசன எடுத்துக்காட்டுகளில் இந்த வழக்கை உணரலாம்.

சாசனத் தமிழிலே செயப்பாட்டுவினை வடிவங்கள் மிகச்சிலவே கிடைத்துள்ளன. செயவெனெச்சத்தைத் தொடர்ந்து படு என்பதும் அதனைத் தொடர்ந்து பாலறிகிளவியும் வருவது கர்மகாரகம் என்று வீரசோழியத்தினால் குறிக்கப்பட்டுள்ளது; முந்திய சாசனங்களிலே

---

329. S. I. I, Vol, VIII, p. 300, Line 7.
330. S I. I, Vol, VIII, p. 300, Line 10.
331. S I. I, Vol, VII. p. 386, Line 9,

சொல்லப்பட்ட[332] என்ற இறந்தகாலச் செயப்பாட்டு வினைப் பெயரெச்சமும் ஸ்துதிக்கப்பட்டது[333] என்ற இறந்தகாலச் செயப்பாட்டுவினை ஒன்றன்பால் வினை முற்றும் வழங்கியுள்ளன. பிந்திய சாசனங்களிலே சுடப் பட்ட,[334] கூவப்பட்ட[335] பேசப்பட்ட,[336] கூறப்பட்ட[337] என்ற இறந்தகாலச் செயப்பாட்டுவினைப் பெயரெச் சங்களும் பேசப்பட்டவை,[338] என்ற இறந்தகாலச் செயப்பாட்டு வினையாலணையும் பெயர் வடிவமும் வழங் கியுள்ளன;

சாசனங்களில் எதிர்மறை வடிவங்களிற் பல வகையின காணப்படுகின்றன. எதிர்மறைப்பெயரெச் சம், எதிர்மறை வினையெச்சம், எதிர்மறை வினைமுற்று என்பன இரு காலங்களிலும் வழங்கப்பட்டுள்ளன; வினைப்பகுதியோடு எதிர்மலற ஆகாரம் சேர்ந்துவரும் வடிவங்கள் எதிர்மறைப்பெயரெச்சங்களாக வழங்கியுள் ளன. மேற்படி வடிவம் தகர எழுத்துப்பேற்றேடும் இரண்டு காலங்களிலும் அவ்வாறு வழங்கியுள்ளது; பெயரெச்சவிகுதியாகிய அகரத்தைத் தகர எழுத்துப் பேற்றேடு கூடிய வடிவங்களிலே காணலாம்; வினைப் பகுதியோடு ஆகாரம் சேர்ந்த எதிர்மறை வினைவடிவம் ஒன்று வினையெச்சமாக முந்திய சாசனத்திலே காணப் படுகின்றது. ஆது, ஆமல் என்பவைகளைச் சேர்த்த

---

332. S. I. I, Vol, XII, p 46, Line 29/30.
333. S. I. I, Vol, III, p. 454, Line 80.
334. S. I. I., Vol, VIII, p. 82, Line 19.
335. S. I. I, Vol, V, p. 272, Line 5.
336. S. I I, Vol, VIII, p. 107, Line 4.
337. S. I. I, Vol, VII, p 9, Line 3.
338. S. I. I, Vol, VIII, p. 82, Line 22.

வினையெச்சவடிவங்கள் இரு காலங்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளன; வினைப்பகுதியோடு ஆகாரம் சேர்ந்த வடிவம் ஒன்று வினைமுற்றாகப் பயன்படுத்தப்பட்டுள்ளமையையும் முந்திய சாசனத்திலே காணலாம்: அளவோம், குடோம், செய்யோம், ஆராயோம் என்பன வினைப்பகுதியோடு தன்மைப்பன்மை விகுதியை நேரே சேர்க்க உருவான எதிர்மறைத் தன்மைப் பன்மைவினைமுற்றுக்களாக முந்திய சாசனங்களிலே காணப்பட்டுள்ளன. அஞ்சான் என்பது ஆண்பால் எதிர்மறை வினைமுற்றாக வினைப்பகுதிக்கு ஆண்பால் விகுதியைச் சேர்த்தலினால் ஆக்கப்பட்டது; குடுத்திலோம் என வினைப்பகுதி இறந்தகால இடைநிலையோடும் எதிர்மறையிடைச் சொல்லோடும் தன்மைப்பன்மை விகுதியோடும் இணைந்து ஆகிய வினைமுற்று வடிவம் பிந்திய சாசனத்தில் காணப்படுகின்றது.[339] எதிர்மறை வினையாலணையும் பெயர்களாக இறுதது[340] என்ற ஒன்றன்பாற் பெயரும் காட்டாதோம்,[341] குடாதோம்[342] என்ற தன்மைப் பன்மைப்பெயரும் இறக்காதான்[342a] என்ற ஆண்பாற் பெயரும் கருதாதவர்[343] என்ற பலர்பாற்பெயரும் கூட்டுவினையலமப்பாலான வினையாலணையும் பெயர்களாகக் காட்டப்பெறுதோம்,[344] புள்ளி குத்துவிக்கப்பெறுதோம்,[345] ஏறப்பெறுதார்,[346] புள்ளிகுத்துவிக்கப்பெறு

---

339. S. I. I, Vol, VIII, p. 300, Line 36/37.
340. E. I, Vol. XX, p 53, Line 13.
341. S. I. I, Vol, XIII, p, 161, Line 9/10
342. S. I. I, Vol, XII, p. 43, Line 31.
342a S. I. I, Vol, XII, p 24, Line 7.
343. S. I. I, Vol, III, p. 454, Line 119.
344. S. I. I, Vol, III, p. 50 Line 9.
345. S. I. I, Vol, XII, p. 39, Line 12/13.
346. S. I. I, Vol, II, p. 507 Line 61/62.

த்து,[347] தடுக்கப்பெறுதது[348] என்பனவும் முந்திய சாசனங்களிலே காணப்படுகின்றன; இவற்றை நோக்கும் போது எதிர்மறை ஆகாரத்தோடு கூடிய வினைப்பகுதி எல்லா வகை எதிர்மறைவடிவங்களுக்கும் பயன்பட்டுப் பின் வினையெச்சம், பெயரெச்சம், வினைமுற்று என்பன தனிவடிவம் பெற்று அதன்பின் காலங்காட்டும் எதிர் மறைவினை தோன்றியதை உணரமுடிகின்றது;

சாசனங்களிலுள்ள தமிழில், தன்வினை பிற வினைப் பாகுபாடே இயற்கையாக அமைந்துள்ளது; அது செயப்படுபொருள் குன்றியவினை செயப்படு பொருள் குன்றாவினை என்ற பாகுபாட்டை ஓரளவு ஒத்துள்ளது; தமிழிலே, செயப்படுபொருள் குன்றிய வினையையும் செயப்படுபொருள் குன்றாவினையையும் சுலபமாக வேறுபடுத்த இயலாது. சொல்லமைப்பையும் அது வழங்கும் சந்தர்ப்பத்தையும் நோக்கியே அது எந்த வகை என அறிந்துகொள்ளலாம். முதலாம்வினை யாக்க முறையில் முதலாம் தொகுதி வினைப்பகுதிகள் இறந்தகாலத்துக்கு -ந்த்- என்பதையும் எதிர்காலத்துக்கு -வ்- என்பதையும் கொள்ளுகின்றன. இவை நிகழ்வு-எதிர்வுக்கு இடைநிலையாக எதையும் கொள்வதில்லை; செயப்படுபொருள் குன்றியவினை, செயப்படுபொருள் குன்றாவினை என்ற இரண்டும் இப்பகுதியில் வரும்; இரண்டாம் தொகுதியை மூன்று உபதொகுதிகளாகப் பிரிக்கலாம்; முதலாம் உபதொகுதி இறந்தகாலத்துக்கு -த்- கொள்ளுவதிலே தவிர, ஏனைய அமிசங்களில் முத லாம் தொகுதியை ஒத்தது; இவற்றுட் பெரும்பகுதி செயப்படுபொருள் குன்றிய வினைகளாகும்; இரண்டாம்

---

347. S. I. I, Vol. XII, p. 46, Line 24/25.
348. E. I, Vol, XXVIII, p. 91, Line 36/37,

உபதொகுதி வினைப்பகுதிகள் எதிர்காலத்துக்குப் பகரத்தைக் கொள்ளுகின்றன. இவற்றுட் சில, நிகழ்வு-எதிர்வுக்குக் ககரத்தைக்கொள்வதும் உண்டு. இறந்த காலத்தைக் காட்டுவதற்கு இவை முதலாம் உபதொகுதியைப் போலத் தகரத்தைக் கொண்டபோதும் புணர்ச்சியிலே தகரம் டகரமாகவும் றகரமாகவும் மாறுகின்றது. இவை பெரும்பாலும் செயப்படுபொருள் குன்றா வினைகளாக வருகின்றன; மூன்றாவது உபதொகுதி வினைப்பகுதிகள் குற்றொற்றிரட்டி இறந்தகாலம் காட்டுவன. இவை செயப்படுபொருள் குன்றிய வினையாகவே பெரும்பாலும் அமைகின்றன. மூன்றும் தொகுதி வினைப்பகுதிகள் -ந்த்- என்பதை இறந்தகாலத்துக்கும் -ப்ப்- என்பதை எதிர்காலத்துக்கும் -க்க்- என்பதை நிகழ்வு - எதிர்வுக்கும் கொள்ளுகின்றன. செயப்படுபொருள் குன்றியவினை, செயப்படுபொருள் குன்றாவினை என்ற இருவகையும் இவற்றுள் உண்டு. நான்காவது தொகுதி வினைப்பகுதிகள் இறந்தகாலத்துக்கு -த்த்-, எதிர்காலத்துக்கு -ப்ப்-, நிகழ்வு - எதிர்வுக்கு -க்க்- என்பனவற்றைக் கொள்ளுகின்றன. இவற்றுட் பெரும்பாலன செயப்படுபொருள் குன்றாவினையாம். இச்செயப்படுபொருள் குன்றா வினையில் ஒரு பகுதி இயக்குவினையாம். ஐந்தாம் தொகுதி வினைப்பகுதிகள் ஒவ்வொன்றும் செயப்படுபொருள் குன்றிய வினையாகவும் செயப்படுபொருள் குன்றா - இயக்கு வினையாகவும் வடிவங்கள் பெறும். இரண்டாம் வினையாக்கமுறை வினைப்பகுதிகள் யாவும் இகரத்தை இறந்த காலத்துக்கும் வகரத்தை எதிர்காலத்துக்கும் கொள்ளுகின்றன. இவ்வினையாக்க வினைப்பகுதிகளுட் சில தவிரப் பிற, செயப்படுபொருள் குன்றியவினை, செயப்படுபொருள்குன்றாவினை என்ற பாகுபாட்டை வடிவத்தில் உணர்த்துவதில்லை; பொருளைக்கொண்டே, இவ்வேறுபாட்டை உணரவேண்டியுள்ளது. வடிவத்தைக்கொண்டே உணரக்கூடியவற்றுட்சில, ஓரசை வினைப்பகுதிக் க, ட,

ற என்ற ஈற்ளுற்றிரட்டிச் செயப்படுபொருள் குன்று-இயக்குவினை வடிவங்களைப் பெறுகின்றனு வேறுசில, வினைப்பகுதியின் ஈற்றுமெய்க்கு அயலிலுள்ள மூக்கொலியை வல்லொலியாக்கிச் செயப்படுபொருள் குன்று இயக்குவினை வடிவங்களாகின்றன.

இயக்குவினை வடிவங்கள் செயப்படுபொருள் குன்று – இயக்குவினையெனவும் தனி இயக்குவினையெனவும் இருவகைப்படும். செயப்படுபொருள் குன்று – இயக்குவினையென்பது ஒரு சந்தர்ப்பத்தில் செயப்படுபொருள் குன்று – வினையாகவும் இன்னொரு சந்தர்ப்பத்தில் இயக்குவினையாகவும் வழங்குவதாம். ஒரே வடிவம் இரண்டின் பொருளையும் தரக்கூடியதாக உள்ளது. முதலாம் வினையாக்கமுறை முதலாம் தொகுதி வினைப்பகுதிகள் தமக்கு இயல்பான வினைவடிவங்களைவிட அறு-அறுத்து, படு - படுத்து, கெடு - கெடுத்து, உகு-உகுத்து என்ற முறையிலமைந்த வடிவங்களையும் கொள்ளுகின்றன. இத்தகைய வடிவங்களிலே இயக்குவினைப்பொருள் சிறந்துநிற்கின்றது. முதலாம் வினையாக்கமுறைவினையடிகளுக்கு -த்த்- என்பதைச் சேர்ப்பதன்மூலம் சார் - சார்ந்து, செல் - செலுத்து என்ற இரண்டாம் வினையாக்கமுறை இயக்குவினையமைப்புகள் தோன்றுகின்றன: அகல் - அகற்று. இயல் - இயற்று என்பனவும் -த்த்- சேர்ந்தபோது திரிந்து இயக்குவினைப் பொருளைத் தருவனவே. தனி இயக்குவினைவடிவம் வினைப்பகுதிக்கு -வி-, -ப்-, -ப்ப்- என்பனவற்றை எதிர்காலம் காட்டுவதற்காகக் கொள்ளும் வினைப்பகுதிகள் அதே முறையில் வி, பி, ப்பி என்பனவற்றை இயக்குவினையாக்கப்பெறுகின்றன; இயக்குவினையிலிருந்து பலவகை வினைவடிவங்களும் ஆக்கப்படுகின்றன.

சாசனங்களில் கூட்டுவினை, துணைவினை என்பனவும் காணப்படுகின்றன. கூட்டுவினையில், இரண்டாவது

கூறு பெரும்பாலும் கால இடை நிலை, விகுதி முதலியன கொண்டதாகவும் துணைவினையாகவுமிருக்கும். முதலாவது கூறு பெயராக அல்லது வினைப்பகுதியாக அமைந்து கால இடை நிலை விகுதி முதலியவற்றைக் கொள்ளாமை யினுல் கூட்டுவினையின் உச்சரிப்பிலும் பொருளிலும் ஒருமை காணப்படுகின்றது. முதலாவது கூற்றின் இயல் பைக்கொண்டு கூட்டுவினையைப் பெயர்வழிக் கூட்டுவினை, வினைவழிக் கூட்டுவினை என இரண்டாக வகுக்கலாம். வினைவழிக் கூட்டுவினையில் முதற்கூறு தொழிலை அல்லது பெயர்ச்சியைக் குறிக்கும்; விடுதந்த[349] என்ற இறந்த காலப் பெயரெச்சம் போத்தர[350] என்ற செயவெனெச் சம் என்பன உதாரணங்களாம். பெயர்வழிக்கூட்டுவினை யில் முதற்கூறு பெயரடியாகவும் இருக்கலாம்; பெயராக வும் இருக்கலாம். வினைப்பகுதி பெயரோடு சேரும்போது பெயர்த்தன்மை வினைத்தன்மையாகக் கூட்டு வினையில் மாறிவிடுகின்றது. சில சந்தர்ப்பங்களில் பெயர்ச்சொல் லின் பொருள் வேறுபடுவது அல்லது பலப்படுவது உண்டு. செய், இடு, படு, குடு, கொள், காண், பெறு என்பன கூட்டுவினையில் இரண்டாவது கூருக வந்து துணைவினையாக அமைகின்றன; படு என்ற துணைவினை யைக்கொண்டு அமைந்த பெயர்வழிக்கூட்டுவினைகள் மிகப் பலவாகக் காணப்படுகின்றன: தண்டப்பட்டு[351] என்ற தன்வினை இறந்தகால வினையெச்சம் தமிழ்ப்படுத்து[352] என்ற பிறவினை இறந்தகால வினையெச்சம் முற்பட்ட, அகப்பட்ட, உட்பட்ட, துளைபட்ட[353] என்ற தன்வினை

349. E. I. Vol, XXIII, p. 42, Line 17/18
350. E. I, Vol, XXI, p. 109, Line 5/6.
351. S. I. I, Vol, III, p. 98, Line 4.
352. S. I. I, Vol, III, p 454, Line 102.
353 S. I. I, Vol, XIII, p. 165 Line 6.

இறந்தகாலப் பெயரெச்சம் அடிப்படுத்த பள்ளிபடுத்த என்ற பிறவினை இறந்தகாலப் பெயரெச்சங்கள் கனற்பட,[354] விஸ்மயப்பட,[355] உட்பட[356] என்ற செய்வெனெச்சங்கள் வழிபடும்[357] என்ற நிகழ்வு-எதிர்வு வடிவம் தண்டப்படுவோம்[358] என்ற தன்மைப்பன்மை எதிர்கால வினைமுற்று தண்டப்படுவான்[359] என்ற ஆண்பால் எதிர்கால வினைமுற்று தண்டப்படுவார்[360] என்ற பலர்பால் எதிர்கால வினைமுற்று தண்டப்படுவது[361] என்ற ஒன்றன்பால் எதிர்கால வினைமுற்று வாரிகப்பட்டோம்[362] என்ற தன்மைப்பன்மை இறந்தகால வினைமுற்று அகப்பட்டது[363] வழிப்பட்டது[364] என்ற ஒன்றன்பால் இறந்தகால வினைமுற்றுக்கள் குத்துக்காற்படில்[365] என்ற நிபந்தனை வினை எப்பேர்ப்பட்ட, எவ்வகைப்பட்ட,[366] இவ்வகைப்பட்ட[367] என்ற எகர வினா இகரச் சுட்டு என்பன பெயரடையாக வர வந்த இறந்தகாலப் பெயரெச்சங்கள் எவ்வகைப்பட்டது,[368] எப்பேர்ப்பட்டது[369] என்ற எகர வினா பெயரடையாக வர வந்த இறந்தகால ஒன்றன்

---

354. S. I I, Vol, III, p 454, Line 134.
355. S. I. I, Vol, III, p. 454, Line 85.
356. E. I, Vol, XXI. p. 109, Line 101.
357. S. I. I, Vol, XII, p. 34, Line 2.
358. S. I. I, Vol, III, p. 90, Line 14.
359. S. I I, Vol. XII, p. 34. Line 2/3.
360. S. I. I, Vol, XII. p. 50, Line 10.
361 S. I. I, Vol, XII, p. 46, Line 23.
362. S. I. I, Vol. XII. p. 17, Line 6
363 S. I. I, Vol, II, p. 507, Line 56.
364 S. I. I, Vol, III, p. 454, Line 79.
365. E. I. Vol, XXI, p. 109, Line 46.
366. S. I I, Vol, XII, p. 26, Line 8.
367. S. I. I, Vol, II. p. 507. Line 62.
368. S I I, Vol, II, p. 507, Line 56.
369. S. I, Vol, XX, p. 53, Line 13.

பால் வினைமுற்றுக்கள் முதலியன படு என்பதை இரண்டாவது கூறாகக்கொண்டு ஆக்கப்பட்ட பெயர்வழிக் கூட்டு வினைக்கு உதாரணங்களாம். படு என்பதற்கு அடுத்ததாகச் செய் என்பதைக் கொண்டே பல வடிவங்கள் ஆக்கப்பட்டுள்ளன. துணைவினை என்ற பெயரையுடைய ஒரு தனிப் பிரிவும் உண்டு; துணைவினையில் இணையும் வினையின் இரு கூறுகளும் கால இடைநிலை விகுதி முதலியவற்றைக் கொள்வதனால் இவை பெரும்பாலும் ஒருமைப்படுவதில்லை. இரு கூறுகளும் வினையாக மட்டுமே இங்கு அமையலாம். இறந்தகால வினையெச்சத்தோடும் செயவெனெச்சத்தோடும் துணைவினைகள் இணைக்கப்படுகின்றன. வா, கொள், அருள், இரு, குடு, செல் என்ற வினைப்பகுதிகள் இறந்தகால வினையெச்ச அமைப்புகளைத் தொடர்ந்து துணைவினைப்பகுதிகளாக அமைந்துள்ளன. விற்றுக்கொண்டு,[370] அழைப்பிச்சு கொண்டு[371] என்ற இறந்தகால வினையெச்சங்கள் தண்டிக்கொள்ள[372] என்ற செயவெனெச்சம் விற்றுக்கொண்டேன்[373] என்ற தன்மை ஒருமை இறந்தகால வினைமுற்று என்பன கொள் என்ற துணைவினையைக்கொண்டு உருவான இத்தகைய வினைகளுக்கு எடுத்துக்காட்டுகளாம். செயவெனெச்சம் பெறு என்ற துணைவினை கொள்வதைச் சாசனங்களிலே காணலாம். கொள்ளப்பெறுவது,[374] மன்றப்பெறுவது,[375] எடுக்கப்பெறுவது[376] முதலிய ஒன்

---

370. S. I. I, Vol, XII, p, 41, Line 17.
371 S. I. I, Vol XIII, p. 163, Line 2.
372 S I. I, Vol, XXI, p. 25, Line 6.
373. S I. I, Vol, XII, p. 48, Line 41.
374 S. I. I, Vol, III, p. 222, Line 16.
375. S. I. I, Vol, III, p 95, Line 17.
376 S I. I, Vol, II, p. 507, Line 58.

றன்பால் எதிர்கால வினைமுற்றுக்கவி கொள்ளப்பெறுது[377] என்ற எதிர்மறை வினையெச்சம் புள்ளிகுத்துவிக்கப்பெறு தோம்[378] என்ற தன்மைப்பன்மை இயக்குவினை யாலனை யும் பெயர் ஏறப்பெறுதோர்[379] என்ற ஆண்பாற்பன்மை எதிர்மறை வினையாலணையும் பெயர் தடுக்கப்பெறுதது[380] என்ற எதிர்மறை ஒன்றன்பால்வினையாலணையும் பெயர் புள்ளிகுத்துவிக்கப்பெறுதது[381] என்ற எதிர்மறை இயக்கு வினை ஒன்றன்பால் வினையாலணையும் பெயர் முதலியன பெறு என்ற துணைவினையைப் பெற்ற அமைப்புகளுக்கு உதாரணங்களாம்.

சாசனங்களில் கால மயக்கமாக அமைந்த வழக்காறுகள் பல உள; 'இன்னும் இப்படி அறிவோம்,'[382] என்பது எதிர்காலத்தைச் சுட்டவில்லை. நிகழ்காலத்தை இந்த முந்திய சாசன வழக்குச் சுட்டுகிறது என்று கொள்ளவேண்டும்; வகரம் எதிர்கால இடைநிலையாக மட்டும் வரத்தொடங்கியது பிற்கால வழக்கு. பழைய தமிழில் வகரம் இறந்தகாலம் அல்லாக் காலங்களை உணர்த்தி வந்தது; சாசனங்களில் நிகழ்காலத்துக்குரிய தனிவடிவம் காணப்படுகின்றபோதிலும் அது செல் வாக்குப் பெற்றிருக்கவில்லை. எனவே இந்த வடிவம் நிகழ்காலத்தைக் சுட்டுகின்றது. நிகழ்காலத்தை உணர்த் துவதற்கு முந்திய சாசனங்கள் இன்னுமொரு புதுவழி யைக் கையாண்டுள்ளன. எதிர்கால வடிவத்தையும் இறந்தகால வடிவத்தையும் இணைப்பதன் மூலம் நிகழ்

---

377. S. I. I, Vol. II, p. 507, Line 57.
378. S. I. I, Vol, XII, p. 39, Line 12/13
379. S. I. I, Vol. II, p, 507, Line 62.
380. E. I., Vol, XXVIII, p. 91, Line 36/ 37.
381. S. I. I, Vol, XII, p. 46, Line 24/25.
382. S. I. I, Vol, XII, p. 48, Line, 54.

காலம் உணர்த்தப்பட்டிருக்கும் முறை முந்திய சாசனங்களிலேயே காணப்படுகின்றது: எரிப்போமாகேனும்,[383] செலுத்துவோமாகேனும்,[384] அளப்போமாகேனும்,[385] அட்டுவோமாகேனும்,[386] படுவோமாகேனும்,[387] அட்டுவேனேன்,[388] ஒடுப்பேனேன்[389] படுவாராரானர்,[390] கடைக்காண்பாராரானர்,[391] செய்வோமாகேனும்[392] என்பன நிகழ்காலத்தை உணர்த்துவனவாகச் சாசனங்களில் வழங்கியுள்ளன. இறந்தகால வினையாலணையும் பெயர்கள் எதிர்காலத்தைச் சுட்டிவருவதையும் முந்திய சாசனங்களிலே காணலாம். 'என்ரூர்...படுவார்.[393] 'அழித்தான் — படுவான்,'[394] 'இறக்கினன் — புகுவான்,'[395] 'நினைத்தார் — கொள்வார்,'[396] 'உய்தார் — கொள்வார்,'[397] என்ற எடுத்துக்காட்டுகளில் எழுவாய் இறந்தகாலத்திலும் பயனிலை எதிர்காலத்திலும் அமைந்துள்ளன; எழுவாயும் எதிர்காலத்தில் நடக்கப்போவதையே உணர்த்துகின்றது. வினையெச்சம் காலங்காட்டுமாற்றிற்குக் கூறப்படும் விளக்கமே இங்கும் கொடுக்கப்படவேண்டும். இறந்தகால

---

383. S. I. I, Vol, XII, p. 22, Line 11.
384. S. I I, Vol, III, p. 95. Line14/15.
385. S. I. I, Vol, XII, p. 25, Line 5.
386. S. I. I, Vol, III, p. 98, Line 3.
387. S. I. I, Vol, XII, p. 30 Line 26/27.
388. S. I I, Vol, XIII, p. 165, Line 6/7.
389. S. I. I, Vol. XIII, p 163, Line 4.
390 S. I I, Vol, XII, p. 48, Line 6.
391. S. I. I, Vol, XII, p. 48, Line 5.
392. S. I I, Vol, XII, p. 42, Line 14/15.
393. S. I. I, Vol, XII, p 50.
394. S. I. I, Vol, III, p. 90.
395. A. R. on S. I. E, 1936, p. 73.
396. S. I I, Vol, III, p. 224.
397. S. I. I, Vol, III, p. 2.

வினையெச்சம் என்பது முடிக்கும் சொல்லால் உணர்த்தப் படும் காலத்துக்கு முந்திய காலத்தை உணர்த்துவதே அன்றி நடந்துபோனதை மட்டும் உணர்த்துவதன்று; இங்கும் பயனிலை சுட்டும் காலத்தில் நடக்கப்போவதி லும் எழுவாய் சுட்டும் காலத்தில் நடக்கப்போவது முந்தியதென்றே விளக்கவேண்டும்;

பெயரடையென்று ஒரு தனிப்பிரிவைக்கொள் ளாத பழைய தமிழ் இலக்கணம் வினையடையென்றும் ஒரு தனிப்பிரிவைக்கொள்ளவில்லை. எனினும் பிறமொழி வழக்குகளுடன் ஒப்பிடும்போது அங்கு வினையடையாகக் கொள்வதற்கு நேரிடையான வடிவங்கள் தமிழிலும் காணப்படுகின்றன; சில பெயர்ச்சொற்களோடு ஆய் அல்லது ஆக என்பது சேர்ந்துவரும் கூட்டுவடிவம் வாக்கியத்தில் வினையடைவழங்குமாறு வழங்குகின்றது; இடத்தைக் குறிக்கும் வினையடையாகப் பழைய சாசனங் களில் முன்பு, ஆங்கு என்பன வழங்கப் பிந்திய சாசனங் களில் அங்கு, இங்கு என்பன வழங்கியுள்ளன. காலத் தைக் குறிக்கும் வினையடையாக முந்திய சாசனங்களில் முன், பின், முன்பு, முன்னம், பின்னை, அன்று, என்றும் என்னும் வடிவங்கள் பயன்பட்டுப் பிந்திய சாசனங்களில் முன்பு, பின்பு, அன்றுடு என்பன பயன்பட்டுள் ளன. விதத்தை உணர்த்தும் வினையடைகளாக ஆனைத் திறல், நன்கு, ஒருங்கு, முற்றும், அற, மிக, நேர, இனிது, மறையிலி என்பனவற்றை முந்திய சாசனங்கள் கொண்டிருக்க ஓராங்கு, பின்னும், இப்படி முதலியன வற்றைப் பிந்திய சாசனங்கள் கொண்டுள்ளன; அற, மிக நேர என்பன செயவெனெச்சமாக வழங்கியவை; சாச னங்களில் இவை வினையடையாகக் கொள்ளத்தக்க வகை யில் வழங்கியுள்ளன;

## 4. இடையியல்

சாசனங்களுள் இடைச்சொல்லாக வழங்குவன ஐந்தாக வகுக்கப்படலாம். இயல்பான இடைச்சொற்கள், இடைச்சொல்லாகப் பயன்படும் வினைவடிவங்கள், உவமையிடைச்சொற்கள், எதிர்மறையிடைச்சொற்கள், மரியாதையிடைச் சொற்கள் என்பனவே அவையாம்; உம், ஏ, மற்று/மற்றும், தோறும் என்பன இயல்பான இடைச்சொற்களாக இரண்டு காலமும் வழங்கியுள்ளன; உம்மையிடைச்சொல்லே சாசனங்களிலே பயின்று வழங்கியது. சிறப்புப்பொருள், எச்சப்பொருள், முற்றுப் பொருள், தெரிநிலைப்பொருள், அளவைப்பொருள், ஆணைப்பொருள் என்பவற்றுக்கான எடுத்துக்காட்டுகள் இரண்டு காலச் சாசனங்களிலும் காணப்படுகின்றன: ஆணைப்பொருள் பழந்தமிழிலக்கண நூல்களிற் குறிப்பிடப்படவில்லை. 'சவையார் இறுப்பாராகவும்'[398] 'காவு தெங்கிடப்பெறுவதாகவும்,'[399] 'தீர்த்துக்கொள்ளக்கடவோமாகவும்'[400] என்பன எடுத்துக்காட்டுகள். எண்ணும்மை பெயர்ச்சொற்களோடு மட்டுமின்றி இறந்த கால வினையெச்சங்கள், செயவெனெச்சங்கள் என்பனவற்றோடும் வந்துள்ளது. ஒரே கருத்தாவின் பல வினைகளைக் கூறும்போது, இறந்தகால வினையெச்சங்கள் எண்ணும்மைபெறுவதைப் பாண்டியர் குலத்தின் பெருமையைக் கூறும் பெரிய சின்னமனூர்ச் சாசனப் பகுதியிற் காணலாம். கொண்டுமுடியும் வினையோடு சமகாலத்து நிகழ்ச்சிகள் செயவெனெச்சங்களாக்கப்பட்டு எண்

---

398. S. I. I, Vol, III, p. 93.
399. S. I. I, Vol, II, p. 507.
400. S. I. I, Vol, VII, p. 386.

னும்மை பெற்று விளங்குவது மாறவர்மன் குலசேகர னுடைய மெய்க்கீர்த்தியிற் காணப்படுகின்றது. ஏகார இடைச்சொல் பிரிநிலை, தேற்றம், ஈற்றசை என்ற பொருள்களில் இரு காலத்துச் சாசனங்களிலும் காணப் படுகின்றது; சொற்கள் உருபேற்று நிற்குமிடங்களில் உம்மையும் ஏகாரமும் உருபுகளைத் தொடர்ந்துவரும்; உம்மையும் ஏகாரமும் ஒரு சொல்லை ஒட்டிவரும்போது உம் முதலிலும் ஏகாரம் பின்னும் வரும். மற்று, மற் றும் என்னும் இரண்டு வடிவங்களும் முந்திய சாசனங் களிலே 'மற்றவனுக்கிளையன்', 'மற்றதற்கு மதில் வகுத்து', 'மற்றும் எப்பேர்ப்பட்டதும் அடங்க', 'மற் றும் கிடந்து விற்பன' என வழங்கியுள்ளன. பிந்திய சாசனங்களிலே மற்றும் என்பது மட்டும், 'மற்றும் எப் பேர்ப்பட்ட சமத்தப்பிராத்திகளும்', 'மற்றும் பலரால் பேசப்பட்ட மரங்கள்' என வழங்கப்பட்டுள்ளது. மட்டு, உடன், இன்னும், என்னும் இடைச்சொற்கள் முந்திய சாசனங்களில் மட்டும் காணப்படுகின்றன;

ஆக, ஆய், ஆவது என்னும் வினைவடிவங்கள் இடைச்சொற்கள் போலப் பயன்படுவதைச் சாசனங் களிலே காணலாம். ஆக என்பது இரண்டு வாக்கியக் கூறுகளை இணைக்கப் பயன்படுகின்றது. 'முன்பு கூறப் பட்ட பல பொருட்கள் யாவும் சேர்ந்து' என்ற பொரு ளைச் சுட்டுவதற்கும் இது 'இரண்டாயிரங் குழியும் . .. இரண்டாயிரங் குழியும் ஆக நாலாயிரங் குழி'[401] 'நெடு மாற்சாத்தன் சென்னிப்பேரயனும் இவன் தாயார் கோயினங்கையும் ஆகவைத்த நுந்தாவிளக்கு'[402] என முந்திய சாசன எடுத்துக்காட்டுகளிற் பயன்படுத்தப்பட்

---

401. S. I. I, Vol, III, p. 50.
402 E. I. Vol, III, p. 280.

டுள்ளது; ஆக, ஆய் என்பன, பெயர்ச்சொற்கள் சில வற்றை வினையடையாக மாற்றும் இடைச்சொற்களா கப் பயன்படுகின்றன: 'துலா நாயிறு முதலாக நிகதி யாக நான்கு காலமுந் திருவமுது செலுத்தும்படி'[403] 'இப்பொன்னுக்குத் தலைச்செம்மாடாய் ஒரு நந்தா விளக்கெரிப்போம்'[404] என்பன உதாரணங்களாகக் கொள்ளலாம். 'விளக்கம் தொடருகிறது' என்ற பொரு ளைக் குறிக்கும் இடைச்சொல்லாக ஆவது என்பது இரண்டு காலங்களிலும் வழங்கியுள்ளது; 'ஊரார் வைத்த பரிசாவது',[405] 'நாங்கள் குடுத்த கமுகந்தோட்ட மாவது'[406] என்பன எடுத்துக்காட்டுகளாம்.

எதிர்மறைப்பொருளைத் தரும் இடைச்சொற் கள் என்று சிலவற்றைக் கொள்ளலாம். இல் என்பது பெயர்ச்சொல்லைத் தொடர்ந்து வருவதற்கு மூன்று எடுத்துக்காட்டுகள் முந்திய சாசனங்களில் மட்டும் கிடைத்துள்ளன. அசைவில், மறுகில், வசைஇல் என் பனவே அவையாம். இன்றி, அன்றி, அல்லது என எதிர்மறை இல், அல் என்பன அடியாகப் பிறந்தவடி வங்கள் இரண்டுகாலச் சாசனங்களிலும் கிடைத்துள் ளன; இம்மூன்று வடிவங்களும் குறிப்பு வினையெச்சங் கள் எனத் தமிழிலக்கணகாரரால் கொள்ளப்படுகின் றன: அன்று என்ற வடிவம் அல் என்ற எதிர்மறை அடியாகப் பிறந்த குறிப்புவினை ஒன்றன்பால் வினைமுற் றாகும். இது 'இதன்றென்றூர்' என முந்திய சாசனத் தில் வந்துள்ளது.

---

403. E I, Vol. IX, p 88.
404. S. I. I, Vol, XIII, p. 131.
405. S. I. I, Vol, XII, p. 50.
406. S. I. I, Vol, V, p. 27.

உவமையிடைச்சொற்கள் சாசனங்களில் அருகிய வழக்காகக் காணப்படுகின்றன. போல் என்பது பிந்திய சாசனங்களில் 'பகிரதிபோல் துய்ய புகட்படர', 'தேர் போல் அல்குல்' எனவும் முந்திய சாசனத்தில் 'ஒலி கடல் போல் —— இராசசிங்கப் பெருங்குளக்கீழ்' எனவும் வந்துள்ளது: அனை என்பது பிந்திய சாசனத்தில் 'உதைய வெற்பனைச் சிங்காசனமிசை' என வந்துள்ளது.

மரியாதையிடைச் சொற்கள் இடைக்காலத் தமிழுக்குச் சிறப்பாக உரியன. அவை சாசனங்களிலும் வழங்கியுள்ளன. அவை பிற சொற்களுக்கு முன்பும் அமைவதுண்டு; பின்பும் அமைவதுண்டு. முந்திய சாசனங்களில் ஸ்ரீ என்பதும் அதன் திரிபுகளாகிய சிரி, திரு, சி என்பனவும் அடிகள் என்பதும் பெயர்ச்சொற்களுக்கு முன் வழங்கியுள்ளன. பிந்திய சாசனங்களில் ஸ்ரீ என்பதும் அதன் திரிபுகளும் உடையார், தேவர், நாயனார், நாச்சியார் என்பனவும் பெயர்ச்சொற்களுக்கு முன் வழங்கியுள்ளன. கோவிற்பெயர்களுக்கும் கோவிலோடு தொடர்புடைய பொருள்களுக்கும் அரசகுலத்தவருக்கும் சமயப்பெரியாருக்கும் உயர்ந்தோருக்கும் பெயர்களுக்கு முன்பு மரியாதையிடைச் சொற்கள் சேர்க்கப்பட்டன; முந்திய சாசனத்தில் ஸ்ரீ குழுவானை ஏரியால் என ஏரிப்பெயர் ஒன்றுக்கும் மரியாதை இடைச்சொல் சேர்க்கப்பட்டுள்ளது.407 சொற்களின் பின்னிணைப்புகளாக அடிகள், அமுது, அருள் என்பன முந்திய சாசனங்களி லிடம் பெறத் தேவர், நாச்சியார், அமுது, அருள் என்பன பிந்திய சாசனங்களிலிடம் பெற்றுள்ளன: கடவுளுக்கான உணவு சம்பந்தப்பட்டவை அமுது என்று குறிப்பிடப்படுகின்றன. கடவுளருடையவும் உயர்ந்தோருடை

---

407. E. I, Vol, XXVIII, p. 91, Line 18-20.

யவுமான செயல்களைக் குறிக்கும்போது அருள் என்பது மரியாதையை உணர்த்தும் துணைவினையாகச் சேர்க்கப் பட்டுள்ளது;

சாசனத் தமிழிலே தொகைநிலைத்தொடர்கள் காணப்படுகின்றன; பழந்தமிழிற் காணப்படும் அளவுக்கோ, செய்யுளிலக்கியத்திற் காணப்படும் அளவுக்கோ சமமான அளவில் அவை இல்லை. ஐவகைத் தொகைகளும் சாசனங்களிற் காணப்பட்டபோதிலும் சாசனங்களிலுள்ள செய்யுட் பகுதிகளிலேயே தொகைநிலைகளுக்குப் பெரும்பாலான உதாரணங்கள் கிடைத்துள்ளன; வேற்றுமைத்தொகை, பண்புத்தொகை, உம்மைத் தொகை என்பன செய்யுட்பகுதிகளிற் பெரும்பான்மையாக இடம்பெற்றாலும் உரைநடைப் பகுதிகளிலும் குறிப்பிடத்தக்க அளவு இடம்பெற்றுள்ளன. இருபெயர், பலபெயர், அளவுப்பெயர், எண்ணுப்பெயர், நிறைப் பெயர் என்ற ஐந்து வழிகளிலான உம்மைத்தொகைகள் காணப்படுகின்றன. பண்புத்தொகையில் இருபெயரொட்டுப் பண்புத்தொகையே பயின்று காணப்படுகின்றது. வண்ணம், அளவு என்ற வகையிலான எடுத்துக் காட்டுகள் சிலவும் கிடைத்துள்ளன. வேற்றுமைத் தொகை அமைந்துள்ள இடங்கள் ஏனைய தொகைகள் அனைத்தும் அமைந்துள்ள இடங்களிலும் அதிகமாகக் காணப்படுகின்றன. மூன்றும் வேற்றுமைப் பொருள் படத் தொக்க தொகைக்கு முந்திய சாசனங்களில் உதாரணம் கிடைக்கவில்லை. நான்காம், ஐந்தாம் வேற்றுமைப் பொருள்படத்தொக்க தொகைகள் செய்யுட்பகுதிகளில் மட்டுமே கிடைத்துள்ளன. ஏழாம் வேற்றுமைப்பொருள் படத் தொக்க தொகைகள் செய்யுளிலும் உரைநடையிலும் ஒரே அளவினவாக வழங்குகின்றன. இரண்டாம் வேற்றுமை ஆறும் வேற்றுமை என்பனவற்றின் பொருள் படத்தொக்க தொகைகள் உரைநடையிலும் பெருவாரியாகக் காணப்படுகின்றன;

# சாசனத்துத் தமிழர் பண்பாடு

தமிழர் பண்பாடு பற்றிய விரிவான பல செய்திகளைச் சாசனங்களிலிருந்தே உணரலாம்: சங்ககாலத்திற்குப் பின்பு இக்காலம் வரையிலான இலக்கியங்களில் தமிழர்களுடைய வாழ்க்கையை நேரே சித்திரித்துக்கூறும் பண்பு அருகிக் காணப்படுகின்றது. இவ்விடைக்காலத் தமிழ் இலக்கியங்களுள் மிகப்பெரும்பாலன, வடமொழியிலக்கியங்களின் தழுவல்களும் மொழிபெயர்ப்புகளுமாம். இந்த இலக்கியங்களிலிருந்து தமிழ்நாட்டையும் தமிழ் மக்களையும் பற்றிய சில தகவல்களைக்கூட, ஆராய்ச்சி மூலமாகவே பெற்றுக்கொள்ளலாம்]

பல்லவர் ஆட்சிக்காலத்திற்கு முந்திய தமிழ்ச் சாசனங்கள் தொகையிற் சிலவாகவும் அளவிற் சிறியனவாகவும் கிடைத்துள்ளன. அவற்றுள் மிகச்சிலவே திருப்திகரமாக வாசிக்கப்பட்டுள்ளன. மிகுதிச் சாசனங்கள் கூறும்பொருள் பற்றியும் அவை எழுந்த காலம் பற்றியும் கருத்துவேறுபாடுகள் காணப்படுகின்றன: சோழர், பாண்டியர் பேரரசுகள் வீழ்ந்தபின் எழுந்த சாசனங்களும் பல நூற்றுக்கணக்கில் வெளியிடப்பட்டுள்ளன; ஆனால் விசயநகர, நாயக்கர் காலத்திலிருந்து தமிழர் வரலாற்றையும் ஆட்சிமுறையையும் பண்பாட்டையும் அறிந்து கொள்ளப் பிறநாட்டார் எழுதிவைத்த குறிப்புக்கள் விரிவாக உள்ளன. ஆனால், பல்லவர், சோழர், பாண்டியர் காலத்துத் தமிழர் பண்பாட்டை அறிந்துகொள்ளச் சாசனங்களே மிகவும் உதவுகின்றன; இவ்வரச குலத்தினர் கால வரலாறுகளைச் சிறப்பாக

ஆராய்ந்துள்ள பேராசிரியர் நீலகண்டசாஸ்திரி, டாக்டர் மீனாட்சி, திரு. கோபாலன் என்பாருடைய நூல்களை நோக்கினால், சாசனங்கள் பயன்படுமாற்றுக்கு அவர்களுடைய நூல்களே விளக்கமாக அமைந்துள்ளன எனலாம்.

இன்று வெளிவந்துள்ள சாசனங்களைக்கொண்டே, தமிழருடைய பண்பாட்டை ஆராய்ந்து பல நூல்கள் எழுதலாம். அதனால் இக்கட்டுரையில், ஆசிரியருக்கு மிகவும் பரிச்சயமான இருநூற்றைம்பது சாசனங்கள் மட்டுமே ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன; இவை மூன்று காலப்பிரிவுகளுக்குரியன:-

1. பல்லவர் பாண்டியர்கால இறுதி, சோழர் காலத்தொடக்கம்.

2. முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் காலம்.

3. பிற்காலப் பாண்டியர் காலம்.

சாசனங்களை மூலாதாரமாகக்கொண்டு அரசியல், சமூகவியல், பொருளியல் வரலாறுகள் வரையப்பட்டு வருகின்றபொழுதிலும், இங்கு அத்தகைய முயற்சி மேற்கொள்ளப்படவில்லை. சாசனங்கள் கூற எடுததுக்கொண்ட பொருள்மட்டும் வகுக்கப்பட்டு ஆராயப்படுகின்றது. இவ்வாராய்ச்சி தமிழர் பண்பாட்டின் சில அமிசங்களை அறிந்துகொள்ள உதவும். ஒவ்வொரு காலப் பிரிவுச் சாசனங்களையும் தனிததனியே நோககுவது காலப்போக்கில் ஏற்பட்டுவந்த மாற்றங்களைத் தெளிவாக உணர உதவும்.

## 1. பல்லவர் பாண்டியர் கால இறுதி, சோழர் காலத்தொடக்கம். கி. பி. 800 - 920.

இக்காலச் சாசனங்களிற் கூறப்படும் பொருளைச் சமயம், நீர்ப்பாசனம், வீரக்கல், பிற என நான்காக வகுக்கலாம். பிற என்பதில் அம்பலம், விருந்துண்ணல் முதலியவற்றை அடக்கலாம்; சமயம் என்பதில் சைவம், வைணவம், சமணம் என்பன பற்றிய செய்திகளும் பிராமணர் பற்றிய செய்திகளும் அடங்கும்; சைவம் என்பது சிவசம்பந்தமானது; எனினும் சைவர்கள் பலராலும் வணங்கப்படும் தெய்வங்களான காளி, கணபதி முருகன், சூரியன் என்பார் பற்றிய செய்திகளும் சாசனங்களிலே காணப்படுகின்றன; பெருந்தொகையான சாசனங்கள் சிவன்கோவிற் பணியையும் பரிபாலனத்தையும் பற்றிக் கூறுவனவே; அச்சாசனங்களையும் அவை கூறும்பொருள்பற்றி விளக்கு, அர்ச்சனை, விழா, தேவதானம், கட்டிடம், பொதுவருமானம் என ஆறாக வகுக்கலாம். விளக்கு என்பதிலும் நுந்தாவிளக்கு, பகல் விளக்கு, சந்திவிளக்கு என்று மூவகையின கூறப்படுகின்றன. முதற்கண் நுந்தாவிளக்குப்பற்றிய செய்திகளை ஆராயலாம்; அச்செய்திகளையும் விளக்குவைத்தோர், விளக்குக்காக வைக்கப்பட்ட பொருள், விளக்கு எரிய வேண்டிய காலம், விளக்கு எரிக்கும்பொறுப்பு/பாது காக்கும் பொறுப்பு, விளக்கும் பிறபொருள்களும், ஓம்படைக்கிளவிகள் என ஆறு உபபிரிவுகளில் நோக்கலாம்;

நுந்தாவிளக்குவைத்தலாகிய அறத்தைச் செய்தோரை அரச குடும்பத்தினர் என்றும் அல்லாதோர் என்றும் இரண்டாக வகுக்கலாம், பதினன்கு சாசனங்கள் அரச குடும்பத்தினர் விளக்குவைத்ததையும் ஒன்பது சாசனங்கள் அல்லாதோர் விளக்கு வைத்ததையும் கூறு

கின்றன. அரசகுடும்பம் என்பதில் முடியுடைவேந்தரும் சிற்றரசரும் அடங்குகின்றனர். அரசன் விளக்குவைத்த தாகக் குறிப்பிடும் சாசனம் ஒன்றே கிடைத்துள்ளது.[1] அவன் மாணிக்கவாசகசுவாமிகள் காலத்துப் பாண்டிய வேந்தனென, இன்றைய ஆராய்ச்சியாளர் கருதும் இரண்டாம் வரகுண பாண்டியனுவான்; அரச குடும்பத்தைச் சேர்ந்த பெண்களே விளக்குவைக்குந் தருமத்தில் முனைந்து நின்றிருக்கின்றனர். அரசி அல்லது அரசகுமாரி விளக்கு வைத்ததைக் கூறுவதாகப் பத்துச் சாசனங்கள் வரையிலே கிடைத்துள்ளன.[2] முதலாம் ஆதித்தனோடு உடன்பிறந்த தங்கையான நங்கை வரகுணபெருமானார், வாணர் குலத்துப் பிருதுவிபதி மகள் குந்தலையான வானமாதேவியார், அபராசிதவருமர் தேவியார் மாதேவியடிகள், பெரும்பிடுகுமுத்தரையர் மணவாட்டி நங்கை தயாநிதியார், முதலாம் ஆதித்தனுடைய முதல் தேவி இளங்கோன் பிச்சி, முதலாம் ஆதித்தனுடைய இன்னொரு தேவி காடுபட்டிகள் தமர்மேத்தியார் திரிபுவன மாதேவி முதலியோர் அப்பெண்களுட் சிலர்; முதலாம் ஆதித்தனுடைய வைப்பாட்டியான நங்கை சாத்தபெருமானாரும் விளக்கு வைத்துள்ளார்.[3] சிற்றரசனுடைய வைப்பாட்டியொருத்தி விளக்கு வைத்ததற்கும் சான்றுண்டு.[3a] அரசியின் தாய் விளக்குவைத்த

---

1. Epigraphia Indica Volume XXIII. page 42.
2. E. I., Vol. VII, p. 140; Vol. XX, p. 53.
   South Indian Inscriptions Vol. III, p. 98, p. 100; Vol. XII, p. 39, 40; Vol. XIII, p. 154; Vol. XIII p. 172, 186.
3. S. I I, Vol. XIII. p. 119.

3a. E. I. Vol. VII, p. 139.

தைக் கூறும் சாசனங்கள் இரண்டு கிடைத்துள்ளன;[4] விளக்கு வைப்பதனால்வரும் புண்ணியம் தமக்கு நெருங்கிய உறவினர் ஒருவரைச் சாரவேண்டும் என்று எண்ணி விளக்குவைத்தோரும் உளர்; பெரும்பிடுகுமுத்தரையர் மணவாட்டி நங்கை தயாநிதியார் என்பவர் முத்தரையர் நம்பி மானதொங்கலார் மகளார் நங்கை விக்கிரம கேசரியாரைச் சார்த்தி விளக்குவைத்துள்ளார்.[5]

அரச குடும்பத்தினர் அல்லாதோரில் பிராமணர் குறிப்பிடத் தக்கோராவர்; பிராமணர் தம்முடைய உள்ளூர் நிறுவனமான சபையாகவும் தனிப்பட்டோராகவும் விளக்கு வைத்துள்ளனர். மூன்றும் நந்திவர்மன் காலத்தில் அன்பில்சபை அவ்வாறு விளக்கு வைத்துள்ளது.[6] மாதவ கிரமவித்தன், பட்டர்நாகன், பிரமாதிராசன் என்போர் தனிப்பட்டமுறையில் விளக்குவைத்த தருமத்தைச் செய்த பிராமணராவர்.[7] வணிகருள், சாமுண்டன் மூர்த்தி விளக்குவைத்ததற்குச் சாசனச் சான்றுண்டு.[8] தாயும் மகனும் சேர்ந்து ஒரு விளக்கு வைத்ததற்குக் கோயினங்கையும் அவள் மகன் நெடுமாற் சாத்தன் சென்னிப்பேரயனும் உதாரணமாவர்.[9] சோழியவரையன் ஆன மாறபரணன், அரையன் அரவிந்தன், விக்கியண்ணன் தேவியான கடம்யமாதேவி முதலியோர் விளக்கு வைத்த பிறராவர்.[10]

---

4. S. I. I, Vol. XII, p. 36; Vol. XIII. p. 162.
5. S. I. I, Vol. XIII. p. 154.
6. S. I. I, Vol. VII. p. 312.
7. S I. I, Vol. III, p. 95,; Vol. XIII, p. 162, 178.
8. S. I. I, Vol. III. p. 233.
9. E. I, Vol. III. p. 280.
10. S. I. I, Vol. III. p. 96; p. 221; E. I. Vol V, p. 42.

சிவன் கோயிலில் விளக்குவைப்பதற்காகக் கொடுக்கப்பட்ட பொருளிலும் வேறுபாடு காணப்படுகின்றது: விளக்குக்கு வேண்டிய நெய்யைப் பெற்றுக் கொள்வதற்காக ஆட்டை அல்லது பசுவைக் கொடுப்பது ஒருவகை; முப்பது பசு ஓரிடத்திலும் இருபத்தேழு பசு இன்னோரிடத்திலும் கொடுக்கப்பட்டுள்ளன.[11] ஆடு கொடுக்கப்பட்டதைப் பல சாசனங்கள் கூறுகின்றன.[12] சில சாசனங்கள் சாவாமூவாப் பேராடுபற்றிக் குறிப்பிடுகின்றன. ஆடு, பசு என்னும் இரண்டையும் குறிக்கவும் இத்தொடர் சில சாசனங்களில் வழங்குகின்றது. விளக்கு வைப்பவர் கொடுக்கும் ஆடுமாடுகளை இன்னொருவர் பெற்று விளக்குக்கு நெய்கொடுக்கும் பொறுப்பை ஏற்பர். நெய் கொடுக்கமுடியாதபோது ஆடு அல்லது மாடு இறந்துவிட்டது, கிழமாய்விட்டது அல்லது வளரவில்லை என்ற சாட்டுகள் கூறப்பட்டிருக்கும். தருமம் செய்பவருக்கு அத்தருமம் எப்பொழுதும் நிலைநிற்கவேண்டும் என்ற விருப்பம் இருப்பது இயல்பு. அதனாலேயே, நெய் தடைபடாமல் விளக்குக்குக் கொடுபடவேணடும் என்பதை வற்புறுத்தவே சாவாமூவாப்பேராடு[13] என்று குறிப்பிடும் முறை வந்தது. சிறுபான்மையாகக் கொடுக்கப்பட்டுவந்த மாடும் இத்தொடரினாலேயே வழங்கப்பட்டது;

விளக்கு வைப்பதற்காகப் பொன் கொடுக்கும் முறையும் இருந்திருக்கிறது. பொன்னைப் பெற்றுக்கொள்

---

11. S. I I, Vol. XIII. p. 167, Vol. VI. p. 7.
12. S. I I. Vol. III. p. 221, Vol. XIII. p. 128, p 132, 169.
13. E. I. Vol. V, p. 42; S. I. I. Vol. XII. p. 39, Vol. III, p. 230.

பவர் விளக்குக்கு வேண்டிய நெய்யைக் கொடுத்துவர வேண்டும்; பதினைந்து சாசனங்களில் வரையில் விளக்கு வைப்பதற்குப் பொன்கொடுக்கப்பட்டதை எடுத்துக் கூறுகின்றன.[14] பொன்னுக்கு அடைமொழி வழங்கப் பட்ட சாசனங்கள் சில உள; ஊர்க்கற்செம்மை,[15] தீப்போக்கு செம்பொன்[15a] துளைபொன்[16] என்ற அடைமொழிகள் காணப்படுகின்றன; பொன்னில் உயர்தரமானவற்றை இவ்வடைமொழிகள் குறிப்பனவாக வேண்டும். ஊர்க்கற்செம்மை என்ற பதப்பிரயோகம் நான்கு சாசனங்களிற் காணப்பட்டபோதிலும் நான்கு சாசனங்களும் பல்லவ மன்னர் சாசனங்களாக இருத்தல் கவனித்தற்குரியது; துளைபொன் என்ற பதப்பிரயோகம் சோழர் சாசனத்தில் வருகின்றது. பொன் என்பது ஒரு வகை நாணயம்.

பழங்காசு என்னும் நாணயமும் அக்காலத்தில் வழங்கியிருக்கிறது. விளக்குவைப்பதற்குப் பழங்காசு கொடுத்ததுபற்றி மூன்று சாசனங்கள் குறிப்பிடுகின்றன.[17] பழங்காசு என்பது காலத்தால் முந்திய மன்னர்களால் வெளியிடப்பட்டு நாட்டில் வழங்கிவந்திருக்க வேண்டும்; பாண்டியர் ஆட்சியில் அமைந்த பிரதேசங்களிலேயே இவ்விரு சாசனங்களும் காணப்படுகின்றன. பணம் போலப் பொருள் கொடுத்து விளக்கு வைப்பித்

---

14. E. I. Vol. VII. p. 139, 140, Vol. XX, p 53, Vol. XXIII, p. 42, S. I. I. Vol. III p. 95, 96, 98 etc.
15. S. I. I. Vol. XII. p. 37. p 39, 40, 45
15a. E. I. Vol. XXXIII, p. 101.
16. S. I. I. Vol. XIII. p. 116.
17. E. I. Vol. XX, p. 52, Vol. VII, p. 139.

தலும் இருந்திருக்கின்றது. நெல் கொடுக்கப்பட்டதை ஒரு சாசனம் கூறுகின்றது.[18]

விளக்கு வைப்பதற்கு நிலம் கொடுக்கப்படுவதுமுண்டு.[19] அவ்வாறு கொடுக்கப்பட்ட நிலத்திற்கு ஓரிடத்திலே தேவபோகம் என்ற பெயர் வழங்கியிருக்கிறது.[20] கொடுபட்ட நிலத்தின் எல்லைகளை நுட்பமாக விவரித்துச்செல்வதால், ஒரு சாசனம் நீண்ட அளவினதாக ஆகிவிடுகின்றது.[21] நிலத்தைத் தானம்செய்யும்போது ஒரு பிரச்சினை எழுகின்றது; நிலவரி அக்கால அரசாங்கத்தின் முக்கியமான வருமானமாகும்; எனவே, நிலம் கொடுத்தவர் தானம் செய்யப்பட்ட நிலத்திற்குரிய வரியை அரசாங்கத்துக்குக் கொடுத்து வருவதாக உடன்படவேண்டும்.[22] அல்லது உள்ளூர் நிறுவனமாகிய சபை முதலியவற்றிடம் ஒரு தொகைப்பணம் கொடுத்து நிலத்தை இறையிலி நிலமாக மாற்றவேண்டும்.[23] தானமாகக்கொடுக்கப்பட்ட பொருளைப் பெற்றுக்கொள்பவர் விளக்கு நெய்யின்பொருட்டு முதலைச் செலவிட்டால், முதல் கரைந்துவிடும். அதனால், முதலைப் பேணிக்கொண்டு வட்டியை மட்டுமே செலவிடலாம் என்று சில இடங்களில் எடுத்துக் கூறப்படுகின்றது.[24]

---

18. S. I I, Vol. XII p. 22.
19 S I. I, Vol. XII, p. 35, Vol. XIII, p. 173, Vol. V. p. 288:
20. S. I. I, Vol. XII, p. 50:
21. S. I. I, Vol. XIII, p. 160.
22. S. I. I, Vol. XIII. p. 163.
23. S. I I, Vol. XII p. 42, Vol. XIII. p. 172, Vol. III. p. 238.
24. E. I. Vol. XX, p. 52.

நுந்தா விளக்கு எரியவேண்டிய காலத்தை எடுத்துக் கூறுவன சாசனங்கள் பல. விளக்கு எவ்விதத் தங்குதடையுமின்றி எப்பொழுதும் எரிந்துவரவேண்டும் என்றே விளக்குவைத்தோர் விரும்பினர். 'எப்பொழுதும்' என்பதை எடுத்துக் கூறும் முறையிலே சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. 'சந்திரனும் நட்சத்திரங்களும் இருக்கும் வரை' எனப்படும் ஆசந்திர தாரம் என்ற வடமொழித் தொடர் ஓரிடத்தில் வழங்கப்படுகின்றது.[25] ஆசந்திர காலம்[26] என்பது இத்தொடரின் திரிபாக இருக்க வேண்டும்; அல்லது அது 'சந்திரன் இருக்கும் வரை' எனப்பொருள்படவேண்டும்; சந்திராதித்யவத் என்னும் வடமொழித் தொடரே மிகப்பரவலாக வழங்கியுள்ளது.[27] இது 'சந்திரனும் சூரியனும் உள்ளவரை' என்று பொருள் படும். சோழர் சூரிய குலத்தைச் சேர்ந்தவர்களாதலால், சூரியனையும் உள்ளடக்கிய தொடர் வழக்குப் பிரபலமாகியிருக்கலாம். இரண்டாம் வரகுணபாண்டியனது சாசனமொன்று தவிர இத்தொடரை வழங்கும் ஏனைய சாசனங்கள் யாவும் சோழருடையனவாக இருத்தல் கவனித்தற்குரியது. நுந்தா விளக்கு எனக் குறிப்பிடப்பட்ட போதும் அதை இரவில் எரித்துப் பகலில் அணைக்கும் வழக்கம் இருந்திருக்கலாம். அதனால் இரவும் பகலும் எரிக்கவேண்டும்[28] என்று சாசனங்கள் சிலவற்றிற் கூறப்பட்டுள்ளது.

---

25. S I. I. Vol. XII. p. 39.
26. S. I. I. Vol. XII. p. 38.
27. E. I. Vol. V, p. 42, Vol. XX, p. 52, S. I. I. Vol XIII, p. 119, 136, 167, 171; Vol. V, p. 246, Vol. III. p. 230.
28 E. I. Vol. VII. p. 140, Vol. XX, p. 52, p. 53, Vol. XXIII, p. 42; S. I. I. Vol. XIII, p. 119, 162, 167. Vol, V, p. 246 etc.

விளக்கு வைப்பதற்குப் பொருள் கொடுத்தோர் அந்தத்தருமத்தை மேற்பார்வையிடுவதற்கும் பொறுப் பேற்பதற்கும் குறிப்பிட்டவரை நியமித்துச் செல்லும் வழக்கம் காணப்படுகின்றது; இங்கு உள்ளூர் நிறுவன மானசபை முக்கியத்துவம் பெறுகின்றது; சபை அந் தணர்களின் கிராமிய நிறுவனமாகும்; பொருள் அநேக மாகச் சபையிடமே கொடுக்கப்படுகின்றது.[29] இதே தொடர்பில், பரடை சபை,[30] மூல பருடை[31] என்பனவும் குறிப்பிடப்படுகின்றன: பரடை என்பது பரிசத் என்னும் வட சொல்லின் திரிபாக இருக்கவேண்டும்; பரிசத் என்பது வடமொழியில் உள்ளூர் நிறுவனத்தையே குறிக் கிறது. பதிபாதமூலம் என்பதும் சில சாசனங்களிலே காணப்படுகின்றது.[32] கோவிலிலுள்ள இறைவனுடைய அடியார்களை இத்தொடர் குறித்திருக்கிறது; அமிர்த கணம் என்பது இரண்டு சாசனங்களிலே காணப்படு கின்றது.[33] கோவிற் பொருளைப் பெற்றுக்கொள்ளும் குழு என இது விளக்கப்படுகின்றது. இவை யாவும் சபையோடு தொடர்புடையனவாக இருக்கவேண்டும். சபையின் பல் வேறு வாரியங்கள் அல்லது குழுக்கள் ஒரு சாசனத்திற் கூறப்படுகின்றன.[34]

---

29. E. I. Vol. XX. p 52, 53; S. I. I, Vol, III, p. 98; S. I I., Vol, XII, p. 23, 37, 39, 42, 51, Vol, XIII, p. 132, etc.
30. E. I. Vol, V, p. 42.
31. S. I. I, Vol, XIII, p. 167.
32. S. I, I. Vol, XIII, p. 149, Vol, V. p. 246. p. 288.
33. S. I. I, Vol. XII, p. 37, 40.
34. S. I. I, Vol. XIII, p. 163.

பிராமணரல்லாதாரின் உள்ளூர் நிறுவனமான ஊர் ஒரிடத்திற் பொறுப்பு ஏற்கின்றது.[35] சபையும் ஊரும் தேவகன்மியும் ஒருங்குசேரக் கூறப்பட்டுள்ளனர்.[36] தேவகன்மி என்பது கோவிற் கருமம் செய்பவராக அல்லது பூசாரியாக இருக்கலாம்; தேவகன்மி மட்டுமே குறிப்பிடப்பட்ட இடமும் உண்டு.[37] ஊராரோடு இசையாளர் சேர்ந்தும் கருமமாற்றியுள்ளனர்.[38] கோயிலுடையான்[39] என ஒரு சாசனம் கூறுவது கோயிலை நிர்வகிப்பவரையாகலாம். இன்னோரிடத்திலே சான்றோர் என்ற வகுப்பினர் பொறுப்பேற்கின்றனர்.[40] விளக்குவைப்பதற்காகச் சபைக்கும் பணம் கொடுபடுமிடங்களில், சபை பணத்தைத்தான் எடுத்துக்கொண்டு ஊர்மஞ்சிக்கம் என்னும் கிராமப் பொது நிலத்திலே கோவிலுக்கு நிலம் தானம் செய்வதுண்டு.[41] இந்த வகையிலே சபை கிடைத்த பணத்தைக் கொண்டு கோவிலுக்குத் திருப்பணி செய்வதுண்டு; கோவிலொன்றுக்குத் திருமஞ்சனசாலை அமைக்பட்டது ஒருதாரணமாகும்.[42] விளக்கு வைப்பதற்கு ஆடு கொடுபட்ட இடங்களில், சபை ஆட்டை இடையரிடம் கொடுத்து நெய்க்கு ஒழுங்குசெய்தது.[43]

சிவன்கோவிற் தருமத்தை மேற்பார்வையிடும் பொறுப்புச் சிவனடியார்த்துறவிகளான மாகேசுவரருக்

---

35. S I. I, Vol XII, p. 39.
36. S. I. I. Vol III, p. 227.
37. S. I. I, Vol III, p. 230.
38. S. I. I, Vol XIII, p. 168.
39. S. I. I, Vol XIII, p. 165.
40. S I. I, Vol XIII, p. 169.
41. S. I. I, Vol III, p. 96, 100, Vol, XIII, p. 171.
42. S. I. I, Vol XIII, p. 131.
43. S. I. I, Vol XIII, p. 132.

குப் பெரும்பாலும் வழங்கப்பட்டது.[44] மாகேசுவரர் நாற்பத்தெண்ணாயிரவர் பற்றிய குறிப்பு இரண்டு சாசனங்களில் இடம்பெறுகின்றது.[45] பெருந்தொகையான மாகேசுவரர் இருந்தனர் என்பதையே இந்த எண்ணிலிருந்து அறிந்துகொள்ளலாம். சாசனங்கள் சிலவற்றிற் சபை மட்டுமே குறிப்பிடப்பட, சாசனங்கள் வேறு சிலவற்றில் மாகேசுவரர் மட்டுமே குறிப்பிடப்படுகின்றனர். சபையையும் மாகேசுவரரையும் சேர்த்துக் கூறும் சாசனங்களும் பலவாம். விளக்கு எரிப்பதிலே தடைதாமதம் ஏற்பட்டால், சம்பந்தப்பட்டவரைத் தண்டித்துத் தருமத்தை நிலைநிறுத்தும் உரிமையையும் மாகேசுவரருக்கு வழங்கப்பட்டுள்ளது.[46] சபைக்கு இந்த உரிமை இருந்ததாகத் தெரியவில்லை.

மாகேசுவரர் இல்லாத இடங்களிற்போலும் அக்காலச் சட்டமன்றமெனத்தகும் தர்மாசனத்துக்கு அந்த உரிமை வழங்கப்பட்டுள்ளது.[47] ஆனால், சில சாசனங்களிலே சபை, தர்மாசனம், மாகேசுவரர் என்ற மூன்றும் ஒருங்கே இடம்பெறுகின்றன. தருமத்தை நிலைநிறுத்துவதற்கு இன்னொரு வழியும் சில இடங்களில் உதவியது. தண்டமாக விதிக்கப்படும் பணம் அன்று ஆட்சி செய்கின்ற அரசனுக்குச் சேரவேண்டும் என்று

---

44. E. I. Vol. VII, p. 140; S. I. I. Vol. III. p. 95, 96, 221, Vol VII, p. 312, Vol. XII. p. 22, Vol, XIII. p. 116. etc.
45. E. I. Vol, XX, p. 53, 52.
46. E. I. Vol. XX, p, 52, S I I, Vol, III, p. 95, 98, 100 Vol, XIII p. 173.
47. S. I. I, Vol, XII, p. 38, 39. 40. Vol, XIII, p. 157, 160

சில சாசனங்கள் விதித்துள்ளன.[48] தருமம் தவறுமிடத்து மத்திய அரசாங்கமே நடவடிக்கை எடுக்கும்படி தூண்ட இது உதவியிருக்கும்; விளக்கு வைப்பதற்குக் கொடுபட்ட பொன்னை வட்டிக்குக் கொடுத்துக் கோவிலில் வட்டியைத் தவறாது பெற்றுக் கணக்கு எழுதிவைப்பது இரண்டு சாசனங்களிலிருந்து தெரியவருகின்றது.[49] வட்டியை வாங்கிச் செல்ல வருவோருக்கு விதிக்கப்பட்டுள்ள உணவு முதலிய உபகாரங்களைப் பற்றி அறியக்கூடியதாயுள்ளது.[50] விளக்கு எரிக்கும் தருமத்தைப் பேணுவதற்காக எடுக்கப்பட்ட முயற்சிகளே இவையாம்.

நுந்தா விளக்கு எரிப்பதை மட்டுமே கூறும் சாசனங்கள் பலவாயினும் நுந்தா விளக்கோடு வேறு சில அறச்செயல்களையும் சேர்த்துக்கூறும் சாசனங்களும் பல காணப்படுகின்றன; நுந்தா விளக்கோடு பகல் விளக்கும் ஒரு சாசனத்திற் கூறப்பட்டுள்ளது.[51] நுந்தா விளக்கு வைப்பதோடு பிராமணர் ஒருவருக்கு உணவும் படைக்க வேண்டும் என்று இன்னொரு சாசனம்[52] கூறும்; திருவிளக்கும் திருவமுதும் பல இடங்களிலே காணப்படுகின்றன.[53] விளக்கோடு சந்தியாகால அமுது கூறப்பட்டுள்ளது.[54] விளக்கு, கிடாரம், தடம் என அடுக்கிக் கூறும்

---

48. S. I. I, Vol, XII, p. 42, Vol. XIII p. 173.
49. S I I, Vol, XII, p. 39, 45.
50 S. I. I, Vol, XII, p. 38, 39, 45.
51. S. I. I, Vol, III, p. 230.
52. S. I. I, Vol, XIII, p. 171.
53. S. I. I, Vol, III, p. 96, Vol. XII, p. 24, 36, 42, 51, Vol. XIII, p. 160
54. E. I, Vol, XI, p. 227.

சாசனமும் உண்டு.[55] விளக்குக்கு நெய்யும் கற்பூரமும் கொடுபடவேண்டுமென ஓரிடத்தில் எழுதப்பட்டுள்ளது.[56]

விளக்குவைத்தல் முதலிய தருமங்களைச் சாசனங்களாக எழுதிப் பொது இடங்களில் வைப்பதனால், பொது மக்களும் அத் தருமங்களை நிலைநாட்டுவதில் ஊக்கம் காட்டக்கூடும். மேலும் தருமத்தைப் பேணிவரும்படி மக்களைப் பணிவாகக் கேட்கும் சாசனங்களும் தருமத்தைப் பேணுவிடின் எத்தகைய இழிவு ஏற்படும் என்று கூறும் சாசனங்களும் இவ்விரு கூறுகளும் அமைந்த சாசனங்களும் எனச் சாசனங்களை மூன்றாக வகுக்கலாம். தருமத்தைப் பாதுகாப்பவருடைய 'அடி என் தலைமேலன' என்று தானஞ் செய்தவர் பல இடங்களிற் கூறியுள்ளார்.[57] 'பாததூளி என் தலைமேலன' என ஒரு சாசனத்திற் கூறப்பட்டுள்ளது.[58] தருமத்துக்குத் தீங்கு செய்பவன் தன் தாய்க்குக் கணவனாக இருப்பவன் என்று இகழப்பட்டுள்ளான்.[59] அவனுக்குக் கிடைக்கவேண்டிய பாவம் 'கங்கையிடைக் குமரியிடைச் செய்தார் செய்த பாவம்' எனப்பட்டுள்ளது.[60] கங்கையும் கன்னியாகுமரியும் சைவர்களுக்கு மிகவும் புனிதமானவை; புனித தீர்த்தங்களிலே புண்ணியங்கள் சிறப்பாகப் பயன் தருவது போலப் பாவங்கள் கொடிய துன்பத்தைத் தரும்.

---

55. S. I. I, Vol, XIII, p. 136,
56. S. I. I, Vol, III, p. 100.
57. S. I. I, Vol, III, p. 96, 98, 100; Vol. XII p. 24; Vol. XIII, p. 160, 171
58. S. I I, Vol, III, p. 233.
59. S. I I, Vol, XII, p. 24,
60. S. I. I, Vol, III, p 95, 98, 100; Vol. XIII, p. 160 E. I, XI, p. 227, 228.

அதனுல், அந்தப் பயம் தருமத்துக்கு இடையூறு செய்ப வர்களுக்குத் தடையாக அமையவேண்டும் என்ற நோக் கில் இவ்வாறு கூறப்பட்டுள்ளது:

நுந்தா விளக்கு அல்லாத விளக்கும் சிவன்கோவி வில் வைக்கப்பட்டுள்ளது; தேவரடியாள் சேந்தன் செய்யவாய்மணி சந்தி விளக்குக்கும் ஆற்றுத்தண்ணீர் ஒரு குடத்துக்கு மாகப் பத்துக் கழஞ்சு பொன் வைத்ததைப் பற்றி ஒரு சாசனம் கூறியுள்ளது.[61] சந்திவிளக்கு என்று இரு சாசனங்களிற் காணப்படுவது[62] சந்தியாகால விளக்காக இருக்கலாம்; ஒரு பகுதியே கிடைத்துள்ள ஒரு சாசனம் பகல் விளக்கைக் குறிப்பிடுகிறதென ஊகிக்கலாம்[63] நான்கு சாசனங்கள் பகல் விளக்கு எனத் தெளிவாகக் கூறியுள்ளன.[64] எருமணம் பிடா ரஞ்செய் சன்னசர்மன், பிராமணி நாராயணன் பூண்டி, மன்ருடி பவதாயன், கடம்பங்குடி ஊர்க்கிழத்தி சிராமன் மூத்தாள் என்போர் இவ்விளக்குகளை வைத்துள்ளனர்;

சிவன் கோவிலுக்கு விளக்கு வைப்பது பற்றியே பெரும்பாலான சாசனங்கள் காணப்படுகின்றபோதிலும் பூசை ஒழுங்காக நிலைபெறச்செய்வதை நோக்கமாகக் கொண்ட சாசனங்கள் சிலவும் கிடைத்துள்ளன. கோவி லுக்கு நிலம் கொடுத்தும் பணம் கொடுத்தும் இத்த கைய ஒழுங்குசெய்யப்பட்டுள்ளது. கோவில் அர்ச்சனையை

---

61. S. I I, Vol, XIII, p. 42.
62. S. I. I, Vol. XII, p. 44, Vol. XIII. p. 153.
63. S. I. I, Vol. XII, p. 28.
64. S. I. I, Vol. XIII, p. 153, 165, Vol. V, p. 276, Vol. VII, p. 316.

நடத்துவதற்கான செலவுக்காக விடப்பட்ட நிலம் என்ற பொருளில் அர்ச்சனாபோகம் கூறப்பட்டுள்ளது.[65] இவ்வாறு கூறுவன யாவும் பல்லவர்களுடைய சாசனங்களாகக் காணப்படுகின்றன; அர்ச்சனாபோகம் என்று கூறப்படும் இடங்களிலே பூசையில் எவ்வகைச் சேவைகளுக்காக நிலம் விடப்பட்டது என்ற தனிக் குறிப்பு இல்லை; இவ்வகைத் தானங்களைக் கூறும் சாசனங்களில் ஒன்று தவிர, ஏனையவை அளவிற் சிறியவை. ஒரு சாசனம் மட்டுமே பெரிய நிலத்தின் எல்லைகள் யாவற்றையும் விரிவாகக் கூறுவதால், அளவில் நீண்டுசெல்கின்றது.[66] அர்ச்சனாபோகம் என்று பெயர்பெறாத நிலக்கொடைகளிலே செலவுவகைகள் தனித் தனியாகக் கூறப்படுகின்றன.[67] சிவனுக்குத் திருவமுது ஒன்றுக்காக நிலம் கொடுக்கப்பட்டுள்ளது.[68] நந்தவனத்துக்குப் பொறுப்பாக உள்ளவர்கள் இருவர்க்கும் கண்காட்டிகள் இருவர்க்கும் பன்னிருவர் வேறு சிலரின் தேவைக்காகவும் நிலம் கோவிலுக்கு விடப்பட்டது தெரியவருகின்றது;[69] இறைவனுக்குத் தினமும் திருவமுது படைக்கவேண்டுமென்றும் தவறினால் தண்டம் செலுத்தவேண்டும் என்றும் இன்னொரு சாசனம் கூறுகின்றது.[70] திருவமுதுக்கு நெல் இவ்வளவு, பூசைசெய்யும் சிவப்பிராமணனுக்கு நெல் இவ்வளவு, ஸ்ரீபலி படைப்போருக்கு நெல் இவ்வளவு, பூமாலை கட்டுதல், திருப்பதிகம் பாடுதல் முதலிய பணிகளைச் செய்வோருக்கு நெல் இவ்வளவு, திரு நுந்தா

---

65. S. I. I, Vol, XII, p. 26, 35, 37, 48.
66. S. I. I, Vol. XII. p. 48.
67. S. I. I, Vol. III. p. 93, Vol. XII, p. 34, Vol. XIII, p. 157, 159.
68. S. I. I, Vol. XIII. p 159.
69. S I. I, Vol. XIII p. 157.
70. S. I. I, Vol. XII. p. 34.

விளக்கு, திருமெய்ப் பூச்சு முதலிய நற்காரியங்களுக்குப் பொன் இவ்வளவு என்று ஒரு சாசனம் நிலத்தானத்தி லிருந்து பூசை நடக்கவேண்டியவாற்றை விரிவாக வகுத் துக் கூறியுள்ளது.[71]

கோவிற் பூசைக்குக் காசாகவும் பொன்னாகவும் பணம் வழங்கப்பட்டுள்ளது. பொன் வழங்கப்பட்ட தைச் சில சாசனங்கள் எடுத்துக் கூறுகின்றன.[72] இச் சாசனங்கள் யாவும் பல்லவ மன்னருடைய பெயரில் இருந்தாலும், இவற்றுள் ஒன்றிலே பெருந்தொகையான ஐஞ்நூற்றெழுபது கழஞ்சு பொன் வழங்கித் திருவீரட் டானத்துச் சிவபெருமானுக்குப் பூசைக்கு ஒழுங்குசெய்த வன் இரண்டாம் வரகுணபாண்டியனாவன். திருவீரட் டானம் பல்லவருடைய ஆட்சிக்குட்பட்ட நடுநாட்டைச் சேர்ந்ததால் நிருபதுங்கவர்மனுடைய ஆட்சியாண்டே இச் சாசனத்திற் கூறப்பட்டுள்ளது. நான்கு நேரத் திரு வமுதுக்கு வேண்டிய அரிசி, பச்சப்பயற்றுப்பருப்புக்கும் மாயம் முதலிய ஐந்து கறி, புளிங்கறிக்கு வேண்டிய தயிர், கறிக்கு வேண்டிய காயம், கறி துமிப்பதற்கான நெய், நிவேதிக்கவேண்டிய நெய் முதலியன வட்டியாக வந்து சேரும்படி இருநாற்றுத்தொண்ணூறு கழஞ்சு பொன் கொடுபட்டதுபற்றி அதே சாசனம் கூறும்.[73] நிருபதுங்கனுடைய மனைவி வீரமாதேவியார் இரணிய கருப்பமும் துலாபாரமும் புகுந்து புண்ணியம் தேடிக் கொண்டவளாய் அப் பொன்னில் ஐம்பது கழஞ்சு திருக் கொடிகாவில் இறைவனுக்குக் கொடுத்தாள். அதில் பாதி வட்டிக்குக் கொடுபட்டு அர்ச்சகருக்கு இரு நாழி அரிசி

---

71. S. I. I, Vol. III, p. 93.
72. S. I. I, Vol, XII, p. 30, 32, 51.
73. S. I. I, Vol, XII, p. 30.

யும் ஒரு பிடி நெய்யும் நுந்தா விளக்குக்கு உழக்கு நெய்யும் தினசரியாகப் பெறப்பட்டது.[74] கோவிலுக்குத் தண்ணீர் எடுத்துக் கொடுப்பதற்காகப் பதினொரு கழஞ்சு பொன் வட்டிக்குக் கொடுபட்டது.[75]

காசு கொடுத்துப் பூசைக்கு ஒழுங்கு செய்யப் பட்ட செய்தி வரகுணபாண்டியனுடைய இளங்கோக் குடித் திருப்போத்துடையார் கோவிற் சாசனத்திற் காணப்படுகின்றது.[76] அரசன் இருநூற்றுத்தொண்ணூறு காசு இளங்கோக்குடிச் சபையிடம் கொடுத்தனன். சபை ஆண்டுக்கு ஐஞ்நூற்றெண்பது கலம் நெய் அளக்கவேண் டும். கோவிற் பணியாளரும் சபை வாரியரும் கோவி லுக்கு நான்கு நேரமும் திருவமுது செலுத்தவேண்டும். ஒரு நேரத் திருவமுதுக்கு வேண்டிய அரிசி, பயிற்றுப் பருப்பு, நெய், தயிர், வாழைப்பழம், சர்க்கரை, காய்க் கறி, புளிங்கறி, புழுக்குக்கறி, பொரிக்கறி, வெற்றிலை, பாக்கு என்பன எவ்வளவு என முதலிற் கூறப்பட்டிருக் கின்றன. நான்கு நேரத் தேவைக்காகப் பின்பு யாவும் நாலாற் பெருக்கிக் கூறப்படுகின்றன; ஒவ்வொரு நாளும் அந்தந்தப் பொருளைப் பெற்றுக்கொள்வதற்காக, வட்டி யாக வந்த நெல்லில் ஒவ்வொரு பகுதி ஆண்டாண்டு தோறும் பிரித்துக் கொடுக்கப்படுகின்றது. இவ்வாறு தவ றுமல் நடந்து வரவேண்டுமென்று வரகுண மகாராசர் விதித்தார் எனச் சாசனமுடிவிற் கூறப்பட்டுள்ளது.

சிவன்கோவிலில் விசேட பூசைகளுக்கான ஒழுங் குகளும் செய்யப்பட்டுள்ளன; புண்ணிய தினங்களில்

---

74. S. I. I, Vol, XII, p. 32.
75. S. I. I, Vol, XII, p. 51.
76. E. I, Vol, IX, p. 88.

விசேட பூசைகளுக்கான ஒழுங்குகள் செய்யப்பட்டதை எடுத்துக்கூறும் சாசனங்கள் சில கிடைத்துள்ளன.[77] சூரியன் ஓர் இராசியிலிருந்து இன்னோர் இராசிக்குச் செல்லும் மாதத்தொடக்க காலமாகிய சங்கிராந்தியில் விசேடபூசை நடைபெற்றதை இரண்டு சாசனங்கள் கூறுகின்றன.[78] கொடும்பாளூர்த் தேவி பூதி அறிந்திகை திருவொற்றியூர் மகாதேவருக்குச் சங்கிராந்தி தோறும் அரிசி, மா, வாழைப்பழம், சர்க்கரை, வெற்றிலை, பாக்கு முதலியன கிடைப்பதற்காக இருபத்தேழு கழஞ்சு பொன் கொடுத்தாள்: வைக்காட்டூர் பொன்னைப் பெற்று அரை ஆண்டுதோறும் வட்டிசெலுத்திவந்தது.[79] அதே கோவிலுக்குப் பல்லவரையர் தேவியாகிய பழியன் பில்லி ஐந்து கழஞ்சு பொன் தானம் செய்தாள்: மணலிச்சபை அப் பொன்னைப்பெற்றுக்கொண்டு, சங்கிராந்திதோறும் அரிசி, நெல், வெற்றிலை, பாக்கு, பழம் என்பன வட்டியாக எப்பொழுதும் கொடுத்துவருவதாக உடன்பட்டது: மணலிச்சபை அவ்வாறு கொடுக்கத் தவறினால் தர்மாசனத்துக்குக் குறிப்பிட்ட பணம் தண்டம் கொடுத்துப் பின்னும் வட்டியைத் தொடர்ந்து செலுத்தவேண்டியிருந்தது.[80]

சங்கிராந்திகளிலும் மேடத்திலும் துலாத்திலும் சூரியன் நுழையும் தினங்கள் 'விஷு' என்னும் பெயரில் விசேட புண்ணிய தினங்களாகக் கொள்ளப்படுகின்றன; ஐப்பசி, சித்திரை என்பனவற்றில் வரும் அப்புண்ணிய

---

77. S. I. I. Vol. XIII. p. 169, 110; Vol. XII, 47, 30, 19, Vol. III. p. 227.
78. S. I. I. Vol XII, p. 47, 30.
79. S. I. I. Vol XII, p. 47.
80. S. I. I. Vol XII. p. 30.

தினங்களுக்கு ஒரு கோவிலில் விசேட பூசை நடைபெறு வதற்காக மூன்றும் நந்திவர்மனுடைய மனைவி அடிகள் கண்டன் மாறம்பாவையார் ஐந்து கழஞ்சு பொன் கொடுத்தார். திருவமிர்துக்கான நெய், பால், தயிர், பரி வாரத்துக்கான திருவமுதுக்கு அரிசி, கோவில் ஊழியர்க ளுக்கும் இருபது பிராமணர்களுக்கும் உணவு என்பன இப் பணத்தின் வட்டியிலிருந்து வழங்கப்படவேண்டும் என்று பல்லவ மாதேவியார் விதித்தார்.[81] பகைச் சந்திரவிசை யரையர் திருவாதிரைத் தினத்தில் நூறு பேருக்கு உணவு அளிப்பதற்காக இருநூறு நாழி அரிசிவைத்தார்.[82] விழுப் பேரரையர் அய்யக்குட்டி அடிகள் தாயார் புகழ்த்துணை யடிகள் நூறு காடி நெல் கொடுத்தார். அதற்கு வட்டி இருபத்தைந்து காடிநெல். அதைக்கொண்டு திருக்காற் கற்றளிச் சிவபெருமானுக்குச் சித்திரையில் வரும் சித் திரை நட்சத்திரத்திலும் புரட்டாதியில் வரும் திரு வோண நட்சத்திரத்திலும் அபிசேகம் செய்யப்பட வேண்டும் என்று ஒரு சாசனம் கூறியுள்ளது.[83]

திருவிழா நடத்தும் செலவுக்காக விடப்பட்ட நிலம் திருவிழாப்புறம் என்று பெயர்பெற்றுள்ளது.[84] கோதை பவித்திரம் இந்த நிலத்தை இருவருடமிருந்து வாங்கித் திருவிழாப்புறமாகச் சபையினதும் மாகேசுவர ரினதும் பாதுகாப்பில்விட்டார். சபை இந்த நிலத்தை இறையிலியாக்கியது. திருப்பெருந்துறை மகாதேவருக்கு இந்த நிலம் விடப்பட்டது. தாயார் நினைவாக, மகன் ஒரு விசேட பூசைக்கு ஒழுங்கு செய்ததை ஒரு சாசனம்

---

81. S. I. I. Vol. III. p. 227.
82. S. I. I. Vol XII. p. 19.
83. S. I. I. Vol. XIII. p. 169.
84. S. I. I. Vol XIII. p. 110.

கூறுகின்றது; பூதிகண்டன் சித்திரை விஷுவன்று திரு விழாவுக்குப் பத்தரைக் கழஞ்சு பொன் கொடுத்தான்; முத்தையிற் சபை அதனை ஏற்றுத் திருவிழாக்காலத்து ஏழு நாளைக்குப் பத்தெட்டுக்குத்தல் எனப்படும் நன்கு குற்றித் தீட்டிய அரைக்கல அரிசி நாள் ஒவ்வொன்றுக்கும் கொடுத்துவர உடன்பட்டது. வட்டி கொடுக்கத் தவறினுல், மாகேசுவரருக்குத் தண்டம் விதிக்கும் உரிமை வழங்கப்பட்டது.[85]

தான் பிறந்த நட்சத்திரத்தில் விசேட பூசை நடத்துவதற்கு ஒருவர் ஒழுங்கு செய்ததைக் குறிக்கும் சாசனம் ஒன்றும் கிடைத்துள்ளது; காட்டுருடையான் பைதாங்கிகண்டன் பொன் ஊர்க்கற்செம்மை அறுபது கழஞ்சு தானம் செய்தான்; திருவமிர்த்துக்கு வேண்டிய பத்தெட்டுக்குத்தற் பழவரிசி, அபிசேகத்திற்கும் திருவ மிர்துக்கும் தேவையான நெய், வாழைப்பழம், சர்க்கரை, கறியமிர்து, அடைக்காயமிர்து (வெற்றிலை, பாக்கு) இளநீர், பஞ்சகௌவியங்கள், சந்தனம் தூபம் கற்பூரம் முதலியனவற்றுக்கு வேண்டியன, நந்தாவிளக்குக்குரிய நெய் முதலியவற்றுக்காக இப் பணம் வைக்கப்பட்டது[86]

காரணம் எதுவும் சிறப்பித்துக் கூறுமல் கோவி லுக்குப்பொதுவாக விடப்பட்ட நிலம் தேவதானம் எனப்பட்டது. பாண்டிய மன்னர் எண்ணிறந்த தேவ தானங்களைச் சிருட்டித்தனர் என்ற குறிப்புப் பெரிய சின்னமனூர்ச் சாசனத்திற் காணப்படுகின்றது.[87] தேவ தானம், தேவர்போகம் என இரண்டு, சாசனங்களிற்

---

85. S. I. I Vol. XII. p 25
86. S. I. I. Vol. XII. p. 40.
87. S. I. I. Vol. III. p. 454.

கூறப்படுகின்றன.[88] சிகரக்கோவில் ஒன்றைப் புதுக்குவித்த தட்டான் மாதன் மகன் அரிதிரன் ஆழிஞ்சிற்ஊம்பட்டி என்ற நிலத்தை விலைக்குப் பெற்று அக்கோயிலுக்கே தேவர்போகமாக விட்டான். ஆயிரவன் ஏறுதி சேந்தன் கல்லையிடம் மூன்று கழஞ்சு பொன்னுக்கு நிலம்வாங்கித் திருமழபாடி மகாதேவருக்குத் தேவதானமாக விட்டான்.[89] தேவதான நிலத்துக்கும் அரசனுக்குச் சில சில வரிகள் கொடுக்கப்படவேண்டும்.

தேவதானநிலம் எவ்வெவ்வாறு பயன்படுத்தப் படலாம் என்றும் விதிக்கப்பட்டது. இவ்விபரங்கள் யாவும் ஒரு சாசனத்திற் குறிப்பிடப்பட்டுள்ளன.[90] நிலம் தேவதானமாக்கப்பட்டதால் மத்திய அரசாங்கத்துக்குச் சேரவேண்டிய வரிகளில் ஒரு பகுதி கோவிலுக்குச் சேர வேண்டும் என்று கூறப்படுகின்றது. அவ்வரிகளாவன:- நாடாட்சி, ஊராட்சி, புரவுபொன், திருமுகக்காணம், வட்டிநாழி, புதாழி, தட்டுக்காயம், ஈழம்பூட்சி, இடைப்பூட்சி, மன்றுபாடு, தரகு, தறிக்கூறை, கூலம், நல்லா, நல்லெருது, நல்லாடு, நாடுகாவல், ஊடுபோக்கு, கல்லாணைக்காணம், குசக்காணம், பறைக்காணம், பட்டினச்சேரி முதலியன. இச்சாசனம் மூன்றும் நந்திவர்மன் காலச் சாசனமாக இருப்பதால், பல்லவர்காலப் பிற்பகுதித் தமிழ்நாட்டில் இருந்த வரிவகைகளைப்பற்றி அறிவதற்கு உதவும் சாசனங்களுள் இதுவும் ஒன்றாகும். சுட்ட ஓட்டால் மாடமாளிகை எடுக்கப்பெறுவதற்கும் தமனகம், இருவேலி, செங்கழுநீர், உள்ளி என்பன பயிரிடுவதற்கும் தென்னை நடப்பெறுவதற்கும் துரவு கிணறு

---

88. S. I. I. Vol. III, p. 90; Vol XII. p. 42.
89. S. I. I. Vol. XIII, p. 160.
90. S. I. I. Vol. II, p. 507

தோண்டுவதற்கும் செக்கு இடுவதற்கும் தெங்கு பனை என்பன ஈழவர் மரமேறுவதற்குக் கொடுப்பதற்கும் கோவிலுக்கு உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. தேவதான நிலத்திலிருந்து அரசாங்கத்துக்குச் சேரும் வரிகளைக் குறைத்து அந்நிலத்துக்கு நீர்ப்பாசன வசதியும் செய்து ஆதரித்தான் மன்னன் ஒருவன். பாண்டியன் ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் அவ்வாறு செய்தான்.[91]

சிவன்கோவில்களுக்குக் கட்டிடவேலைகள் பல, இக்காலத்தில் நடந்தன; பள்ளிப்படை என்றவகைக் கோவில்கள் பல இக்காலத்தில் புதியனவாக எழுந்தன. பெரியார் சிலருடைய உடலைப் புதைத்த இடத்து, சிவன் கோவில்கள் சில கட்டப்பட்டன; மன்னர் போர்க்களத் திற்பட்ட இடங்கள் சில, இவ்வாறு சிவன்கோவில்களாக மாறின. பிருதுவீபதி என்ற கங்க மன்னன் பல்லவருக்கும் பாண்டியருக்கும் இடையில் நடந்தபோரிற் பல்லவர் பக்கம் நின்று போரிட்டு மாண்டான். அவனைப் புதைத்த இடத்து அவனுடைய மகன் பள்ளிப்படைக் கோவிலும் அதிய்தகாரம் எனப்படும் சமாதியும் கட்டினன்.[92] பரமேசுவரன் கோவிலுக்கு முன்றில் களத்தூர்ப் பெருமக்களால் அமைக்கப்பட்டது.[93] மூன்றும் நந்திவர்மன் காலத்திலே சிவன்கோவிலொன்றுக்கு செல்வவாணராயன் முகமண்டபம் செய்வித்தான்.[94]

விடேல்விடுகுமுத்தரையன் என்ற சிற்றரசன் மகன் சாத்தன் பழியிலி சிவபெருமானுக்குக் குகைக்

---

91. E. I. Vol XXVIII. p. 91.
92. E. I. Vol VII, p. 192.
93. S. I. I. Vol XII. p; 21.
94. S. I. I. Vol XII, p. 18.

கோவில் குடைவித்தான். அக்கோவிலுக்குப் பல திருப்பணிகளை அவனுடைய மகள் பழியிலி சிறிய நங்கை செய்வித்தாள். அவள் செய்வித்த திருப்பணிகளாவன:- முகமண்டபம், இடபம், இடபக்கொட்டில், பலிபீடம் என்பன.[95] இக்காலத்தில், கோவில்கள் பல, கருங்கற் கோவில்களாக மாற்றப்பட்டன; திருத்தணியிற் சிவ பெருமானுக்குக் கருங்கல்லாலான கற்றளியொன்று நம்பி அப்பி என்பவனால் அமைக்கப்பட்டுள்ளது. அதைப் பாராட்டிப் பல்லவ மன்னன் அபராசிதவர்மன் ஒரு வெண்பாப் பாடியுள்ளான்; அந்த வெண்பாவும் அவன் பாடினான் என்ற குறிப்பும் ஒரு சாசனமாக அமைந்துள்ளன.[96]

சிவன்கோவிலுக்கு வேறுபொருள்கள் சிலவும் கொடுக்கப்பட்டுள்ளன முதலாம் ஆதித்தன் காலத்தில் மாறமரையர் மகனாகிய பிருதுவீபதியார் திருவூரல் மகாதேவருக்கு முன்னூற்றுப் பதினேழு கழஞ்சு நிறையுள்ள வெள்ளிக் கெண்டியொன்றைச் சூரியகிரணத்தினன்று தானஞ்செய்துள்ளார்.[97] செம்பியன் பிருதுவிகங்கரையர் திருப்பழனத்து மகாதேவருக்கு நயபாளம் என்ற அணி கொடுத்துள்ளார்; அந்த அணியின் நடுவில் உருத்திராட்சங் கட்டப்பட்டது; அந்த அணி இருபத்தாறு கழஞ்சுடைய மாணிக்கக்கல்லைப் பிறைவடிவிற்கொண்டது. அந்த அளவில் ஐம்பத்துநாலு வயிரம், இரண்டு மாணிக்கம், இரண்டு மரகதம் என்பனவும் இடம்பெற்றன.[98] நான்கு கழஞ்சு நிறையுடைய பொற்பட்டம்

---

95 S I. I. Vol XII, p. 26.
96. S. I. I. Vol. XII, p. 42.
97. E I. Vol. XIX, p. 81.
98. S I. I. Vol. XIII. p 170.

கன்னர தேவர் தேவியாரால் கொடுக்கப்பட்டது இன்னொரு சாசனத்திலிருந்து தெரியவருகின்றது.[99]

நாலூர்ச்சபை திருமயானத்து மகாதேவர் கோவிலிலிருந்து, இருபத்தைந்து காசு பெற்றுக்கொண்டு, அக்கோவிலுக்கு அங்காடிக் கூலியை விட்டுக்கொடுததிருக்கிறது. அங்காடிக் கூலி விபரங்கள் இச் சாசனததிற் காணப்படுகின்றன. புறவூர்களில் நின்று நெல், அரிசி முதலிய அளப்பனவற்றில் காசுக்கு நாழியும் கிடந்து விற்பனவற்றில் குவியலுக்கு நாழியும் நிறுப்பனவற்றில் நிறையால் ஒரு பலமும் வெற்றிலை கூடைக்கு ஓரடுக்கும் பாக்கு பெட்டிக்கு ஒன்றும் வசூலிக்கப்பட்டுவந்தது என்பது இச்சாசனத்திலிருந்து தெரியவருகின்றது.[100] கோவிலுக்குப் பொன்னைக்கொடுத்து அதற்கு வட்டியாக இன்ன இன்ன பணி நடைபெறவேண்டும் என்று விதிக்கும் சாசனமும் கிடைத்துள்ளது.[101] பெருமுளையூர்ச்சபையார் திருவாலங்காட்டுச் சிவன்கோவிலில் நூற்றெட்டுக்கழஞ்சு பொன் பெற்றுக்கொண்டு ஆண்டாண்டுதோறும் இருநூறுகலம் நெல்லும் தினமும் உரி ஆழாக்கு நெய்யும் அளப்பதாக உடன்பட்டனர் [102]

தமிழ்நாட்டிற் சைவம் செல்வாக்குமிக்கு விளங்கியபோதும் வைதிக சமயப் பிரிவுகளான ஆறனுள் ஏனைய ஐந்தின் முழுமுதற் கடவுளரான திருமால், காளி, கணபதி, சூரியன், முருகன் என்போரும் வழிபடப்பட்டு வந்துள்ளனர். சைவசமயத்துக்கு அடுத்துச் செல்வாக்கு

99. S. I. I. Vol XIII. p. 171.
100. S. I. I. Vol III p. 222.
101. S. I. I. Vol XII. p. 27, 28.
102. S. I. I. Vol XII. p. 27.

மிக்க சமயமாக வைணவம் விளங்கியது; சைவக்கோவி லுக்கு வழங்கப்பட்ட தானத்தை ஒத்ததாகவே வைண வக் கோவிலுக்கும் வழங்கப்பட்டன. விளக்குவைத்ததைக் கூறும் சாசனங்கள் சில கிடைத்துள்ளன; அவற்றுள் இரண்டு நுந்தாவிளக்கைக் குறிப்பிடுகின்றன. திருமால் கோவில்கள் பல இடங்களில் விஷ்ணு கிருகங்கள் எனக் குறிப்பிடப்படுகின்றன; மன்றாடிகள் தொண்ணூறு சாவாமூவாப் பேராடுகளை விழுப்பெருந்தாய விஷ்ணு கிருகத்து நுந்தாவிளக்குக்காக விட்டனர்.[103] திருமால் கண்ணனவதாரஞ் செய்தபோது கோகுலத்தில் ஆயர்பாடி யில் இடையரிடையே வளர்ந்ததால், மன்றாடிகள் எனப் பட்ட இடையர் அவரைச் சிறப்பாகப் போற்றினர்; காடுபட்டி முத்தரையர் மகனார் அரிகண்டப்பெருமானார் திருமுக்கூடலிலுள்ள திருமாலுக்குத் திருநுந்தாவிளக்கு எரிப்பதற்காகச் சியபுரத்துச் சபையிடம் முப்பது கழஞ்சு பொன் கொடுத்தார். ஒரு கழஞ்சுக்கு ஆண்டு வட்டி விகிதம் மூன்று மஞ்சாடியாகும்; எனவே முப்பது கழஞ் சுக்கும் ஆண்டு வட்டி நாலரைக் கழஞ்சாகும். சபை ஒரு கழஞ்சுக்கு நாற்பது நாழி எண்ணெய் வீதம் ஆண்டு தோறும் நூற்றெண்பது நாழி எண்ணெய் கொடுத்து வரும்.[104] நந்தாவிளக்கு என்று குறிப்பிடாது வெறுமனே விளக்கு என்று குறிப்பிடும் சாசனமும் கிடைத்துள்ளது;

திருவேங்கடத்துப் பெருமாள் திருப்பணி முத லியன கோவில் மூலத்தானத்தில் நடந்தமையால், அவ ருக்குத் தற்காலிக இருப்பிடமாகத் திருவிளங்கோயில் ஒன்று அமைக்கப்பட்டது. அவ்விளங்கோயிலுக்குச் சோழ நாட்டுச் சோழனார் உலகப்பெருமானார் விளக்குவைப்ப

---

103. S. I. I. Vol. XII, p. 22.
104. S. I. I. Vol. XII, p. 32.

தற்காக முப்பது கழஞ்சு பொன் கொடுத்தார்; பணத்துக்கு நிலம் வாங்கி, நிலத்தின் வருவாய்மூலம் விளக்கு வைக்கப்பட்டது.[105] சோழனூர் எனவும் உலகப்பெருமானூர் எனவும் குறிப்பிடப்படுவதனால், கொடையாளி சோழர்குல அரசனாகலாம். சாசனம் நந்திவர்மன் காலத்ததாகலாம், சோழ அரசன் அவனுக்குக் கீழ் அடங்கிய சிற்றரசனாகலாம். விளக்குக்கும் திருவமுதுக்கும் ஒழுங்கு செய்யப்பட்டது ஒரு சாசனத்திலிருந்து தெரியவருகின்றது. திகைத்திறல் விஷ்ணுகிருகத்துக்கு முன்னூறு ஆடுகள் விளக்குக்கும் இறையிலி எனப்படும் வரியில்லாத இரண்டு வயல்கள் அமுதுக்கும் கொடுபட்டன.[106]

விளக்கு அல்லாத பிறதேவைகளுக்காகவும் திருமால் கோவிலுக்குக் கொடைகள் வழங்கப்பட்டுள்ளன; பரமேசுவர விஷ்ணு கிருகத்துக்குப் பெருந்தொகையான பணம் வழங்கப்பட்டுள்ளது. நந்திவர்மன் பத்தாயிரம் கழஞ்சு பொன் வழங்கியுள்ளான். அவனிசந்திரர் மூவாயிரம் பொன் கொண்டுவந்து கொடுத்திருக்கிறார்.[107] சாசனத்தின் தொடக்கம் மட்டுமே கிடைத்திருப்பதால், இந்தப் பணம் என்ன காரியத்துக்காகக் கொடுபட்டது எனத் தீர்மானிக்கமுடியவில்லை. சபை கோவிலுக்கு இறையிலியாக நிலம் விற்றிருக்கிறது. குறிப்பிட்ட எல்லைகளுக்குள் அடங்கிய இரண்டாயிரம் குழிகொண்ட துண்டு நிலங்கள் இரண்டு இறையிலியாக வழங்கப்பட்டன; இந்த நிலத்திற்காக இறை, எச்சோறு, வெட்டி, வெயதிகாணம் எப்பேர்ப்பட்டதும் கொடுக்கக்கூடாது; கொடுப்பவர் இருபத்தைந்து காசு தண்டம்படவேண்

105. S. I. I. Vol. XII. p. 17.
106. S. I. I Vol. XII. p. 19.
107. S. I. I. Vol. IV, p. 8.

டும்.[108] 'மாகேசுவரர் ரக்ஷை' என்று சைவருடைய சாசனங்களிற் காணப்படுவதுபோல, இச்சாசனத்தில் 'ஸ்ரீ வைஷ்ணவ ரக்ஷை' என்று காணப்படுகின்றது;

புண்ணிய தினங்களில் விசேட பூசை நடப்பதற்கான ஒழுங்கு ஒன்றை ஒரு சாசனத்திற் காணமுடிகின்றது.[109] கோவிலிற் பூசை செய்கின்ற சக்கரபாணி நம்பி விண்ணப்பத்தினுலே சம்வத்சரவாரியம், ஏரிவாரியம் என்ற குழுக்கள் உள்ளிட்ட மகாசபை நிலதானம் செய்தது. வருமானத்திலிருந்து கோவிலில் அமியுணவும் திருவிழாவும் நடத்தப்படவேண்டும் எனவும் சூரியனுடைய வடதிசைப்பெயர்ச்சி, சூரியனுடைய தென்றிசைப் பெயர்ச்சி, சித்திரை விஷு, ஐப்பசி விஷு, சூரிய கிரகணம், சந்திர கிரகணம் என வரும் நாட்களிலே திருமாலுக்குப் பிராயச் சித்த அபிசேகங்கள் நடைபெற வேண்டும் எனவும் சாசனம் விதித்துள்ளது; காட்டுத்தும்பூர் நாராயணக் கடவுளுக்குக் கோவில் எடுக்கப்பட்டுக் கனகவல்லி விஷ்ணுகிருகம் எனப் பெயரிடப்பட்டு அக்கோவிலுக்கு மூன்று நேரப் பூசைசெய்வதற்கும் மூன்று நேரம் திருவமுது வைப்பதற்கும் நந்தாவிளக்குக்கும் பூசைசெய்பவனுடைய சீவியத்திற்கும் கனகவல்லி ஏரிக்கீழ் அமைந்த நிலம் விடப்பட்டது.[110]

திருமால் கோவிலிற் பூசை நடப்பதற்கு முன்னர், பிராமணருக்கு உணவு படைக்கவேண்டிய ஒழுங்கைப் பிராமணராகிய பிரமாதிராசர் செய்ததை ஒரு சாசனம் எடுத்துக்கூறுகின்றது; திருமாலுக்கு மத்தியா

108. S. I I. Vol III. p. 30.
109. S. I. I. Vol III, p. 17.
110. E. I. Vol VII. p. 192.

ணப்பூசை நடைபெறுவதற்கு முன்னர் பன்னிரண்டு பிராமணருக்கு ஒவ்வொருவருக்கும் ஆழாக்கு நெய், ஐந்து கறி, ஐந்து உழக்குத் தயிர், வெற்றிலை, இரண்டு பாக்கு உட்பட உணவு அவர்கள் திருப்திப்படுமளவும் கொடுக்கப்படவேண்டும். இப் பிராமணர்களுக்குச் சமைப் பவர்களுக்கும் சமைப்பதற்கு வேண்டிய விறகு கொடுப் பவர்களுக்கும் பிறவற்றுக்குமான செலவுக்குச் சபையே பொறுப்பேற்கின்றது: அதனால், பிராமாதிராசர் சபை யிடம் இருநூறு கழஞ்சு பொன்கொடுத்து இந்தத் தரு மத்தை ஆசந்திரதாரமும் நடத்திவரும்படி வேண்டினார்[111] எனப்படுகின்றது:

தமிழ்நாட்டிலே சக்தி வணக்கமும் ஓரளவு செல் வாக்குடன் விளங்கிவந்துள்ளது: விண்ணகோவரையர் ஏற்றுக்குன்றனார் படாரிக்குப் பதினாறு கழஞ்சுபொன் வைத்தார். அருவாகூரார் இப்பணத்தைப் பெற்றுக் கொண்டு தினமும் நானாழி அரிசி கொடுக்க உடன்பட்ட னர்: இவ்வாறு செய்யத்தவறினால் கால் நாழி கூட்டி, நாலேகால் நாழியாக விண்ணகோவரையர் விட்டாரிடம் கொடுக்கவேண்டும்.[112] சக்தி வணக்கத்தோடு உயிர்ப்பலி யிடுதல் மிக நீண்டகாலத்தொடர்புடையது. வீரர்கள் வெற்றி குறித்துத் தம்மையே பலியிடுவதாக நேர்த்திக் கடன்செய்து அதை நிறைவேற்றுவதுமுண்டு; தம்மை ஒன்பது கூறுகளாக வெட்டி நவகண்டம் என்ற வகைப் பலியிடுதல் ஒருவகை: ஒக்கொண்டநாகன் ஒக்கதிந்தன் பட்டை பொத்தன் நவகண்டஞ்செய்து தன்னுடைய தலையை அறுத்துக் காளியின் பலிபீடத்தில் வைத்தான். இந்தச் செயலை மெச்சிய திருவாண்மூர் ஊரார் பட்டை

111. S. I. I. Vol. III. p. 2.
112. S. I. I. Vol. XII. p. 17.

பொத்தனுக்கு நிலக்கொடை செய்துள்ளார்கள்.[113] நிலம் பட்டைபொத்தனுடைய குடும்பத்துக்குச் சேர்ந்திருக்கும் என ஊகிக்கலாம்.

படாரிக்கு ஒருவர் தானஞ்செய்த நிலத்தை அவ்வூர்ச்சபை காளிகோவில் நிர்வாகத்தர்களாகிய கார்த்திகைக் கணத்தாரிடை பொருள் பெற்றுக்கொண்டு இறையிலியாகச் செய்ததை ஓரளவு சிதைந்துள்ள ஒரு சாசனத்திலிருந்து அறிந்துகொள்ளலாம்.[114] சப்தமாதர்கள் என்ற பெயரில் பிராமணி, நாராயணி, மகேசுவரி, கௌமாரி, வாராகி, உருத்திராணி, இந்திராணி என்னும் ஏழு பெண் தெய்வங்களைச் சேர்த்து நடத்தும் வழிபாடும் கூறப்பட்டுள்ளது. சபை சப்தமாதர்கள் கோவில் விமானத்தை நல்ல நிலையில் வைத்திருப்பதற்கான செலவுகளுக்காகக் காற்செய்நிலம் திருநந்தவனமாக வைத்துள்ளது. அந்நிலத்தின் ஓர் எல்லை படாரிகோவிலுக்குத் தெற்கு எனக் கூறப்பட்டுள்ளது.[115]

சூரியனுக்கான கோவில் ஒன்றே குறிக்கப்பட்டுள்ளது. அச்சாசனமும் 'மாகேசுவர ரக்ஷை' என்று கூறுவதனால், அக்கோவில் சிவனடியாரின் மேற்பார்வையில் இருந்தது தெளிவு. தத்தன்செந்தி என்ற பிராமணர் அக்கோவிலைக்கட்டி அவரே நிலதானமும் செய்துள்ளார். அமுதுக்கும் விளக்குக்கும் நெய்யமுதுக்குமாக நிலம் கொடுத்தார்; நிலத்தை இறையிலியாக்குவதற்காகச் சபைக்கு இறைகாவல் என்ற பெயரில் பதின்

---

113. S. I. I Vol XII. p. 50.
114. S. I. I. Vol XIII, p. 161.
115. S. I. I. Vol XVIII, p. 167,

கழஞ்சு பொன்னும் கொடுத்தார்.[116] ஒரு சாசனம் மட்டுமே கிடைத்திருப்பதும் அதுவும் ஒருவர் முயற்சியையே எடுத்துக்கூறுவதும் அந்த ஒருவரும் பிராமணியாக இருப்பதும் சூரியவணக்கம் அக்காலத் தமிழ்நாட்டிற் செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை என்பதற்குச் சான்றுகளாம்;

கணபதி வணக்கத்தைப்பற்றிக் கூறும் சாசனமும் ஒன்றே கிடைத்துள்ளது. அக்கோவிலையும் கட்டியவரும் தானஞ் செய்தவரும் தேவச்சானி என்ற பிராமணியாகக் காணப்படுகின்றார். கோவிலுக்கு நாற்பது காடிநெல் அர்ச்சனபோகமாக வைக்கப்பட்டது. அந்தி விளக்கு, அர்ச்சனை முதலியவற்றுக்காக இந்த நிலம் வைக்கப்பட்டது.[117] கணபதி வணக்கமும் அக்காலத் தமிழகத்திற் செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை என்றே கொள்ளவேண்டும்;

முருக வணக்கத்தைக் கூறும் சாசனமும் ஒன்றே கிடைத்துள்ளது.[118] முருகவணக்கம் பாண்டி நாட்டில் மிக நீண்டகாலமாகச் செல்வாக்குப் பெற்றுள்ளது. கிடைத்துள்ள சாசனமும் பாண்டிநாட்டுத் திருச்செந்தூருக்கு இரண்டாம் வரகுணன் செய்த பூசை ஒழுங்குகளை எடுத்துக்கூறுகின்றது. சோழப்பெரு மன்னராகிய முதலாம் இராசராசன் முதலாம் இராசேந்திரன் காலத்துக்கு முன்பு எழுந்த மிகப்பெரிய தமிழ்ச்சாசனம் இதுவே; இருநூற்றுப்பத்து அடிகள் கொண்டதாக இந்தச் சாசனம் அமைந்துள்ளது. வரகுணபாண்டியன்

---

116. S. I. I. Vol. XIII, p. 154.
117. S I. I. Vol. XII. p. 29.
118. E. I. Vol. XXI. p. 109.

ஆயிரத்து நானூறு நிறை குறையாப் பழங்காசு கொடுத்தான். அக்காசு பல சபைகளிடமும் சில ஊர் களிடமும் பங்கிட்டுக்கொடுக்கப்பட்டன. ஒரு காசுக்கு ஓராண்டுக்கு இரு கல நெல் வட்டியாகும். கோவிலுக் குத் தேவையான பொருள்கள் யாவும் வகுக்கப்பட்டு ஒவ்வொருவகைப்பொருள் ஒவ்வொரு தலதாபனம் ஆண்டு வட்டி நெல்லுக்குப் பதிலாகச் செலுத்தவேண்டு மென்று விதிக்கப்பட்டுள்ளது. செலுத்தாவிட்டால் குறிப்பிட்ட தண்டம் கோவிலுக்குச் செலுத்துவதோடு செலுத்தாதுவிட்ட பொருளினை இரட்டித்துச் செலுத்த வேண்டும். மார்கழித் திருவாதிரை, மாசிமகம், வைகாசி விசாகம் ஆகிய விசேட தினங்களிலே தினசரி செலுத்து வதைப்போல இரண்டுமடங்கு செலுத்தவேண்டும். திரு வமுது வகைகள், அபிடேகத்திரவியங்கள், ஆடைவகை கள் முதலியனபற்றிய பல விரிவான செய்திகளை இந் தச் சாசனத்திற் காணலாம். திருச்செந்தூர் ஆலயம் அக்காலத்திலேயே 'பெரிய கோயில்' என்ற சிறப்பைப் பெற்றுவிட்டதெனலாம்.

வைதிக சமயம் பிராமணியம் எனவும் கூறப் படுவதுண்டு. பிராமணரை ஆதரிப்பது பெரும் புண் ணியமாகக் கருதப்பட்டது. பிராமணருக்கு உணவு கொடுக்க ஏற்படுத்தப்பட்ட ஒழுங்குகள் சில சாசனங் களிற் கூறப்படுகின்றன. சடையன் உட்கர்சபையிடம் நானூறு காடி நெல் கொடுத்தான். அந்நெல்லின் வட் டியைக்கொண்டு, உட்கர் சபை நிலவும் ஞாயிறும் உள்ளவரை இரண்டு பிராமணரைத் தினமும் ஊட்ட உடன்பட்டது.[119] திருப்போறைச் சோமாசியார் சிவன் கோவிலில் மத்தியானம் ஒரு பிராமணர் எப்பொழு

---

119. S I. I. Vol III. p. 13.

தும் உண்டுவருவதற்குத் தேவையான தானம் செய்தார்;[120] பிராமணருக்காக நிலம் வழங்கப்பட்டதைச் சில சாசனங்கள் எடுத்துக்கூறியுள்ளன; நிருபதுங்கவர்மன் காலத்துச் சாசனம் ஒன்று பட்டவிருத்தியைக் குறிப்பிடுகின்றது.[121]

பிராமணருக்கு வழங்கப்படும் நிலம் பிரமதேயம் எனப்படும்; பராந்தகன் வீரநாராயணன் என்ற பாண்டியன் பாஸ்கரன் என்ற பிராமணனுக்கு ஏகபோக பிரமதேயம் வழங்கினன். மாறவர்மன் இராசசிம்மன் காலத்திலேயே இது அமுலாக்கப்பட்டுச் சாசனத்திற் பொறிக்கப்பட்டது; அழநாட்டில் நற்செய்கை புத்தூர் என்ற ஊரை மந்தர கௌரவமங்கலம் என்று தன் பெயரிட்டுக்காராண்மை, மீயாட்சி முதலிய உரிமைகள் அடங்கப் பாண்டியன் முறைப்படி கொடுத்தான்.[122] காராண்மை என்பது பயிரிடும் உரிமையையும் மீயாட்சி என்பது நிலஉடைமையாளர் உரிமையையுமாகும்;

அவைதிக சமயங்களிற் சமணசமயம் சம்பந்தமான சாசனங்களே கிடைத்துள்ளன. குமாரமாத்தாண்டபுரத்துப் பெருநகரத்தவர் சமணப்பள்ளியைப் புதுக்குவதற்கும் நந்தவனச் செலவுக்குமாக, தமக்குவந்து சேராத வரியாகிய வாரரவைகலை ஒதுக்கிக் கொடுத்திருக்கின்றனர்.[123] மௌனகுமாரமாத்தாண்டன் என்ற சுற்றுமாளிகையையும் கோபுரத்தையும் புதுக்கவேண்டி

---

120. S. I. I. Vol XIII. p 156.
121. S. I. I. Vol XII. p. 33.
122. S. I. I. Vol III, p. 454.
123. S. I. I. Vol III, p. 223.

யிருந்திருக்கிறது; பள்ளிக்குக் கிழக்கிலும் மேற்கிலும் நந்தவனம் இருந்திருக்கிறது. தானஞ் செய்தது வியாபாரிகளின் சங்கமான நகரமாகும். சமணசமயம் வியாபாரிகளிடம் எப்பொழுதும் விசேடமான செல்வாக்குப் பெற்றிருந்திருக்கிறது. சூரிய சந்திரர் உள்ளவரை, இத்தர்மம் நிலைபெறவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. வைதிக சமயத்தவர் சாசனங்களில் 'கங்கையிடைக் குமரியிடைச் செய்தார் செய்த பாவம்' என வரும் ஓம்படைக்கிளவி இச்சாசனத்தில் 'கங்கைக்கரை ஆயிரம் குரால் ஆக்கொன்றான் பாவம்' என்று மாற்றப்பட்டுள்ளது. அகிம்சையை முதல் அறமாகக்கொண்ட சமண சமயத்தில், உயிர்க்கொலை மாபாதகமாகும்; பசுக்கொலை கொடும் பாவம் என்பது இந்தியாவிலே தோன்றிய பெரிய சமயங்களுக்கெல்லாம் உடன்பாடாகும். ஆயிரம் பசு என்பது பாவத்தின் கொடுமை எவ்வளவு பாரதூரமானது என்பதை உணர்த்துவதற்காகும்.

முதலாம் ஆதித்தன் காலத்திலே, தமிழ் நாட்டிற்பெருந்தொகையான சமணத்துறவிகள் இருந்தது ஒரு சாசனத்திலிருந்து தெரியவருகிறது. சமணத்துறவிகளில் பெண்களும் இருந்திருக்கின்றனர். சீடர்களும் சிஷ்யைகளும் தங்களுடைய குரு அல்லது குரத்தியின் பெயரோடு தம்முடைய பெயரை இணைத்துக்கூறுவதுண்டு. குணகீர்த்திப் படாரர் என்பவர் சிங்கபுரநாட்டுக் கீழ்வழி விடால்மாதேவி ஆராந்தி மங்கலத்தைச் சேர்ந்தவர். அவருடைய மாணாக்கியார் கனகவீரக் குரத்தியாராகும். அக்குரத்தியின் மாணாக்கியரான ஐஞ்நூறு பெண்துறவிகள் இருந்திருக்கின்றனர். அவ்வூரிலுள்ள நானூறு ஆண் துறவிகளுக்கும் இப்பெண் துறவிகளுக்கும் தகராறு ஏற்பட்டிருக்கின்றது; பாதிக்கப் பட்ட பெண்துறவிகளுக்கு உணவு அளிக்க ஒழுங்கு

நடந்துள்ளது.[124] சோழப்பெருமன்னர் காலத்தொடக்கத்தில் தமிழ்நாட்டின் சிற்சில பகுதிகளிலாவது சமணம் செல்வாக்குடன் விளங்கியிருக்கிறதென்பதற்கு இது சான்றுபகருகின்றது. சமணத்துறவிகளை ஆதரிப்பதற்காக ஏற்பட்ட தருமத்தை வேறு சாசனங்களும் எடுத்துக் கூறுகின்றன. ஏரன்புத்துகனும் சந்தயன் ஆயிரவனும் நான்கு கழஞ்சு பொன்னைத் திருமலைப் பள்ளியில் கொடுத்தார்கள். பள்ளியை நிர்வகிப்பவராகிய பள்ளி ஆள்வாரி இப்பொன்னின் வட்டிகொண்டு சந்திராதித்திர் உள்ளவரை சமணத்துறவி ஒருவருக்கு உணவு கொடுத்துவரவேண்டும்.[125]

சமணத்துறவி ஒருவருக்கு உணவு கொடுப்பதோடு சமணத்திருமேனிகளைப் புதுக்குவதையும் அவற்றுக்கு அவிகொடுப்பதையும் இன்னொரு சாசனம் கூறியுள்ளது.[126] திருவயிரைப்பள்ளியில் இருந்த பார்சுவநாதத்தீர்த்தங்கரர் திருமேனியையும் இயக்கியவ்வைகள் திருமேனியையும் புதுக்குவிக்கவேண்டியிருந்தது; பார்சுவநாதர் மகாவீரருக்கு முன்பு வாழ்ந்த சமணரின் இருபத்து மூன்றுவது தீர்த்தங்கரராகும். இயக்கியவ்வைகள் என்பது தீர்த்தங்கரரின் பரிவாரத்தெய்வமாக அவருக்குப் பணியாற்றுவனவாகக் கற்பிக்கப்பட்டனவாகும். வடஇந்தியாவில் இயக்கி வணக்கம் தனிச்சிறப்பு என்றும் பெற்றதில்லை. தமிழ்நாட்டிலே பெண்தெய்வம் என்ற நிலைக்கு இயக்கி உயர்த்தப்பட்டுவிட்டது. அவ்வை, அம்மை என்பன போலி. குணவீரக்குரவடிகள் மாணுக்கராகிய காழத்துச்சந்திவீரக்குரவர் ஐஞ்

---

124. S. I. I. Vol III. p. 224.
125. S. I. I. Vol. III. p. 229.
126. E. I. Vol. XXXII. p. 337.

நூற்றைந்து காணம் கொடுத்து இந்தத் தருமத்தைச் செய்தார். இந்தச் சாசனம் இரண்டாம் வரகுணபாண்டியன் பட்டத்துக்கு வந்த ஆண்டையும் அறிய உதவுகின்றது. 'சகரயாண்டு எழுநூற்றுத் தொண்ணூற்றிரண்டு போந்தன வரகுணற்குயாண்டு எட்டு' என்று கூறப்பட்டுள்ளது. சகரயாண்டு 792 என்பது கிறித்தவ ஆண்டு 870 என்பதற்கு நேரியது. எனவே வரகுணன் பட்டத்துக்கு வந்த ஆண்டு 862 - 63 எனல்வேண்டும்.

சமயத்துக்கு அடுத்ததாக அக்காலச் சாசனங்களிற் சிறப்பிடம் பெறும்விடயம் நீர்ப்பாசனமாகும். தமிழ்நாடு வரண்ட நிலப்பகுதியாதலால், விவசாய விருத்திக்கு, ஏற்ற இடங்களில் நீர்ப்பாசனவசதிகளை அமைத்துக்கொண்டனர். ஏரிகளை வெட்டி நீர்தேங்கச் செய்தனர். ஏரியிலிருந்து வயலுக்கு நீர் பாய்ச்சுவதற்கு மதகுகள் அமைத்தனர். நிருபதுங்கவர்மன் காலத்தில் வளகூரில், அறமிளிப்பாறுழான் தூம்பு என்னும் மதகு அமைத்தான்.[126] அதே மன்னன் காலத்தில், கொங்கரையர் நின்ற பெருமான் மருதட்டேரிக்கு அணைகட்டித் தூம்பையும் புதுக்குவித்தான்.[127] தூம்புகட்டப்பட்ட பின்பு, அதைப் புதுக்குவிக்கும் வேலையும் இடையிடை நடந்துவந்திருக்கிறது என்பதற்கு இது சான்றாகும்.

தூம்பைத் தேவையானபோது திறந்து மூடுவதற்குக் கூலி கொடுபடவேண்டும். சடையன் சபையிடம் ஆயிரக்காடி நெல் கொடுத்தான். அதற்கு ஆண்டுவட்டி ஐஞ்நூற்றுக்காடி நெல்லாகும். அதைக் கொண்டு ஏரியைத் திருத்தித் தூம்பைத் திறந்து மூடும்

---

126 A S. I. I. Vol XII. p. 26.
127. S. I. I. Vol XII. p. 27.

வேலையைச் சபை செய்ய உடன்பட்டது; சம்வத்சர வாரியம் என்ற குழுவே இந்த வேலையைச் செய்வித்து வரவேண்டும் என விதிக்கப்பட்டது.[128] புதிய ஏரிவெட்டிய குறிப்பு ஒன்றே கிடைத்துள்ளது.[129] அரிஞ்சிகை வேம்பன் அந்த ஏரியை அமைத்தான்; அவனே அந்த ஏரியைத் திருத்துவதற்கும் ஏரிமதகு அடைப்பதற்கும் செலவுக்காக நிலக்கொடை வழங்கியுள்ளான். காற்செய் நிலத்தை வழங்கிய அவன் ஒரு போக விளைச்சலில் மாநிலத்திற்குக் குறுணி நெல்வீதம் நீர்ப்பாய்ச்சப்பட்ட நிலத்திலிருந்து கொடுபடவேண்டுமென்று விதித்துள்ளான்: ஏரிக்காடி என்ற பெயரில் நீர்ப்பாசன வரியைப் பெற்று ஏரியை நல்ல நிலையில் வைத்திருப்பதற்கு ஒருவர் ஏரியும் நிலமும் இருந்த ஊர்ச் சங்கத்துக்குப் பொருள் கொடுக்கிறார். ஊரானது பெரும்பாணன் சக்கடி அரையருக்கு அந்த உரிமையை விற்கின்றது. ஊரிலுள்ள விளைநிலங்கள் யாவும் ஒருபட்டி நிலத்துக்கு ஒருகாடி நெல்வீதம் செலுத்தவேண்டியுள்ளன. விளைநிலம் ஆவது இறைவயல் நிலம், கடைநிலம், கரைநிலம், ஏற்றப்புலம், தேவபோகம், பள்ளிச்சந்தம், வைத்தியபோகம், பார்ப்பான்பட்டி முதலியனவற்றை உள்ளடக்குவதாக இச்சாசனம் கூறுகின்றது. விவசாயிகள் ஏரிக்காடி கொடுக்கத்தவறினால், தருமாசனத்துக்கு இருபத்து நான்கு காணமும் ஊர்ச் சங்கத்துக்கு நாற்பத்தெட்டுக்காணமும் தண்டம் கொடுக்கவேண்டும் எனவும் தண்டம் கொடுத்தபின்பும் ஏரிக்காடியை முறைப்படி கொடுத்துவரவேண்டும் எனவும் நெல் எட்டு நாழி அளவுகொண்ட அளவையால்

---

128. S. I. I. Vol. III. p. 8.
129. Annual Report on South Indian Epigraphy, 1936, p. 73.

அளந்து கொடுக்கப்படவேண்டும் எனவும் இத் தரு மத்தை அவ்வக் காலத்து ஆளும் அரசனே பாதுகாக்க வேண்டும் எனவும் இச்சாசனம் கூறியுள்ளது.[130]

பொற்போந்தைச் சபை மலைவெள்ளப் பெருங் குளத்துக்கு ஏரிக்காடி பெறும் உரிமையை விற்றது; ஒவ்வொரு போகவிளைச்சலிலும் ஒரு பட்டி நிலத்துக்கு ஒரு காடி நெல் என்பதே இச்சாசனத்திலும் அளவு ஆகும்.[131] இவ்வாறு கொடுக்கத் தவறுவோர் தருமா சனத்திலே இருபத்துநான்கு காணம் தண்டப்பட வேண்டும். பல்லவ அரசன் கம்பவர்மன் காலத்தைய இச்சாசனம் ஏரிக்காடி கொடுக்கத்தவறுவோர் பல்லவ ரின் தலைநகராகிய காஞ்சியை அழித்த பாவத்தைப் பெறுவர் என்று கூறுகின்றது. புதுவெள்ளம் மண்ணோடு வந்து சேர்வதால், ஏரி தூர்ந்து போவதுண்டு. மேலும் ஏரியின் அடியில் மண் அடைந்தால், ஏரியில் தங்கக் கூடிய நீரின் அளவு குறையும்; எனவே ஏரியைத் துப் புரவாக்கிக் குழி தோண்டிவிடும் பணி நடைபெறும். வயிரமேகத் தடாகத்தில் ஒவ்வொரு மாதமும் இப்பணி நடைபெறுவதற்குச் செட்டதரையர் தானவேந்தன் சபையிடம் இருபது கழஞ்சு பொன் கொடுத்தான்; சபை பொன்னைப் பெற்றுக்கொண்டு ஊரில் உள்ள எல்லாத் தொறுநிலைகளிலும் கிடைக்கும் எருவைவிற்று வரும்பொருளை இந்தப் பணிக்கு ஒதுக்கிற்று. இப் பொருளை வேறுவழியில் விரயஞ்செய்யாது இப்பணிக்கே செலவிடும்படி சபை பணித்தது.[132]

---

130. S I I Vol. XII. p 46
131. S. I. I, Vol. XII. p. 43.
132. S. I. I. Vol. VI, p. 167.

என்ன பணிக்கு என்று விசேடித்துச் சொல்லாது ஏரிக்குப் பொதுவாகவிட்ட நிலம் ஏரிப்பட்டி எனப்பட்டது. ஏரிப்பட்டி செய்வது தருமம் என்ற கருத்து நிலவியதால், விவசாயி அல்லாத பிறரும் ஏரிப்பட்டித் தருமம் செய்துள்ளனர். சயவல்லவன் என்ற வாணிகன் சழையாப்பாறைச்செறு என்ற வயலை ஏரிப்பட்டியாக விட்டான்.[133] நிருபதுங்க மங்கலப் பேரரையர் மகனார் நம்பியமல்லனார் என்பவர் மருதஞ்செறு, கொடுமாடி, கழுவல் என்னும் மூன்று நிலத்துண்டுகளை நெற்குன்றத்து ஏரிக்கு ஏரிப்பட்டியாக விட்டார்.[134]

இவ்வுலக வாழ்க்கைச் சிறப்பு விவசாய விருத்தியிலேயே அக்காலத்திற் பெரும்பாலும் தங்கியிருந்ததால், நீர்ப்பாசனத் தருமச் செயல்களைப் பெரிதும் பேணிவந்தனர். இத் தருமச் செயல்களுக்குக் கேடு விளைத்தால் அது சமூக விரோதச் செயலாகி மக்களுக்குப் பஞ்சத்தையும் பட்டினியையும் மிகுவிக்கும். அதனால், இத்தருமங்களுக்குத் தீங்கு நேராமற் பார்ப்பதற்காக ஓம்படைக்கிளவியாகத் தீமைசெய்பவர்களை அச்சுறுத்தும் வாக்கியங்கள் சாசனங்களிற் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று 'ஏழா நரகத்துக் கீழா நரகம் புகுவான்' என்பது.[135] நரகலோகங்கள் ஏழு என்று நம்பப்படுகின்றன. அவை பூவுலகத்துக்குக்கீழ் ஒன்றன்கீழ் ஒன்றாகத் துன்பவாழ்க்கை மிகுந்து செல்வதற்கு அளவுகோலாக அமைந்துள்ளனவாம்; அந்த ஏழு நரகலோகங்களுக்கும் கீழுள்ள நரகலோகம் கற்பனை செய்யப்

---

133. S. I. I. Vol XII. p. 52.
134. S. I I Vol III, p. 225.
135. S. I. I. Vol III. p. 225; A. R. on S. I, E. 1936, p. 73

பட்டு, இந்த நீர்ப்பாசனத் தருமத்துக்குத் தீங்கு செய்பவருக்கு அந்த நரகம்தான் கிடைக்கும் என அச்சுறுத்தப்படுகின்றது.

சில சாசனங்கள் வீரக்கல்லில் அமைந்து காணப்படுகின்றன. வீரம் விளங்கப் போர்செய்து மாண்டவர்களுடைய பேரும் பீடும் எழுதிக் கல்நட்டு வணங்கிய சங்ககாலத் தமிழர் சால்பின் தொடர்ச்சி இக் காலத்திலும் காணப்பட்டது. பசுவைக் கவர்ந்து செல்வதும் போரிட்டுப் பசுவை மீட்பதும் இக்காலத்தமிழகத்திலும் ஆங்காங்கே நடந்துள்ளன. நிருபதுங்கவர்மன் காலத்தில் நுளம்பன் என்ற சிற்றரசனுடைய படை ஆமையூருக்கு வந்து தொறுக்கொண்டபோது, பிருதுவீகங்கரையர் சேவகர் அகளங்கத்துவராயன் மகன் சளன் தளராமற் போரிட்டு வீழ்ந்துவிட்டான்.[136] அதே போரில், அகளங்கத்துவராயர் மருமகன் கலியிராமன் பட்டான்.[137] மேல் வேளூர் ஆளும் பறையமாளியார் அவ்வூர்த் தொறுக்கொண்ட ஞான்று பட்டார்.[138] விசயாலய சோழன் காலத்தில், கலிதுடன் மூக்கன் அணியன் என்பவன் பகைவன் தொறுக்கொளத் தொறு மீட்டுப்பட்டான்.[139] தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடைய சாசனம் ஒன்று, ஒருபடையெடுப்பைத் தடுத்து நின்ற வல்லுவ நாட்டாளுகிய சத்திமுற்றத்தேவன் துண்டு பட்டான் என்று கூறியுள்ளது,[140] சில அடிகள் சிதைந்துள்ள இச்சாசனம் தெளிவாகப் பொருள் கொள்ளமுடியாமலுள்ளது.

---

136. E I. Vol IV p. 180.
137 E. I. Vol. IV, p. 180.
138. E. I Vol, XXXII, p. 111.
139. A. R on S. I. E. 1936, p. 72.
140. S. I. I. Vol, XII p. 23,

சமயம், நீர்ப்பாசனம், வீரக்கல் முதலியனவற்றைப் பொருளாகக் கொள்ளாத சாசனங்கள் இரண்டே கிடைத்துள்ளன; வயிரமேகம் பிடாரன் ஓர் அம்பலத்தை அமைத்து அதற்கு ஒரு வேலி நிலம் அம்பலப்புறமாக விட்டுள்ளான்; அந்த நிலத்தின் எல்லை கூறப்பட்டது. அவனும் சபையும் உடன்பட்டபொருளை அவன் சபைக்குக் கொடுக்கச் சபை அந்நிலத்தைச் சந்திராதித்தவற் இறையிலி அம்பலப்புறமாகச் செய்தது. அவ்வேலி நிலம் பணிபல செய்வார்க்குப் பிரித்துக் கொடுக்கப்பட்டது; கோடை காலத்தில் அம்பலத்துக்குத் தண்ணீர் எடுத்துக்கொடுப்பவனுக்கும் அம்பலம் மெழுகுவாருக்கும் விளக்கு எண்ணெய் கொடுப்பவனுக்கும் கலம் இடும் குசவனுக்கும் அம்பலத்தைப் புதுக்குவேலை செய்வதற்கும் என்று அந்நிலம் பிரித்துக்கொடுக்கப்பட்டுள்ளது.[141] விருந்தினர் உண்பதற்கெனத் தானஞ்செய்ததை ஒரு சாசனம் எடுத்துக்கூறுகின்றது.[142] திருவாணங்கமுடி தமக்கை நம்பிராட்டி அவனிநாராயணச்சதுர்வேதிமங்கலத்துச் சிற்றம்பலத்துப் பெருமக்கள் மேற்பார்வையில் எழுநூற்று முப்பத்தாறு கழஞ்சு பொன் வைத்தாள். அப்பொன்னின் வட்டியால் தினமும் ஒரு விருந்தினரைச் சந்திரனும் நட்சத்திரங்களும் உள்ளவரை தவறாமல் உண்பிக்கவேண்டும் என்று கூறியுள்ளாள்.

## 2. முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் காலம்

இராசராசன், இராசேந்திரன் என்ற பெயர்கள் சோழப் பெருமன்னர் காலத்திற் பலருக்கு வழங்கிய

141. S. I. I. Vol. XIII. p. 103.
142. S. I. I. Vol. XII. p. 48.

தாலும், புகழ்பூத்த இம் மன்னர் இருவரும் தம்பெயர் தரித்த பிற மன்னருக்குக் காலத்தால் முற்பட்டன ராதலாலும், வரலாற்றில் முதலாம் என்ற அடையுடன் வழங்கப்படுகின்றனர். முதலாம் இராசராசன் முடிசூடிய காலம் கி. பி. 985 ஆகும்; கி. பி. 1970 ஆகிய இந்த ஆண்டுக்கும் கிறீத்தவ ஆண்டுத் தொடக்கத்துக்கும் இடையே சரி நடுவில், இற்றைக்கு 985 ஆண்டுகளுக்கு முன் தமிழர் வரலாற்றில் முன்பும் பின்பும் என்றும் கண்டிராத பெருமைமிக்க காலம் தொடங்கியது: அந்தக் காலம் கி. பி. 1070 வரை, அதாவது இற்றைக்கு தொளாயிரம் ஆண்டுகள் முன்புவரை, தொடர்ந்தது; எனினும் முதலாம் இராசராசனுடைய மகன் முதலாம் இராசேந்திரன் காலத்தோடு சோழப்பேரரசின் வளர்ச்சி நின்று விடுகின்றது. அடைந்த பெருமையை நிலைநாட்ட முயல்வதிலேயே இவனுக்குப் பின்வந்த சோழப்பெரு மன்னரின் கவனம் சென்றது; சோழப் பெருமன்னர் காலத்துச் சாசனங்கள் பல்லாயிரக் கணக்கிற் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன: அவற்றுள் ஒரு சிறு பகுதியே பதிப்பிக்கப்பட்டு வெளிவந்துள்ளன. அவை முழுவதையும் விரிவாக ஆராய்ந்தாலும் பல நூல்கள் எழுதுவதற்கு இடமுண்டு.

அதனால் இரு பெருமன்னர்களுடைய காலத்திற்குரிய சாசனங்கள் மட்டுமே இங்கு ஆராயப்படுகின்றன. இவ்விரு மன்னர்களுடைய சாசனங்கள் தாமும் பெருந்தொகையாகக் கிடைத்துள்ளன; இவற்றுள்ளும் சில, இம் மன்னர்களுடைய புகழ்போல அளவில் மிகவும் பெரியனவாகக் காணப்படுகின்றன. முதலாம் இராசராசன் கட்டி எழுப்பி, அவனுடைய புகழுக்கும் தமிழர் பண்பாட்டுக்கும் எடுத்துக்காட்டாக விளங்கும் தஞ்சைப் பெருவுடையார் கோவிலில் முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் காலத்துச் சாசனங்

கள் சில கிடைத்துள்ளன; அவற்றுட் பதின்மூன்று சாசனங்கள் இங்கு ஆராயப்படுகின்றன: இவை அவ்வாறு தெரிந்தெடுக்கப்பட்டதற்குக் காரணம் உண்டு; தஞ்சைப் பெருவுடையார் கோவிலும் அங்கு செய்யப்பட்ட ஒழுங்குகளும் அளவில் பெரியனவே தவிரத் தமிழ்நாடு முழுவதும் அக்காலத்திற் கோவில் எடுப்பதும் கோவிலுக்கு வேண்டிய ஒழுங்குகள் அமைப்பதும் பரவலாக நடைபெற்றன: எனவே சோழப்பெருமன்னர் காலத்திற் சைவம் பேணப்பட்ட முறையை அறிந்து கொள்ளத் தஞ்சாவூர்ச் சாசனங்கள் உதவுகின்றன. தஞ்சாவூர்ச் சாசனங்களில் இடம்பெறுத சில முக்கியமான செய்திகளை ஆராய்வதற்காக, வேறு இடங்களிற் கண்டெடுக்கப்பட்ட மூன்று சாசனங்களும் இங்கு சேர்த்து ஆராயப்பட்டுள்ளன.

சோழர் காலக் கோவில்களையும் கோவிற் சாசனங்களையும் நோக்கும்போது அக்காலச் செல்வப்பெருக்கமே எவர் மனத்திலும் முதலிடம் பெறும்; சோழப் பெருமன்னர் கோவிலுக்குச் செய்துள்ள தானங்களை நோக்கும்போது, நாடு செல்வச் செழிப்புள்ளதாக விளங்கியது தெட்டத்தெளிவாகத் தெரியவருகின்றது. தமிழ்நாட்டின் பிற பகுதிகளோடு ஒப்பிடும்போது சோழ வளநாடு நீர்வளமும் நிலவளமும் மிக்கிருந்தது: எனினும் சோழநாட்டுச் செல்வப்பெருக்கம் நாட்டின் இயற்கைவளத்தால் மட்டும் நிகழ்ந்ததன்று. சாசனங்களிற் குறிக்கப்பட்டுள்ள நிறைகளைக் கொண்ட பொன்னும் இரத்தினமும் சோழநாட்டில் எவ்வாறு வந்துகுவிந்தன என்று ஆராயவேண்டியுள்ளது; பிறநாட்டு வணிகம் ஒரு முக்கிய சாதனமாக இருந்திருக்கலாம். சோழநாட்டினருக்கு மேற்கில் அரேபியாவுடனும் கிழக்கில் சீனுவரையிலான நாடுகளோடும் வணிகத் தொடர்பு இருந்தது; சோழநாட்டு மாலுமிகளின் கடற்செலவு அறி

வினை அரேபிய அறிஞர்கள் சிலர் போற்றிப் பாராட்டி யுள்ளனர். சோழப் பேரரசு தமிழ்நாடு, கேரளம் என்ற இன்றைய மாநிலங்கள் முழுவதையும் மைசூர், ஆந்திரப்பிரதேசம் என்ற இன்றைய மாநிலங்களின் பகுதிகளையும் இலங்கையையும் அக்காலத்தில் உள்ள டக்கியிருந்தது; எனவே இப்பேரரசுப் பிரதேசத்தி லிருந்து பிறநாட்டு வணிகத்தாற் கிடைத்த சுங்கம் முதலியன சோழப் பேரரசரைச் சென்று சேர்ந்திருக்கும்; தென்னிந்திய வணிகக் குழுக்கள் சில, தென் கீழ் ஆசியா முழுவதும் பரவி வணிகம் செய்ததற்கான சாசனச்சான்றுகள் கிடைத்துள்ளன; உள்ளூர் வணிகத்தில் ஈடுபட்ட குழுக்களும் பலவாம். தலதாபனமாகப் பிராமணருக்குச் சபையும் பிராமணரல்லாதாருக்கு ஊரும் இருந்ததுபோல, வணிகருக்கு நகரம் சோழப் பெருமன்னர் காலத்தில் இருந்திருக்கிறது. இவை யாவற்றிலு மிருந்து சோழப் பெருமன்னரது பண்டாரம் என்று கூறப்பட்ட திறைசேரிக்குப் பொருள் சென்றிருக்க வேண்டும்; நிலவரியாகவும் பிற தொழில்வரி முதலியன வாகவும் வந்த வருமானம் சோழர் காலத்துக்கு மட்டுமன்றிப் பிற்காலத்திற்கும் சோழமன்னருக்கு மட்டுமன்றிப் பிற மன்னருக்கும் பொதுவாதலால், அது விசேடமாகக் குறிக்கப்படவேண்டியதில்லை;

சிற்றரசரும் பிறநாட்டு மன்னரும் கொடுக்கும் திறையாலும் சோழநாட்டிற் செல்வப்பெருக்கம் மிகுந்தது. முதலாம் இராசராசன் முதலாம் இராசேந்திரன் காலத்திற் செல்வப் பெருக்கம் வேகமாக ஏற்றப்பட்டதற்கு இன்னொரு சிறப்புக் காரணம் இருந்தது. முதலாம் இராசராசன் காலத்தில் அயல் நாடுகளில் நிகழ்ந்த போர்களோடு சோழப்பேரரசு வளரத்தொடங்கியது. முதலாம் இராசேந்திரன் காலத்தில் சோழர் கங்கையும் கடாரமும் கொண்டனர்; வடஇந்தியாவிலே கங்கை

வரையிலான நாடுகளிற் சோழர் படைவெற்றிபெற்றது; சோழர் வெற்றிபெற்ற கடாரத்தை உள்ளடக்கிய சைலேந்திரப் பேரரசு மலாயா, இந்தோனேசியா என்று இன்று கூறப்படும் நாடுகளிற் பெரும்பகுதியை உள்ள டக்கியிருந்தது. இப்பகுதிகள் சுவர்ணதீபம், சுவர்ண பூமி எனப்பொன் கொழிக்கும் நாடுகளாக வடமொழிப் புராணங்களிற் கூறப்பட்டுள்ளன; படையெடுப்பும் வெற்றியும் என்று கூறப்படுமிடங்கள் பலவற்றில் சோழர் படை பெருந்தொகையான கொள்ளையையும் திறையை யும் பெற்றிருக்கும்: இது அக்காலப் போர் இயல்பு:

கங்கைப் படையெடுப்பு, கடாரப்படையெடுப்பு என்பனவற்றைக் கூறும் முதலாம் இராசேந்திரன் மெய்க் கீர்த்திகளிலே கொள்ளையைப் பற்றிய குறிப்புகள் சில காணப்படுகின்றன. மேலைச் சாளுக்கியருடைய நாட்டி லும் இலங்கையிலும் கொள்ளை நிகழ்ந்ததைப் பற்றிக் கூறும் அவ்வந் நாட்டுச் சான்றுகள் கிடைத்துள்ளன; இவ்வாறு கிடைத்தபொருளில் ஒரு பகுதி கோவிலுக் குத் தானமாகச் சென்றிருக்கவேண்டும்; திடீரென்று வந்துசேரும் இத்தகைய செல்வத்தை வாரிவழங்கக் கூடிய மனப்பான்மை ஏற்படுதல் மனிதருக்கு இயல்பே: போரிலே, கொலையாலும் கொள்ளையாலும் வந்த பொரு ளைப் புனித கைங்கரியத்துக்குச் செலவழிப்பதன் மூலம் உள்ளத்திலும் ஆறுதல் பிறக்கும்: எதிரியின் பெரும் படையெடுப்பை முறியடித்து வெற்றிபெற்றால் 'நேர்த் திக்கடன்' அல்லது 'நன்றிக்கடன்' என்ற முறையிலே, கோவிலுக்குத் தானம் செய்வதும் உண்டு.

சாசனங்களின் அமைப்பும் அவை கூறும் பொரு ளும் கோவில்களுக்குக் கிடைத்த பெருந்தொகையான தானங்கள் வந்தவழியைக் காட்டுகின்றன எனலாம். பொதுவாகச் சாசனங்களின் தொடக்கம் மெய்க்கீர்த்தி

யாக அமைகின்றது. தானம் நிகழ்ந்த ஆண்டுவரை அரசன் பெற்ற வெற்றி எடுத்துக் கூறப்படுகின்றது: அந்தப் புகழையுடைய அரசன் அல்லது அரசன் காலம் என்று நினைத்துப்பார்க்கும்போது தானம் நிகழ்ந்தசூழல் நினைப்பவர் மனத்திலே தோன்றுகின்றது; முதலாம் இராசராசனே பொறிப்பித்த தஞ்சாவூர்ச் சாசனமொன்றிலிருந்து[143] இங்கு தேவையரன சில சான்றுகளைப் பெற்றுக்கொள்ளலாம்; நீண்ட சாசனமாக அமைந்துள்ள இதில், மூன்று இடங்களில் 'சேரமானையும் பாண்டியர்களையும் மலைநாடடு எறிந்துகொண்ட பண்டாரங்கள்' குறிக்கப்பட்டுள்ளன; தானங்களில் ஒரு பகுதியை அவற்றிலிருந்து எடுத்து வழங்கியதாக இராசராசனே கூறியுள்ளான். சோழப்பெருமன்னருக்குப் பெரும்பகைவராக இருந்தவர் மேலைச்சாளுக்கியப் பெருமன்னராவர். மேலைச்சாளுக்கியப் பெருமன்னனாகிய 'சத்யாசிரயனை எறிந்து எழுந்தருளிவந்து' இராசராசன் தஞ்சைப் பெருவுடையாரின் திருவடியைப் பொன்னாலான பாத புஷ்பமிட்டுத் தொழுததை அதே சாசனம் எடுத்து மொழிகின்றது:

சோழர்குலம் என்றும் சைவப்பற்றுமிக்கு விளங்கிய குலமாதலால், சோழப் பெருமன்னர் தாம்பெற்ற பெருஞ் செல்வத்தைச் சைவப் பணிகளுக்கே செலவிட்டனர். நம்பியாண்டார் நம்பிமூலமாகச் சைவத் திருமுறைகளைத் தொகுப்பித்துத் திருமுறை கண்டசோழன் என்ற பெயர் வாங்கிய முதலாம் இராசராசன் 'சிவ பாதசேகரன்' அதாவது சிவனுடைய திருவடிகளைத் தலையிலே தாங்கியவன் என்றும் பெயர் வாங்கியதை இந்தச் சாசனம் எடுத்துக்கூறியுள்ளது: தஞ்சைப் பெரு

---

143. S. I. I. Vol. II. p. 1.

வுடையார் கோவிலைத் 'தஞ்சாவூர் நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி' என்று இராசராசன் பெருமையோடு கூறிக்கொள்ளுகின்றான்; கருங்கல்லே கிடையாத தஞ்சாவூரிலே அது தனியே கருங்கல்லாலான மாபெருங்கோயிலாதலின்றும் போலும் அரசன் இவ்வாறு பெருமைப்படுகின்றான்.

கோவிலுக்குத் தானம் செய்வதில் அரசனும் அரச குலத்தவரும் அதிகாரிகள் முதலிய பிறரும் போட்டியிட்டுக் கொண்டு முன்னின்றனர். பெரிய கோவில்கள் உருவாகத் தொடங்கியதும் ஒரே கோவிலில் பிரதான மூர்த்தியைவிடப் பிறமூர்த்திகள், அடியார் படிமங்கள் என்பன இடம்பெறத் தொடங்கின. தஞ்சைப் பெருவுடையார் கோவிலில் திருமேனிகளும் பிரதிமங்களும் பலவாகப் பலரால் எடுக்கப்பட்டதைச் சாசனங்கள் குறிப்பிடுகின்றன. அக்கோவிலில் நடந்த தானங்களைப் பற்றி இராசராசன் 'நாங் குடுத்தநவும் அக்கன் குடுத்தநவும் நம்பெண்டுகள் குடுத்தநவும் மற்றும் குடுத்தார் குடுத்தநவும்'[144] என்று கூறுவது திருமேனிகள், பிரதிமங்களை எடுப்பித்ததற்கும் பொருந்துகின்றது. திருமேனிகள் என்பது கடவுளரின் உருவங்களும் பிரதிமங்கள் என்பது மனிதரின் உருவங்களுமாம். முதலாம் இராசராசன் எடுப்பித்த திருமேனிகள் பரமசுவாமி, தட்சிணமேரு விடங்கர், தஞ்சைவிடங்கர் எனக் குறிப்பிடப்படும் சிவபெருமானுடைய மூர்த்தங்களாம்.

இராசராசனால் அக்கன் என மரியாதையாக அழைக்கப்படும் அவன் தமக்கையார் தட்சிணமேருவிடங்கரின் தேவியாகிய உமாபரமேசுவரியாரையும் தஞ்சை

---

144. S. I. I. Vol II. p. 1.

விடங்கரின் தேவியாகிய உமாபரமேசுவரியாரையும் இறந்துவிட்ட தம்முடைய தாய்தந்தையரையும் திரு மேனிகளாக எழுந்தருளுவித்தார்.[145] அரசன், அரசிய ருடைய உருவங்கள் திருமேனிகள் என்று இந்தச் சாச னத்திற் குறிக்கப்படுவது கவனித்தற்குரியது. இராசராச னுடைய தமக்கையார் 'இராசராசதேவர் திருத்தமக்கை யார் வல்லவரையர் வந்தியத் தேவர் மகாதேவியார் ஆழ் வார் பராந்தகன் குந்தவையார்; என்று சாசனத்தில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளார்;

இராசராசனால் 'நம் பெண்டுகள்' என்று குறிப் பிடப்படும் உலகமகாதேவியாரும் திரைலோக்கிய மகா தேவியாரும் திருமேனிகள் சிலவற்றை எழுந்தருளச் செய்துள்ளனர். உலகமகாதேவியார் பிச்சதேவர் என்ற சிவபெருமானுடைய மூர்த்தத்தை எழுந்தருளுவித் தார்.[146] திரைலோக்கியமகாதேவியார் கலியாணசுந்தர ரும் தேவியும் எனச் சிவன் - சக்தி மூர்த்தங்களை எழுந் தருளுவித்தார்[147] அதிகாரிகள் காஞ்சிவாயிலுடையார் உதயதிவாகரன் தில்லையாளியாரான இராசராசமூவேந்த வேளார் கிராதார்ச்சுனிய தேவர் என்ற சிவபெரு மானுடைய மூர்த்தத்தை எழுந்தருளுவித்தார்.[148] அதி காரிகள் என்பது அவருடைய பதவியையும் காஞ்சிவா யில் என்பது அவருடைய ஊரையும் இராசராசமூவேந் தவேளார் என்பது அவருடைய பட்டப்பெயரையும் உதயதிவாகரன் தில்லையாளியார் என்பது அவருடைய இயற்பெயரையும் குறிக்கிறது; அதனையும் உதயதிவா

---

145. S. I. I. Vol. II. p. 68.
146. S. I. I Vol. II, p. 90
147. S. I. I. Vol. II, p. 95.
148. S I. I. Vol. II. p. 90.

கரனுடைய மகனாகிய தில்லையாளியார் என்று சொன்ன வேண்டும்;

தஞ்சைப்பெருவுடையார் கோவிலில் 'ஸ்ரீ காரியம் செய்கின்ற பொய்கை நாடுகிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளான்' திருமேனிகள் பலவற்றையும் பிரதிமங்கள் பலவற்றையும் எழுந்தருளச் செய்துள்ளான்.[149] 'ஸ்ரீ காரியம் செய்கின்ற' என்பது கோவில் நிர்வாகம் செய்கின்ற' அதிகாரியைக் குறிக்கும். கிழவன் என்பது உரிமையுடையவன் என்று பொருள்படும். தென்னவன் மூவேந்த வேளான் என்பது பட்டப்பெயர். ஆதித்தன் சூரியன் என்பது இயற்பெயர். அவன் எழுந்தருளிவித்த திருமேனிகளாவன:- சந்திரசேகரர், சேத்திரபாலதேவர், பைரவமூர்த்தி முதலிய சிவபெருமானுடைய மூர்த்தங்கள். அவன் எழுந்தருளுவித்த பிரதிமங்களாவன:- நம்பி ஆரூரனார் என்ற சுந்தரர், நங்கை பரவையார், திருநாவுக்கரையர், திருஞானசம்பந்த அடிகள், பெரிய பெருமாள் என்ற முதலாம் இராசராசன், உலகமகாதேவியார், சிறுத்தொண்டதேவர், திருவெண்காட்டு நங்கை, சீராளதேவர், மெய்ப்பொருளையனார் என்போருடையவை. இங்கு அரசன் அரசி ஆகியோரின் உருவங்கள் பிரதிமங்கள் என்று குறிக்கப்பட்டுள்ளன. அரசனும் அரசியும் உயிரோடிருந்த காலத்து எழுந்தருளுவிக்கப்பட்டமையினாற் போலும் இவ்வாறு பெயர்பெற்றன;

கோவிலுக்குப் பாத்திரம் முதலிய உபகரணங்கள் பெருந்தொகையாக வழங்கப்பட்டதைச் சாசனங்களிலிருந்து அறியமுடிகின்றது. கோவில் என்பது தமி

---

149. S. I. I. Vol. II, Part, II, No. 38, 40, 43.

ற்ில் அரண்மனையையும் வழிபாட்டிடத்தையும் குறிக்கின்றது. அரண்மனையில் அரசனுக்குக் கிடைத்த இராசோபசாரத்தைக் கோவிலில் இறைவனுக்கு அளிக்க முயற்சி நடந்திருக்கிறது. கோவில் அரண்மனைபோலக் கட்டப்பட்டுக் கோவிலில் அரண்மனையிற் காணப்பட்ட பாத்திரம் பண்டம் முதலிய உபகரணங்கள் இடம் பெறச் செய்யப்பட்டன; இரும்புத் தண்டோடு கூடிய உலோகக் கலப்பாலான விளக்குகள் நான்கு ஆதித்தன் சூரியனால் தஞ்சைப்பெருவுடையார் கோயிலுக்குக் கொடுக்கப்பட்டன. தேவாரம் பாடிய மூவருக்கும் ஒவ்வொரு விளக்கும் இராசராசனுடைய பிரதிமத்துக்கு மூன்று விளக்கின் நிறையையும் சேர்த்து ஆக்கப்பட்ட பெருவிளக்கும் வெண்கல மடலும் வைக்கப்பட்டன.[150]

ஆனால், இராசராசனே பெருந்தொகையான உபகரணங்கள் வழங்கியுள்ளான்.[151] 'தஞ்சாவூர்க் கோயிலினுள்ளால் இருமடி சோழநின் கிழைத் திருமஞ்சனசாலை தானஞ் செய்தருளாவிருந்து' என்று கூறுகின்றது, சாசனம்; திருமஞ்சனசாலை என்பது அபிசேகமண்டபம்; 'இருமடிச் சோழனின் கீழைத் திருமஞ்சனசாலை' என்பது தஞ்சாவூர்க் கோவிலிலிருந்த அபிசேகமண்டபம் ஒன்றின் பெயராகும்; இந்த மண்டபத்தில் இருந்து இராசராசன் தானம்செய்தான். 'யாண்டு இருபத்தைஞ்சாவது நாள் முன்னூற்றொரு பத்திரண்டினால்', அவன் அவ்வாறு செய்தான்; யாண்டு என்பது ஆட்சியாண்டைக் குறிக்கும். அக்காலச் சாசனங்களில் மாதம் குறிக்கப்படுவதில்லை; ஆண்டும் நாளுமே குறிக்கப்பட்டன; கொடுக்கப்பட்ட பொருள்கள் யாவற்றுக்கும் நிறைகள் குறிப்

---

150. S. I. I. Vol. II, Part II, No. 41.
151. S. I. I. Vol. II, p. 1.

பிடப்பட்டுள்ளன; பொன் ஆடவல்லான் என்னுங் கல்லால் நிறையெடுக்கப்பட்டது; நடராசா என்பது ஆடவல்லான் எனத் தமிழாக்கப்பட்டது; இரத்தினம் தட்சிணமேரு விடங்கர் என்னுங்கல்லால் நிறையெடுக்கப்பட்டது; ஆடவல்லான், தட்சிணமேருவிடங்கர் என்பன தஞ்சைப்பெருவுடையாரின் பெயர்களாகும். அக்கோவிலில் வழங்கிய அளவுகளுக்கு அவருடைய பெயர்கள் இடப்பட்டன. பொன்னாலாக்கப்பட்ட பொருள்களாக இராசராசன் கொடுத்தன:- ஸ்ரீபலி தேவர், பத்மாசன ஸ்ரீ பலித்தாலம், நான்கு மண்டைகள், மூன்று தளிகை, கெண்டி, தட்டம், இரண்டு காளாஞ்சி, நான்கு குடம், கறண்டிகைச்செப்பு, இலைச்செப்பு, இரண்டு கலசப்பானை, தாரைத்தாள்வட்டில், மூன்று ஈச்சோப்பிக்கை முதலியன. செப்புக்குடம், கிடாரம், ஒட்டுவட்டில், ஐந்து கலசம், படிக்கம், ஐந்து தட்டம், குறுமடல், மாநவட்டில், பதினொரு காளம், மூன்று குழல், இரண்டு கங்கில், இலைத்தட்டு என்பனவும் இராசராசனாற் கொடுக்கப்பட்டுள்ளன. வண்ணிகைத் திருக்கொற்றக்குடையும் கோவிலுக்கு வழங்கப்பட்டுள்ளது,

திருமேனிகளுக்கும் பிரதிமங்களுக்கும் அணிகலன்கள் பெருந்தொகையாகக் கொடுக்கப்பட்டுள்ளன; அணிகலன்கள் செல்வச் சிறப்புக்கும் அந்தஸ்துக்கும் அளவுகோல்களாகப் பயன்பட்டன. ஆண்களும் பெண்களும் அணிகலன்களைச் சூடினர்; சோழப்பெருமன்னர் காலத்திலே சமூகத்திற் பொன்னாலும் இரத்தினங்களாலும் முத்தாலும் ஆக்கப்பட்ட அணிகலன்களைச் சூடுவது இயல்பாக இருந்திருக்கவேண்டும்; எனவே, அரசகுடும்பத்தினர் தாம் அணிவது போன்ற அணிகளை இறைவனுக்கும் சூட்டி மகிழ்ந்தனர். இராசராசன் பெருவுடையார் கோவிலுக்குக் கொடுத்த பொன்னாலான அணிகலன்கள்:- நான்கு பூ, தாமரைப் பூ, பதினாறு திருப்

பள்ளித் தொங்கல் மகுடங்கள், திருமுடி, கொடி, ஆறு திருப்பட்டம், திரள்மணிவடம், ஆறு ஒப்பன் திருக்கைக் காறை, திருப்பட்டிகை என்பன; பாதபீடம், சூலம், கபாலம், பாசம், தமருகம் என்பன உட்படச் சேத்திர பாலதேவர் ஒருவரையும் செய்துகொடுத்துள்ளான்.[152]

குந்தவையார் தம்முடைய தாயாக எழுந்தருளு வித்த திருமேனிக்குக் கொடுத்தன:- இருபது கம்பி' தாலி மணிவடம் என்பன. தட்சிணமேருவிடங்கருக் கும் தேவி உமாபரமேசுவரியாருக்கும் குந்தவையார் ஏகாவல்லி எனப்படும் ஒற்றைப்பட்டுச் சங்கிலி ஒவ் வொன்று கொடுத்துள்ளார். ஒவ்வொன்றிலும் முப்பத் தைந்து முத்துக்கள் பதிக்கப்பட்டிருந்தன. இறைவ னுடைய ஏகாவல்லியில் இரண்டு இராசாவர்த்தம் இடம்பெறத் தேவியின் ஏகாவல்லியில் இரண்டு பவழம் இடம்பெற்றன.[153] இந்த விபரங்கள் நகையின் பெறு மதியை எடுத்துக்காட்ட உதவுவன. குந்தவையார் உமாபரமேசுவரியாருக்குக் கொடுத்த அணிகளாய் வேறொரு சாசனத்திற் கூறப்பட்டுள்ளனவாவன:- திரு மகு டம், இரண்டு வாளி, இரண்டு உழுத்து, திரு மாலை, இரண்டு வாகுவலயம், அஸ்தம், இரண்டு திருக் கைப் பொட்டு, இரண்டு சூடகம் என்பன. இரத்தின வகை கள், முத்து வகைகள், அவற்றின் குணமும் குறையும் என்பன விபரமாகச் சொல்லப்பட்டுள்ள இச்சாசனம் சோழப்பெருமன்னர் காலத்தில் அணிகலன்கள் ஆக்கும் தொழில் எவ்வளவு நுட்பமான வேலைப்பாடுகளுடன் கூடியதாக வளர்ந்திருக்கிறது என்பதற்குச் சான்றாகக் காணப்படுகின்றது.[154]

---

152. S. I. I. Vol. II, p. 1.
153. S. I. I. Vol. II, p. 68.
154. S. I. I. Vol. II, Part I, No. 7.

ஆதித்தன் சூரியன் என்பவன் திருமேனிகளுக்கும் பிரதிமங்களுக்குமாகப் பல அணிகலன்களை வழங்கியுள்ளான். தேவாரம்பாடிய மூவரையும் பரவையாரையும் அரசன் அரசியரையும் பிரதிமங்களாக எழுந்தருளச்செய்த ஆதித்தன் சூரியன் அவையொவ்வொன்றுக்கும் பதுமமும் பீடமும் செய்வித்துள்ளான்; சந்திரசேகர தேவரைப் பித்தளையாலே செய்வித்த அவன் அவருக்குப் பிரபை என்ற திருவாசியையும் கொடுத்துள்ளான். தேவாரம் பாடிய மூவருள் ஒவ்வொருவருக்கும் உருத்திராட்சத் தாழ்வடம், கைக்காறை, காற்காறை, பொற்பூ என்பன வழங்கியுள்ளான். பரவையாருக்குக் கைக்காறை காற்காறையோடு மோதிரமும் கொடுத்துள்ளான். ஆனால் உருத்திராட்சத் தாழ்வடம் கொடுக்கவில்லை. திருஞான சம்பந்தருக்குத் திருப்பட்டிகையும் வைக்கப்பட்டது; பரகேசரிபுர நகரத்தார் இவன் எடுப்பித்த மூவர் பிரதிமங்களுக்கு உருத்திராட்சமும் பரவையாருக்குப் பட்டைக்காறையும் வைத்துள்ளனர். வெண்ணிநகரத்தார் இவன் எடுப்பித்த நம்பியாரூரருக்கும் நங்கை பரவையாருக்கும் மட்டுமே அணிகலன்கள் கொடுத்துள்ளனர். நம்பியாரூரருக்கு இரண்டு திருக்கம்பி, திரள்மணிவடம், இரண்டு கைக்காறை, காற்காறை என்பனவும் பரவையாருக்குத் திருக்கம்பி இரண்டும் கொடுக்கப்பட்டனவாகக் குறிக்கப்பட்டுள்ளது.[155]

ஆதித்தன் சூரியன் தான் எடுப்பித்த மெய்ப்பொருளுயனுர் பிரதிமத்துக்குப் பதுமம், பீடம் என்பவற்றோடு உருத்திராட்சமும் அளித்துள்ளான்.[156] ஆதித்

---

155. S. I. I. Vol. II, Part II, No. 38.
156. S. I. I. Vol. II, Part II, No. 40

தன் சூரியன் தான் இதே கோயிலில் எழுந்தருளுவித்த சேத்திரபாலதேவருக்குத் திரள்மணிவடம், சுருக்கின வீர பட்டம், இரண்டு திருக்குதம்பைத்தகடுகள் என்பனவும் பைரவமூர்த்திக்கு இரண்டு திரள்மணிமுத்துவடங்களும் சிறுத்தொண்டருக்குத் திரள்மணிவடம், உருத்திராட்சக் காறை என்பனவும் திருவெண்காட்டு நங்கைக்குப் பட்டைக்காறையிற் கோத்த தாலி, சீராளதேவருக்குச் சுருக்கின வீரபட்டம், இரண்டு திருக்குதம்பைத் தகடுகள், பட்டைக்காறை, சூலம் என்பனவும் கொடுத்தான்.[157]

பூசை, விழா என்பனவற்றுக்கான ஒழுங்குகளும் சாசனங்களிற் கூறப்பட்டுள்ளன. உமாபரமேசுவரியார் என்ற பெயருடைய தேவியின் திருமேனிகள் இரண்டும் திருவிழாப் புறப்படும்போது அமைக்கப்படும் அரங்கை அழகாக அமைப்பதற்காக ஐயாயிரம் கழஞ்சு பொன்னை வட்டிக்குக் கொடுக்கும்படி குந்தவையார் கோவிலுக்கு அளித்தார். தேவியர் இருவரும் திருவிழா எழுந்தருளும்போது அமுதுக்குப் விளக்கெண்ணெய்க்கும் பூமாலையாகிய திருப்பள்ளித் தாமத்துக்குமாகக் குந்தவையார் பணம் கொடுத்தார். அந்தணருடைய சபையும் அந்தணரல்லாதாருடைய ஊரும் பணத்தைப் பெற்றுக்கொண்டு கோவிலின் திறைச்சேரியில் ஆடவல்லான் என்ற பெயரில் வழங்கிய மரக்காலினாலே குறிப்பிட்ட அளவுள்ள நெல்லை வட்டியாகச் சந்திரசூரியர் உள்ளவரை அளப்பதாக உடன்பட்டன. குந்தவையார் தாய்தந்தையர் ஞாபகார்த்தமாக எடுப்பித்த திருமேனிகளுக்குத் திருவிழா வைக்கும் முறைமையில்லை. இவற்றுக்குப் படைக்கும் திருவமுதுக்குக் குந்தவையார் மேலே காட்டியது போன்ற ஒழுங்கினைச் செய்தார். பூமாலை மட்டுமன்றி

---

157. S. I. I. Vol II, Part II, No. 43.

ஆடைகள் பற்றியும் இவ்விரண்டுக்கும் வழிவகுத்துள் ளார்: இத்திருமேனி ஒவ்வொன்றுக்கும் பரிசட்டம், நான்கு நமனிசை, நான்கு ஒற்றுடை, நான்கு மேற் கட்டி, பதினறு பாவாடை என்பன ஆண்டுவட்டியாக வந்து சேரக்கூடியவகையிற் பணம் வைத்துள்ளார். இவ் விரண்டு திருமேனிக்கும் சந்தி விளக்கு வைப்பதற்காக ஒவ்வொன்றுக்கும் முப்பத்திரண்டு காசு வைத்துள்ளார். ஒரு காசுக்கு மூன்று ஆடு என்று கணக்கிட்டுத் தொண் ணூற்றாறு ஆடு விடப்பட்டதாகக் கொள்ளப்படவேண் டும். ஒவ்வொன்றுக்கும் தினசரி உழக்கு நெய் கொடுபட வேண்டும். பொலியூட்டு எனப்படும் வட்டிப் பெருக்கத் துக்கு வைத்த பணம் 'பரமசுவாமிக்கு மூலபிருத்திய ஞகிய சண்டேசுவரர் பக்கல்' வைத்ததாக அக்காலச் சாசனங்களிற் கூறப்பட்டுள்ளது: மூலபிருத்தியன் என் பது முதல் அடியளுகும். 'தஞ்சைப்பெருவுடையாரின் முதல் அடியவராகிய சண்டேசுவரரிடம்' என்று இத் தொடர் பொருள்படும். சிவன்கோவில் அலுவல்களைக் கண்காணிப்பவர் சண்டேசுவரர் என்பது ஐதீகம். கோவி லின் கொடுக்கல் வாங்கல் அலுவல்கள் சண்டேசுவரரின் பெயரில் கோவில் அதிகாரிகளால் நடத்தப்பட்டுவந் தது.[158]

கொடுத்தார் — கொடுத்த காசு — வட்டிக்குக் கொண்ட ஊர் என்பனவற்றைக் கல்வெட்டொன்று எடுத்துக்கூறுகின்றது.[159] குருக்கள் ஈசான சிவ பண்டிதர் கோவிலில் கற்பூரம் எரிப்பதற்காக நூற்றெண்பது காசு கொடுத்திருக்கிருர்; ஒரு சந்தி அமுது செய்யும்போது ஒரு மஞ்சாடி கற்பூரம்எரியவேண்டுமாளுல் ஒரு நாளுக்கு

---

158. S. I. I. Vol II, p. 68.
159. S. I. I. Vol II, p. 90.

மூன்று மஞ்சாடி கற்பூரம் தேவையென்றும் ஓராண்டுக்கு ஐம்பத்து நான்கு கழஞ்சு கற்பூரம் தேவையென்றும் கணக்குப் பார்க்கப்பட்டது; கோவிலில் உற்சவத்திருநாள் ஒன்பதாகும்; உற்சவ நாள் ஒவ்வொன்றிலும் காற்கழஞ்சு கற்பூரம் கூட்டி எரிக்கவேண்டும். எனவே ஒன்பது நாளைக்கும் இரண்டே காற் கழஞ்சு அதிகமாகத் தேவைப்படும். ஒரு காசுக்கு இரண்டரைக் கழஞ்சு கற்பூரம் ஆண்டு வட்டி என்று கூறித் தம்முடைய காசை வைத்திருக்கிறார். உதையதிவாகரன் தில்லையாளியார் கிராதார்ச்சுனிய தேவருக்குத் திருவமுது உள்ளிட்டு வேண்டுவனவற்றுக்காகப் பதின்மூன்று காசுகள் வைத்துள்ளார். வலங்கைப் படையினர் பிச்சதேவருக்கு இருநூற்றைம்பத்திரண்டு காசுகள் கொடுத்துள்ளனர்; தஞ்சைப் பெருவுடையாருடைய திறைச்சேரியிலிருந்து எண்ணூற்றைம்பது காசு கொடுக்கப்பட்டது. வட்டிக்குப் பணம்கொண்ட சபைகள் சில இடங்களில் 'நெடுமணலாகிய மதனமஞ்சரிச் சதுர்வேதி மங்கலத்துச் சபை' எனவும் 'இரும்புதலாகிய மனுகுலச்சூளாமணிச் சதுர்வேதி மங்கலத்துச் சபை, எனவும் கூறப்பட்டுள்ளன. சதுர்வேதிமங்கலம் என்பது 'நான்கு வேதங்களை ஓதுகின்ற 'பிராமணருடைய கிராமம்' என்று பொருள்படும்; நெடுமணல், இரும்புதல் என்பன அக்கிராமங்கள் அந்தணவகுப்பினருக்குரியவையாக மாற முன்பு பெற்றிருந்த தமிழ்ப்பெயர்கள்; அந்தணர் கிராமமாக அவை மாறிய பின்பு வடமொழிப் பெயர்களைப்பெற்றன.

உதயதிவாகரன் தில்லையாளியார் என்பவர் கிராதார்ச்சுனிய தேவருக்குத் திருவமுது உள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்குத் தொண்ணூற்று நான்கு காசும் சிறுதனத்துப் பணி மக்கள் என்ற கீழ்த்தர உத்தியோகத்தர்கள் மகாமேருவிடங்கருக்கும் தேவியாருக்கும் திருவமுது உள்ளிட்டுவேண்டும் நிவந்தங்களுக்கு ஐஞ்நூற்றுறு

காசும் வைத்ததையும் அவை வட்டிக்குக் கொடுக்கப்பட்டதையும் இன்னொரு சாசனம் குறிப்பிடும்.[160] மகாமேரு விடங்கருக்கும் தேவியாருக்கும் சிறுதனத்துப் பணிமக்கள் இருநூற்றுத்தொண்ணூற்று நான்கு காசும் கலியாண சுந்தரருக்கும் தேவியாருக்கும் கேரளாந்தகத் திருமெய் காப்பர் நூற்றுப்பதினெட்டுக் காசும் அணுக்கவாசலின் திருமெய்காப்பர் எட்டுக்காசும் கேரளாந்தகத் தெரிந்த பரிவாரத்தார் முப்பத்தைந்து காசும் சனநாதத் தெரிந்த பரிவாரத்தார் ஐந்து காசும் சிங்களாந்தகத்தெரிந்த பரிவாரத்தார் ஒரு காசும் தென்கரை நாட்டுப் பரிவார மெய்காப்பர்கள் முன்னூற்று முப்பத்தொன்பது காசும் நிவந்தங்களுக்காக வைக்க, இவையாவும் கூடி வந்த எண்ணூறு காசு பன்னிரண்டரை விகித வட்டிக்குக் கொடுக்கப்பட்டது.[161] மெய்க்காப்பாளர் என்று இன்று கூறப்படுவது மெய்காப்பர் என அக்காலத்தில் வழங்கப் பட்டது, கேரளாந்தகன், சனநாதன், சிங்களாந்தகன் என்பன அரசனுடைய பட்டப்பெயர்களாகும். அரசனுடைய பட்டப்பெயர்கள் படைப்பிரிவுகளுக்குப் பெயராக அமைந்தமைக்கு இச்சாசனம் சான்று பகருகின்றது.

கோவிலுக்குத் தேவதானமாக நிலம் தானம் செய்யும் வழக்கமும் இருந்திருக்கிறது. முதலாம் இராசேந்திரனுடைய திருவாலங்காட்டுச் சாசனம் நிலம் தேவதானமாக வழங்கப்பட்டதைக் கூறுவதற்கே வரையப்பட்டது.[162] பிரமதேயமாக இருந்த பழையனூர் நாட்டுப் பழையனூரை வெள்ளான்வகையாக மாற்றித் தேவதானமாக விட்டதை இந்தச் சாசனம் எடுத்துக்

---

160. S. I I Vol II. p. 93
161. S I. I. Vol. II, p 95.
162. S. I. I. Vol. III. p. 383.

கூறியுள்ளது. செப்பேடுகளாக அமைந்துள்ள இந்தச் சாசனம் தமிழிலுள்ள இரண்டாவது மிக நீண்ட சாசனமாகும். இது வடமொழிப் பகுதியும் தமிழ் மொழிப்பகுதியும் என இரண்டு பகுதிகளைக் கொண்டுள்ளது; வடமொழிப் பகுதி சோழர் குலவரலாற்றுச் செய்திகள் பலவற்றைக்கொண்டது; இராசேந்திரனுடைய ஆறுவது ஆட்சியாண்டைச் சேர்ந்த இந்தச் சாசனத்தில், தமிழ் மெய்க்கீர்த்தி நீண்டதாக அமைய இடமில்லை; எனினும் இந்தச் சாசனத்தின் தமிழ்ப்பகுதியில் மட்டும் ஐந்நூற்றுப் பதினேழு அடிகள் உள்ளன. பிராமணருக்கு உரியதாக இருந்த நிலம் வேளாளர் பயிர்செய்யும் நிலமாக மாற்றப்பட்டது. பிராமணருக்கு வேறு நிலம் கொடுக்கப்பட்டது. வெள்ளான்வகை நிலத்திலிருந்து அரசாங்கத்துக்குக் கிடைக்கும் வருமானங்கள் யாவும் கூறப்பட்டு அவை கோவிலைச் சேரவேண்டும் என்று விதிக்கப்பட்டுள்ளது. இதனால் அரசாங்கத்துக்கு வெள்ளான்வகை நிலத்திலிருந்து எவ்வெவ் வருமானங்கள் அக்காலத்திற் கிடைத்தன என அறியமுடிகின்றது.

கோவிலுக்கு நிலத்தில் என்ன என்ன உரிமைகள் உண்டென்று ஒரு பட்டியல் தரப்படுகின்றது; அரசன் வாய்மொழியாக இடும் கட்டளை எவ்வாறு செயலாக்கப்படுகின்றது என்பதை விரிவாக இச்சாசனம் கூறுவதால், அக்கால மத்திய அரசாங்கம் இயங்கிய முறையை அறிந்துகொள்ள முடிகின்றது. அரசாங்கத்திற் கடமையாற்றிய அதிகாரிகளைப் பற்றியும் அவர்களுக்கும் தலதாபனங்களுக்கும் இருந்த தொடர்பைப் பற்றியும் இந்தச் சாசனத்திலிருந்து ஓரளவு அறிந்துகொள்ளலாம். நிலங்களின் உரிமையும் எல்லையும் மாற்றமடைந்தபோது தலதாபனங்களும் அதிகாரிகளும் நடந்த முறையையும் கைக்கொண்ட சடங்கையும் இந்தச் சாசனம் கூறுகின்றது. நிலத்தினை அளக்கப் பயன்

பட்ட அளவுகோல் காலத்துக்குக் காலமும் இடத் துக்கிடமும் வேறுபட்டதால், நில எல்லை வரை யறுத்துக் கூறுவதிற் கூடிய கவனம் செலுத்தப்படுகின் றது; இந்தச் சாசனத்தில், நில எல்லையைக் கூறும் பகுதி இருநூறு அடிகளுக்கு மேற் சென்றுவிடுகின்றது;

தேவதான இறையிலியாக நிலம் விடப்பட்டதைக் கூறும் சிறிய சாசனம் ஒன்றையும் பார்க்கலாம்.[163] இராசராசன் தன்னுடைய தந்தையின் தந்தை யாகிய அரிஞ்சயராகிய ஆற்றூர்த் துஞ்சினதேவருக்குப் பள்ளிப்படையாக அரிஞ்சிகை ஈஸ்வரம் என்ற சிவன் கோவிலை மேற்பாடியாகிய இராசாசரியபுரத்தில் எடுப் பித்தான்; அந்தக் கோவிலுக்கு இறையிலியாக ஐயா யிரத்து நூற்று முப்பத்தாறரைக் குழிநிலம் பதினெண் சாண்கோலால் அளந்து அவ்விடத்து வணிகர் சங்கமான நகரத்தால் விடப்பட்டது; நிலம் தேவதானமாகவிடப் பட்டபோதும், அது கோயிலுக்கும் சுற்றுலைக்கும் முற் றத்துக்கும் நந்தவனத்துக்கும் மடவளாகத்துக்குமாக விடப்பட்ட நிலம் என்று சாசனத்திற் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. நுகா ஆற்றின் கரையில் அமைந்த இந்நிலத்துக்கு நீர்ப்பாசன வசதியும் இருந்துவரும் என்று சாசனத்திலே கூறப்பட்டுள்ளது;

அக்காலக் கோவிலிலே திருப்பதிகம் ஓதும் வழக்கம் முக்கியத்துவம் பெற்றுவந்ததால், தஞ்சைப் பெருவுடையார் கோவிலில் திருப்பதிகம் ஓதுவதற்கு இராசராசன் விரிவான ஒழுங்குகள் செய்துள்ளான்.[164] இராசராசனே திருமுறைகளைத் தொகுப்பித்தவனாக

163. S. I. I. Vol. III. Part I, No. 15.
164. S. I. I. Vol. II, Part III, No. 15.

இருந்ததும், திருப்பதிகம் ஓதுவதற்கு இவ்வளவு சிறப்புச் செய்ததற்குக் காரணமாகலாம்; திருப்பதிகம் ஓதுவது என்ற பிற்கால வழக்குக்குப் பதிலாகச் சாசனத்தில், 'திருப்பதியம் விண்ணப்பம் செய்வது' என்பதும் ஓதுவார் என்பதற்குப் பதிலாகப் 'பிடாரர்' என்பதும் இச்சாசனத்திற் கையாளப்பட்டுள்ளன. திருப்பதிகம் ஓத நாற்பத்தெட்டுப்பேரையும் கொட்டி மத்தளம் வாசிப்பதற்கு ஒருவரைவும் உடுக்கை வாசிப்பதற்கு ஒருவரையுமாக ஐம்பதுபேரைத் தஞ்சாவூர்க்கோவிலுக்கு மட்டும் இராசராசன் நியமித்தான். இவர்களில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருநாளும் தஞ்சாவூர் அரண்மனையிலுள்ள இராசகேசரி என்னும் மரக்காலே அளவால் ஒத்த தஞ்சைக் கோயிலிலுள்ள ஆடவல்லான் என்னும் மரக்காலால் உள்ளூர்த் திறைச்சேரியிலிருந்து முக்குறுணி நெல் கொடுபடவேண்டும் என்று இராசராசன் விதித்தான். நாட்டில் வழங்கிய மரக்கால்கள் அளவால் வேறுபட்டமையால், மரக்காலின் அளவை வரையறுத்துச் சொல்லவேண்டியிருந்தது; மரக்காலுக்கு இறைவன்பெயர் வைத்தமையும் கவனித்தற்குரியது.

நியமிக்கப்பட்ட ஐம்பது பேர்களின் பெயர்களும் சாசனத்திற் கொடுக்கப்பட்டுள்ளன. சிவக்கொழுந்து சீராளனான தர்மசிவன், பட்டாலகன் சிருடைக்கழலான பூர்வசிவன் என்பன தீட்சாநாமங்கள். ஐம்பது பேர்களுக்கும் தீட்சாநாமங்கள் இருப்பதால் தீட்சை செய்யப்பட்டவர்களே திருப்பதிகம் ஓதிவந்தனரெனக் கொள்ளலாம்; இந்தத் திருப்பதிகம் ஓதும் பணி தொடர்ந்து எல்லாக் காலமும் நிகழவேண்டும் என்று இராசராசன் விரும்பியதாற் சில விதிமுறைகளை ஏற்படுத்தியுள்ளான்; இந்த ஐம்பது பேர்களில் இறந்தவர்களுக்கும் பிறதேசங்களுக்குப் போனவருக்கும் பதிலாக அவ்வவர்க்கு நெருங்கிய உறவினராய் இருப்பார்

அந்நெல்லுப்பெற்றுத் திருப்பதிகம் ஓதுவதென்றும் அவ்வாறு நெருங்கிய உறவினர் திருப்பதிகம் ஓதத் தகுதியுடையவராய் இல்லாவிடில் அவர்களே தகுதியுடையராய் இருப்பாரை அமர்த்தித் திருப்பதிகம் ஓதுவித்து அந்நெல்லைப் பெறுவதென்றும் அவ்வவர்க்கு நெருங்கிய உறவினர் இல்லையானால் அந்தத் தொழில் செய்பவர்களே தகுதியுடையராய் இருப்பாரைத் திருப்பதிகம் ஓதத் தேர்ந்தெடுப்பதோடு அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவரே நெல்லுப்பெறுவதென்றும் இராசராசன் விதித்தபடி கல்லில் வெட்டப்பெற்றன.

சோழப் பெருமன்னர் காலத்துச் சைவம் தமிழ் நாட்டுக்குள் அல்லது சோழப் பேரரசுக்குள் மட்டும் அடங்கியிருக்கவில்லை. இந்தியாவின் பிற பகுதிகளில் விளங்கிய சைவத்துக்கும் தமிழ்நாட்டுச் சைவத்துக்கும் தொடர்புகள் இருந்தன. சோழநாட்டுச் சைவாசாரியரின் சீடர்கள் இந்தியா முழுவதும் பரவியிருந்தனர். இது இராசேந்திரனுடைய சாசனமொன்றிலிருந்து தெரியவருகின்றது[165] இராசேந்திரன் கங்கைகொண்ட சோழபுரத்துக் கோவிலில் முடிகொண்டசோழன்திருமாளிகை என்ற பகுதியில் வடபக்கத்துத் தேவாரத்துச் சுற்றுக்கல்லூரி என்ற தமது இறைவழிபாட்டிடத்திலிருந்து தானஞ்செய்தான். இந்தத் தருமம் சைவாசாரியருக்குச் செய்யப்பட்டமையால் ஆசாரிய போகம் என வழங்குகின்றது. இராசேந்திரன் சர்வசிவபண்டித சைவாசாரியரை நம் உடையார் என்று குறிப்பிடுவதால், இவர் குலகுரு நிலையில் இருந்திருக்கவேண்டும். இவருக்கும் இவருடைய சீடரும் சீடரின் சீடருமாக ஆரியதேசம், மத்தியதேசம், கௌடதேசம் என்னும் இடங்களில்

---

165. S. I. I. Vol. II. p. 106,

வாழ்ந்து யோக்கியராய் இருப்பவர்களுக்கும் ஆண்டாண்டு தோறும் ஒவ்வொருவருக்கும் இரண்டாயிரக் கல நெல் சந்திரசூரியர் உள்ளவரை உள்ளூர்ப் பண்டாரத்திலிருந்து ஆடவல்லான் என்னும் மரக்காலால் அளந்து கொடுக்கவேண்டும் என இராசேந்திரனுடைய கல்வெட்டுக் கூறுகின்றது.

சோழப்பெருமன்னர் காலத்திற் சைவசமயம் முதன்மைபெற்றிருந்ததே தவிரத் தமிழ்நாட்டின் தனிச் சமயமாக இருக்கவில்லை; வைணவ சமயமும் ஓரளவு செல்வாக்குடன் விளங்கியது; புறச் சமயங்களான சமணம் பௌத்தம் என்பனவும் மன்னரின் ஆதரவு பெற்று மக்களிற் சிறுபான்மையினரால் போற்றப்பட்டுவந்தன; நாகபட்டினத்திலுள்ள சூடாமணிவிகாரத்துக்குப் பௌத்தனான சைலேந்திரப் பேரரசன் வேண்டுகோளுக்கிணங்கி ஆனைமங்கலம் என்ற கிராமம் இறையிலி பள்ளிச்சந்தமாக விடப்பட்டதை ஆனைமங்கலம் செப்பேடுகளிலிருந்து அறியலாம்.[166] சைவத்திருப்பணிகள் பல செய்துள்ள குந்தவையார் சமண ஆலயம் கட்டிப் பள்ளிச் சந்தமும் விட்டது 'பள்ளிச்சந்தம் வைகாவூர்த் திருமலை ஸ்ரீ குந்தவை ஜிநாலயத்து' என்று வருவதிலிருந்து அறியப்படுகின்றது.[167] மல்லியூர் வியாபாரி நந்திப்பயன் மணவாட்டி சாமுண்டப்பை இப்பள்ளியில் நந்தாவிளக்குக்கு இருபது காசும் திருவமுதுக்குப் பத்துக்காசும் வைத்ததை அதே சாசனம் கூறுகின்றது; சமணசமயத்துக்கு எப்பொழுதும் சிறப்பாக ஆதரவளித்த வணிகர் குலத்தில் வந்தவளான ஒரு பெண்ணே தானம் செய்திருப்பது கவனிக்கத்தற்குரியது; திருகோ

---

166. E. I. Vol XXII p 213.
167. S. I. I. Vol. I, No. 67





ணமலையிலிருந்த வெல்கம் விகாரையைப் புதுப்பித்த இராசராசன் அதற்கு இராசராசப்பெரும்பள்ளி என்று பெயர் வைத்ததும் சோழமன்னர் எல்லாச் சமயங்களை யும் போற்றிவந்ததற்குச் சான்றாகும்.

முதலாம் இராசராசன் காலத்தில் அவன் பெய ரால் நடந்த ஒரு தண்ணீர்ப்பந்தற் றருமத்தை ஒரு சாசனம் கூறுகின்றது.[168] இராசராச சோழனது பணி மகனும் ஆலூரைச் சேர்ந்தவனுமாகிய கண்ணன் ஆரூரன் தன் அரசன் பெயரில் விக்கிரமாபரணச் சதுர்வேதிமங் கலத்தின் மேலைப்பெருவழியில் ஒரு கிணற்றை அமைப் பித்து அதற்கு நிவந்தம் அளித்துள்ளான். இராசராசன் கிணற்றிலிருந்து தொட்டிக்கு நீர் இறைப்பார்க்கு அருள்மொழித்தேவன் மரக்காலால் நாள் ஒன்றுக்கு நெல் இருகுறுணியாகத் திங்கள் ஆறுக்கு முப்பது கலமும் இராசராசன் பெயரால் தண்ணீர் வார்ப்பார்க்கு நாளொன்றுக்கு நெல் இருகுறுணியாகத் திங்கள் ஆறு முப்பது கலமும் இப்பந்தலுக்கு மட்கலம் இடுவார்க்குத் திங்கள் ஒன்றுக்கு நெல் இருகுறுணியாகத் திங்கள் ஆறுக்கு நான்கு கலமும் இராசராசன் கிணற்றுக்கும் தொட்டிக்கும் பழுது ஏற்பட்டாற் புதுப்பிக்க ஆண்டு தோறும் இருகலனே இருதூணி நெல்லுமாக அறுபத் தாறு கலம் எட்டு மரக்கால் நெல் விளையக்கூடிய நிலத் தின் விலைக்குரிய பணத்தையும் வரிக்குரிய பணத்தை யும் கண்ணன் ஆரூரனிடமிருந்து மொத்தமாகப் பெற் றுக்கொண்ட அவ்விடத்துச் சபையார் நிலத்தை வரி யில்லாமற் செய்தனர் என அச்சாசனம் கூறும். பொருள், அளவு, எண் என்பவற்றைக் குறிக்க இடைக்காலத்தில் வழங்கிய அடையாளங்கள் சில, இச் சாசனத்தில்

---

168. S. I. I. Vol. III, Part I. No. 4.

இடம்பெற்றுள்ளன. ஐ என்பது நெல்; கள என்பது கலம். ங என்பது குறுணிநெல்; வத என்பது இரண்டு தூணி. உகளவத என்பது இருகலனே இருதூணிக்கு அடையாளம். பழைய தமிழ்முறையில் இன்றுள்ளது போலக் கூட்டெண்களைக் குறிக்கும் வழக்கமில்லை. எத்தனை பத்து, எத்தனை நூறு, எத்தனை ஆயிரம் என்பதை முதலில் எழுதி அதன்பின்பு மற்ற எண் எழுதப்படும். உதாரணமாக அறுபத்தாறு என்பதை 66 என்ற முறையில் அக்காலத்தில் எழுதவில்லை; 6106 என்ற முறையிலேயே எழுதுவார்கள். இந்தச் சாசனத்தில் ௬௰௬ என்றே எழுதியுள்ளார்கள்;

## 3. பிற்காலப் பாண்டியர் காலம்

சோழர்குல மன்னர்களின் வீழ்ச்சியைத் தொடர்ந்து பாண்டியர்குல மன்னர்கள் தலையெடுக்கின்றனர். சோழர்குல மன்னர் சோழப் பேரரசைக்கட்டி எழுப்ப முன்பு பாண்டிநாட்டில் ஆதிக்கம் செலுத்திய பாண்டியரை முற்காலப் பாண்டியரெனவும் சோழப் பேரரசு வீழ்ந்தபின் தமிழ்நாடு முழுவதும் ஆட்சிசெலுத்திய பாண்டியரைப் பிற்காலப் பாண்டியர் எனவும் கூறலாம்; சோழப்பெருமன்னர் பெற்றிருந்த அளவு சிறப்பு பாண்டியர் என்றும் பெறவில்லை. எனினும், பிற்காலப் பாண்டியர் காலத்திலும் தமிழ்நாடு இரு மன்னர்கள் காலத்திலே தனிச்சிறப்புடன் விளங்கியதெனலாம். சடாவர்மன் சுந்தரபாண்டியன், மாறவர்மன் குலசேகரன் என்போரே அம் மன்னர்கள் இவர்கள் ஆண்ட காலம் கி. பி. 1251 – 1311. பாண்டிய மன்னர் கி. பி. 1311 ல் திடீர் வீழ்ச்சி அடைகின்றனர். மாறவர்மன் குலசேகரன் மக்களுக்குட் சிம்மாசனத்தை அடைவதில் ஏற்பட்ட தகராறு முஸ்லீம் படையெடுப்பைத் தமிழ்நாட்டுக்கு வரவழைப்பதாக அமைகிறது;

இந்த முஸ்லீம் படையெடுப்பின் பின்பு பாண்டியர் தலையெடுக்க முடியவில்லை. பாண்டியர் சிறிது காலம் தொடர்ந்து ஆளுகின்றனர். சில ஆண்டுகளின் பின்பு மதுரையில் முஸ்லீம் ஆட்சி ஏற்பட்டுவிடுகின்றது. பாண்டியர் தென்பாண்டி நாட்டுக்குத் தப்பி ஓடிக் குறு நில மன்னராகின்றனர். அதன் பின்பு தென்பாண்டி நாட்டில் ஒரு பகுதியிலே தவிரத் தமிழ்நாட்டைத் தமிழரல்லாதோரே ஆண்டுவந்தனர்; எனவே தமிழர் சிறப்பாக வாழ்ந்த காலத்துக் கடைசிக் கட்டத்தி லெழுந்த சாசனங்களே இங்கே ஆராயப்படுகின்றன.

இந்த இரு மன்னர்களுடைய சாசனங்களை ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்வதிலே, பல சங்கடங் கள் காணப்படுகின்றன. பிற்காலப் பாண்டிய மன்னர் களுடைய குலமுறையை அறிந்துகொள்ள முடியவில்லை; அதை அறியக்கூடிய பிற சான்றுகளும் கிடைக்கவில்லை. சாசனங்களிலுள்ள வானியற் செய்திகளின் துணை கொண்டே சாசனங்களின் காலம், மன்னர்களின் காலம், மன்னர் குல முறை என்பனவற்றை அறிய வேண்டியுள்ளது; வானியற் செய்திகளை ஆராய்ந்த கீல் கோர்ண், யேகொபி, சுவாமிக்கண்ணுப்பிள்ளை, கிவெல் என்பவர்கள் வெவ்வேறு முடிவுகளுக்கு வந்துள்ளனர்; 'சிங்கநாயற்று முப்பத்தொன்றுந் தியதியும் அபரபட் சத்து திருதிகையும் புதன்கிழமையும் பெற்ற ரேவதி நாள்,' 'மிதுன நாயிற்று பூர்வபட்சத்து பிரதமையும் வெள்ளிக்கிழமையும் பெற்ற அத்தத்து நாள்' முதலிய வானியற் செய்திகளே ஆராய்ச்சியாளருக்குக் கிடைக் கின்றன. பாண்டியர் சாசனங்களிலுள்ள ஆண்டு குறிக் கும் முறையும் புதிராக இருக்கிறது. உதாரணமாக, 'யாண்டு இரணடாவதின் எதிா நாறபத்திரண்டாவது' என வரும். முதலாவது ஆண்டு முடிசூட முந்திய அர சனின் ஆட்சியாண்டு எனவும் இரண்டாவது ஆண்டு

அந்த அரசனுக்கு முந்திய அரசன் முடிசூடிய காலத்தி லிருந்து கணிக்கப்படுவதெனவும் கோபிநாதராவ் கூறி னார். ஆனால் 'யாண்டு பதின்மூன்றாவதுக்கு எதிர் இரண் டாவது' என்று வரும்போது இவருடைய விளக்கம் பொருந்தாது போகின்றது. வெங்கையா என்ற சாசன வியலாளர் இரண்டாவது ஆண்டே உண்மையான ஆட்சி யாண்டெனவும் முதலாவது ஆண்டு பட்டத்திளவரச னாக வந்த காலம் அல்லது முடிசூடுவதற்கு முன்பு ஏதோ நிகழுங் காலத்தைக் குறிக்கிறதெனவும் கூறினார்; இது முன்பு காட்டிய உதாரணமாகிய இரண்டாவதின் எதிர் நாற்பத்திரண்டாவது என்பதற்குப் பொருந் தாது போகின்றது;

பேராசிரியர் நீலகண்டசாஸ்திரி இரண்டு ஆண்டு களையும் கூட்டிவருவதையே ஆட்சியாண்டாகக் கூறுகின் றார். இந்தக் கட்டுரையிலும் அதே முறை பின்பற்றப் படுகின்றது; அவர் அவ்வாறு கொண்டதற்குக் கார ணம் உண்டு. பெரிய சின்னமனூர்ச் சாசனத்தில் வட மொழிப் பகுதி பதினாறும் ஆட்சியாண்டைக் குறிப்பி டத் தமிழ்ப்பகுதி 'யாண்டு இரண்டாவதின் எதிர் பதி னான்காவது' என்று கூறியுள்ளது; பிற்காலப் பாண்டி யர் காலத்தில் ஒருவர் ஆண்டாரா அல்லது ஐவர் கூட் டாட்சி செய்தனரா என்பதிலும் கருத்து வேறுபாடு காணப்படுகின்றது. முடிமன்னராகவும் முதல் மன்னரா கவும் ஒருவர் ஆண்டுவந்த காலத்தில் வேறு அரசகுமா ரர் தம்முடைய பெயரில் தம்முடைய புகழைக் கூறும் சாசனங்களை வெளியிட்டது மறுக்கமுடியாத உண்மை யாகும். ஒரே பெயர் பல அரசருக்கு வழங்கியதனால், வரலாறு இன்னும் குழப்பம் அடைகின்றது; சடாவர் மன் சுந்தரபாண்டியன் என்ற பெயரில் மூவர் ஆண்டுள் ளனர்; தனிச்சிறப்போடு ஆண்ட முதலாம் சடாவர் மன் சுந்தரபாண்டியன் 'எம்மண்டலமும் கொண்டரு

ளிய' என்ற பட்டத்தைத் தாங்கியுள்ளான். எனினும் அவன் இப்பட்டத்தைப் பெறுமுன்பும் சாசனங்கள் எழுந்திருக்கும். பட்டம் பெற்றபின்பும் இப் பட்டமில் லாத சாசனங்களும் தோன்றியிருக்கலாம்; சடாவர்மன் வீரபாண்டியன் என்பவன் முதலாம் சடாவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தவனும் அவனுடைய போர்களிலே பங்குகொண்டவன்; அவனுடைய பெயரில், அவனுக் குச் சிறிது பிந்தி இன்னொருவனும் இருந்திருக்கிறன். மாறவர்மன் குலசேகரன் என்னும் பெயரிலும் இருவர் காணப்படுகின்றனர். 'எம் மண்டலமும் கொண்டருளிய' என்னும் பட்டத்தை இருவரும் தரித்துள்ளனர். அவர் கள் காலத்துச் சாசனங்களைப் பிரித்தெடுக்க முடியவில்லை; எனவே, இக்கட்டுரையில் ஆராய எடுத்துக்கொண்ட மூன்றுபேர்களின் காலத்துச் சாசனங்களும் கி. பி. 1251 - 1311 என்று வரையறுத்துச் சொல்லமுடியாது; எனினும் நீலகண்டசாத்திரி இந்த மூன்று பெயர்கள் தாங்கிய எழுவரின் காலத்தைப் பற்றிக் கூறுவதிலிருந்து இந்தச் சாசனங்கள் கி. பி. 1251 - 1350 என்ற காலப் பிரிவையாவது சேர்ந்தவை எனத் துணிந்து கூறலாம்;

பாண்டியர் குலமன்னர் சோழர்குல மன்னர்கள் அளவு சைவ சமயத்துடன் நெருங்கிய தொடர்புடைய வரல்லர்; எனினும் பிற்காலப் பாண்டிய மன்னர் சைவ சமயத்தையே முதன்மையாக ஆதரித்து நின்றனர். எனவே, அக்காலத்திலும் சைவசமய சம்பந்தமான சாசனங்கள் பெருந்தொகையாக எழுந்தன; அவற் றுள் ஒரு பகுதி கோவிலுக்கு விளக்குவைப்பதைக் கூறு வன; பாண்டிய மன்னர் காலத்திலே பாண்டி நாட்டி லேயே செல்வப் பெருக்கம் ஏற்பட்டதால், பாண்டி நாட்டவர் தமிழ்நாட்டின் பிறபகுதிகளில் அறச்செயல் களில் ஈடுபடுவதைக் காணலாம். பாண்டிமண்டலத்து மதுரையைச் சேர்ந்த காமன் அரசனை அதிவருவான்

தேவன் தொண்டைமண்டலத்துத் திருக்கழுக்குன்றக்
கோவிலில் நுந்தாவிளக்குச் சந்திரசூரியர் உள்ளவரை
எரிய வேண்டுமென்று நூறு சாவாமூவாப்பேராடுகளை
அக்கோவிலுக்குத் தானம் செய்தான். திருக்கழுக்குன்
றக்கோன், அரசபுரந்தரக்கோன், சித்திரமேழிக்கோன்,
பெரியநாட்டுக்கோன் என்ற நான்கு மன்றாடிகளான
இடையர்கள் கோவிலதிகாரிகளிடம் அந்த ஆடுகளைப்
பெற்றுக்கொண்டு மெய்ப்பூட்டுத் திட்டுக் கொடுத்திருக்
கிறார்கள்.[169] முந்திய காலச் சாசனங்களில் இவ்வாறு
திட்டான ஆவணம் கொடுப்பதுபற்றிச் சாசனங்களிற்
குறிப்பு இல்லை; இது அக்கால வளர்ச்சியாக இருக்க
வேண்டும். அந்தத் திட்டின்படி, இந்த நான்கு இடை
யர்களும் அவர்கள் பரம்பரையினரும் தினசரி உழக்கு
நெல் இராசகேசரியால் அளந்துகொடுத்துவரவேண்டும்.
சோழர்காலத்து வழக்கில் வந்த இராசகேசரி என்ற
முகத்தல் அளவையே சடாவர்மன் சுந்தரபாண்டியன்
காலத்தில் அவன் ஆட்சிக்கு உட்பட்ட தொண்டை
மண்டலத்தில் வழங்கிவந்திருக்கிறது.

பல்லாபுரமான வானவன் மாதேவிச் சதுர்வேதி
மங்கலத்திலுள்ள சிவபெருமானுக்கு முதலிவாணுண்டை
யான தொண்டைமானார் நுந்தாவிளக்கு ஒன்றுக்காக
முப்பத்திரண்டு பசுக்களும் எருது ஒன்றும் விட்டிருக்கி
றார். கோயிலுரிமையுடைய பட்டர்கள் இவற்றை ஏற்
றுச் சந்திர சூரியர் உள்ளவரை நுந்தாவிளக்கு வைப்ப
தாகச் சாசனங்களிற் பொறித்தனர். மாகேசுவரர் இந்
தத் தருமத்தைப் பாதுகாக்கவேண்டும் என்றும் குறிப்
பிடப்பட்டுள்ளது.[170] திருநெல்வேலி நெல்லையப்பர்

---

169. S. I. I. Vol. V, p. 190.
170. S. I. I. Vol. VII. p. 328.

கோவிலில் பொல்லாத பிள்ளையாருக்குச் சந்தி விளக்கு மாறவர்மன் குலசேகரன் காலத்தில் வைக்கப்பட்டுள்ளது. பெருந்தெருவில் இருந்த வணிக நகரத்தார் ஆட்கொண்டான் தனபாலர் அத்தருமத்துக்காகக் கொடுத்த பொருளை ஏற்றுத் தம்மைச் சேர்ந்தோர் சந்திரசூரியர் உள்ளவரை சந்திவிளக்கு எரிப்பதாகக் கல்வெட்டிக்கொடுத்தனர் [171]

திருவொற்றியூர்ச் சாசனமொன்றில் பால் அமுதுக்கும் நெய்யமுதுக்கும் ஒழுங்கு செய்யப்பட்ட குறிப்பு வருகின்றது. அமுது பொதுவாக உணவு அல்லது உணவோடு தொடர்புடைய பொருளையே சாசனங்களிற் குறித்து வந்தாலும் நெய் விளக்கு எரிப்பதற்கும் பயன் பட்டிருக்கலாம். அவ்வூரிலுள்ள மன்றுடிகளில் வெறுங் கைவென்றான் அல்லாண்டை மகன் அஞ்சாதானை குழையாகரக்கோனும் அவன் தம்பி திருஞான சம்பந்தக்கோனும் பண்டாரம் எனப்படும், கருவூலத்திற் சாவாமூவாப்பசு அறுபத்துநான்கும் எருது இரண்டும் பெற்றுக்கொண்டு தினசரி ஆரணைதியாகி என்னும் முகத்தலளவையால் எட்டுநாழியாலும் உரி நெய்யும் அளந்து கொடுப்பதாக ஒப்புக்கொண்டுள்ளனர்; இந்தத் தருமமும் மாகேசுவரர் பாதுகாப்பில் விடப்பட்டுள்ளது.[172]

தனி விளக்குக்குப் பதிலாகப் பல விளக்குகள் ஒருங்குசேர்ந்து கோவில் வாசலை அலங்கரிக்கும் தீப மாலைக்குத் தானம்செய்யும்வழக்கமும் இந்தக் காலத்தில் இருந்திருக்கிறது. திருவையாற்றுச் சிவபெருமானு

---

171. S. I. I. Vol. V. p. 149.
172. S. I. I, Vol. VII. p. 36.

டைய வாசலில் தீபமாலை நிறுவி அதில் விளக்கு எரிக்கப் பாம்புணிகிழான் எனப்படும் பாம்புணிக் கிராமத்தின் உரிமையானவனும் மல்லாண்டானுமான சேரகோன் நால்வரிடம் ஆறே மாகாணி முந்திரிகைக்கீழ் எட்டுமா முக்காணி நிலம் விலைக்கு வாங்கித் திருவிளக்குப் புற மாகவிட்டான்.[173] அவன் திருமழபாடிச் சிவபெரு மானுடைய வாசலில் தீபமாலை நிறுவி அதற்கு வேண் டிய எண்ணெய்க்காக மூவ்ரிடம் நாலே காணிக்கீழரை நிலம் விலைக்கு வாங்கித் திருவிளக்குப்புறமாக விட்டதை இன்னொரு சாசனம் கூறும்.[174]

இக்காலக் கோவிலில் திருமஞ்சனத்துக்கான ஒழுங்குகள் பல செய்யப்பட்டன. திருமஞ்சனத்துக்குத் தானம் செய்ததை எடுத்துக்கூறும் சாசனங்கள் நான்கு கிடைத்துள்ளன. களையார்கோவிலில் திருமஞ்சனப் புற மாக நிலம் ஊரால் இறையிலி செய்யப்பட்டு அக்கோயி லில் ஆதிசண்டேசுர தேவகன்மிகளிடம் விடப்பட்ட தைச் சிதைந்துள்ள முற்றுப்பெறாத சாசனம் ஒன்று எடுத்துக்கூறுகின்றது.[175] திருமழபாடிச் சிவபெருமானுக்கு எதிரொப்பிலாதானை சுந்தரபட்டனும் பொன்னார் மேனிபட்டனும் உமையாண்டாளும் கமுகந்தோட்டம் அரைமாநிலத்தைத் திருமஞ்சனப்புறமாக விட்டனர். இறைவனுக்கு அபிடேகம் செய்பவருக்குச் சீவனத்துக்கு வேண்டிய பங்கைக் கோயிற் காணி விளைநிலத்திலே விட்டுக் கல்லில் வெட்டும்படி கூறப்படுகின்றது. ஊரார் நில விலையாகவும் நிலவரியாகவும் மொத்தப் பணமாக எழுநூற்றைம்பது பணம் முதலியார் புற்பவனசிவரிடம்

---

173. S. I. I. Vol V p 223.
174. S I. I. Vol V, p 273
175. S. I. I. Vol VIII. p. 82.

வாங்கிக்கொண்டு நிலத்தை இறையிலி செய்து கொடுத்தனர்.[176]

திரையனூரான குலோத்துங்கசோழச்சதுர்வேதிமங்கலம் அனந்திச்சுரமுடைய நாயனுருக்கு அபிடேகத்துக்கு ஒழுங்கு செய்தது. கோவிலை நிர்வாகஞ் செய்த சத்தியதேவர் நாற்பத்திரண்டு பாடகநிலங்களைக் கோவிலுக்கு விட்டார்; இப்பாடக நிலங்களை விடுவதற்கு உடையார் அதியமானூர்முன்பு கூடிய நாடவர் உடன்பட்டனர்; சபை நிலத்தைக் குடிநீங்காத்தேவதானமாகவிட்டது. குடிநீங்காத்தேவதானத்தில், நிலமும் நிலவருமானமும் கோவிலுக்கு உரியதாக இருப்பினும் குடியேறியுள்ள அல்லது தொழில்செய்துவருகின்ற குடிகளை அப்புறப்படுத்தும் உரிமை மட்டும் மறுக்கப்பட்டது. இந்நிலத்திலிருந்து கிடைக்கும் நெய்யில் சிவபெருமானுக்குத் திருவாதிரையில் அபிடேகம் நடைபெறவேண்டும் என்றும் குறிக்கப்பட்டுள்ளது.[177]

திருநெல்வேலி நெல்லையப்பர் கோவிலிலும் இந்த ஒழுங்கு நடைபெற்றுள்ளது; நெல்லையப்பருடைய நிவந்தக்காரரில் வெட்டிக் குடி இடையரான சிறுயான் சேனுதிபதியான வேண்டவளந்தக்கோனும் கூத்தனும் பெரியானும் ஆகிய மூன்று சகோதரர்களும் அட்டமி நாள் ஒவ்வொன்றும் சிவபெருமானுடைய அபிடேகத்துக்கு நாழிநெய்யும் பொல்லாத பிள்ளையாருடைய அபிடேகத்துக்கு உரிநெய்யும் அளக்க உடன்பட்டனர். பிள்ளையார் வணக்கம் காலகதியில் முக்கியத்துவம் பெற்று வருவதை இங்கே கவனிக்கலாம்; கோவிலிலிருந்து முப்

---

176. S. I. I. Vol. V, p. 27.
177. S I. I. Vol. VII, p. 255.

பது பசுக்களைப் பெற்றுக்கொண்டு நெய்யைச் சந்திர சூரியர் உள்ளவரை தாமும் தம்முடைய சந்ததியினரும் அளக்க உடன்பட்டனர். தாம் பசு நெய்யையே கோவி லுக்குக் கொடுப்போம் எனச் சிறப்பித்தும் சொல்லியுள் ளனர். இம்மூவரும் எழுத்தறிவற்ற தற்குறிகளானதினால், இவர்கள் ஒவ்வொருவர் சார்பிலும் பிறர் கையெழுத் திட்டுள்ளனர்.[178]

சிவபெருமானுக்கு அலங்காரம் செய்வதற்காகத் தானம்செய்யும் முறையும் இருந்தது. சார்த்துப்பணி யில் ஒன்றை எடுத்துச் சிறப்பித்துக் கூறி அதற்குத் தானம் செய்தமையை ஒரு சாசனத்திற் காணலாம்; வைத்தியபுரந்தரர் திருவானைக்கா இறைவனுக்கும் வடி வேயுமங்கை நாச்சியாருக்கும் நாச்சியார் அகிலாண்ட நாயகியாருக்கும் சார்த்துப்பணிக்கு நெற்றிப்பட்டம் செய்வதற்காக நானூறு பணம் கொடுத்தார். கோவில் ஆதிசண்டேசுவரதேவகன்மிகள் பணத்தைப் பெற்றுக் கொண்டு கோவில் நிலத்தில் ஒரு பகுதியை இப்பணிக்கு ஒதுக்கிக்கொடுத்தனர். அந்த நிலத்தைக்கொண்டு அந் தத் தருமத்தைச் செய்துவருவதாக அத் தேவகன்மிகள் சம்மதித்துப் பிரமாணம் செய்துகொடுத்தனர்.[179]

இறைவனுடைய தேவிக்குச் சார்த்துப்படி, ஆடை யாகிய பரிவட்டம், அமுது முதலிய படிவிஞ்சனத்துக்கு வழியமைத்ததைக் கூறும் சாசனம் ஒன்றும் கிடைத்துள் ளது. காலகதியிற் பெண் தெய்வ வழிபாடும் தமிழ்நாட் டிலே பெருகிக்கொண்டுவந்தது. சிவன் கோவில்களிலே சக்திக்குப் பல இடங்களிலே தனிச் சன்னிதிகள் அமைக்

---

178 S. I. I. Vol V, p. 151.
179. S. I. I. Vol. IV, p. 133.

கப்பட்டன. அவற்றுக்குக் காமக்கோட்டம் என்றபெயர் வழங்கியது. திருமிகைச்சூர்ச் சிவபெருமானுடைய திருக்காமக்கோட்டமுடைய சிவகாமசுந்தரி நாச்சியாருக்கு உடையார் காலிங்கராயரும் கைடைக்கூட்டுபிள்ளை ஆதித்ததேவரும் சபையாரும் நாட்டாரும் சேர்ந்து சார்த்துப்படி முதலியவற்றுக்காக நிலம் விட்டனர். விடப்பட்ட நிலங்களிலிருந்து கார்த்திகை மாதவரை கொடுபடாமலிருந்த வரிகளும் மார்கழி மாதத்திலிருந்து கொடுக்கப்படவேண்டிய வரிகளாகிய செட்டிகள் பல பட்டடை, சேனைக்கடை வேட்டைக்காரர்க்கடை, தறியிறை, தட்டார்பாட்டம், குளவாடை, ஒழுக்குநீர்மீன் பாட்டம், செக்காயம், வண்ணார்கற்காசு, உப்புவழி வரி என்பனவும் சேர்க்கப்பட்டுச் சிவகாமசுந்தரி நாச்சியாருடைய சார்த்துப்படி முதலியனவற்றுககாகச் சந்திர சூரியர் உள்ளவரை செலவிடப்படவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.[180]

கோவிலிலே பூசை அல்லது வழிபாடு நடப்பதற்காகத் தானங்கள் விடப்பட்டுள்ளன. நிலம் விடப்பட்டதை ஒரு சாசனம் கூறுகின்றது.[181] திருப்பூந்துருத்திச் சிவபெருமானையும் நாச்சிமார் இருவரையும் உய்யவந்தான் இராசராசதேவர் கும்பிட்டு அவர்களுடைய அமுதுபடி, படிவிஞ்சனத்துக்காக நிலம் அரையே காணி கோவில் நிலத்தில் விலைக்குக் கொண்டுவிட்டுள்ளார். நிலம் தேவதான இறையிலியாக ஆதிசண்டேசுவரதேவ கன்மிகளால் விடப்பட்டது. நிலத்திற்குரிய வரிகள் யாவற்றையும் தேவகன்மிகள் செலுத்திவர உடன்பட்டனர். திருக்கழுக்குன்றக்கோவிலிற் பூசை நடைபெறு

---

180. S. I. I. Vol. VIII. p. 137.
181. S I. I. Vol, V, p. 179.

வதற்கு காமன் அரசனான அதியமான் தேவர் பணம் கொடுத்து ஒழுங்குசெய்ததை இரண்டு சாசனங்கள் கூறு கின்றன. கோவிலில் பூசிக்கும் பட்டர்கள் உபயத்தீட் டுக்கொடுக்கிறார்கள். அதியமான் தேவரிடம் இருபத்தி ரண்டரைப் பணம் பெற்றுக்கொண்டு வட்டியாகத் தின சரி நாழி உரி அரிசி பூசைக்குச் செலவிடுவதாகப் பட் டர்கள் தீட்டுக்கொடுக்கின்றனர்.[182]

திருக்கழுக்குன்றக் கோவிலில் உரிமையுடைய நாற்பத்தெட்டு வட்டத்துச் சிவப்பிராமணர் உபயத் தீட்டுக் கொடுக்கின்றனர்; அதியமான் தேவர் கொடுத்த அறுபத்தேழரைப் பணம் வட்டிக்குக் கொண்டு சிவப் பிராமணர் நான்கு நாழி உரி அரிசி கோவில் அமுதுக்குத் தினசரி அளப்பர்; அந்த அமுதை அப்பிராமணர் தம் முடைய பரிசாரப்பேற்றுக்குக் கூலியாகப் பெறுவர்.[183] கோவில் நிலத்தைக் கற்பூரவிலைக்கு விற்றுச் சீர்திருத்து வித்து கோவிலுக்கு ஒரு குறிப்பிட்ட அளவு வருமானம் வர வழிசெய்தனர்; மதுரைச் சுந்தரேசுவரர் கோவி லுக்குரியதும் மாத்தூரிலிருந்ததுமான தேவதானம் வரம்பழிந்து காடுபற்றிக் காணப்பட்டது. கோவில் உரிமை யுடையவர்களும் தேவகன்மிகளும் மாகேசுவரக்கண்காணி களும் அந்த நிலத்தைக் கோவிற் கைக்கோளரில் மாதேவர் அழகிய சொக்கனரான சுந்தரபாண்டியச் சோழ கோனார்க்கு இருநூற்றைம்பது புதுக்குளிகைக்குக் கற்பூர விலையாக விற்கின்றனர்; அழகிய சொக்கனார் அந்த நிலத்தைத் திருத்திப் பயிர்செய்யவேண்டும். நில வரிகள் பட்டியல் ஒன்று தரப்படுகின்றது: பொன்வரி, வினியோகம், வெட்டிப்பாட்டம், பஞ்சுபிலி, சந்திவிக்

---

182. S. I. I Vol. V, p. 191.
183. S. I. I. Vol. V, p 191.

கிரகப்பேறு, ஒலை எழுத்துவினியோகம், இலாஞ்சினைப் பேறு, காணிக்கை, கார்த்திகைப்பச்சை, ஆனைச்சாலே, குதிரைப்பந்தி முதலிய வரிகளுக்குப் பதிலாக அழகிய சொக்கனூர் காடுவெட்டின ஆண்டில் பதினெட்டடிக் கோலால் அளக்கப்பட்ட ஒவ்வொரு மாவுக்கும் நான்கு கலநெல்லும் அடுத்த ஆண்டு ஆறு கலநெல்லும் அடுத்த ஆண்டு எட்டுக்கலநெல்லும் அடுத்த ஆண்டு பத்துக் கல நெல்லும் அடுத்த ஆண்டு பன்னிரு கல நெல்லும் அதற்கு அடுத்த ஆண்டிலிருந்து ஒவ்வோராண்டுக்கும் பதினைந்து கலநெல்லும் கோவிலுக்குக் கொடுத்துவரவேண்டும். ஒவ்வோராண்டும் பயிரைப்பார்த்துப் பயிர்நின்ற நிலத்திற்கே இவ்வரிசைப்படி இறுத்துவர வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது.[184]

திருவிழா நடைபெறுவதற்கான ஒழுங்குகளும் நடந்துள்ளன; திருமழபாடிச் சிவனுக்கு நிலம் நாட்டாரால் இறையிலிபண்ணிக் கொடுக்கப்பட்டிருக்கின்றது. தைப்பூச விழாவுக்குத் திருப்பாவாடைக்கும் காவேரியாற்றில் எழுந்தருளும்போது தங்குவதற்கு ஆற்றிலே மண்டபமும் பந்தலும் அமைப்பதுக்கும் அமுதுபடி சாத்துப்படி வெஞ்சனம் உள்ளிட்ட பலவற்றுக்கும் வேண்டிய பணத்துக்கும் நெல்லுக்குமாக நிலம் கொடுக்கப்பப்பட்டிருக்கின்றது.[185] பாண்டிமண்டலத்தவர் ஒருவர் தம்முடைய பிறந்த நாளில் சிறப்பாகப் பூசை நடத்துவதற்குத் திருவானைக்காக் கோவிலில் ஒழுங்குசெய்துள்ளார். முனையதரையருடைய பிறந்த நாள் பரணிநாளாம். தானம் கொடுத்த தைமாதம் முதல் இந் நாள்கள் தோறும் சிறப்பாகத் திருவானைக்காக் கோவிலில் அமுது

---

184. S. I. I. Vol. IV, p. 107.
185. S. I. I. Vol. V, p. 248.

நடைபெறவேண்டும்; அரிசி திருவெண்ணுவல் தேவன் காலால் சிவனுக்குக் குறுணியும் தூணியும் வடிவேயு மங்கை நாச்சியாருக்குக் குறுணியும் அகிலாண்டநாயகி யாருக்குக் குறுணிநானுழியும் பொல்லாதபிள்ளையாருக்கு நானுழியும் அவியுணவுக்கு முன்னுழியும் அத்தியயனம் பண்ணும் பிராமணர் இருவருக்கு முன்னுழியும் அபூரித் திருமேனிகளுக்கு இருநாழியும் ஆக அரிசி கலம் வேண்டி யிருந்தது. பிறகு, கறியமுது, உப்பு, மிளகு, சீரகம், நெய், தேங்காய், பழம் உள்ளிட்ட படிவெஞ்சனங்கள் வேண்டியிருந்தது. வழமையாக இரண்டு குடம் அபிடேக நீர் எடுத்து வருவதுக்கும், தினமும் இதனோடு இரண்டு குடம் அபிடேகநீரை எடுத்துவருவதுக்குமாக ஒருவருக் கும் நந்தவனம் வைத்துப் பூப்பறித்து மாலைகட்டுபவர் ஒருவருக்கும் தொண்டுக்கும் சீவனத்துக்கும் புடவைமுத லுக்கும் தானம் செய்யவேண்டியிருந்தது. இவற்றுக்காக முனைதரையர் இருபதினுயிரம் காசு கொடுத்தார். இப் பணம் கோவில் நாலாம் பிராகாரத்து ஆதிச்செல்வன் போனகப் பழநெல் பண்டாரத்திலே திருப்பணிக்கு முத லாக வைக்கப்பட்டது. கோவில் ஒரு வேலி விளைநிலத் தையும் நந்தவனம் அமைப்பதற்கான இருநாழு குழி புன் செய் நிலத்தையும் சகல உரிமைகளோடும் முனையதரைய ருக்கு விற்று விலைப்பிரமாண இசைவுதீட்டுக் கொடுத் தது [186]

சோழப்பெருமன்னர் காலத்தைப் போலல்லாது பிற்காலப் பாண்டியர் காலத்தில் கோவிலின் தேவை களுக்காக நிலதானமே பெரும்பாலும் நடைபெறுகின் றது. இன்ன காரியத்துக்காக நிலம் விடப்படுகின்றது என்று கூருமல் பொதுவாகக் கோவில்களுக்கு நிலம்

---

186. S. I. I. Vol. IV, p. 128.

கொடுக்கப்படுதலே மூன்று பந்தியிலே ஆராயப்படுகின்றது; அப்படிப்பட்ட நிலம் தேவதானம் அல்லது திருநாமத்துக்காணி என்று வழங்குகின்றது. வைகாவி நாட்டுக் காரணவர் பழனிசுப்பிரமணியர் கோவிலுக்கு நிலம் விட்டிருக்கிறார்கள். காரணவர் ஒரு சாதியினர். தமிழ் நாட்டில் நாஞ்சில் நாடு முதலிய பகுதிகளில் நிலக்கிழார்களுக்கு இப்பெயர் வழங்கியிருக்கின்றது. இவர்களுடைய உடைமையான நன்னிலம் சாசனத்தில் நானூற்றொரு பத்தொருமா எனப்படும் நானூற்றுப்பதினொருமா வாகும். அதில் ஐந்து மாமுக்காணி முன்பே தேவதானமாக விட்டுவிட்டார்கள். இத்தேவதான நிலத்தை நீக்கி மிகுதி நிலத்தை, இதுக்கு அடைப்பான சுந்தரபாண்டிய நல்லூருங் காடுகளும் புன்செய்களும் குடியிருப்புகளும் தோட்டங்களும் குளங்களும் மேனோக்கின மரமும் கீழ்நோக்கின கிணறும் உட்பட யாவற்றையும் சுப்பிரமணியருக்கு விடுதிட்டுமூலம் கொடுத்திருக்கிறார்கள்.[187]

நெல் விளைந்தபின் கோவிலுக்குப் புதிய நெல் எடுத்து அமுது படைப்பதற்காகப் புதியது வளாகம் என்ற பெயரில் நிலம் விடப்பட்டது. அன்பில் பிரேமபுரீசுவரகோவிற் கைக்கோள முதலிகளில் ஆச்சிராமன் குலோத்துங்க பல்லவரையர் என்பவர் வரிக் காரியங்களுக்காகத் தரம் அதுவரை வகுக்கப்படாமலிருந்த தரமிலி நிலத்தில் மூன்று மாவுக்குக் கூடிய நிலத்தை அல்லூர்ப் பிராமணர் ஒருவரிடம் விலைக்குப்பெற்றுத் திருப்புதியது வளாகம் எனத் திருநாமத்துக்காணியாக விட்டனர்.[188] பிற்காலப் பாண்டியர் சாசனங்களிற் குறிப்பிடக்கூடிய ஓரமிசம் சகலவிதமான அளவைகளையும் அடையாளங்

---

187. S I I. Vol, V, p. 105.
188. S. I. I. Vol VIII, p. 97.

களாலே குறிக்கும் இயல்பு வளர்ந்து காணப்படுகின்றது; இவ்வாறு குறிக்கும் முறை அக்காலத் தமிழ்நாட்டிலே செல்வாக்குப் பெற்றிருந்திருக்கலாம். சாசனம் நீண்டு செல்வதைத் தவிர்ப்பதற்கும் இவ்வடையாளங்கள் உதவியுள்ளன. சோழப்பெருமன்னன் முதலாம் இராசேந்திரன் கட்டி எழுப்பிய கங்கைகொண்ட சோழீச்சுரப்பெருவுடையார் கோவிலுக்கு முதலாம் மாறவர்மன் குலசேகரன் காலத்தில் நிலம் திருநாமத்துக்காணியாக வாங்கிவிடப் பட்டது; தெல்விபுத்தூர் என்னும் அந்நிலத்தின் நான் கெல்லையும் விரிவாகக் கூறப்பட்டு அவ்வெல்லைகளுக்கு 'உட்பட்ட ஊர்நத்தமும், மனைகளும் நன்செய்யும் புன்செய்யும் தோப்புக்களும் ஏரி நீர் வாங்கு நிலமும் ஊருணி குளமும் பொதுவும் பொதுவாதியும் மேனோக்கிய மரமும் கீழ்நோக்கின கிணறும்' திருநாமத்துக்காணியாக விலைக்கு வாங்கப்பட்டது எனப்பட்டுள்ளது. தெல்விபுத்தூரின் நான்கு எல்லைகளுக்கும் சிவன் கோவிலில் எல்லைகளில் வழமையாக இடப்படும் சூலக்கல் நாட்டப் பட்டது.[189]

கங்கைகொண்ட சோழீச்சர கோவிலுக்குத் திருநாமத்துக்காணி விற்றுக்கொடுத்த செய்தி இன்னொரு சாசனத்தில் இடம்பெறுகின்றது. நாட்டவரும் ஊரவரும் சேர்ந்து இக்கோயில் ஆதிசண்டேசுவரதேவகன்மிகள், கோயிற்கணக்கர், மாகேசுவரக் கண்காணிகள் ஆகியவர்களிடம் விலைபெற்றுக்கொண்டு கோவிலுக்குத் திருநாமத்துக்காணியாக நிலம் விடப்பெற்றது: இந்த நிலம் பல்வேறு துண்டுகளாக அமைந்திருந்தது. ஒவ்வொரு துண்டு நிலத்தின் பெயரும் அளவும் இந்தச் சாசனத்திற் குறிப்பிடப்பட்டுள்ளன. நிலத்தை விற்பவர்கள்

---

189. S. I. I Vol. IV, p. 152.

'நாங்கள் இறை ஆற்றாமல் பல இடங்களிலும் விற்றுக் குடுத்த' என்று கூறியுள்ளார்கள்.[190] வரிகளை மக்கள் கொடுக்கமுடியாத நிலையும் ஏற்பட்டிருக்கிறதென்பதற்கு இந்தச் சாசனம் சான்றாகும்: சாசனம் மாறவர்மன் குலசேகரன் காலத்ததாதலால், பகைவரது சோழநாட்டுப் பகுதிகளில் வரி அதிகரிக்கப்பட்டிருக்கலாமா அல்லது பொதுவாக வரிகள் ஏறிவிட்டனவா எனக் கூற முடியாதுள்ளது: மக்களுக்கு இக்கட்டான நிலை ஏற்பட்டபோது கோயில்கள் அவர்களுக்கு உதவியுள்ளன என்பதற்கும் இந்தச் சாசனம் சான்றாகும்: தனிப்பட்டவர்களுக்கு நிலத்தை விற்பதிலும் பார்க்கக் கோவிலுக்கு நிலத்தைவிற்பது சமய நம்பிக்கையுள்ள மக்கள் மனத்திற்கு இதமாக இருந்திருக்கும்: கொங்குநாட்டு இளமீசுவரசர் கோவிற் சிவபெருமானுக்கு 'பூதானகரதான இறையிலி' கிடைத்துள்ளது: பூதானம் என்பது நிலக்கொடை, கையிலாற்கொடுக்கப்படுவது எள்ளும் நீரும் இறைத்துக்கொடுப்பதாகும்: 'உதகபூர்வமாக' அதாவது தாரைவார்த்துக் கொடுக்கப்பட்டது என்றும் கூறப்பட்டுள்ளது: கண்டியதேவரும் பூவாணிய நாட்டவரும் 'பெருமாள் திருமேனிக்கும் தேவர் கண்டிய தேவர்வாளுக்கும் தோளுக்கும் நன்றாக' இத் தானம் செய்யப்பட்டுள்ளது.[191] கண்டிய தேவரின் வாள்வலியும் தோள்வலியும் மிகுந்து விளங்கவேண்டும் என்று இறைவனை வேண்டிக்கொண்டு இத் தானம் செய்யப்பட்டுள்ளது:

கோவிலுக்கு நிலம் தானம் செய்யப்படும்போது பயிர்செய்யும் உரிமையாகிய காராண்மையைச் சாச

190. S. I. I. Vol. IV, p. 154.
191. S. I. I. Vol. VII. p. 12.

னத்திற் குறிப்பிட்டவருக்கும் நிலவருமானத்தைக் கோவி லுக்கும் என்று பிரித்து எழுதிவைக்கும் முறை யிருந் திருக்கிறது. காளையார் கோவிற் சாசனமொன்றில் இதற்கு எடுத்துக்காட்டுக்காணப்படுகின்றது: முடக் காரை ஊரார் சோமனாததேவரான வைத்தியச்சக்கர வர்த்திக்கு இறையிலி பிடிபாடு செய்து கொடுத்துள்ள னர். புற்பவனசிவர் ஒரு துண்டு நிலத்தை ஊரில் வாங்கினார்; அந்த நிலம் வைத்தியச்சக்கரவர்த்தி கையில் இருந்தது. அந்த நிலத்திலிருந்து பதினைந்து அச்சு என்ற நாணயமும் பிற வருமானமும் உண்டு. இந்த வருவாயை ஊர்வரவிலிருந்து நீக்கி, வருவாய் இறை வனுக்குத் திருமஞ்சனப்புறமாகச் சேரும்படியும் பயிர் செய்யும் உரிமை வைத்தியச் சக்கரவர்த்தி அகோர சிவமுதலியாருக்குத் தொடரும்படியும் திருமுகம் என் னும் அரசாணை வந்தது. இந்த நிலத்தோடு ஆவ்வூர் அந்தரிசுரமுடைய சிவனுக்கு நான்கு மாநிலம் அமுது படிக்குத் திருநாமத்துக்காணியாக இவரால் வாங்கி விடப்பட்டது. இந்த இரண்டாவது நிலப்பகுதிக்குப் பொன்வரி இருந்தது. இந்நிலத்தையும் வரியையும் நீக்கி முன்பு குறிப்பிட்ட நிலத்துக்கே இறையிலி பிடி பாடு எழுதப்பட்டது. ஊரார் எழுநூற்றைம்பது பணம் பெற்றுக்கொண்டனர். இப்பணம் கோவிலுக்குத் தேவை யான ஆடைகள் வாங்கப் பரிவட்டச் சிறப்பாகப் பயன் படும்.[192]

திருப்புனவாசலிலுள்ள சிவபெருமானுக்கும் இதேபோல நிலம் விடப்பட்டுள்ளது. அச் சிவனுக்கு ஒருருடையான் அழகிய மணவாளப்பெருமாளான காலிங்கராயர் தம்முடைய பெயரால் காலிங்கராயன்

---

192. S. I. I. Vol VIII, p. 76.

சந்தியை அமைத்துள்ளார்; காலிங்கராயருடைய அரையத்தூர் நிலத்தைக் காணியாகக் காலிங்கராயர் அனுபவித்துக் கோவிலுக்கு வருவாயை அளித்துவரவேண்டும் என்று வீரபாண்டிய மன்னனுடைய திருமுகம் வந்தது. இந்நிலம் இறையிலியாகச் செய்யப்பட்டது; இந்நிலத்தில் இரண்டுமா ஒருரில் இவர் எழுந்தருளுவித்த இளைய பிள்ளையாருக்குத் தேவதானமாகவிடப்பட்டது; பிராமணரைக் கோவிலின் திருச்சுற்றிற் குடியேற்றிய இவர் அவர்களுக்கு இந்நிலத்தில் ஆறுமா தருமதான இறையிலியாக விட்டுள்ளார். அரையத்தூரில் இந்நிலங்களைக் கழிக்க எஞ்சிய நிலம் இரண்டே நாலரை மாகாணியாகும். இந்நிலம் திருமுகத்திற்கண்டபடி எல்லைகளுக்குச் சூலத்தாபனம்பண்ணி விடப்பட்டது.[193]

குடிநீங்காத்தேவதானம் என்ற தொடர் இரண்டு சாசனங்களில் இவ்வாறு நிலம் விட்டதைக் குறிப்பிடும் போது வழங்கப்பட்டுள்ளது. திருவனந்திசுரமுடைய சிவபெருமான் திருமேனி ஆடித்திருநாளிலே சந்திரசூரியர் உள்ளவரை எழுந்தருளச் செய்வதற்கான செலவுகளை உதவக்கூடிய முதலாக நாட்டவரால் தேவதான நிலம் விடப்பட்டது. நான்கு எல்லை கூறப்பட்டு அதற்கு உட்பட்ட நிலத்தில் உள்ளூர்த் தெய்வங்களின் தேவதானம் திருவிடையாட்டம் திருவமுதுக்கு நீக்கி எஞ்சிய நிலமே இறையிலி குடிநீங்காத் தேவதானமாக விடப்பட்டுள்ளது. நிலத்துக்குரிய வரிகளை நாட்டவரே கொடுத்துவருவார்கள். நில எல்லைகளுக்குச் சூலத்தாபனம் பண்ணினார்கள்.[194] அச்சேசுவரகோவிலில் ஆதிசண்டேசுவர தேவகன்மிகளுக்கு அக்கோவில் தேவரடியாரில்

---

193. S. I. I Vol. VIII p. 1071.
194 S I. I. Vol. VII, p. 254.

பெரியசானிநங்கை மகன் ஆண்டான் கண்டியதேவன் என்பவன் தேவகநாயன் அருவாளப்பட்டனிடம் நிலம் வாங்கிக் குடிநீங்காத் தேவதானமாக விட்டுள்ளான்.[195]

கோவிலிற் செய்யப்படும் திருப்பணிகளைக் கூறும் சாசனங்கள் சில உள. காமன் வரதன் மாகறல் அகத்திசுரமுடைய சிவனுக்குச் சன்னிதியில்திருவீதிகளும் மடைபாவும் மேடையும் ஏற்படுத்தினன்.[196] திருவொற்றியூர்ச் சிவனுக்குத் திருவொற்றியூரிற் பொன்வரியால் வந்த பொன்னை வியாக்கியான மண்டபத்துக்கும் மற்றும் திருப்பணிகளுக்குமான செலவுகளுக்குவேண்டிய முதலாக அமையும்படி நாட்டவர்வரி நீக்கம் செய்தனர்; மத்திய அரசுக்குப் பொன்வரி மூலமாகச் செல்லவேண்டிய பொன்னை நாட்டவர் நாட்டிலே வேறுவழியிற் பெற்றுக் கொண்டு கொடுப்பர்; இவ்வாறு சந்திரசூரியர் உள்ள வரை நடைபெறவேண்டும். இந்தத் தருமத்தைத் தடுக்க நினைந்தவர் கங்கையிலே பசுவை வதை செய்த பாவம் பெறுவர் எனப்படுகின்றது.[197]

கோவிலையும் மடங்களையும் அரசர் ஆதரித்த செய்திகளும் காணப்படுகின்றன; திருப்பராத்துறைச் சிவன்கோயில் ஆதிசண்டேசுர தேவகன்மிகளுக்கு நாட்டாரும் அகரபிரமதேயங்களாரும் நிலவிலைப் பிரமாண இசைவு தீட்டுக்கொடுத்துள்ளார்கள். கேரளாந்தக விழுப்பரையர் தம்முடைய கடமைகளில் நின்று வழுவிவிட்டார். அரசருக்குச் சேரவேண்டிய பணம், திருவானைக்காக் கோவிலுக்குச் சேரவேண்டிய பொருள், காவிரிக்

---

195. S. I. I. Vol. VII. p. 289.
196. S. I. I. Vol VII, p. 272.
197. S. I. I. Vol V, p. 492.

கரையை அடைப்பதற்காக உதவவேண்டிய ஆள் என்பனவற்றில் அவர் தவறிவிட்டார். இதனால், இவர் மருமக்கள் இருவர் சிறையில் வைக்கப்பட்டனர்: அவர்கள் தப்பி ஓடிவிட்டனர்; எனவே விழுப்பபேரரையருடைய நிலங்களைவிற்று அபராதங்களைப் பெற்றுக் கொள்ளும்படி அரசனுடைய திருமுகம் வந்தது: விற்ற நிலங்களின் விபரங்கள் கூறப்பட்டுள்ளன. நிலத்தை விற்றவர் நிலச் சொந்தக்காரராயில்லாது பிறராக இருந்தமையால், இந்தத் தீட்டே பிரமாணமாகும் என்பதும் வேறு ஓலை வேண்டியதில்லையெனவும் வற்புறுத்திக் கூறப்படுகின்றன.[198]

உடையார் வில்லவராயர் திருவயிந்திரபுரத்துச் சிவபெருமான் திருமேனிகளான தெய்வநாயகனுக்கும் ஏழிசைநாதப்பெருமானுக்கும் திருவிளக்குப்புறமாகவும் திருமாலைப்புறமாகவும் இரண்டாயிரவன் மடத்துக்கு மடப்புறமாகவும் இவரே ஏற்படுத்திய அகரம் புத்தூரான் பிரமதேசத்துக்கு அகரப்பற்றாகவும் பல ஊர்களில் நிலங்கள் கொடுத்துள்ளார்: சுந்தரபாண்டியன், விக்கிரமபாண்டியன், வீரபாண்டியன் என்னும் அரசர் சடாவர்மன் சுந்தரபாண்டியனது பத்தாவது ஆண்டு வரை தமக்கு வரிசெலுத்தி வந்த நிலங்களை இறையிலியாக ஒதுக்கிவிடும்படி திருமுகம் அனுப்பியுள்ளனர்: மூன்று அரசர்களின் பெயர் ஒருங்குசேரக் கூறப்பட்டுள்ளது. மூன்று பாண்டியரும் சமகாலத்து ஆண்டவராக இருக்கவேண்டும். திருவயிந்திரபுரத்து ஊரே தருமத்தை நடத்திக்கொடுக்கவேண்டுமெனவும் கோவிலைச் சேர்ந்தவர் தருமத்துக்கு விரோதியாக மாறினால் ஊரே தீர்த்துக் கொடுக்கவேண்டுமெனவும் ஊரவர் எவ

---

198. S. I. I. Vol. VIII. p. 300.

ராவது விரோதியாக மாறினுல் அவர் ஊரிலிருந்து விலக்கப்படுவரெனவும் கூறப்பட்டுள்ளன.[199]

கோவில்களிலே புதிய திருமேனிகளை எழுந்தருளச் செய்து அவற்றுக்கு வேண்டியன யாவற்றுக்கும் ஒழுங்கு செய்வது சில சாசனங்களிற் கூறப்பட்டுள்ளது: பிரான்மலைக்கோவிலிலே திருவம்பலப்பெருமாளான பெருஞ்சதிரகுபேரர் தம்முடைய பேரால் திருவம்பலப் பெருமாள் என்ற திருமேனியை எழுந்தருளுவித்தார். இந்தத் திருமேனிக்குத் திருப்படிமாற்றுக்கும் திருமஞ்சனம் திருவிளக்குச் சாத்துப்படி பூச்சுப்படி உள்ளிட்ட வியஞ்சனங்களுக்குமாக எழுபது சோழியநற்பழங்காசு கொடுத்தார். கோவிலைச் சேர்ந்த தேவகன்மி, மாகேசுரக்கண்காணிசெய்வார், கோயில் நிர்வாகம் செய்வார், கோயிற் கணக்கர் ஆகியோர் பணத்தைப் பெற்றுக் கொண்டு தினசரி நாழுழி அரிசியும் கறியமுதுள்ளிட்ட வியஞ்சனங்களும் கோவிற்பண்டாரத்திலே செலுத்துவதாக உடன்பட்டனர்.[200] காமன் அரசனுன அதியமான் தேவர் திருக்கழுக்குன்றச் சிவன் கோவிலில் பொனிட்டிகுரமுடைய நாயனுருக்குச் சிவலிங்க பிரதிட்டை செய்தார் இந்நாயனுர்க்குத் திருக்கோவிலுக்கும் திருநந்தவனத்துக்கும் திருமடைவளாகத்துக்குமாக நிலம்விடுவதற்கு இரண்டாயிரம் நற்காசு வைத்தார். ஆதிசண்டேசுரதேவகன்மிகள் காசைப் பெற்றுக்கொண்டு கோவிலுக்கு நிலம் ஒதுக்கினர்.[201]

நெல்லையப்பர் கோவிலிலே கூத்தன் வாளிபிள்ளை பெரியதேவ முதலியாரையும் நாச்சியாரையும் எழுந்தரு

---

199 S. I. I Vol VII, p. 386.
200 S. I. I. Vol VIII. p. 226.
201. S. I. I. Vol V, p. 192.

ளச் செய்தார். அமுதுபடி, சார்த்துப்படி முதலியனவற்றுக்கு நிவந்தம் விடும்படி திருமுகம் வந்தது. சாசனம் சிதைந்துள்ளது. எனினும் அமுதுபடி சம்பந்தப்பட்ட அரிசி, பருப்பு, மிளகு, அடைக்காய், வெற்றிலை, கறி, பண்ணியாரம் ஆகியனவற்றுக்கும் சார்த்துப்படி சம்பந்தப்பட்ட மேற்பூச்சு, எண்ணெய்க்காப்பு, நெல்லிக்காப்பு, மஞ்சள் ஆகியனவற்றுக்கும் அளவுகள் முதலியன குறிப்பிடப்பட்டுள்ளன. சிவராத்திரி, திருக்கார்த்திகை, சித்திரை விஷு என்ற புண்ணிய காலங்களில் நடக்கவேண்டிய ஒழுங்குகள் தனியே குறிப்பிடப்பட்டுள்ளன.[202] திருவெண்காட்டுச் சிவன்கோவிலில் பாண்டி மண்டலத்துக் கைக்கோளமுதலிகளில் விரதமுடித்த பெருமாள் மகன் திருநெல்வேலியுடையான் என்பவன் விரதமுடித்த பாண்டீசுவரமுடைய நாயனாரையும் புவனபதி நாச்சியாரையும் எழுந்தருளச் செய்தான். இவன் மூவரிடம் நிலம் விலைக்குக் கொண்டு அமுதுபடி, கறியமுது, திருப்பணி என்பனவற்றுக்கு முதலாக, நிலத்தை இறைநீக்கிக் கொடுத்தான்.[203]

கோவிலில் நடக்கும் முக்கியமான அலுவல்களில் எத்தகைய அதிகாரிகள் சம்பந்தப்படுகிறார்கள் என்பதை அறிவதற்குச் சிதம்பரத்துச் சாசனம் ஒன்று உதவுகின்றது. சைவக்கோவில்களிலே தனிச்சிறப்பு வாய்ந்தது சிதம்பரமாகும். எனவே அக்கோவிலிலே சம்பந்தப்பட்ட அதிகாரிகள் போன்றவர்கள் ஏனைய கோவில் அலுவல்களையும் கவனித்து வந்தனர் என்று கூறமுடியாது. எனினும் வேறுபாடு அளவில் இருக்கக் கூடுமே தவிர முறையில் இருக்காது. தென்னவன் பிரம

---

202. S. I. I. Vol, V, p. 166.
203. S. I. I. Vol. V, p. 380.

ராயர், குலசேகர பிரமராயர், விக்கிரமசோழப்பிரமரா யர், விக்கிரமபாண்டியப்பிரமராயர், மாகேசுவரக்கண் காணிசெய்வார்கள், கோயில் நிர்வாகஞ்செய்வார்கள், சமுதாயம் செய்வார்கள், நாயகம் செய்வார்கள், மாளி கைக்கூறுசெய்வார்கள், தில்லைநாயகம் பெரும்பண்டா ரத்தார், திருமடைப்பள்ளிப்பண்டாரத்தார், திருக்கர கக் கள்ளியார், கணக்கர் என்போர் அனைவரும் சேர்ந்து விடுதீட்டுக் கொடுத்தது பற்றிக் கூறப்படுகின்றது.[204] சாசனம் சிதைந்துள்ளமையால் அதன்பொருளைத் தெளி வாக அறியமுடியவில்லை. பிரமராயர் என்பது பிரா மணமந்திரியாகும். தென்னவன் பிரமராயர் பாண்டிய னுடைய முதன் மந்திரியாகும்; அரையர் என்று குறிக் கப்படுவோர் சிற்றரசராகலாம்; சமுதாயஞ் செய்வார் கள், நாயகம் செய்வார்கள், திருக்கரகக்கள்ளியார் என் பன யாரைக் குறித்தனவென அறிந்துகொள்ளக்கூட வில்லை.

நிலத்தை விற்றுக்கொடுக்கும்போது விற்பவர் வாங்குபவருக்கு விலைப்பிரமாணம் பண்ணிக்கொடுப்பார். அதனைவிட்டு விலையோலை, பொருட்செலவோலை என்ப னவும் எழுதப்படுவதுண்டு. சாசனங்களில் சில, பின் னவை வேண்டியவையில்லை எனவும் முன்னதே போதும் எனவும் கூறுகின்றன. ஓலையிற் காணப்படும் குற்றங் களைக்காட்டி, ஓலை செல்லாது என வாதிப்பதும் உண்டு; அதனால் ஓலையில் என்ன குற்றமிருந்தாலும் ஓலை செல்லு படியாகும் என்று குறிப்பது உண்டு. அதனாலேயே 'ஒரு காலாவதும் இரு காலாவதும் முக்காலாவதும் ஓலைக் குற்றம் சொற்குற்றம், எழுத்துக்குற்றம், பொருட்குற்றம்

---

204. S. I. I. Vol IV, p. 38.

மற்றும் எக்குற்றமும் குற்றமன்றியே' என ஒரு சாசனம் கூறியுள்ளது.[205]

வைணவ சமய சம்பந்தமான சாசனங்கள் சில கிடைத்துள்ளன. சைவசமய சம்பந்தமான சாசனங்களிற் கூறப்படும் செய்திகளே வைணவ சமய சம்பந்தமான சாசனங்களிலும் கூறப்படுகின்றன. ஆனால் வைணவ சமய சம்பந்தமான சாசனங்கள் எண்ணிக்கையிற் குறைந்தன. சேர்மாதேவி அப்பன்கோவிற் சாசனம் திருவிழாவுக்கு நடந்த ஒழுங்கைக் கூறுகிறது அப்பன் கோவிற் பண்டாரிகளும்; திருப்பதிவெங்கடேசுவரர் கோவில் வைணவர்களும் நம்பிமாரும் இரங்கநாதபட்டரான இராமானுசதாசருக்குப் பிடிபாடு கொடுத்திருக்கின்றனர். பண்டாரிகள் அப்பனுக்குத் தளிசு தண்டுகள் வாங்கிக் கொடுத்து எஞ்சியுள்ள பொருள் இருபது அச்சாகும். இந்த இருபது அச்சுக்கும் ஆண்டு வட்டி நாற்பது கல நெல்லாகும்; அப்பன் விசேட சமாராதனம் பூண்டருளித் திருப்பதிக்குச் செல்வதற்கு அமுதுபடி சாத்துப்படிக்குப் பத்துக் கலநெல்லும் பங்குனித் திருநாளுக்குத் திருப்பணி செய்யும் சனங்களுக்கு முப்பது கலநெல்லுமாக நாற்பது கலநெல்லையும் ஆண்டாண்டு தோறும் கோவிற் பண்டாரத்திலே பண்டாரிகள் செலுத்திவரவேண்டும். அப்பனுக்குத் திருநாட்களிற் சார்த்தியருளிய பரியட்டம் சாரித்திமுடிந்ததும் இராமானுசதாசருக்குக் கொடுக்கப்படவேண்டும். திருநாட்களிலும் அப்பன் திருவுலாப் புறப்பட்டருளுமிடங்களிலும் இராமானுசதாசருக்கு மிசுடுகளும் கொடுக்கப்படவேண்டும்.[206]

---

205. S. I. I. Vol. VIII, p. 87.
206. S. I. I. Vol. V, p. 320.

கோவிற் கட்டிடம் சம்பந்தப்பட்ட சாசன மொன்றும் உண்டு: சேலம் சௌந்தரராசப் பெருமாள் கோவிலிற் கம்மாளரில் அண்ணுமலைத் தட்டான் சூரிய ஞன நூற்றெண்மத்தட்டான் போதிகை செய்வித்துள் ளான்.[207] குடிநீங்காத் தேவதானமாக விடப்பட்ட நிலம் ஒன்றும் கூறப்பட்டுள்ளது: திருச்சுனை அகத்தியேசுவர கோவிற் சாசனத்தில், நிலம் வைத்தியாதிராசர்க்குக் காராண்மைக் காணியாகவும் அழகப்பெருமாள் விண்ண கர்ப்பெருமாளுக்குத் தேவதானமுமாக விடப்பட்டது: விண்ணகர் என்பது விஷ்ணு நகர் அல்லது திருமால் கோவிலெனப் பொருள்படும்; நிலம் பதினெட்டடிக் கோலால் அளக்கப்பட்டு இருநூற்று ஐம்பத்தாறு குழி கொண்டதாகக் கணிக்கப்பட்டது. ஒரு மாநிலத்தில் கரும்பு முதலிய பயிர்களிடப்படும்போது கடமை, அந்த ராயம், வினியோகம், சில்வரி, பெருவரி, பொன்வரி, தறியிறை, தட்டொலி பாட்டம், பஞ்சுபிலி, சந்திவிக் கிரகப்பேறு, வெட்டி, முட்டாள் முதலிய சகல வரிகளும் நாட்டுக்காலால் அறுகல நெல்லும் ஒரு பணமும் இறுத்து வரவேண்டும். கோடை காலத்திலே, குறுவையான வரகு, தினை நின்ற நிலத்துக்கு ஒவ்வொரு மாவுக்கும் முன்பு கூறப்பட்டவற்றில் நான்கில் ஒன்றை இறுத்துவரவேண் டும். வழுதுணை, பூசணி, வெள்ளரி, செங்கழுநீர், மஞ் சள், இஞ்சி, கருணை, என் உள்ளிட்ட பயிருக்கு ஒரு மாவுக்கு ஒரு பணம் வீதம் கொடுத்துவரவேண்டும்; எல்லைகள் நான்கிலும் திருமாலுடைய சக்கர அடை யாளமுடைய கல்லாகிய திருவாழிக்கல்லை நாட்டிச் சந் திர சூரியர் உள்ளவரை இப்படி நடக்கவேண்டுமெனப் பிரமாணம் பண்ணப்பட்டது.[208] சிவன் கோவில் எல்லைக்

---

207. S. I. I. Vol. IV, p 18.
208. S. I. I. Vol. VIII. p, 217.

குத் திருச்சூலக்கல் நாட்டப்பட்டதுபோலத் திருமால் கோவில் எல்லைக்குத் திருவாழிக்கல் நாட்டப்பட்டது.

கோவிலுக்குக் கொடுக்கப்பட்ட அணிகலன் ஒன்றை விற்று நிலம்வாங்கித் திருநாமத்துக் காணியாக விட்ட செய்தி சாசனமொன்றிற் காணப்படுகின்றது. மணிமங்கலம் இராசகோபாலப் பெருமாளுக்கு அழகப் பெருமாள் மாணிக்கம் இரு கழஞ்சு நான்கு மஞ்சாடி ஏழரை மாற்றுப்பொன்னுலான பட்டம் ஒன்று சார்த்தக் கொடுத்தான். அதை விற்றுவந்த பதினெட்டுப் பணத் துக்குச் சேனைபதிப் பெருவிலையாகத் திருநாமத்துக் காணி வாங்கப்பட்டது.[209] சிவன்கோவிற் சாசனங்களில் சண்டேசுரப்பெருவிலை காணப்படுவது போலத் திருமால் கோவிற் சாசனங்களிற் சேனைபதிப்பெருவிலை காணப்படு கின்றது. மடப்புறமாக நிலம் விட்டதையும் சாசனம் ஒன்று கூறுகின்றது. பிள்ளையார் நிலகங்கையர் எண் ணூறு குழியும் எழுநூறு குழியும் கொண்ட இரு தோட் டங்களை மணிமங்கலம் வைகுந்தப்பெருமாள் கோவில் மடத்துக்கு மடப்புறமாக விட்டார். அதை இறையிலி மடப்புறமாக விடும்படி சபைக்குத் திருமுகம் வந்தது. சபை அந்த நிலத்தை அவ்வாறே மடத்து முதலியா ருக்குக் கொடுத்தது.[210]

திருநெல்வேலி நெல்லையப்பர் கோவிற் சாசன மொன்று வைணவப் பிராமணர்களுக்கு அக்ரகாரம் எனப்படும் அகரம் கொடுக்கப்பட்டதைக் கூறுகின்றது. திருநெல்வேலியான குலசேகரச் சதுர்வேதிமங்கலத்துச் சபைக்குப் பண்ணைவேலை செய்வார்கள் தர்மதானத்தை

---

209. S. I. I. Vol. V, p. 362.
210. S. I. I. Vol. VI, p. 138.

ஏகப்பிரமாணமாக்கிக் கொடுத்துள்ளார்கள்; பாண்டிய விண்ணகர் அனவரததானப்பெருமாள் திருநாமத்தில் ஆளவந்தான் தெய்வச்சிலையாண்டான் அனவரதானச் சதுர்வேதிமங்கலத்துப் பட்டர்களுக்கு அகரம் விட்டுள்ளான். பண்ணைவேலை செய்வார்கள் அந்தப் பட்டர்களுக்குக் கொடுத்த குடியிருப்புகளுக்கும் வயல்களுக்கும் பல பிராமணங்களிருந்ததாலே, கல்வெட்டுவது வில்லங்கமாக இருந்தது. அதனாலே, தானங்கள் யாவும் சேர்த்து ஏகப்பிரமாணம் செய்யப்பட்டது. அகரத்தின் எல்லைகள் கூறப்படும்போது, 'வடவெல்லை முன்பு காளிகணத்து வெள்ளாளர் குடியிருந்த இடம் அகரமாகையால் பின்பு காளிகணத்து வெள்ளாளர் குடியிருப்பான கேசவன் கணபதி உள்ளிட்டார் எடுத்த மனைக்குத் தெற்கு' என்று வருவதிலிருந்து பிராமணரல்லாதார் குடியிருந்த இடம் காலப்போக்கில் பிராமணர் குடியிருப்பாக மாறிவந்ததும் பிராமணரல்லாதார் வேறு இடங்களுக்குச் சென்று குடியிருக்க நேர்ந்ததும் தெரியவருகின்றன. அகரத்தைத் தர்மதானமாகப் பெற்ற பிராமணர்கள் அகரத்துக்கு வெளியிலுள்ள கன்றுநிலைமரம், புறப்பாடு, சுடுகாடு, படுதுறை என்பனவற்றில் ஏனைய ஊராரைப் போன்ற உரிமைகளைப் பெறுகின்றார்கள்; பண்ணைவேலை செய்வார்கள் கொடுத்த நிலத்தின் எல்லை கூறப்படும்போது உடுக்கை வாசிப்பவனுக்காக விடப்பட்ட உடுக்கைப் புறம் என்ற நிலத்தின் குறிப்பு வருகின்றது.

கொடுக்கப்பட்ட நிலத்திற் பிராமணர்களுக்கு வழங்கப்பட்டுள்ள உரிமைகளின் பட்டியல் வருகின்றது: நத்தமாகிய குடியிருப்பும் சேத்திரமாகிய வயலும் கார்பசானம் குறுவை பயிர்செய்யும் நிலம் பயிர் செய்தும் செய்வித்தும் காடுவெட்டிக் கட்டை பறித்துக் களரும் சுடுகாடும் மேடும் பள்ளமும் வரம்பிட்டு வெட்டித் திருத்திப் பதினெட்டடிக் கோலால் பதினாறுக்குப் பதி

ஞறுகொண்ட ஒவ்வொரு மாநிலத்துக்கும் சதுரம் அமைத்து நன்செய் புன்செய் தோட்டக்கூறு திருத்திப் பயிர் செய்தும் செய்வித்தும் நத்தம் செய்து குடியிருந் தும் குடியிருத்தியும் மற்றும் தங்களுக்குச் சௌகரிய மான படிகளில் நிலத்தை அனுபவித்துவரலாம் எனப் படுகின்றது. நீக்கப்பட்ட வரிகளின் பட்டியல் ஒன்று வருகின்றது; அப்படிப்பட்ட பட்டியலில் குறிப்பிடத் தக்கன: நெல்கடமை, திருவாசல்வினியோகம், திருமுக எழுத்துவினியோகம், கைக்காணி, நித்தற்பச்சை, ஆனைச் சாலை, குதிரைப்பந்தி, கோயிற்கட்டணத்தேவை, கொற் றிலக்கை, கடைக்கூட்டிலக்கை, சண்டாளப்பேறு, நாட்டு வினியோகம், ஏரிவரி, ஆள்வரி, சாட்டுவரி என்பன. ஆனால், திருமுகத்திற் குறிப்பிடப்பட்ட சில வரிகள் திருநெல்வேலி இறைவனுக்குக் கொடுத்துவரப்படவேண் டும். அதனாலேயே சாசனம் நெல்லையப்பர் கோவிலிற் பொறிக்கப்பட்டிருக்கவேண்டும். நிலம் இருபத்தெட்டுப் பங்குகளாகப் பிரிக்கப்பட்டு இருபத்து நான்கு பங்கு பட்டர்களுக்கும் இரண்டுபங்கு வாழவல்ல பாண்டீசுர முடைய நாயனாருக்கும் இரண்டு பங்கு வாழவல்ல பாண்டிய விண்ணகர்ப் பெருமாளுக்கும் வழங்கப்பட்டன. பட்டர்களும் அவர்கள் பரம்பரையினரும் சந்திரசூரியர் உள்ளவரை கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொண்டு இந்நிலத்தை அனுபவித்து வரவேண்டும்.[211]

கோவிலோடு நெருங்கிய சம்பந்தப்படாத சாச னங்கள் சிலவும் கிடைத்துள்ளன. மணிமங்கலம் வைகுந் தப்பெருமாள் கோவிற் சாசனங்களில் ஒன்று அத்தகை யது; வாணராயதேவர் விண்ணப்பஞ்செய்ய இளையபெரு மாளான இளவரசன் கட்டளையிட்டபடி, வாணராயதேவ

211. S. I. I. Vol. V, p. 138.

ருக்காக முதலிகள் பற்றுக்கேட்க வந்திருக்கிறார்கள். அம் முதலிகளின் ஒருவரான மணலக்குடையார் கொங்க ராயர் வில்தடியையும் நாராயணன் என்றிட்ட பதினறடி அளவு கோலையும் வாணராயதேவர்பேரால் அமைத் தார்.[212] வில்தடி என்பது என்னவென்று தெரியவில்லை; மதுரைச் சுந்தரேசுவரர் கோவிற் சாசனம் ஒன்று, பிரம் தேயம் அதனைச் சேர்ந்த நிலத்தை மகாதேவர் அழகிய சொக்கனாருக்கு விற்றதைப் பற்றிக் கூறியுள்ளது. மாத் தூரில் தேவதானமாக இருந்த அரைவாசி நிலம் காடு பற்றியிருந்ததால் அதைத் திருத்தியெடுத்துக் கொண்டு குறிப்பிட்ட வருமானத்தைக் கோவிலுக்குக் கொடுக்கும் படி பிரமாணம் செய்யப்பட்டது பிரமதேயத்துக்குரிய அரைவாசி நிலமும் அவ்வாறே காடுபற்றியிருந்ததால், பிரமதேயம் அந்த நிலத்தை அயற் காணி வாங்கிய வருக்கே விற்றுவிடுகின்றது.[213]

வியாபாரிகள் மடத்துக்கு நிலம் விற்றுக்கொடுத் ததை இன்னொரு சாசனம் கூறுகிறது. விக்கிரம சோழ புரத்து நகரத்தார் திருப்பரங்குன்றத்துக் கீழை மடத்து முதலியார் சீடர்களில் அழகிய சிற்றம்பலமுடையாருக்கு நிலம் விற்றுக்கொடுத்தனர். குறிக்கப்பட்ட நான்கு எல் லைகளுக்குள் அடங்கிய 'குளமிரண்டும் குளப்பரிப்பும் நீர் கோவையும் நீர்நிலமும் புன்செய்கருஞ்செய்களும் நத்தமும் நத்தப்பாழும் களரும் திடலும் மேனோக்கிய மரமும் கீழ் நோக்கின கிணறும் மீன் படுபள்ளமும் தேன் படுபொதும்பும் புற்றும் தெற்றியும் ஆமைதவழ்வழியும் உடும்போடியும் சுடுகாடும் படித்துறையும் இவ்வூருக்குப் போகிற சிறுவழி பெருவழிகளும் இப்பற்றில் காடும்

---

212. S. I. I. Vol. VI, p. 139.
213. S. I. I. Vol. IV, p. 107.

ஓடைகளும் வெள்ளமும் வெள்ளச்சாய்வும் இக் குளத்தில் நீர்வாரிகளும் நீர்கோவைகளும் மற்றும் எப்பேர்ப் பட்ட சமத்தப் பிரார்த்திகளும், என்பனவற்றுக்காக நகரம் ஆயிரம் பணத்தை விலையாவணக் களரியிலே கொடுக்க, அக்களரி அதை ஏற்றுக்கொண்டு விலைப்பிர மாணம்பண்ணிக்கொடுத்தது. இவ்வாறு விற்கப்பட்ட தற்கு இந்தப் பிரமாணம் ஒன்றே சாலும் எனவும் வேறு ஓலை வேண்டியதில்லை எனவும் கூறப்பட்டுள்ளன. 'ஒரு காலாவதும் இருகாலாவதும் ஓலைக்குற்றம், எழுத்துக் குற்றம், சொற்குற்றம், பொருட்குற்றம், மற்றும் எப் பேர்ப்பட்ட குற்றமும்' குற்றமாகா எனப்படுகின்றது.[214]

நாட்டார் பட்டர்களுக்கு நிலம்விற்றதைத் தார மங்கலம் இளமீசுவரர் கோவிற் சாசனங்கள் கூறுகின்றன. தாரமங்கலத்து முதலிகளில் ஒருவனான நீருணி இளையான் நல்ல உடையப்பன் தன்னுடைய தந்தையின் பெயரில் இளையபெருமான் ஸ்ரீ இலக்குமணச்சதுர்வேதிமங்கலத்தை ஏற்படுத்தியுள்ளான். அந்தக் கிராமத்துப் பிராமணர் களுக்குப் பூவாணிய நாட்டார் 'நான்கெல்லைக்குட்பட்ட புன்செயும் நத்தமும் சேமப்பள்ளி ஏரி உள்ளிட்ட ஏரி களால் நீர்பாயும் நன்செயும் இவ்வூர்ப்பற்றில் நீர்நிலை, மரநிலை, உள்ளிட்ட சமத்தப்பிராத்திகளும் உட்பட்ட வையிற்றில் தேவதானம், திருவிடையாட்டம் உள் ளிட்ட நிலம் நீங்கலாக' விற்றுக்கொடுத்துள்ளார்கள்; நாட்டார் ஆயிரத்தைஞ்நூறு பணம் பெற்றுக்கொண்டு உதகபூர்வமாக விலைப் பிரமாணம் பண்ணிக்கொடுத்தார் கள்.[215] அந்தப் பட்டர்களுக்கு அதே நாடு, இன்னொரு நிலதானம் செய்துள்ளது; கொங்குநாட்டில் நீர்ப்பாசன வசதியுள்ள நிலம் மிகக் குறைவானதால், நீர்ப்பாசனத் துக்கு முக்கியத்துவம் வழங்கப்படுகின்றது. குளம் உதக பூர்வ தர்மதானமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. குளத்

---

214 S. I. I. Vol. V, p. 118.

215. S. I. I. Vol. VII, p. 10.

தால் நீர்பாயும் எல்லைவரையுள்ள நிலம் பிராமணரைச் சேர்கின்றது. பிராமணர் உடைகுளங்களைத் திருத்திக் காட்டைவெட்டித் தாம் வேண்டுமனைத்துப் பயிர்களும் சந்திரசூரியர் உள்ளவ்வரை செய்யும் உரிமைபெற்றுள்ளார் கள். நிலம் எந்தவித வரியுமில்லாத சர்வமானிய இறை யிலியாக வழங்கப்பட்டது.[216]

அந்தப் பட்டர்களுக்கு அதே நாட்டுத் தாரமங்க லத்து முதலிகள் சிலர் சேர்ந்து நிலதானம் செய்துள் ளார்கள், அவர்கள் உதகபூர்வதானப் பிரமாணம் பண் ணிக்கொடுத்த நிலத்திலுள்ள குளம் உடைகுளமாய்ப் பாழாய்க் கிடந்திருக்கின்றது. உடை குளத்தை அடைத்து நீர்காட்டிக் கொள்ளத்தக்க நிலத்தைத் திருத்தி இந்நில மும் இக்குளத்தில் நீர்கோவையும் உட்படக் கொடுக்கப் பட்டிருக்கின்றன. வேண்டிய பயிர்களைச் செய்தும் வேண் டிய மரங்களை நட்டும் சந்திரசூரியர் உள்ளவரை பூதான இறையிலியாக இந்த நிலத்தைப் பிராமணர் அனுப வித்துவரலாம். இந்நிலத்தைக் கொடுக்கவும் வைத்திருக் கவும் விற்கவும் பிராமணருக்கு உரிமையுண்டு[217] நெல்லை யப்பர் கோவிற் சாசனங்களில் இரண்டு ஒன்றுபோலப் பதிப்பிக்கப்பட்டுள்ளன.[218] சுத்தமல்லிப் பெருந்தெரு வணிகர் நாராயணன் நாராயணனுன வீரமழகிய பாண்டி தேவருக்குப் பிடிபாடு கொடுத்துள்ளனர். அவர்கள் தம்முள் இசைந்த பொன்கொண்டு வில்லவராய நல்லூர் நாற்பத்தெண்ணாயிரப் பிள்ளையாருக்குச் சந்தியாதீபத் துக்கு நித்த நிவந்தமாக உழக்கு எண்ணெய் பெரும்படி யோடு அளப்பதாக உடன்பட்டனர். மற்றது, அனவரத தானத்துச் சதுர்வேதிமங்கலத்துப் பட்டர்கள் நெல்லை யப்பருககு வழமையாகக் கொடுத்துவந்த நான்கோடு எட்டில் ஐந்து அச்சுக்களைக் கொடுத்துத் தாமும் தம் சந்ததியாரும் முன்புபோல அங்கு குறிப்பிட்ட நிலங்களை அனுபவித்து வரலாமென்பது;

---

216. S. I. I Vol VII, p. 9.
217. S. I. I Vol VII, p. 9.
218. S I. I. Vol. V, p. 151.

# சாசனத்துத் தமிழ் இலக்கியம்

இலக்கியம் என்ற சொல் செய்யுள் இலக்கியம், உரைநடை இலக்கியம் என்ற இரண்டையும் உள்ளடக்கு மாயினும் சாசனத்திலே செய்யுள் இலக்கியம் மட்டுமே இடம்பெறுகின்றது. இலக்கியச் சிறப்புள்ளன என எடுத்துக்காட்டத்தக்கன சாசனச் செய்யுள்களில் ஒரு புகுதி மட்டுமே; இலக்கியம் என்ற சொல் இங்கு பரந்த கருத்திலே கொள்ளப்படுகின்றது: அது சாசனத்திலுள்ள செய்யுட் பகுதிகளையும் உரைநடைப்பகுதிகளையும் உள்ளடக்குகின்றது. மயிலை சீனி. வேங்கடசாமி சாசனங்களிற் காணப்படும் செய்யுள்களில் அக்காலம் வரையில் வெளியிடப்பட்டனவற்றுட் பெரும்பகுதியைத் தொகுத்துச் 'சாசன செய்யுள் மஞ்சரி' (மார்ச்சு, 1959) என்ற நூலை வெளியிட்டுள்ளார்; சாசனச் செய்யுள் என்னும் பெயரில் மெய்க்கீர்த்திகளை மட்டும் பிறர் வெளியிட்டுவருவதால், சானங்களிற் காணப்படும் பிற செய்யுள்களைத் தொகுத்துத் தம்முடைய நூலிலே தருவதாக, அந் நூலாசிரியர் தம்முடைய முகவுரையிற் குறிப்பிட்டுள்ளார்: வித்துவான் சுந்தரேசவாண்டையார் முப்பது சாசனங்களைக் 'கல்வெட்டு: மூலமும் விளக்கவுரையும்' (ஜனவரி 1958) என்ற பெயரில் வெளியிட்டுள்ளார். சாசனங்களுட் காணப்படும் தமிழ்க் கவிஞர்களைப் பற்றிய செய்திகள் பல, பேராசிரியர் மு. இராகவையங்காருடைய 'சாசனத் தமிழ்க் கவி சரிதம்' (1-9-37) என்ற ஆராய்ச்சி நூலில் இடம்பெற்றுள்ளன. இந் நூல்கள் யாவும் இங்கு பயன்படுத்தப்பட்டுள்ளன. சாசனச் செய்யுள், சாசன உரைநடை என இரண்டு கூறுக இவ் விடயத்தை நோக்கலாம்:

## 1. சாசனச் செய்யுள்

சாசனம் பலரும் அறிந்த துறையாக, தமிழ் கற்கும் யாவரும் கற்குந் துறையாக இல்லாததால், சாசனத்திலே செய்யுளிலக்கியம் இடம்பெறுகிறதென்பதே பலருக்குத் தெரியாது: தென்னிந்திய வரலாற்று மாணவர் மெய்க்கீர்த்தியிலக்கியம் பற்றியும் வரலாற்றுண்மை பொதிந்துள்ள பிற சாசனச் செய்யுள்கள் பற்றியும் ஓரளவு அறிந்திருப்பர். இன்று பிரசித்திபெற்று விளங்கும் தமிழ்க் கவிஞர்கள் சிலரைப்பற்றியும் மறைந்துபோன தமிழ் நூல்கள் சிலவற்றைப்பற்றியும் சாசனங்களிலே குறிப்புகளுண்டு. தமிழ் இலக்கிய நூல்கள் சிலவற்றின் காலநிர்ணயத்துக்குச் சாசனக் குறிப்புகள் உதவுகின்றன. எனவே, தமிழிலக்கிய வரலாற்றுணர்ச்சி சிறப்பதற்குச் சாசனப்பயிற்சி பயன்படும். தமிழ்நாட்டிற் கண்டெடுக்கப்பட்ட சாசனங்களுள் ஒரு சிறு பகுதியே இதுவரையில் வெளியிடப்பட்டதால், வெளியிடப்படாது எஞ்சிக்கிடக்கும் சாசனங்களுள் அருமையான செய்யுள்கள் எத்துணையோ பொதிந்து கிடக்கலாம். இதுவரையில் வெளியிடப்பட்ட சாசனங்களிலிருந்து கிடைக்கும் செய்யுள்களையும் செய்யுள்கள் பற்றிய செய்திகளையும் அறிமுகப்படுத்துவதே இங்கு நோக்கமாகும். சாசனச் செய்யுள்களை மெய்க்கீர்த்திகள், மெய்க்கீர்த்தி தவிர்ந்த பிற செய்யுள்கள் என இரண்டாக வகுக்கலாம்.

### மெய்க்கீர்த்திகள்

சாசனச் செய்யுள்களுட் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க பகுதி மெய்க்கீர்த்தி என்னும் இலக்கிய வகையாகும். தமிழிலுள்ள தொண்ணூற்றாறுவகைப் பிரபந்தங்களுள் மெய்க்கீர்த்தி என்பது ஒன்றாகும்: பிரபந்த இலக்கணங்களை எடுத்துக் கூறும் பாட்டியல் நூல்களில் மெய்க்

கீர்த்திக்கு இலக்கணம் காணப்படுகின்றது; பாட்டியல் நூல்களிற் காலத்தால் மிகவும் முந்தியதான பன்னிரு பாட்டியல்:—

சீர்நான்காதி யிரண்டடித் தொடையாய்
வேந்தன் மெய்ப் புகழெல்லாஞ் சொல்லியு
மந்தத்தவன் வரலாறு சொல்லியு
மவளுடன் வாழ்கெனச் சொல்லியுமற்றவ
ளியற் பெயர்ப்பின்னர் சிறக்க யாண்டொடுந்
திறப்படவுரைப்பது சீர்மெய்க் கீர்த்தி[1]
நிலைபெறு சீர்மெய்க் கீர்த்தி யினந்த
முறையாய் முடியுமென வுரைத்தனரே[2]

பிற பாட்டியல் நூல்கள்:-

சிறந்தமெய்க்கீர்த்தி யரசன் செயல்சொற்
றவையாயச் செய்யுள்
அறைந்ததோர் சொற் சீரடியாம்.[3]
தொழிலாரிந்த மெய்க்கீர்த்தி சொற் சீரடியால்
எழிலரசர் செய்தி யிசைப்பர்.[4]

கீர்த்தி என்னும் வடசொல் புகழ் என்னுந் தமிழ்ச் சொல்லிற்கு நேரான பதமாகும்; அரசன் புகழ்பாடும் மரபு தமிழில் மிகவும் நீண்ட காலத்தது. புறநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு என்னும் மிகப் பழைய நூல்களுள், பெரும்பாலான செய்யுள்கள் அரசரைப்புகழ் வன. அரசரைப் புகழ்வதற்கு அகத்திணை மரபு ஒரு

---

1 & 2 பன்னிரு பாட்டியல், 311, 312

3. நவநீதப்பாட்டியல், 53

4. வச்சணந்தி மாலை 14

கருவியாகக் கொள்ளப்படுவதனைப் பிற சங்க இலக்கியங்களிற் காணலாம்; சங்க காலத்துப் பிந்திய செய்யுள்களுள் அரசரைப் புகழ்வனவாகக் களவழி நாற்பது, நந்திக் கலம்பகம், பாண்டிக்கோவை, முத்தொள்ளாயிரம் என்பனவாக மிகச்சிலவே, இன்று அறியப்படுகின்றன. பன்னிரு பாட்டியல் தோன்றிய காலம் பற்றிக் கருத்து வேறுபாடு உண்டு. சோழப் பெருமன்னர் காலத்துக்கு முன்பு அது தோன்றியிருக்க வேண்டுமெனப் பொதுவாகக் கொள்ளப்படுகின்றது: மெய்க்கீர்த்தி என்பது தமிழ்ச்சொல்லொன்றும் வடசொல்லொன்றும் கலந்தமைந்த தொடராகக் காணப்படுகின்றது. புகழ் என்ற சொல்லே பழைய தமிழ் இலக்கியங்களுட் பரவலாக வழங்குகின்றது. கீர்த்தி என்ற வடசொல் பல்லவர் காலத்திலேயே தமிழ்மொழியிற் பெருவழக்காகியிருக்க வேண்டும்; மெய்க்கீர்த்தி பல்லவர் காலத்திலிருந்து வழங்குகின்றது என்பர் ஒரு சாரார். அது சோழப்பெருமன்னர் காலத்து முதலாம் இராசராசன் காலத்திலேயே தொடங்கியிருக்கவேண்டும் என்பர் இன்னொரு சாரார்; மெய்க்கீர்த்தி என்னும் பிரபந்தத்துக்குப் பாட்டியல் நூல்களில் கூறப்படும் இலக்கணம் முதலாம் இராசராசன் காலம் தொடக்கம் தோற்றம்பெறும் செய்யுள் வகைக்கே பொருந்துவதால், உதாரணங்களை அக்காலத்திலிருந்தே எடுத்துக்காட்டலாம்;

சோழப் பெருமன்னன் முதலாம் இராசராசனுடைய மெய்க்கீர்த்தி வருமாறு:-

> திருமகள் போலப் பெருநிலச் செல்வியுந்
> தனக்கே யுரிமை பூண்டமை மனக்கொளக்
> காந்தளூர்ச் சாலைக்கலமறுத் தருளி
> வேங்கை நாடுங் கங்கபாடியுந்
> தடிகை பாடியும் நுளம்ப பாடியும்

குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்
முரட்டொழிற் சிங்கள ரீழமண்டலமும்
இரட்ட பாடியேழரை யிலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரமுந்
திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்டதன்
னெழில்வள ரூழியு ளெல்லா யாண்டுந்
தொழுதக விளங்கும் யாண்டே செழியரைத்
தேசுகொள் கோராச கேசரி வர்மரான
உடையார் ஸ்ரீராச ராச தேவர்க்கு யாண்டு[5]

நவநீதப் பாட்டியல், வச்சணந்திமாலை என்பவற்றிற் கூறப்படும் மெய்க்கீர்த்தியிலக்கணம் மேற்காட்டிய சாசனப் பகுதிக்குப் பொருந்துகின்றது. பன்னிருபாட்டியலிற் கூறப்படும் மெய்க்கீர்த்தியிலக்கணத்தின் சில அமிசங்கள் இங்கு இடம்பெறவில்லை; இதற்குப் பின் தோன்றிய மெய்க்கீர்த்திகளிலும் இடம்பெறவில்லை. அரசியுடன் வாழவேண்டுமெனவும் நீண்டகாலம் வாழவேண்டுமெனவும் வாழ்த்தும் பகுதிகளை இம் மெய்க்கீர்த்திகளிற் காணக்கூடவில்லை; இலக்கணம் இலக்கியத்தைப் பின் தொடர்ந்தே தோன்றும்; எனவே, பன்னிருபாட்டியலிற் காணப்படும் மெய்க்கீர்த்தியிலக்கணம் தோன்றுமுன்பே, அவ்விலக்கணத்திற்குத் தோற்றுவாயான மெய்க்கீர்த்தி யிலக்கியம் இருந்திருக்கவேண்டும்; அத்தகைய மெய்க் கீர்த்திகள் கல், செம்பு முதலிய நிலையான பொருள் களிற் பொறிக்கப்படாமையால் மறைந்துபோயிருக்க வேண்டும்; அல்லது அவை இன்னும் வெளிப்படாம லிருக்கவேண்டும்.

மேலும் மெய்க்கீர்த்தி என்னும் பெயருக்கு முழு உரிமையுடையதாக இந்த மெய்க்கீர்த்தி அமைந்திருக்

5. South Indian Inscriptions Vol. II, p. 68.

கின்றது; முதல் இரண்டடிகளில் உருவக அணிகாணப் படுகின்றது; வளர்ந்து சென்ற பேரரசும் பொலிந்து சென்ற செல்வச் செழிப்பும் பெருநிலச் செல்வியென்னும் பூமாதேவியாகவும் திருமகளென்னும் இலக்குமியாகவும் கற்பிக்கப்பட்டு இராசராசன் மனைவியராக உருவகிக்கப்படுகின்றனர். பிற செய்திகள் பெரும்பாலும் தன்மையணியிற் கூறப்படுகின்றனவெனலாம். சோழ நாட்டுக்கு அயலிலிருந்த பாண்டிநாட்டை அடக்கித் தனித்தமிழ் மன்னராக விளங்குவதிலே சோழர் தனிப் பெருமை பாராட்டினர்; பாண்டியருடைய ஒளியைப் பறித்துகொண்ட பெருமை தனியே எடுத்துக்காட்டப் படுகின்றது. பாடி என்பது கன்னட நாட்டுப் பகுதிகளுக்கு வழங்கிய பெயர்; எழில் - புகழ், தண்டு-படை; ஈழத்திலும் இரட்டபாடியிலும் இராசராசன் வெற்றி பெற்றான். ஆனால் அவற்றை அடக்கமுடியவில்லை. இங்கு பொய்யும் புனைந்துரையும் இடம்பெறவில்லை. பரிசிலுக்காக மன்னரைப்பாடும் புலவர் உள்ளது விரித்தும் இல்லது புணர்த்தியும் பாடுதல் மரபு அந்த மரபை மறுத்து எழுந்ததனாலேயே, இப்பிரபந்தவகை மெய்க்கீர்த்தியென மெய்யென்னும் அடைபெற்று வழங்கியிருக்கவேண்டும்;

சோழப்பேரரசு வளர்ந்துசென்ற காலமான முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் காலத்துத் தோன்றிய மெய்க்கீர்த்திகளுக்கு ஒரு தனிச்சிறப்பு உண்டு; இவ்வரசர்களுடைய மெய்க்கீர்த்திகள் இவர்கள் வென்ற நாடுகளை வரிசைப்படுத்துகின்றன. முதலாம் இராசேந்திரன் காலமே சோழப்பேரரசு மிகப் பரந்துபட்டிருந்தது. இவ்வரசனுடைய வெற்றி கங்கைக்கரையிலிருந்து கடாரம் வரை சென்றது. இராசேந்திரன் காலமே தமிழ் நாட்டு வரலாற்றில் மிகச்சிறப்பான காலமாகும்; தமிழரின் புகழ் அக்காலத்திற்கு முன்பும் பின்பும் அந்த

அளவுக்கு என்றும் இருந்ததில்லை; அதனால் அவனுடைய மெய்க்கீர்த்தி முழுவதும் இங்கே எழுத்தாளப்படுகின்றது. இவன் வென்ற வேந்தர்களில் முக்கியமானவர்களும் இவன் மெய்க்கீர்த்தியிற் குறிப்பிடப்படுகின்றனர். மெய்க்கீர்த்தியின் சிறப்புகளுள் ஒன்று, அது மன்னனுடைய ஆட்சித் தொடக்கத்தில் ஆரம்பித்துக் காலப்போக்கில் வளர்ந்துசென்று அம்மன்னரின் ஆட்சி முடிவடையும் காலத்தில் முற்றுப்பெறுகின்றது. ஒரு மன்னனுடைய வெவ்வேறு ஆட்சியாண்டுகளில் மெய்க்கீர்த்தி வெவ்வேறு அளவில், அந்த அந்த ஆட்சியாண்டுகள் வரையில் மன்னன் சாதனைகளைக் கொண்டு விளங்கும். உதாரணங்களாக முதலாம் இராசேந்திரனுடைய பன்னிரண்டாம் ஆண்டு மெய்க்கீர்த்தியையும் பத்தொன்பதாம் ஆண்டு மெய்க்கீர்த்தியையும் பார்க்கலாம்.

திருமன்னிவளர விருநில மடந்தையும்
போர்ச்சயப் பாவையுஞ் சீர்த்தனிச் செல்வியுந்
தன்பெருந் தேவியராகி யின்புற
நெடிதியு லூளிடை துறை நாடும்
தொடர்வன வேலிப் படர்வன வாசியும்
சுள்ளிச் சூழ்மதிற் கொள்ளிப் பாக்கையும்
நண்ணற் கருமுரண் மண்ணைக் கடக்கமும்
பொருகட லீழத் தரசர்த முடியும்
ஆங்கவர் தேவிய ரோங்கெழின் முடியும்
முன்னவர் பக்கற் றென்னவர் வைத்த
சுந்தர முடியு மிந்திர னாரமும்
தெண்டிரை யீழ மண்டல முழுவதும்
எறிபடைக் கேரளன் முறைமையிற் சூடும்
குலதனமாகிய பலர்புகழ் முடியும்
செங்கதிர் மாலையும் சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவற் பல்பழந் தீவும்
செருவிற் சினவி யிருபத்தொருகால்

அரசுகளை கட்ட பரசு ராமன்
மேவருஞ் சாந்திமத் தீவரண் கருதி
இருத்திய செம்பொற் றிருத்தகு முடியும்
பயங்கொடு பழிமிக முயங்கியில் முதுகிட்
டொளித்த சயசிங்க னளப்பரும் புகழொடு
பீடிய லிரட்ட பாடி யேழரை
யிலக்கமு நவநெதிக் குலப்பெரு மலைகளும்
விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமு
முதிர்பட வல்லை மதுரை மண்டலமும்
காமிடை வள நாமணைக் கோணையும்
வெஞ்சின வீரர் பஞ்சப் பள்ளியும்
பாசடைப் பழன மாசுணி தேசமும்
அயர்வில் வண்கீர்த்தி யாதிநக ரவையில்
சந்திரன் றொல்குலத் திந்திர ரதனை
விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத் தொடுநிறை குலதனக் குவையும்
கிட்டருஞ் செறிமிளை யொட்ட விஷயமும்
பூசுரர் சேர்நற் கோசல நாடும்
தன்ம பாலனை வெம்முனை அழித்து
வண்டுறை கோசலைத் தண்ட புத்தியும்
இரண சூரனை முரணுகத் தாக்கித்
திக்கணை கீர்த்தித் தக்கண லாடமும்
கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத்
தங்காத சாரல் வங்காள தேசமும்
தொடுகழற் சங்கு வொட்டல்மகி பாலனை
வெஞ்சமர் வளாகத் தஞ்சுவித் தருளி
ஒண்டிறல் யானையும் பெண்டிர் பண்டாரமும்
நித்தில நெடுங்கட லுத்தர லாடமும்
வெறிமலர்த் தீர்த்தத் தெறிபுனற் கங்கையு
மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பரகேசரி

வன்மரான ஸ்ரீராஜேந்திரசோழதேவருக்கு யாண்டு
யஉ ஆவது[6]

பத்தொன்பதாம் ஆட்சியாண்டுச் சாசனத்தில், பன்னி ரண்டாம் ஆட்சியாண்டுச் சாசனத்திற் கூறியது நாற் பத்தாறுவது அடிவரையிற் றிருப்பிக் கூறப்பட்டுப் பின்பு பத்தொன்பதாம் ஆண்டுவரையில் நடந்தவையும் எடுத் துக்காட்டப்படுகின்றன; எனவே, நாற்பத்தாறுவது அடியிலிருந்து எஞ்சிய பகுதி கீழே தரப்படுகின்றது;

வெறிமலர்த் தீர்த்தத் தெறிபுனற் கங்கையும்
அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்திச்
சங்கிராம விசையோத் துங்க வர்ம
ஞகிய கடாரத் தரசனை வாகையம்
பொருகடல் கும்பக் கரியொடு மகப்படுத் 50
துரிமையிற் பிறக்கிய பெருநிதிப் பிறக்கமும்
ஆர்த்தவ னகநகர்ப் போர்த்தொழில் வாசலில்
விச்சா திரத்தோ ரணமு மொய்த் தொளிர்
புனைமணிப் புதவமும் கனமணிக் கதவமும்
நிறைசீர் விசயமுந் துறைநீர்ப் பண்ணையும்
வன்மலை யூரெயிற் றொன்மலை யூரும்
ஆழ்கட லகழ்சூழ் மாயிரு டிங்கமும்
கலங்கா வல்வினை இலங்கா சோகமும்
காப்புறு நிறைபுனல் மாபப் பாளமும்
காவலம் புரிசை மேவுலிம் பங்கமும் 60
விளைப்பந் தூருடை வளைப்பந்தூரும்
கலைத்தக் கோர்புகழ் தலைத்தக் கோலமும்
தீதமர் வல்வினை மதமா லிங்கமும்
கலாமுதிர் கடுந்திறல் இலாமுரிதேசமும்

6. South Indian Inscriptions, Vol. I, p. 95.

தேனக்க வார்பொழில் மாநக்க வாரமும்
தொடுகடற் காவற் கடுமுரட் கடாரமும்
மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பரகேசரி

வன்மரான உடையார் ஸ்ரீ ராசேந்திர சோழ தேவர்க்கு யாண்டு ௰௬ ஆவது[7]

முதன் மூன்று அடிகள் உருவகமாக அமைகின்றன. இராசராசனுடைய தேவியராக உருவகிக்கப் பட்டவைகளுடன் போர்வேற்றியும் இங்கு சய இலக்குமியாக உருவகிக்கப்பட்டு இணைக்கப்படுகின்றது மூவரும் இராசேந்திரனுடைய தேவியராகி இன்புற்றனரெனப் படுகின்றது. தேவியர் மூவர் இராசேந்திரனையடைந்து இன்புற்றனர் என்று கூறப்படுகின்ற தேயல்லாமல் இராசேந்திரன் தேவியர் மூவரையடைந்து இன்புற்றான் என்று கூறப்படாமை இராசேந்திரனுக்குப் பெருமிதத்தைக் கொடுக்கின்றது. இராசேந்திரன் வென்ற இடங்களையும் கைப்பற்றிய பொருள்களையும் குறிக்கும்போது அவற்றின் தன்மையை விளக்கும் அடைமொழிகள் வழங்கப்படுகின்றன. இது இராசராசனுடைய மெய்க்கீர்த்தியிலிருந்து புதிய வளர்ச்சியெனலாம்.

முதலாம் இராசேந்திரனுடைய 24-வது அடிவரையுள்ள மெய்க்கீர்த்தி முதலாம் இராசராசன் வெற்றி பெற்றதாகக் கூறும் இடங்களையே பெரும்பாலும் திருப்பிக்கூறுதல் கவனிக்கத்தக்கது. தந்தை பெற்ற வெற்றி தோற்ற நாடுகள் யாவற்றையும் நிரந்தரமாகப் பணிய வைக்கவில்லை. இராசராசன் வெற்றிபெற்ற சில இடங்களிலே பூரண வெற்றிபெறவில்லை. இலங்கை முழுவதை

7. South Indian Inscriptions, Vol. II, p. 105.

யும் வென்றவன் இவன் என்று முற்றும்மையாற் சொல்லப்படுவதனை நோக்க, இராசராசன் இலங்கையின் ஒரு பகுதியையே வென்றிருக்கவேண்டும் என்ற பொருள் தொனிக்கின்றது: பாண்டியர், கேரளர், சிங்களவர் என்ற அனைவருடைய அரசுச் சின்னங்களும் இராசேந்திர னுடைய கையிலேயே சிக்கின. இத்தகைய காரணங்களால் மைந்தன் போராடித் தன்னுடைய வெற்றியை நிலைநிறுத்தவேண்டியிருந்தது.

25-வது அடியிலிருந்து 46-வது அடிவரை, கங்கைப் படையெடுப்புக் கூறப்படுகின்றது. கங்கைக்கரை வரை சென்றபோது பெற்ற வெற்றிகள், இந்த அடிகளிற் கூறப்படுகின்றன. கங்கைக் கரைவரையிலிருந்த நாடுகளும் அவை சிலவற்றின் இயல்பு, அவற்றுட் சிலவற்றை யாண்ட மன்னர்கள், அம்மன்னர்கள் மேற்பெற்ற வெற்றியின் இயல்பு என்பனவும் இங்கு இடம் பெறுகின்றன. இவ்வளவு கூறியபின்பும் இராசேந்திரன் கங்கைக்கரைக்குத் தீர்த்த யாத்திரை மட்டுமே செய்தான் என்று வெங்கையா என்ற சாசனவியலாளர் வருணிப்பர்; இந்த் விபரங்கள் இடம்பெருவிட்டால் இராசேந்திரன் படை கங்கைக்கரைக்குப் போகவில்லையென்று சாதித்திருப்பார். இராசேந்திரனுடைய பன்னிரண்டாம் ஆட்சியாண்டுவரையில், அவன் சாதனைகள் இவையாகும். அதன் பின்பு கடாரத்துக்குப் படையெடுத்திருக்கிறான்: இன்றைய மலேசியா, இந்தோனேசியா என்னும் நாடுகளில் அவன் கடற்படைகொண்டு வெற்றிபெற்றிருக்கின்றான்.

முதலாம் இராசேந்திரனுடைய மக்கள் மூவர் ஒருவர் பின் ஒருவராக அரசாண்டனர். முதலாம் இராசாதி

ராசன், இரண்டாம் இராசேந்திரன், வீரசோழன் என்னும் மூவர் வரலாற்றிலும் ஒரு பொதுத்தன்மையுண்டு. இவர்களுடைய காலத்தில், சோழப் பேரரசு பரந்து செல்லவில்லை. சோழப்பேரரசின் பெருமையும் புகழும் பரப்பும் தந்தை விட்டுச்சென்ற நிலையிலிருந்து குறைவு படாதிருக்க இம்மூவரும் உழைத்தனர். ஒரு மன்னருக்கு ஒரு மெய்க்கீர்த்தி என்ற நிலை மாறுகின்றது. முதலாம் இராசாதிராசனுக்கு 'திங்களேர்தரு', திங்களேர்பெற வளர்', 'திருக்கொடியொடு தியாகக்கொடி' என மூன்று மெய்க்கீர்த்திகள் உண்டு. தமையனுக்கு மூன்று மெய்க்கீர்த்திகள் இருந்தமையால், தம்பிக்கும் மூன்று மெய்க்கீர்த்திகள் இருக்கவேண்டும் என்ற நிலை தோன்றியிருக்கலாம். இரண்டாம் இராசேந்திரனுக்கும் 'திருமாது புவியெனும் பெருமாதர்', 'இரட்டபாடி ஏழரையிலக்கமுங் கொண்டு', 'திருமகள் மருவிய செங்கோல் வேந்தன்றன் முன்னோள் சேனை' என மூன்று மெய்க்கீர்த்திகள் உண்டு: மூன்று மெய்க்கீர்த்திகளைக் கொண்ட தமிழ் மன்னர்கள் இவர்களுக்கு முன்பு இருந்ததில்லை. சோழப் பேரரசருடைய பெருவெற்றிகள் தமிழ்ப்புலவர்களுடைய உள்ளத்தை எவ்வாறு தூண்டின என்பதற்கு இவை எடுத்துக்காட்டுகள். மெய்க்கீர்த்திகள் அரசரைப் புலவராற் பொருள் கருதிப் பாடப்பட்டனவெனக் கொண்டாலும் அலையும் சூழலை மீறி இல்லாதவற்றைப் பாட முடியாது.

ஒவ்வொரு வேந்தருக்குமுரிய ஒவ்வொரு மெய்க்கீர்த்தியை இங்கே ஆராயலாம். போரில் நாடுகளை வெல்வது ஒன்று; அந்நாடுகளை அடக்கி ஆளுவது இன்னொன்று என்பன இம் மெய்க்கீர்த்திகளிலிருந்து தெளிவாகத் தெரியவருகின்றன. பேரரசுக்குட்பட்ட நாடுகளை அரசகுலத்தவருடைய நேரடி ஆட்சியில் விட்டுவைத்தாலே, பேரரசில் அமைதியையும் ஒழுங்கையும் நிலை

நிறுத்தலாம் என்ற நிலை ஏற்படுகின்றது. முதலாம் இராசராசனுடைய 'திங்களேர் தரு'[8] என்ற மெய்க்கீர்த்தி இந்த அரசனுடைய குடும்பத்தவர் வானவன், வில்லவன், மீனவன், கங்கன், இலங்கையர்க்கிறைவன், பல்லவன், கன்னகுச்சியர் காவலன் என நியமிக்கப்பட்டு மகுடம் சூட்டப்பட்டதைக் குறிப்பிடுகின்றது. இரண்டாம் இராசேந்திரனுடைய 'திருமாது புவியெனும் பெருமாதர்'[9] என்னும் மெய்க்கீர்த்தியும் அதன் தொடக்கத்தில் அரச குடும்பத்தவரைச் சிற்றரசராக்கிய செய்தியை விரிவாக எடுத்துக்கூறுகின்றது.

இம் மெய்க்கீர்த்திகளிலேயுள்ள சொற்சுவை, பொருட்சுவை என்பன முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரன் என்போருடைய மெய்க்கீர்த்திகளிலுள்ளனவற்றிலும் அதிகமாகக் காணப்படுகின்றன. இம் மெய்க்கீர்த்திகளிலே வெற்றியின் இயல்பு வருணிக்கப்படுகின்றது. போர்க்களத்தில் இம் மன்னர்களிடம் எதிரிகள் பட்டபாடுகளைக் கூறும் பகுதிகளிலே வீரச்சுவை காணப்படுகின்றது. எதிரிகள் வீரம், புகழ், சினம் என்பன மிக்கவர்களெனக்கூறி அவர்கள் இம்மன்னர்களிடம் படுதோல்வியடைந்து கொல்லப்பட்டனர் அல்லது துரத்தப்பட்டனரெனக்கூறும்போது மன்னர்களுடைய வீரம் விளங்கித் தோன்றுகின்றது. முதலாம் இராசராசனைப் பாண்டியர் மூவர் எதிர்த்துத் தோல்வியடைந்ததைப் பற்றிய பகுதி ஓர் எடுத்துக்காட்டு:-

தென்னவர் மூவருள் மானா பரணன்
பொன்முடி யானைப் பருமணிப் பகத்தலை

---

8. South Indian Inscriptions, Vol. III part I, No. 28.
9. South Indian Inscriptions, Vol. III. part I, No. 29.

பொருகளத் தரிந்து வாரண வியகழல்
வீரகே ரளனை முனைவயிற் பிடித்துத்
தனது வாரணக் கதக்களிற் றுதைப்பித்தருளி
அந்தமில் பெரும்புகழ்ச் சுந்தர பாண்டியன்
கொற்றவெண் குடையுங் கற்றைவெண் கவரியும்
சிங்கா தனமும் வெங்களத் திழந்துதன்
முடிவிழத் தலைவிரித் தடிதளர்ந் தோடத்
தொல்லை முல்லையூர்த் துரத்தி ......... (12—21)

இரண்டாம் இராசேந்திரனுடன் போர்செய்து தோற்றோடியதைப்பற்றிய பகுதி இன்னோர் எடுத்துக் காட்டு:-

வெஞ்சின வநசரோ டஞ்சிச் சளுக்கி
குலங்குலை குலைந்து தலைமயிர் விரித்து
வெந்நுற் றொளித்துப் பின்னுற நோக்கிக்
கால்பரிந் தோடிமேல் கடல் பாயத்
துரத்திய பொழுதச் செருக்களத் தவன்விடு (59-63)

கலகம் விளைவித்த பகைவர்களை யடக்கித் தம் ஆட்சியை நிலைப்படுத்த முயன்ற சோழமன்னர் பகைவர்களுக்குக் கொடுமைகள் இழைத்ததைப் பற்றிய சில குறிப்புகள் மெய்க்கீர்த்திகளிலே காணப்படுகின்றன. பகைவர்கள் யாவரும் கொடுமைகளுக்கு ஆளாகியபோதிலும் சாளுக்கியரும் சிங்களவரும் அதிக கொடுமைக்கு ஆளாகினர் போலத் தெரியவருகின்றது. சோழர் படையெடுப்பாலும் ஆட்சியாலும் சேர்ந்த கொடுமைகளை இவ்விரு பகுதியினருடைய நாடுகளிலும் எழுந்த நூல்களும் ஆவணங்களும் பலபடக் கூறுகின்றன. இக்கொடுமைகளாலே தமிழர்மேலே தீராத வெறுப்புணர்ச்சி இந்நாடுகளிலே தோன்றியது. சாளுக்கியரையும் சிங்களவரையும் முழுவதாக அடக்க முடியாமையினால் ஆத்திரமடைந்த சோழப்

பெருமன்னர் இவ்வாறு செய்தனராக வேண்டும். முதலாம் இராசாதிராசன் வீரசலாமேகன் என்னும் இலங்கை மன்னன்மேற் பெற்ற வெற்றியை வருணிக்கும் பகுதி:-

விளங்குமுடி கவித்த வீரசலா மேகன்
போர்க்களத் தஞ்சித்தன் கார்க்களி றிழிந்து
கவ்வையுற் றோடக் காதலி யொடுந்தன்
றவ்வையைப் பிடித்துத் தாயை மூக்கரிய
ஆங்கவ மானம் நீங்குதற் காக
மீட்டும் வந்து வாட்டொழில் புரிந்து
வெங்களத் துலந்தவச் சிங்களத் தரசன் (47-53)

வீரசோழன் சாளுக்கிய மன்னனுடைய சேனாதிபதியாகிய சாமுண்டராயனை அவமானப்படுத்தியதையெடுத்துக் கூறும் பகுதியாக, அவனுடைய 'திருவளர் திரள் புயத் திருநிலவலயம்'[10] என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியிற் காணப்படுவது:-

தாங்கரும் பெருவலித் தண்டுகெடத் தாக்கி
மாதண்ட நாயகன் சாமுண்ட ராயனைச்
செற்றவன் சிரத்தினை யறுத்து மற்றவ
னொருமக ளாகிய விருகையன் றேவி
நாகலை யென்னுந் தோகையஞ் சாயலை
முகத்தொடு மூக்குவே றுக்கிப் பகைத்தெதிர் (12-17)

சோழநாட்டின் செல்வம் இருவகையிலே பெருகியது. தோற்ற மன்னரும் சிற்றரசரும் திறை செலுத்தியதை முதலாம் இராசாதிராசனுடைய மெய்க்கீர்த்தி எடுத்துக் கூறுகின்றது:-

---

10. South Indian Inscriptions, Vol. III, Part I, No. 30

வில்லவர் மீனவர் வேள்குலச் சளுக்கியர்
வல்லவர் கௌசலர் வங்கணர் கொங்கணர்
சிந்துர ரையணர் சிங்களர் பங்களர்
அந்திரர் முதலிய வரைசரிடு திறைகளும் (64-67)

இரண்டாவது வகை, போரில் வெற்றிபெற்றதும் பகைவர் நாட்டிலிருந்து கொள்ளையடித்து வருவது. இரண்டாம் இராசேந்திரன் மேலைச் சாளுக்கியரை வென்று கருநடதேசத்துப் பெண்களையும் பெருந்தொகைப் பொருள்களையும் கொள்ளைகொண்டு வந்ததைக் கூறும் பகுதி:-

சத்துரு பயங் கரன்கர பத்திரன் மூல
பத்திர சாதி பகட்டரை சநேகமும்
எட்டுநிரை பரிகளு மொட்டக நிரைகளும்
வராகவெல் கொடிமுத லிராசபரிச் சின்னமும்
ஒப்பில்சத்தி யவ்வைசாங் கப்பையென் றிவர்முதல்
தேவியர் குழாமும் பாவையரீட்டமும்
இனையன பிறவு முனைவயிற் கொண்டு (64-79)

வீரசோழன் மேலைச் சாளுக்கியரை வென்று அவ்வாறு கொள்ளைகொண்டுவந்ததைக் கூறும் பகுதி:-

அங்கவர் தாரமு மவர்குல தனமுஞ்
சங்குந் தொங்கலுந் தாரையும் பேரியும்
வெண்சா மரையு மேகடம்பமும்
சூகரக் கொடியும் மகரதோ ரணமும்
புட்பகப் பிடியும் பொருகளிற் றீட்டமும்
பாய்பரித் தொகையொடும் பறித்துச் சேயொளி
(41-46)

வீரசோழனுடைய வீரத்தை உணர்த்தும்பகுதிகள், அவனுடைய மெய்க்கீர்த்தியிற் காணப்படுகின்றன: போர்க்கள வருணனை வீரச்சுவை மிகுந்து காணப்படுகின்றது. வடவெல்லையிலிருந்து வந்ததும் நன்கு வகுக்கப்பட்டதுமான மேலைச்சாளுக்கியனுடைய பெரும்படை வடகடலுக்கு உவமிக்கப்படுகின்றது; வீரசோழனுடைய யானையொன்று இப்படையைக் கலக்கிவிடுகின்றது; எதிர்ப்படைத் தலைவர் சிலர் சின்னபின்னஞ் செய்யப்பட்டனரெனவும் ஏனையோரும் மன்னர் ஆகவமல்லனும் உயிரைக் காப்பாற்றிக்கொள்வதற்காக ஒருவரை முந்தி ஒருவர் ஓடினரெனவும் கூறுவதனால் வீரசோழனுடைய வெற்றி மிகவும் இலகுவிற் பெறப்பட்டது என்று புலவர் உணர்த்த முற்பட்டுள்ளார். இச் செய்தியை வரலாற்றுப் பின்னணியிலே வைத்துப்பார்க்கும்போது, சாளுக்கியருடைய தோல்வி மிகைப்படுத்தப்பட்டிருக்கிறது போலத்தெரியவருகின்றது. மேலைச்சாளுக்கியரோடு கூடல் சங்கமத்திலே நடந்த முதற் போரிலே வீரசோழன் சாளுக்கியப் படையைக் கலக்கி அழித்ததையும் சாளுக்கியனும் படைத்தலைவரும் அஞ்சியோடியமையையும் கூறும் பகுதி :-

கூட்ல் சங்கமத் தாகவ மல்லன்
மக்க ளாகிய விக்கலன் சிங்கண
னென்றிவர் தம்மொடு மெண்ணில்சா மந்தரை
வென்றடு தாசிமுனை விட்டுத் தன்றுணை
மன்னருந் தானும் பின்னடுத் திருந்து
வடகட லென்ன வகுத்தவத் தானையைக்
கடகளி றொன்றாற் கலக்கி யடல்பரிக்
கோசலைச் சிங்கனைக் கொடிபட முன்னர்த்
தூசிவெங் களிற்றொடுந் துணித்துக் கேசவ
தண்ட நாயகன் தார்க்கேத் தரையன்

திண்டிறல் மாராயன் சினப்போத் தரைய
னிரேச்சய னிகல்செய்பொற் கோதைமூ வத்தி
யென்
ருர்த்தடு துப்பி லநேகசா மந்தரைச்
சின்ன பின்னஞ் செய்து பின்னை
முதலியான மதுவண னோடே
விரித்த தலையோடு விக்கல னோடச்
செருத்தொழி லழிந்து சிங்கண னோடே
அண்ணல் முதலிய ரனைவரு மமர்போர்ப்
பண்ணிய பகடிழிந் தோட நண்ணிய
ஆகவ மல்லனு மவர்க்கு முன்னோட (20-39)

கூடல் சங்கமத்திலேற்பட்ட அவமானத்தைப் போக்கிக் கொள்ள இன்னொரு போருக்கு வரும்படி ஆகவமல்லன் தூதனுப்பியபோது வீரசோழன் 'சிந்தையு முகமுந் திருப்புய மிரண்டு மேந்தெழி லுவகையொ டிருமடங்கு பொலிய' நின்முன் என்று மெய்க்கீர்த்தி மேலும் கூறும்.

முதலாம் குலோத்துங்கன் காலத்திலிருந்து சோழப்பேரரசு வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயம் தொடங்குகின்றது. சோழப்பேரரசின் பரப்பு ஓரளவு குறைகின்றது. இலங்கை சோழராட்சியிலிருந்து நீங்கிவிடு கின்றது. முதலாம் குலோத்துங்கனது ஆட்சித் தொடக் கத்தில் மேலைச்சாளுக்கியரோடு மோதுதல் ஏற்பட்ட போதும் அவனுடைய அரைநூற்றுண்டு கால ஆட்சியுட் பெரும்பகுதி அவரோடு போரில்லாமலே கழிந்தது. குலோத்துங்கன் வேங்கி நாட்டு அரசகுலத்தையும் சேர்ந் தவனுதலால், அங்கும் சோழராட்சியை நிலைநிறுத்துவது வில்லங்கமாக இருக்கவில்லை. இவனுடைய மெய்க்கீர்த்தி கள், 'புகழ் சூழ்ந்த புணரியகழ் சூழ்ந்த புவியில்', 'புகழ் மாது விளங்கச் செயமாது விரும்ப', 'திருமன்னிவிளங்கு இரு குவடனைய தன்' என மூன்று தொடக்கங்களையுடை

யன்; இம்மன்னனே சோழப் பெருமன்னர்களுள் மிக நீண்ட காலம் ஆட்சிசெய்தவனுவான்; இவனுடைய ஆட்சி சுமார் அரைநூற்றுண்டு காலம் நடைபெற்றது; இவனைப்பற்றிய பல மெய்க்கீர்த்திகள் எழ இது ஒரு காரணமாகலாம்.

இவன் ஆட்சிக்கு வந்தபோது ஆட்சியுரிமை பற்றித் தகராறு இருந்திருக்கிறது. ஆட்சியிலே தன்னை நிலைப்படுத்திக் கொள்வதற்காக இவன் புலவர் தன்னைப் புகழ்ந்து பாடும்படி தூண்டியிருக்கலாம். அவற்றுள், 'புகழ் சூழ்ந்த புணரியகழ் சூழ்ந்த புவியில்'[11] என்பது இங்கு எடுத்துக்கொள்ளப்படுகின்றது; ஆட்சிப் பரப்பு முன்பு இருந்ததிலும் குலோத்துங்கன் காலத்திலே குறைந்த போதிலும் பூமி முழுவதும் தன்னுடைய ஆட்சியில் இருந்ததென்ற குறிப்பு இவனுடைய மெய்க்கீர்த்தியிலும் இவனுக்குப் பின்வந்தோர் மெய்க்கீர்த்திகளிலும் காணப்படுகின்றது: முதலாம் குலோத்துங்கனுடைய மெய்க்கீர்த்தி 'புகழ் சூழ்ந்த புணரியகழ் சூழ்ந்த புவியில் பெண்ணேமி யளவுந் தன்னேமி நடப்ப' என்று கூறுகின்றது; விக்கிரமசோழன் 'பூமாலையடைந்து பொன்மாலை திகழ', 'பூமாது புணரப் புலிமாது வளர' என இரண்டு மெய்க்கீர்த்திகள் கொண்டவன். அவனுடைய முதலாவது மெய்க்கீர்த்தியில்,[12] 'அகில புவனமுங் கவிப்பதொரு புதுமதிபோல வெண்குடை மீமிசை நிற்ப' என வருகின்றது; இவ்வாறு கூறுவது உண்மையோடு தொடர்பு பட்டதாக இருக்கவேண்டுமென்ற நிலைமாறி மரபுவழிக் கூற்றாக மாறிவிடுகின்றது. மெய்க்கீர்த்தியும் பொய்க் கீர்த்தியைத் தான் பாடுகின்றதென்றும் புலவர்கள் ஏனைய

---

11. South Indian Inscriptions, Vol, II, p. 168.
12. South Indian Inscriptions, Vol. II, p. 307.

கவிதைகளைப்போலவே மெய்க்கீர்த்தியையும் பாடியுள்ளனரென்றும் அறிஞர்கள் கூறும் நிலை ஏற்படுகின்றது.

சோழராட்சி வலிகுன்றப் பாண்டியர் தலையெடுத்தனர். பாண்டியர் சுய ஆட்சிபெற்றுப் பாண்டிய அரசு வளரத் தொடங்கிய காலத்தில் ஆட்சிசெய்த சடாவர்மன் குலசேகரனும் உலகம்முழுவதையும் ஆண்டான் என்ற பொருளில் 'எண்கிரி சூழ்ந்த எழுகடலெழு பொழில் வெண்குடை நிழற்ற'[13] என்று அவனுடைய மெய்க்கீர்த்தி கூறுகின்றது. தமிழ்நாட்டு மன்னர்களுள் 'மூவுலகுக்கும் மன்னர்' என்று பொருள்படும் 'திரிபுவனச் சக்கரவர்த்தி' யென்ற பட்டம் முதன்முதல் குலோத்துங்கனுலேயே சூடிக்கொள்ளப்படுகின்றது. மிகப் பரந்த நிலப்பரப்பை ஆண்ட தமிழ் மன்னர்களுக்கு இப் பட்டம் வழங்கவில்லை என்பது கவனிக்கத்தக்கது; பிற் காலத்திலாண்ட பெருமை குறைந்த மன்னருக்கே இப் பட்டம் வழங்குகின்றது. குலோத்துங்கனைத் தொடர்ந்து வந்த விக்கிரம சோழனும் 'திரிபுவனச் சக்கரவர்த்தி' யென்று கூறப்படுகின்றான். பாண்டியன் சடாவர்மன் குலசேகரன் திரிபுவனச் சக்கரவர்த்தியென்று மரபுவழியாகக் கூறிக்கொள்வது உண்மையிலிருந்து வெகுதூரமாகக் காணப்படுகின்றது; ஒருவனைத் திரிபுவனச் சக்கரவர்த்தியென்றால், அவன் தன்னுடைய நாட்டைச் சுய்மாக ஆட்சிசெய்பவன் எனப்பொருள் சுருங்கிவிட்டது போலத்தெரியவருகின்றது.

முதலாம் குலோத்துங்க சோழன், விக்கிரம சோழன் முதலியவர்களுக்கும் நீண்ட மெய்க்கீர்த்திகள்

---

13. Pudukkottai State Inscriptions No 246.
இவனுடைய மூன்று மெய்க்கீர்த்திகளுள் ஒன்றான 'பூவின் கிழத்தி' இக்கட்டுரையில் எடுத்தாளப்படுகின்றது.

உண்டு: ஆனால் இம்மெய்க்கீர்த்திகளை இவர்களுக்கு முன்புள்ள மன்னர்களுடைய மெய்க்கீர்த்திகளுடன் ஒப் பிட்டால், நீண்ட மெய்க்கீர்த்தி பாடவேண்டுமென்ற எண்ணத்தை வைத்துக்கொண்டு புலவர்கள் பாடியிருக்க வேண்டுமெனத் தெரியவருகின்றது. புறநானூற்றிற் காணப்படும் போர் பற்றிய பாடல்களுக்கும் பதிற்றுப் பத்திற் காணப்படும் போர் பற்றிய பாடல்களுக்கும் உள்ள வேறுபாடு முற்கால, பிற்கால மெய்க்கீர்த்தி களுக்கிடையிலான வேறுபாடுபோலத் தோன்றுகின்றது. குலோத்துங்கன் முதல் வெற்றி பெற்ற விபரம் 'விளங்கு சயமகளை யிளங்கோப் பருவத்துச் சக்கரக் கோட்டத்து விக்கிரமத் தொழிலாற் புதுமணம் புணர்ந்து' எனக் கூறப்படுகின்றது. சோழப் பேரரசுக்குத் தாய்வழியால் உரிமை பூண்ட குலோத்துங்கனுடைய ஆட்சி யாவருக் கும் உடன்பாடான வழியில் அமைதியாகத் தொடங்க வில்லை. வேங்கிநாட்டாட்சி தானும்குலோத்துங்கனுக் குக் கிடைக்கவேண்டிய காலத்திற் கிடைக்கவில்லை: தொடக்கத்தில் மேலைச் சாளுக்கியரும் பின்பு வீரசோழ னும் வேங்கி நாட்டரசனாகப் பிறனொருவனை அங்கீகரித் தனர். இச் செய்திகளைக் குலோத்துங்கனுடைய மெய்க் கீர்த்தி பூசிமெழுகுகின்றது:-

புதுமணம் புணர்ந்து மதவரை யீட்டம்
வயிரா கரத்து வாரி யயிர்முனைக்
கொந்தள வரசர் தந்தள மிரிய
வாளுறை கழித்துத் தோள்வலி காட்டிப்
பேரர்ப்பரி நடாத்திக் கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடித் தென்றிசைத்
தேமரு கமலப் பூமகள் பொதுமையும்
பொன்னி யாடை நன்னிலப் பாவையின்
தனிமையுந் தவிரப் புனிதத் திருமணி
மகுட முரிமையிற் சூடி (5-14)

'கீர்த்தியை நிறுத்தி, 'உரிமையிற் சூடி' என்னும் பகுதிகள் குலோத்துங்கனுடைய விருப்பத்துக்கியைய அவனை மகிழ்விக்கும் வண்ணம் புகுத்தப்பட்டிருக்கவேண்டும். சோழருடைய புலி மேருவில் விளையாடுகின்றதென்று இம்மெய்க்கீர்த்தி கூறுவது உயர்வு நவிற்சியாகக் காணப்படுகின்றது. கங்கைக்கரைவரை படையெடுத்த முதலாம் இராசேந்திரனுக்குக் கூறுத புகழுரை முதலாம் குலோத்துங்கனுக்கு வழங்கியிருக்கின்றது. மீனம் கனகாசலத்து விளையாடுகின்றதென்று சடாவர்மன் குலசேகரன் மெய்க்கீர்த்தி கூறுவது பொருள் சிறிதுமில்லாத மரபுவழிக் கூற்றேயாகும். குலோத்துங்கனுடைய மெய்க்கீர்த்தியில், சோழராட்சிக்கு எதிராகக் கலகஞ்செய்த பாண்டியரையும் சேரரையும் வென்றடக்கியமை விரிவாகக் கூறப்பட்டு அந்நாடுகளிற் கலகங்கள் ஏற்படுவதனைத் தடுப்பதற்காக நிலைப்படைகள் வெவ்வேறிடங்களில் நிறுவிய செய்தி குறிக்கப்பட்டுள்ளது.

முதலாம் குலோத்துங்கன், விக்கிரமசோழன் முதலியோர் தாம் தம் தேவியரோடு எவ்வாறு வாழ்ந்தனரென்பதையும் தம்முடைய மெய்க்கீர்த்தியாகக் கொண்டுள்ளனர். முதலாம் குலோத்துங்கனுடைய மூன்று தேவியரை உமைக்கும் கங்கைக்கும் திருமகளுக்கும் உவமித்துக்கூறும் மெய்க்கீர்த்திப் பகுதி:-

> பார்மிசைச் சிவனிடத் துமை யெனத்
> தியாகவல்லி உலகுடையாளிருப்ப வவளுடன்
> கங்கைவீற் றிருந்தெனை மங்கையர் திலதம்
> ஏழிசை வல்லபி ஏழுலக முடையாள்
> வாழி மலர்ந்தினி திருப்ப வூழியுந்
> திருமா லாகத்துப் பிரியா தென்றும்
> திருமக ளிருந்தென வீரசிம் மாசனத்து
> உலகமு டையாளொடு வீற்றிருந் தருளிய (66-73)

விக்கிரமசோழனுடைய தேவியரைப்பற்றி வரும் மெய்க்கீர்த்திப் பகுதி:-

தொல்லையே யுலகுந் தொழுதெழத் தோன்றிய
முல்லை வாணகை முக்கோக் கிழானடி
உமையொடுஞ் சங்கரன் இமையத் திருந்தெனப்
பொருந்தி இனி திருப்ப
தெரிவையர் திலதம் தியாக பதாகை
புரிகுழல் மடப்படி புனிதகுண வனிதை
திரிபுவன முழுதுடையா ளிவன்திரு வுள்ளத்
தருள்முழு துடையா ளொனவுட னிருப்ப (30-38)

விக்கிரமசோழன் காலத்திலிருந்து மெய்க்கீர்த்தியின் பொருளடக்கம் விரிவுபடுகின்றதெனலாம். முந்திய மன்னர்கள் காலம் போலப் போர்வெற்றிகள் இவர்கள் காலத்திற் சிறப்பிடம் பெறுமையால், கீர்த்தியாக வேறு விடயங்கள் கூறவேண்டிய நிலை ஏற்படுகின்றது இம் மன்னர்களுடைய ஆட்சிச் சிறப்பு, கோவிற் றிருப்பணி என்பன விரிவாகக் கூறப்படுகின்றன. விக்கிரமசோழனுடைய மெய்க்கீர்த்தி[14] சிதம்பரம் கோவிலிற் செய்யப்பட்ட திருப்பணியை விரிவாகக் கூறுகின்றது:-

தன்குல நாயகன் தாண்டவம் பயிலுஞ்
செம்பொனம் பலஞ்சூழ் திருமா ளிகையும்
கோபுர வாசல் கூடசா லைகளும் (32-44)
பசும்பொன் வேய்ந்த பலிவளர் பீடமும்
விசும்பொலி தழைப்ப விளங்குபொன் வேய்ந்து
(37-38)

---

14, South Indian Inscriptions, Vol. III, p. 182.

திருத்தேர்க் கோயில் செம்பொன் வேய்ந்து
பருந்திரள் முத்தின் பயில்வடம் பரப்பி
நிறைமணி மாளிகை நெடுந்திரு வீதிதன்
திருவளர் பெயராற் பெய்துசமைத் தருளிப்
பைம்பொற் குழித்த பரிகல முதலாச்
செம்பொன் கற்பகத் தொடுபரிச் சிந்நமும்

அளவில் லாதன வொளிபெற வமைத்து (44-50)
விக்கிரமசோழன் 'தென்றிசைத் தருமமுந் தவமுந் தான
முந், தழைப்ப வேதமும் மெய்ம்மையு மாதியுகம் போலத்
தலைத்தலை சிறப்ப' ஆட்சி செய்தவனென மெய்க்கீர்த்தி
கூறும். பாண்டியர் தமிழ்நாடு நெருங்கிய தொடர்
புடையவரென்று கூறப்பட்டு வந்ததனாற்போலும், சடா
வர்மன் குலசேகரனுடைய மெய்க்கீர்த்தி, 'இன்னமு
தாகிய இயலிசை நாடகம் மன்னிவளர' என்றும் மாற
வர்மன் சுந்தரபாண்டியனுடைய 'பூ மருவிய திரு
மடந்தையும் புவிமடந்தையும் புயத்திருப்ப' என்று
தொடங்கும் மெய்க்கீர்த்தி[15] 'மூவகைத் தமிழும் முறை
மையின் விளங்க' என்றும் கூறுகின்றன. மாறவர்மன்
சுந்தரபாண்டியனுடைய மெய்க்கீர்த்தி அவன் நல்லாட்
சியை வருணிக்கும் பகுதி:—

நால்வகை வேதமு நவின்றுடன் வளர
ஐவகை வேள்வியுஞ் செய்வினை யியற்ற
அறுவகைச் சமயமு மழகுடன் றிகழ
எழுவகைப் பாடலு மியலுடன் பரவ (9-12)

பதினைந்தாம் நூற்றாண்டிலே தென்பாண்டி
நாட்டை ஆண்ட சிற்றரசன் அரிகேசரி பராக்கிரம

---

15. Pudukottai State Inscriptions, No. 250.

பாண்டியனுவான். அவன் பகை மன்னரை வென்ற இடங் களாகச் சில இடங்களின் பெயர்கள் தரப்படுகின்றன; பகைவர் யார் என்ற குறிப்பு இல்லை. பதினெட்டு மொழிபேசும் மன்னரும் திறைகொடுத்ததாகக் கூறப் படுகின்றது; மெய்க்கீர்த்தியிற் கூறப்படும் விடயத்துக்கு உண்மையோடு சம்பந்தம் இல்லாமற் போய்விட்ட நிலை காணப்படுகின்றது. இவன் நல்லவன் என்பதைக் குறிக் கும் மெய்க்கீர்த்திப் பகுதிகள்:-

சந்திர குலத்து வந்தவ தரித்து
முந்தையோர் தவத்து முளையென வளர்ந்து
மன்பதை புரக்க மணிமுடி புனைந்து
சங்கர சரண பங்கயஞ் சூடி (5-9)
மறக்களை பறித்துநல் லறப்பயிர் விளைத்து (13)
உலக முழுது முடையா ளுடன்
இலகு கருணை யிரண்டுரு வென்ன
அம்மையு மப்பனு மாயனைத் துயிர்க்கும்
இம்மைப் பயனு மறுமைக் குறுதியும்
மேம்பட நல்கி வீற்றிருந் தருளிய (43-47)

அவன் செய்த சைவப் பணிகள் விரிவாக மெய்க் கீர்த்தியிலிடம் பெறுகின்றமை:-

அந்தண ரனேகர் செந்தழ லோம்ப
விந்தைமுத லகர மைந்திடத் தியற்றிச்
சிவநெறி யோங்கச் சிவார்ச்சனை புரிந்து
மருதூ ரவர்க்கு மண்டப மமைத்து
முன்னொரு நூறு மூங்கில்புக் கிருந்த
சிற்பரர் தம்மைத் திருவத்த சாமத்துப்
பொற்கலத் தமுது பொலிவித் தருளிச்
சண்பக வனத்துச் சங்கரர் தமக்கு
மண்டப மமைத்து மணிமுடி சூட்டி.

விழாவணி நடாத்தி விரைப்புன லாடல்
வழாவகை நடாத்தி நின்மன்னரு ளதனால் (22-32)
தென்கா சிப்பெருங் கோயில் செய்து
நல்லா கமவழி நைமித் திகமுடன்
எல்லாப் பூசையுமெக்கோ யிலினும்
பொருண்முத லனைத்தும் புரையற நடாத்தி (38-41)

மெய்க்கீர்த்தி காலப்போக்கில் அடைந்த மாற்றம் இத்தகையதாகும்.

மெய்க்கீர்த்தியை ஒத்த பகுதியொன்று சோழர் காலத்துக்கு முந்திய தமிழ்ச் சாசனங்களுட் காணப்படுகின்றது. இது வடமொழிச் சாசனங்களிற் காணப்படும் 'பிரசஸ்தி' என்ற வகையைச் சேர்ந்தது. மன்னனுடைய செய்திகளை மட்டுமன்றி அவன் குலமுறையையும் குலப்பெருமையையும் முன்னோர் அருஞ்செயல்களையும் எடுத்துக் கூறுவது அப்பகுதி. வேள்விக்குடிச்சாசனம், சின்னமன்னூர்ச்சாசனம், பராந்தகன் வீரநாராயணனுடைய செப்பேட்டுச் சாசனம் என்பனவற்றில் பாண்டிய மன்னர்களுடைய தமிழ்ப் பிரசஸ்தி காணப்படுகின்றது. சின்னமனூர்ச் சாசனத்தில் வரும் 'மஹாபாரதந் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்' என்ற பகுதி பாண்டி நாட்டிற் பண்டைக் காலத்திற் சங்கமிருந்ததென்பதற்குச் சான்றாகப் பலராலும் எடுத்துக்காட்டப்படுவது. பராந்தகன் வீரநாராயணனுடைய செப்பேடு[16] இங்கு எடுத்தாளப்படுகிறது. வரலாற்றுக்கு எட்டாத இதிகாச புராணச் செய்திகள் இங்கு குறிப்பிடப்படுகின்றன. அகத்திய முனிவர் புரோகிதராக வந்தது' இமயமலையிற் கயலினை பொறித்தது, தேவா

16. மயிலை. சீனி. வேங்கடசாமி - சாசனச் செய்யுள் மஞ்சரி - பக். 146

சுரச் செருவென்றது, அகத்தியரோடு தமிழாராய்ந்தது, துரியோதனனுதியர் படைமுழுதும் அழியும்படி பாரதயுத்தத்திற் பகடோட்டியது என்பன அவற்றுட் சில. 'மண்ணதிராவகை வென்று தென் மதுரா புரஞ் செய்தும் அங்கதனில் லருந்தமிழ்நற் சங்கம் இரீஇத் தமிழ் வளர்த்தும்' என்று சங்கம் பற்றிய கதைக் குறிப்பு இங்கும் வருகின்றது; தலையாலங்கானத்துச் செருவென்றது, களப்பாளர் குலங் களைந்தது முதலிய பழைய வரலாற்று நிகழ்ச்சிகளும் இடம்பெறுகின்றன.

முதலாம் வரகுணன் காலத்திலிருந்து வரலாற்று நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன. அவன் பல்லவன் மேற்பெற்ற பெருவெற்றி கூறப்படுகின்றது; அவன் மகன் ஸ்ரீவல்லபன் 'கரைகடலீ ழங்கொண்டும் விண்ணுள வில்லவற்கு விழிருத்து விடைகொடுத்தும் காடவருக்கடலாணூர்ப் பீடழியப் பின்னின்றும்' பெற்ற வெற்றிகள் ஓரளவு விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இரண்டாம் வரகுணன் 'பிள்ளை பிறை சடைக்கணிந்த விடையேறி எம்பெருமானை உள்ளத்திலினிதிருவி உலகங் காக்கின்ற நாளில்' என்று கூறப்படுகின்றான். இவனே மாணிக்கவாசகர் காலத்து அரிமர்த்தன பாண்டியனாவான் என்பது அறிஞர் சிலர் முடிபு; இவன் மகனே இச்சாசனத்துக்குரிய பராந்தகன் வீரநாராயணனாவான். இவன் 'நிலமோரங்கும் புகழாலும் நிதிவழங்கு கொடையாலும் வென்றிப் போர்த் திருவாலும்' வேல் வேந்தரில் மேம்பட்டவன். சோழர் காலத்துக்கு முந்திய பிரசஸ்தியிலிடம் பெற்ற செய்திகள் இத்தகையன. சோழர் காலத்தில் மெய்க்கீர்த்தி தோன்றுவதற்கு இப் பிரசஸ்தி வழிகாட்டியிருக்கவேண்டும்.

## மெய்க்கீர்த்தி தவிர்ந்த பிற சாசனச் செய்யுள்கள்

மெய்க்கீர்த்தி வகையிலிருந்து வேறுபட்ட சாசனச் செய்யுள்களை மயிலை. சீனி. வேங்கடசாமி மாவட்ட ரீதியிலே தொகுத்துள்ளார்; இங்கு இச்செய்யுள்கள் மண்டல ரீதியிலே தொண்டைமண்டலத்துச் செய்யுள்கள், சோழமண்டலத்துச் செய்யுள்கள், பாண்டி மண்டலத்துச் செய்யுள்கள், தமிழ் நாட்டுக்கு வெளியிலுள்ள பிரதேசத்துச் செய்யுள்கள் என்ற முறையில் அறிமுகப்படுத்தப்படும். தொண்டைமண்டலத்தைச் சேர்ந்த காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவிலில் மூன்று செய்யுள்கள்[17] திருமால் மாவலிவாணன் என்ற சிற்றரசன் வீரமாறன் என்ற பாண்டியனைத் தோற்கடித்ததைப் பற்றிக் கூறுகின்றன; அவற்றுள் ஒன்று:-

> அடுகயலை முன்னொளி லாடகக் குன்றிட்ட
> வடுமறைந்து போயும் மறையா - முடுகுசமர
> மாற்றோர் தொழுந்திருமால் மாவுதைப்ப வேல்வழுதி
> தோற்றோடிப் போன சுவடு.

இமயத்திற் பாண்டிய குல இலச்சினையாகிய கயலைப் பொறித்தது பாண்டியருக்குப் பெருமைதந்த கதையாகும். பாண்டியருடைய வீரம் பழங்கதையாகிவிட்டது; போரிலே திருமால்மாவலிவாணனுடைய குதிரையின் உதைப்புக்கு அஞ்சிப் பாண்டியன் தோற்றோடிப் போய்விட்டான். தோற்றோடிய அவன் சுவடுகள் இன்னும் பசுமையாக இருக்கின்றன. பாண்டியனுடைய பழம்பெருமையையும் அக்காலச் சிறுமையையும் எடுத்

---

17. South Indian Inscriptions, Vol. IV, p. 98.

துக்கூறும் முகமாக அவனை வென்ற மாவலிவாணனின் சிறப்புப் புலப்படுத்தப்படுகின்றது. அதே மண்டலத்தைச் சேர்ந்த திருவண்ணாமலை அண்ணாமலையார் கோவிலிலே பல சாசனச் செய்யுள்கள் கிடைத்துள்ளன; சோழருக்குக் கீழ்ச்சிற்றரசனாக இருந்த மகதைப் பெருமாள் என்பவனைப் பாராட்டுவன சில:-[18]

> தாரு முடியு முரசுந் தமக்குரிய
> பாரு முடன்பெறுவர் பார்வேந்தர் - வீரப்
> பெருமாள் மகதேசன் பேரெழுதித் தந்தம்
> திருமார்பி லாளோலை செய்து;

வேந்தர்கள் மகதைப் பெருமாளோடு போர்செய்து யாவற்றையும் இழக்கின்றனர். அவர்கள் இழந்தவற்றைத் திருப்பிப் பெறுவதற்கான வழி இங்கு கூறப்படுகின்றது: ஆளோலை என்பது அடிமையோலையாகும்; மகதைப் பெருமாளுக்கு அடிமை என்ற நிலையை அவர்கள் ஏற்பாராயின், இழந்தன யாவற்றையும் திரும்பவும் பெறலாமெனப்படுகின்றது.

> வன்மதுரை விட்டு வடகடலான் மால்வழுதி
> தென்மதுரை பட்டின்று தென்கடலான்
> - நன்னுதலாய்
> மல்லார்தோள் மாகதர்கோமான் முனிந்தால்
> மன்னருக்
> கெல்லாங் கடலோ விடம்.

மதுரை, மாகதர்கோன் என்ற பெயர்களால் ஏற்பட்ட ஒப்புமையாக இரண்டு வேறு நிகழ்ச்சிகள் இங்கு

---

18. South Indian Inscriptions, Vol. VIII, p. 50.
தமிழ் மூன்றும் தொகுதி பக். 332.

பிணைக்கப்பட்டு பொதுத்தன்மை விளுவாக அமைக்கப் பட்டிருக்கின்றது; மாகதர்கோனுகிய எதிரிக்கு அஞ்சிக் கண்ணன் வடமதுரையை விட்டுக் கடலுக்கு அருகிலுள்ள துவாரகையைத் தலைநகராக்கி வாழ்ந்தானென்பது இதிகாசக் கதையாகும்; இங்கும் மாதகர்கோனுகிய மகதைப் பெருமானுக்குப் பாண்டியன் அஞ்சித் தென்மதுரையை விட்டுத் தென்கடலை நோக்கி உயிரைப் பாதுகாக்க ஓடினுனென்று கூறப்படுகின்றது; எனவே, மாகதர் கோனுக்கு அஞ்சும் மன்னவர் எல்லாரும் ஓடிச்செல்லு மிடம் கடலா என்பது வினு.

> தென்னர் முதலா வுலகாண்ட செம்பொன்முடி
> மன்னர் பெருவாழ்வும் வாள்வலியு - மின்னு
> முருவத் திகிரி யுயர் நெடுந்தேர் வாணன்
> புருவக் கடைவளையப் போம்.

மாகதர்கோனுடைய பெருவீரம் அவனுடைய புருவம் சிறிது வளைந்தாலே பாண்டியர் முதலிய மன்னருடைய வாழ்வு வலியெல்லாம் அழிந்துவிடுமென்று கூறுமுகத் தாற் புலப்படுகின்றது;

> தீய்ந்து பொழிலாகா சிந்தி நகராகா
> தூர்ந்து மணிநீர்த் துறையாகா - வேந்துமுலைப்
> பூணுகா மாறி விழவாகா பொன்னெடுந்தேர்
> வாணுகா வென்னுதார் மண்;

வாணு! எம்மைக் காப்பாயாக' என்று அபயம் புகாதவரின் நாடு அழிந்துவிடும் என்று கூறப்படுகின்றது. பொழில் தீய்ந்து விடும். நகர் சிந்திவிடும்; நீர்த்துறை தூர்ந்துவிடும். வீரர் இறந்து துன்பம் மிகுமாதலால் பெண்கள் மார்புக்கு அணிகிடையாது. நாட்டில் விழா இராது எனப்படுகின்றது.

மண்ணுள் திகிரிக்கை வாணன் வடுகெறிந்த
எண்ணுயிரஞ்சூழ்ந்த எண்டிசையும் - புண்வடிந்த
நீரே நீர்காக நிழலே நிழல்நெடும்பெய்த்
தேரேதேர் செஞ்சேறே சேறு.

வாணனுடைய போர்வீரம் அவன் ஆந்திரரைவென்ற களத்தை வருணிப்பதன் மூலம் புலப்படுத்தப்படுகின்றது. களத்தையும் களத்தின் எண்டிசையையும் அவன் முற்றாக அழித்துவிட்டான். போர்க் காயத்தால் ஏற்பட்ட புண்ணில் இருந்து வடிந்த நீரே அங்குள்ள நீர். காகம் பறக்கும்போது தோன்றும் நிழலே அங்குள்ள நிழல். கானல் நீராகிய பேய்த்தேர் என்னும் பொய்த் தோற்றமே அங்குள்ள தேர். இரத்தம் முதலியன மண்ணுடன் கலந்து ஆன சேறே அங்குள்ள சேறு.

மேருவின்மேல் வென்று கயல்பொறித்த
வார்த்தையிலும்
வாரிபட வேலெறிந்த வார்த்தையிலும்
கார்விலங்கு
முன்னிட்ட வார்த்தையிலுந் தென்னவர்
மாகதற்குப்
பின்னிட்ட வார்த்தை பெரிது.

மகதைப் பெருமாள் பாண்டியனை வென்றது கூறப்படுகின்றது. பாண்டியருடைய பௌராணிகப் பெருமைகள் கூறப்படுகின்றன. மேருமலையிற் கயல்பொறித்த கதை, கடல் வற்றும்படி வேலைச் செலுத்திய கதை, முகிலுக்கு விலங்கிட்ட கதை என்பன நினைவூட்டப்பட்டு அத்தகைய குலப்பெருமைகளை யுடையவனை மாகதர் கோன் வென்றானென்று பின்னவன் பெருமை பேசப் படுகின்றது. அண்ணமலையார் கோவிலிலே கோப்பெருஞ் சிங்கனும் அவன் மகன் ஆட்கொண்ட தேவனும் செய்த

திருப்பணிகள் 136 அடிகள் கொண்ட அகவற்பாவில்[19] விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றன. வாயலூர் ஏரிக் கரையிலுள்ள கல்லிற் காணப்படும் கோப்பெருஞ்சிங்கனைப் பற்றிய செய்யுள்கள்[20] சிறியனவாகவும் சுவைமிக்கனவாகவும் காணப்படுகின்றன.

பொன்னி நாடனு முரிமையு மமைச்சரு மிருப்பதுன் சிறைக்கோட்டம்
　　பொருப் பிரண்டென வளர்ந்த தோள் வலியினுற் கொண்டுசோனுடு
கன்னி காவிரி பகிரதி நின்பிரியா தெண்டுறை வாவி காவல்
　　மன்னவர் திறையுட னுணங்குவ துன்பெருந் திருவாசல்
வென்னி டாத போர்க் கன்னடர் வென்னிடப் பொருததுன் பெருஞ்சேனை
　　விளங்கு செம்பொனி னம்பலக் கூத்துநி விரும்பிய தேவாரம்
பின்னி காவல அவனி நாராயண பேணு செந்தமிழ் வாழப்பிறந்த
　　காடவகோப் பெருஞ்சிங்க நின் பெருமையார் புகழ்வாரே.

பதின்மூன்றும் நூற்றுண்டிற் சோழப் பேரரசு வலிகுன்றத் தெற்கிலே பாண்டியரும் வடக்கிலே பல்லவர்குல பரம்பரையைச் சேர்ந்த காடவராயரும் தலையெடுத்தனர். பாண்டியருக்குத் தோற்றோடிய சோழனைக் காடவராயனுன கோப்பெருஞ்சிங்கன் சிறையிட்டான். தென் பெண்ணையென்னும் பின்னி பாய்ந்த நாட்டுக்கு அவன் அரசனுவான். கன்னியா குமரி, காவிரி, கங்கையென்பன அவனுடைய ஆட்சியிலிருக்கவில்லை. அவன் சோழனைச் சிறைப்பிடித்ததால், அவனைச் சோழனுடைய காவிரி நாட்டுக்கு அதிபதியெனக் கொண்டிருக்கவேண்டும். சோழர்குல ஆட்சி கங்கையிலும் கன்னியா குமரியிலும் ஒரு காலத்தில் உரிமைகொண்டாடியதால், சோழனைச் சிறைப்பிடித்த கோப்பெருஞ்சிங்கன் ஆற்றல் உயர்வு நவிற்சியாகக் கற்பனை செய்யப்பட்டிருக்கலாம். தோல்

---

19. South Indian Inscriptions, Vol. VIII, p. 38.

வியை அறியாத கன்னடப் போசளரைத் தோற்கச் செய்த கோப்பெருஞ்சிங்கன் வீரம் குறிப்பிடப்படுகின்றது. ஆனால், போசளரே பாண்டியரையும் காடவராயரையும் தோற்கடித்துச் சோழருக்கு மறுவாழ்வு அளித்தனர்.

> திறையிட் டிருமின்கள் தெவ்வேந்தர் செம்பொன்
> திறையிடாப் பூம்புகார்ச் சோழன் - சிறைகிடந்த
> கோட்டந்தனை நினைமின் கோப்பெருஞ்சிங்கன் கமல
> நாட்டங் கடைசிவந்த நாள்.

பகைவேந்தருக்கு அறிவுரை வழங்கப்படுகின்றது - கோப்பெருஞ்சிங்கனுக்குத் திறை கொடுக்கும்படி. பூம்புகார்ச் சோழன் எனப்படுகிறது; பூம்புகார் காவிரிப்பூம்பட்டினமாகும். சங்ககாலச் சோழர் பூம்புகாரிலிருந்து ஆண்டமையால், இவ்வாறு குறிப்பிடப்படுகின்றான். சோழன் திறைகொடாமையாற் சிறையிலிருந்தான். திறைகொடாத சிற்றரசருக்கும் அதே கதியென்று கூறப்படுகின்றது. சோழன் திறைபெற்ற மரபிலும் கோப்பெருஞ்சிங்கன் திறைகொடுத்த மரபிலும் வந்தவர்களென்பதை நினைவுகூரும்போது காலம் மாறிப்போய்விட்டது தெரியவருகின்றது. கோப்பெருஞ்சிங்கனின் கண் சிவந்ததும் சோழன் சிறைப்பட்டான் என்பது உயர்வு நவிற்சி. சோழமன்னர்கள் திரிபுவனச் சக்கரவர்த்திகள் என்று தம்மைக் கூறிக்கொண்டதால், அக்குல மன்னனை வென்ற கோப்பெருஞ்சிங்கன் 'திரிபுவனத்திராசாக்கள் தம்பிரான்' எனப்படுகின்றான்.

அகத்திணை மரபைப் பயன் படுத்திப்பாடப் பட்ட பாட்டு ஒன்றும் காணப்படுகின்றது. தாய் அல்லது தோழி தலைவனை விளித்துத் தலைவி நிலை எடுத்துக்கூறுவதாக அமைகின்றது, அச்செய்யுள் தலைவனை

20. Epigraphia Indica Vol. XXIII, p. 174

விளிக்கும்போது கோப்பெருஞ்சிங்கனுடைய புகழும் பெருமையும் எடுத்துக்கூறப்படுகின்றன:-

> ஒரு நாளும் விடியாத நெடிய கங்கு லூழியென
> நீண்டுவர உலகிற் புன்கண்
> மருண்மாலை யிதுமுன்னே வந்ததென்றால் மடந்தை
> யிவளாற்றுவளோமல்லை வேந்தே
> பொருமாலை முடியரசர் கன்னிமாதர் போற்றி
> செயும் புவனமுழு துடையார் தாமுந்
> திருமாதும் புணர்புயத்து மிண்டன் சீய திரிபுவனத்
> திராசாக்கள் தம்பிரானே.

சோழமண்டலத்துச் சாசனச் செய்யுள்களுட் பல, சிதம்பரம் நடராசர் கோவிலிற் காணப்படுகின்றன. சோழப்பேரரசு வலிகுன்றிய காலத்துச் சோழ மன்னனைத் தோற்கடித்துச் சிதம்பரத்திலே தரிசனஞ் செய்த சடாவர்மன் சுந்தரபாண்டியனைப்பற்றி:-

> காரேற்ற தண்டலைக் காவிரி நாடனைக் கானுலவுந்
> தேரேற்றி விட்ட செழுந்தமிழ்த் தென்னவன்
> சென்றெதிர்ந்து
> தாரேற்ற வெம்படை யாரியர் தண்டுபடத் தனியே
> போரேற்று நின்ற பெருவார்த்தை யின்றும் புது
> வார்த்தையே.[21]

பாண்டியப் பேரரசர்களுக்குள்ளே தன்னிகரற்றவன் முதலாம் சடாவர்மன் சுந்தரபாண்டியனாவான். சோழனைக் குறிப்பிடும்போது அவன் நாட்டுவளம் புகழப்படுகின்றது. பாண்டியனைக் குறிப்பிடும்போது செந்தமிழுக்கும் அவன்

---

21. South Indian Inscriptions, Vol. IV, p. 189.

குலத்துக்கு முள்ள தொடர்பு புலப்படுத்தப்படுகின்றது; சோழன் நாட்டிலிருந்து காட்டுக்கு ஓடி ஒளித்துப் புகலிடம் தேடச் செய்தமை 'கானுலவுந் தேரோடி விட்ட' என்பதனாலே கூறப்படுகின்றது. பெருவார்த்தை - புகழ் புதுவார்த்தை - பசுமையாக விளங்கும் கதை; ஆரியர் படையைத் தனியே நின்று எதிர்த்து வென்றானெனப் படுகின்றது. சடாவர்மன் சுந்தரபாண்டியன் ஆந்திரரைத் தோற்கடித்த போர்க்களம் கடலிலே தோன்றும் சூரிய உதயத்துக்கு உவமிக்கப்படுகின்றது:[22]

வட்ட வெணகுடை மன்னா தம்புகல் கொண்டு மாமுடி கொண்டுபோர்
மாறுகொண்டெழு போசளன் தடைகொண்டு வாணன்வனம்புகத்
தொட்ட வெம்படை வீரன வெற்றி புனைநத சுநதர மாறனமுன்
சூழ்விடட தெலிங்கா சேனை துனிதநுவெனற களததுமேல்
விடட வெம்பரி படட பொழுதெழு சோரி வாரியை யொக்குநீர்
மேலமிதநத நிணப பெருநதிரள வெணனுரைத்திர ளொக்குமுன்
பட்ட வெங்கரி யநத வீரர் படிந்த மாமுகி லொக்கும்வீழ்
பருமணிக் குடையங்கு வந்தெழு பருதி மண்டல மொக்குமே.

குதிரைப்படை சிந்திய இரத்தம் கடலையொத்த தென்றும் கொழுப்பு முதலியனவற்றாலான பெருந்திரள் கடலிலே தோன்றும் வெண்மையான நுரையை ஒத்ததென்றும் இறந்த யானைகள் கடல்நீரைப் பருகும் மேகங்களை ஒத்தனவென்றும் தோற்றோடிய அரசனுடைய வெண் கொற்றக்குடை கடலிலே உதயமாகிய சூரியனை ஒத்த தென்றும் கூறப்படுகின்றன. இவன் இன்னொரு செய்யுளில் 'அவனிமுட்ட வாளால் வழிதிறந்தான் வடவேந்தரை மார்திறந்தே'[23] என்று கூறப்படுகின்றான்; மார்திறந்து – மார்பைப் பிளந்து. வடவேந்தர் – வடபுலத்து

---

22. South Indian Inscriptions, Vol. IV, p. 189.
23. செந்தமிழ். நான்காம் தொகுதி பக்கம் 492

வேந்தர்3 பாண்டியன் தென்னவனுதலால், பகைவேந்தர் பெரும்பாலும் வடவேந்தராகின்றனர். பகை வேந்தரை அழித்து என்பது பொருள்.

> கொங்க ருடல்கிழியக் குத்தியிரு கோட்டெடுத்து
> வெங்க ணழலில் வெதுப்புமே - மங்கையர்கள்
> சூழத் தாமம்புனையுஞ் சுந்தரத்தோள் மீனவனுக்
> கீழத் தாணிட்ட இறை.

பாண்டியனுக்கு ஈழநாடு யானையைத் திறையாகக் கொடுத்திருக்கின்றது. அந்த யானைகள் பாண்டியனுக் காகக் கொங்கரை எதிர்த்துப் போரிடுகின்றன. அந்த யானைகளின் கோபம் கூறப்படுகின்றது. யானையின் கொம் புகள் கொங்கரின் உடலைக் கிழித்தன: கோபத்தாற் சிவந்த கண்களைப்பற்றி அழகாகக் கூறுகின்றார். கண்கள் நெருப்பைக் காலுகின்றன; அந்த நெருப்பில் கொங்கர் உடல்கள் வேகுகின்றன. இந்த மன்னனுடைய காலத் தில் ஆந்திர நாட்டிற் செல்வாக்குப் பெற்று விளங்கியது காகதீய அரசாகும்: அந்த நாட்டரசனை வீரகண்ட கோபாலனைக் கொன்று, பின் அவன் தம்பியர் வேண் டிக்கொள்ள அந்த அரசினைச் சுந்தரபாண்டியன் திருப் பிக் கொடுத்தான்; அந்தப் புகழ் பதினன்கு உலகத்தி லும் பரவியதென இன்னொரு செய்யுள் கூறும்: முதலாம் குலோத்துங்கனின் சேனைத்தலைவனுகிய நரலோகவீரன் தில்லையிற் செய்த திருப்பணிகளை முப்பத்தெட்டு வெண் பாக்கள் எடுத்துக்கூறுகின்றன[24]. ஒவ்வொரு வெண்பாவி லும் நரலோகவீரனுடைய வீரத்தைச் சுட்டும் பகுதி யும் இடம்பெறுகின்றது. விக்கிரமபாண்டியனுடைய வீரத்தைப் பாராட்டும் செய்யுள்கள் சிலவும் சிதம்பரத் திற் கிடைத்துள்ளன:

---

24. South Indian Inscriptions, Vol. IV, p. 31.

வெங்கண் மதயானை விக்கிரம பாண்டியனே
பொங்கி வடதிசையிற் போகாதே - யங்கிருப்பாள்
பெண்ணொன்று மீண்ட பெருமாளே பேரிசையாழ்ப்
பண்ணொன்றும் வேய்வாய் பகை.[25]

விக்கிரமபாண்டியன் தமிழ்நாடு முழுவதையும் வென்று தமிழ்நாட்டுக்கு வடபாலிருந்த காகதீய மன்னனாகிய ருத்திரதேவ மகாராஜாவை எதிர்க்கச் சென்றான்; ஆனால் இடையிலே சென்ற காரியத்தை விட்டுத் திரும்பிவிட்டான்: காரணம் கூறப்படுகின்றது; பெண்ணை எதிர்த்துப் போர் செய்வது ஆண்மகனுக்கு அழகன்று. ருத்திராம்பா என்னும் பெண்ணே ருத்திரதேவ மகாராஜா என்ற ஆண்பெயர் பூண்டு காகதீயநாட்டை அரசுபுரிந்தாள். புவனேகவீரன் என்னும் சிறப்புப்பெயர் பூண்ட விக்கிரமபாண்டியனுடைய வெள்ளாற்றுப் போரைப் பாடும் செய்யுள்களுள் ஒன்று:-[26]

சீர்கொண்ட வெள்ளாறு குருதிப் பெருக்கிற்
செவ்வாறு பட்டோட வவ்வாறு சென்றப்
போர்வென்று வனப்பேய் நடக்கண் டதற்பின்
புலியூர் நடங்கண்ட புவனேக வீரா
பார்பண் டளந்துண்டோ ராலிற் கிடக்கும்
பச்சைப் பசுங்கொண்ட லேபத்ம நாபா
கார்கொண்ட நின்கையில் வேலுக்கு வற்றுங்
கடலல்ல வென்பேதை கண்டந்த கடலே.

அகத்திணைமரபில் அமைந்தது இப்பாடல். தோழி தலைவனை விளித்துத் தலைவி நிலையைக் கூறுவதாக இப்பாடல்

---

25. செந்தமிழ் நான்காந் தொகுதி பக். 493.

26. South Indian Inscriptions, Vol. IV, p 37.

அமைந்தது. பாண்டியனொருவன் வேலைச் செலுத்திக் கடலை வற்றச் செய்தான் என்பது புராணக்கதை; தலைவி யின் கண்ணீர்க்கடலை அவனுடைய வேல் வற்றச் செய்ய மாட்டாதென்பது கூறப்படுகின்றது. செய்யுளின் மூன் ருவது அடி பாண்டியனைத் திருமாலாகவே விளிக்கிறது; போர்க்களத்திற் பெருகிய இரத்தம் வெள்ளாற்றைச் செவ்வாருக மாற்றிவிட்டது; போர்க்களத்திலே பிணந் தின்னும் பேய்கள் நடமாடுமென்பது அக்கால நம் பிக்கை. போர் வெற்றிபெற்ற பின் பாண்டியன் சிதம் பரம் நடராசப் பெருமானைத் தரிசிக்கச் சென்ருன்;

சுவரன் மாறன் என்னும் முத்தரையனைப் பாடிய செய்யுள்கள் இருபது உள்ளன. அவற்றுள் மாதிரிக்காக ஒன்று:-

எரிவிசும்பு மிருநிலமாய்த் தென்பவான் மாறன்
செருவேன் மறங் கனன்று சீறக்
கொடிமாடத் தன்கொடும்பைக் கூடாத மன்னர்
நெடுமா மதிலிடிந்த நீறு.[27]

சுவரன் மாறனுடைய வீரம் கூறப்படுகின்றது? அவ னுடைய கோபத்தாற் பகை மன்னருடைய மதில்கள் உடைந்து நீருகி, எரிகின்ற ஆகாயத்திற் பறப்பதால், ஆகாயமே பூமியாகத் தோன்றுகின்றது. உயர்வு நவிற்சி யணி. அரசரையும் சிற்றரசரையும் புகழுவதைப் பொருளாகக் கொள்ளாத சிறந்த சாசனச் செய்யுள்கள்

27. Epigraphia Indica Vol. XIII. p. 134.

பிறவும் சோழமண்டலத்திற் காணப்படுகின்றன; திருச்சிராப்பள்ளித் திருவெள்ளறையிலுள்ள கிணற்றுச் சுவரொன்றிலுள்ள செய்யுள்:[28]

> கண்டார் காணு வுலகத்திற் காதல் செய்து நில்லாதேய்
> பண்டேய் பரமன் படைத்தநாள் பார்த்து நின்று நையாதேய்
> தண்டார் மூப்பு வந்துன்னைத் தளரச் செய்து நில்லாமுன்
> னுண்டேல் லுண்டு மிக்கது உலகம் மறிய வைம்மினேய்.

உலக நிலையாமை, இளமை நிலையாமை என்பன உபதேசிக்கப்பட்டுத் தானஞ் செய்தலாகிய அறவுரை வழங்கப்பட்டுள்ளது. பதினெண்கீழ்க்கணக்கிலுள்ள அற நூல்களின் பொருளை இது நினைவூட்டுகின்றது. திருச்சிராப்பள்ளிமலையின் மேலுள்ளதும் மகேந்திரவர்மன் அமைத்ததுமான குகைக்கோவிற் சுவர்களிலே சிராமலையந்தாதி என்னும் முழுப் பிரபந்தம் ஒன்றே நாராயணன் என்பவரால் பாடப்பட்டுப் பொறிக்கப்பட்டுள்ளது. இப் பிரபந்தத்தில் நூற்று நான்கு செய்யுள்கள் இடம்பெறுகின்றன. இவ்வந்தாதியைத் தருமபுர ஆதீனத்தார் புத்தகமாக வெளியிட்டுள்ளார்கள்; மாதிரிக்காகச் சில செய்யுள்கள்:-

---

28. Epigraphia Indica, Vol XIII, p. 134.

வேறு கண்டாய் நெஞ்சமே தளரேல் விளை மாங்
கனியின்
சேறு கண்டாருண் சிராமலை யாதிதன் செல்வஞ்
சொன்னால்
யாறு கண்டா யவன் றேவியில் லம்பலமேற்பதைய
மேறு கண்டா யவனேறிப் பல்காலம் மியங்குவதே.

அகத்திணைமரபிற் பாடப்பட்ட செய்யுள் இது. இறை வன்மேல் மனத்தைப் பறிகொடுத்த தலைவி இறைவனைப் பற்றிய விபரங்களை அறிந்து உள்ளத்தைத் திடப்படுத்து கிறாள். தலைவன் சிராமலை முதல்வனாவான். சிராமலை யின் வளம் கூறப்படுகின்றது. விளைமாங்கனி - நன்கு பழுத்த மாங்கனி. அந்தக் கனியைக் கவர்வாரின்மை யால், மாங்கனியின் சாறு நிலத்தைச் சேர்ந்து சேறு ஆகிறது. அந்தச் சேற்றைக் காண்பவர் உண்கின்றனர். ஆனால் அத்தகைய செழிப்புள்ள மலைத்தலைவனுடைய செல்வம் புராணக் கதைகளுக்கேற்பக் கூறப்படும்போது முரண் அணி தோன்றுகின்றது. இறைவன் தேவி கங்கை யாகிய ஆறு ஆகும்; அவன் இல்லம் ஆகாயமாகிய அம்பலமாகும். அவன் தொழில் பிச்சை ஏற்பது. அவ னுடைய வாகனம் எருது.

பணிமின்கள் பாதம் பகர்மின்க ளாமங்கள்
பாரகத்தீர் துணிமின்கள் சீற்றம் தவிர்மின்கள்
பொய்ம்மை தவம்புகுநாள்
கணிமின்க ளேனற் கிளிகடி மாதர்தங் கைவிசைத்த
மணிமின்கள் போலொளிர் வான்றோய் சிராமலைப்
பள்ளி வள்ளலுக்கே.

உலகத்தவர்களுக்கு அறிவுரை கூறுவதாக இச்செய்யுள் அமைந்தது. சிராப்பள்ளிச் சிவபெருமான் திருமேனி யொளி, தினைப்புனங் காக்கின்ற பெண்கள் கைகளை

அசைத்துக் கிளிகளையோப்பும்போது அவர்கள் கைகளி லுள்ள இரத்தினங்கள் ஒளிவீசுவதுபோலக் காண்கிறது: மலையில் உறையும் கடவுளைப் பற்றிய உவமையானதாற் போலும் குறிஞ்சி நிலக்காட்சி உவமிக்கப்படுகின்றது; சிவனடியாராவதற்கு எவ்வெவ்வகையில் உலகத்தார் தம்மைத் தயார்ப்படுத்திக் கொள்ளவேண்டுமென்று கூறப்படுகின்றது:

> நெஞ்சம் துணையுண்டு நீர்நிலத் துண்டு நிழலுமுண்டு
> தஞ்சப் பெருக்குளதா னஞ்சிராமலைச் சாரலுண்டு
> துஞ்சுந் துணையுஞ் சிவனைத் தொழுது துறக்கமெய்
> தார்
> பஞ்சந் நலியப் பலிதிரிவார் சிலர் பாவியரே;

சிராமலைச் சிவனையடையாமையால், இம்மையிலும் மறு மையிலும் ஏற்படும் இழப்புகளைக் கூறுகின்றார்: சிரா மலைப்பகுதி வளமுள்ள நிலமாகும். அங்கு செல்லாமை யால், பஞ்சம் வருத்தப் பிச்சையேற்றுத் திரிவர்; சிரா மலைச் சிவனை வணங்கினால் முத்தி கிடைக்கும். அவனை வணங்காதார் பாவியராகும்: அவர் நகரத்தை அடை வர். அவர்களுக்காக அனுதாபப்படுகின்றது இச்செய்யுள்;

பாண்டி மண்டலத்துச் சாசனச் செய்யுள்கள் பாண்டிநாட்டிலும் புறக்கோட்டைச் சமஸ்தானத்திலும் கிடைத்துள்ளன. பாண்டியன் சோழனை வென்று அர சாண்டதைப் பழிப்பதுபோலப் புகழும் வஞ்சப் புகழ்ச்சி யணிச் செய்யுள்:-

---

30. Inscriptions of the Pudukottai State, No. 652.

பொன்னி வளநாடு பாணன் பெறப்புரந்தான்
சென்னி திருமார்பிற் சேல்தீட்டினான் - முன்னே
புரமெறிவார் மண்சுமக்கப் பூபாரங் காத்தான்
தரமறியான் மீனவர்கோன் தான்.

சோழனைத் தோற்கடித்த பாண்டியன் சோழநாட்டைப் பாணனுக்குக் கொடுத்தான். பாணன் சிறு பரிசிலுக்குரியவன். நாடாளத் தகுதியுடையவனல்லன்; சோழநாடு முழுவதையும் பெற்றுக்கொள்ள எவ்விதத் தகுதியும் அற்றவன். அது பாண்டியனுடைய தரமறியாத செய்கைகளுள் ஒன்று. சென்னி புலிமுத்திரையுடையவன். ஆனால் அவனுடைய மார்பிலே பாண்டியன் தன்னுடைய சேல் முத்திரையைப் பொறித்தான். இது சோழன் பாண்டியனுக்கும் பணிந்ததற்கு அடையாளம். ஆனால் வெளிப்பார்வைக்குத் தரமற்ற செய்கைபோலக் காணப்படுகின்றது. பாண்டியனுடைய குல முன்னோன் செய்தி ஒன்று இணைக்கப்படுகின்றது பாண்டியன் அரசாண்டபோது, சிவபெருமானை மண்சுமக்கச் செய்தான். பாண்டியனுக்குத் தரமறிந்து நடக்கத் தெரியாதென்று கூறுவதன் மூலம் பாண்டியன் பெருமை கூறப்படுகின்றது. பாண்டியனுடைய வெற்றியைக் கூறும் இன்னொரு செய்யுள்:—31

கன்னிவள நாடன் காவேரி நாடாளச்
சென்னி விழுந்தோடுஞ் சேவடிகள் - பொன் இறை
யெரிகாலுங் கான நடத்திச் சென்னியையும்
கரிகாலனுக்கிடவோ காண்.

---

31. Inscriptions of the Pudukkottai State, No 655.

சோழ மன்னர்கள் சிலர், கரிகாலன் என்னும் பெய ருடையவர்களாக இருந்தனர். கரிகாலர்களுள் முதலாம் கரிகாலனுக்கு அப்பெயர் காரணப் பெயராக வந்தது என ஒரு கதையுண்டு. கரிந்த காலையுடையவன் கரி காலன் எனப்படுகின்றது; இச்செய்யுளின்படி, பாண் டியன் சோழநாட்டைக் கைப்பற்றி ஆண்டு சோழனைத் துரத்தினன். சோழன் சுரத்தினூடாக ஓடினன். அத னால், அவனும் கரிந்த காலையுடையவனாக வந்துவிடு வான் எனப்படுகின்றது.

தென்காசி விசுவநாத சுவாமி கோவிற் சுவரிலுள்ள செய் யுள்களுள் ஒன்று:-32

ஏடியல் மாலையணிந் தாலும் வாடு மெனப்புலவோர்
பாடிய வீரவெண்பா மாலையைப் பொன்னின் பாண்டியன் போர்
தேடிய வேற்செழியன் குலசேகரத் தென்னனைப் போற்
சூடிய வேந்தருண்டோ வொரு வேந்தரைச் சொல்லுகிலே;

பதினாறும் நூற்றாண்டிலாண்ட தென்பாண்டி நாட்டுக் குலசேகர பாண்டியனைப் பற்றியது இச் செய்யுள். இச் சிற்றரசனுக்குரிய தனிப்பெருமை - வேறு மன்னர் எவ ருக்குமில்லாதது - இச் செய்யுளிற் கூறப்படுகின்றது; வாடாத பாமாலையைச் சூடினன் இவ்வேந்தன்; அப் பாமாலை வெண்பாவால் வீரத்தைப் பாடிய வீரவெண் பாமாலையாகும்.

---

32. Travancore Archaeological Series, Vol. I, p. 105.

அரிகேசரி பராக்கிரமபாண்டியன் என்ற சிற்றரசன் தென்காசி விசுவநாதர் கோயிலையும் கோபுரத்தையும் கட்டியதையும் அவனுடைய பிற சிறப்புக்களையும் அந்த கோயிலிலுள்ள பதினுன்கு செய்யுள்கள் எடுத்துக் கூறுகின்றன:-33

அவற்றுள் மாதிரிக்காகச் சில:-

சேலேறிய வயற் றென்காசி யாலயந் தெய்வச் செய
லாலே சமைத்த திங்கென் செயலல்ல வதனையின்ன
மேலே விரிவு செய்தே புரப்பாரடி வீழ்ந்தவர் தம்
பாலேவல் செய்து பணிவன் பராக்கிரம பாண்டியனே.
பூந்தண் பொழில்புடை சூழுந்தென் காசியைப் பூத
லத்தில்
தாங்கிளை யுடனே புரப்பார்கள் செந்தா மரையாள்
காந்தன் பராக்கிரமக் கைதவன் மான கவசன்
கொற்றுக
வேந்தன் பணிபவ ராகி யெந்நாளும் விளங்குவரே:

கோயிலைப் போற்றிப் பாதுகாப்பவர்களுக்கு மன்னன் தான் என்றும் அடிமை என்று கூறுகிறுன். இவனுடைய வீரத்தைப் பற்றிச் சில குறிப்புகள் மரபுத்தொடர்களாக வருகின்றன; இவனுடைய உடலழகை வியக்கும் 'வடிவெழுதொணுத பராக்கிரம மகிபன்' முதலிய குறிப்புகள் இடம்பெறுகின்றன: சமயப்பற்றையே புகழுக்கு வழியாக இம் மன்னன்கொண்டான். இவன் இறந்ததைப் பற்றிய பாட்டு இதற்குச் சான்று:-

---

33. Travancore Archaeological Series, Vol. I, p. 96.

கோதற்ற பத்தியறுபத்து மூவர்தங் கூட்டத்திலோ
தீதற்ற வெள்ளிச் சிலம்பகத்தோ செம்பொன்
னம்பலத்தோ
வேதத்திலோ சிவ லோகத்திலோ விசுவ நாதனிரு
பாதத்திலோ சென்று புக்கான் பராக்கிரம பாண்
டியனே]

தமிழ்நாட்டில் கொங்கு மண்டலத்தைச் சேர்ந்த சாசனச் செய்யுள்கள் கிடைக்கவில்லை. ஆனால் தமிழ் நாட்டைச் சுற்றிவர உள்ள கேரளம், மைசூர், ஆந்திரப் பிரதேசம், இலங்கை என்னும் நாடுகளிலிருந்து தமிழ்ச் சாசனச் செய்யுள்கள் கிடைத்துள்ளன. கேரளத்தைச் சேர்ந்த வாழ்விச்ச கோட்டம் பகவதி கோவிலின் முகமண்டபத்தில் உள்ள சாசனச் செய்யுள் ஒன்று, பதினேழாம் நூற்றாண்டில் இரவிவர்மன் காலத்தில் திருவிக்கிரமன் என்பவன் இக்கோவிலின் முகமண்டபத்தை ஒரே கல்லினால் கட்டினான் என்று கூறுகின்றது.[34]

ஆதியெழு நூற்றுடனதொண ணூற்றையா மாண்டி லற்பசியேழ்
முற்றசமய விட்டம் வெள்ளி
மாதிசைசே ரினனுளி லிரவி வேந்தன மனமகிழப் பகவதி
வாளவைத்த கோட்டத
தோதிலுறு மிறைவியிருப பதற்கு மேன்மை யுறும முகமண்டப
மாமதற்கு நாபபண்
மூதறிவா லொருகலின மண்டபஞ் செய்விததான் முல்லை
மங்கலன் திருவிக்கிரமன்தானே.

மைசூர் கோலார் தாலுகா விபூதிபுரத்திலுள்ள சாசனச் செய்யுளொன்று பன்னிரண்டாம் நூற்றாண்டில் குவளாலபுரத்து ஏரியின் கீழ் நிலதானம் செய்த பெரியான் என்பவனைப் புகழ்கிறது; மாதிரிக்காக அச்செய்யுளின் பகுதி:—

---

34. Travancore Archaeological Series Vol. VI, p. 171.

அருந்ததியே யனையாள் தந்தாய்
திருவயிற் றுதித்த துளங்குமணித் திருமார்பன்
செங்கமலப் புனல் புடைசூழ் செழுந்
தொண்டை வளநாடன் எங்கள் பெரியாற்
இளைய பெரியான் மற்றீண் டுலகில்[35] (10-14)

ஆந்திரப் பிரதேசத்துக் கோதாவரி மாவட்டத்துத் திராட்சாராமம் என்னும் ஊரிற் கிடைத்த செய்யுள்:-[36]

இம்பர் திகழ விளக்கிட்டான் இடர்க்கரம்பைச்
செம்பொனணி வீமேச்சரந் தன்னில்-உம்பர் தொழ
விண்ணுய்ய நின்றுடுவானுக்கு வேலைசூழ்
மண்ணுய்ய நின்றுடு வான்.

திராட்சராமத்தின் பெயர் இடர்க்கரம்பையெனத் தமிழாக்கப்பட்டிருக்கிறது; நின்றுடுவான் என்பவன் வீமேச்சரத்திலுள்ள இறைவனுக்கு நுந்தாவிளக்கு வைத்திருக்கிறன். இவங்கைக் கோலையிற் கண்டெடுக்கப்பட்ட ஒரு சாசனம் சிங்கையாரியச் சக்கரவர்த்தியைப் புகழ்கின்றது. சிங்கையாரியச் சக்கரவர்த்திகள் யாழ்ப்பாணத்தை ஆண்ட தமிழ் மன்னராவர். சேது என்பது இவர்களுடைய ஆணைப்பெயர்.

கங்கணம்வேற் கண்ணிணையாற் காட்டினார் காமர்வளைப்
பங்கயக்கை மேற்றிலதம் பாரித்தார் - பொங்கொலிநீர்
சிங்கைநக ராரியனைச் சேரா வனுரேசர்
தங்கள் மடமாதர் தாம்[37]

---

35. Epigraphia Carnatica Vol. X, Part II, Kolar Taluga. No. 131.

36. South Indian Inscriptions Vol. IV, p. 337.

37. ,, ,, ,, ,, ,, p. 496.

அநுரேசர் என்பவர் அநுராதபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சிங்கள மன்னர். இச் செய்யுள் தோன்றிய காலத்தில் அநுராதபுரத்தில் மன்னர் இருக்கவில்லை. கி. பி. பதினோராம் நூற்றாண்டு வரையில் அநுராதபுரம் தலைநகராக இருந்ததால், பிற்காலச் சிங்கள மன்னரும் அநுரேசர் எனப்பட்டிருக்கவேண்டும். சிங்கைநகர் மன்னனின் பகைவராகிய அநுரேசருடைய கவலை கூறப்படுகின்றது. இச் செய்யுளில் சிலேடைநயம் உண்டு. கங்கணம் -காப்பு. திலகம் - நெற்றிப்பொட்டு எனவும் கம், கணம் -கண்ணீர்த்திரள், தில, கம் - எள்நீர் எனவும் கொள்ளலாம்.

## 2. இலக்கிய வரலாற்றுக் குறிப்புகள்

சாசனங்களிலே, சிறந்த தமிழிலக்கியங்களை இயற்றிய புலவர்களைப் பற்றிய குறிப்புகள் உண்டு. இக்குறிப்புகள் தமிழ்ப் புலவர்கள் சிலர் வாழ்ந்த காலத்தை அறுதியிட உதவுகின்றன. தமிழிலக்கிய வரலாற்றுணர்ச்சிக்குச் சாசனங்களிலுள்ள குறிப்புகள் உரமிடுகின்றன. ஆனல், சாசனங்களில் இடம்பெறும் குறிப்புகள் யாவும் உண்மையையே கூறுகின்றன வெனக் கொள்ள முடியாது. உதாரணமாகச் சின்னமன்னூர்ச் சாசனத்தில்[38] 'மஹாபாரதந் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்' என்று வருகின்றது. பாண்டிய குலம் 'பொருவருஞ்சீர் அகத்தியனைப் புரோகிதனைப் பெற்றது' என்று கூறப்படுகின்றது. இச்செய்திகள் யாவும் உண்மையென்று இன்று கருதப்படவில்லை. மேலும், இச் செய்திகள் வேறு பௌராணிகக் கதைக் குறிப்புகளுடன்

---

38. South Indian Inscriptions, Vol. III, Part IV, p. 454.

கலத்தே காணப்படுகின்றன. இச் செய்திகள் யாவும் சமகாலச் செய்திகளாக இருந்திருந்தால், இவற்றில் உண்மையை எதிர்பார்க்கலாம். இவையாவும் பாண்டிய குலத்தின் பழம் பெருமைகளாகவே கூறப்பட்டுள்ளன. எனவே, இவை அக்கால நம்பிக்கைகள் என்று கூறலாம். ஆழ்வார்கள், நாயன்மார்கள் காலத்து அரசர்கள் சிலர், சாசனங்களை விட்டுச்சென்றுள்ள போதிலும் அவற்றுள் அந்த இறையனடியார்களைப் பற்றிய குறிப்புகளில்லை; ஆழ்வார்களுள் திருமங்கையாழ்வாரும் பெரியாழ்வாருமே தம்காலத்து அரசர்களைக் குறிப்பிடுகின்றார்கள். திருமங்கையாரது அட்டபுயகரம் பரமேச்சுர விண்ணகரப் பதிகத்திலே இரண்டாம் நந்திவர்ம பல்லவனும் திருநாங்கூர்ப் பதிகத்திலே பல்லவ பரமேஸ்வரவர்மனும் பாடப்பட்டுள்ளனர். பெரியாழ்வார் பாண்டியன் மாறவர்மனைப் பாடியுள்ளார். ஆழ்வார்களுடைய பெயர்கள் மக்களுக்கு இட்டு வழங்கியதற்குச் சாசனச் சான்றுகள் ஆதித்த சோழனது ஆட்சிக்கால முதற் காணப்படுவதால், ஆழ்வார்கள் பிரபாவம் நாட்டிற் பரவி வந்திருக்கிறதெனலாம். முதலாம் இராசேந்திரசோழன் காலமுதல், கோயில்களிலே திருவாய்மொழி விண்ணப்பஞ்செய்தற்கு ஒழுங்குகள் செய்யப்பட்டன. தேவாரம் பாடிய மூவர் காலத்தை நிறுவுவதற்குச் சாசனக் குறிப்புகள் காணப்படுகின்றன. திருஞானசம்பந்தர் காலத்துக் கூன் பாண்டியன் 'நெல்வேலி வென்ற நின்ற சீர் நெடுமாறன்'. வேள்விக்குடி, சின்னமன்னூர்ச் சாசனங்களிலிருந்து நெல்வேலிப் போர் வென்ற பாண்டியன் ஏழாம் நூற்றாண்டுக்குரியவன் எனத் தெரியவருகின்றது. வாதாபியை அழித்த பரஞ்சோதி என்னும் சிறுத்தொண்டர் முதலாம் நரசிம்மவர்மன் காலத்தவராகவேண்டும். சம்பந்தரும் சிறுத்தொண்டரும் ஒரே காலத்தவர்கள். முதலாம் நரசிம்மவர்மனின் தந்தையே முதலாம் மகேந்திரவர்மன். இவனைக் குணபரன் என்று திருச்சிராப்பள்ளிச் சாசனம்

குறிப்பிடும்: திருநாவுக்கரசர் காலப் பல்லவ மன்னன் குணதரன் என்று பெரியபுராணம் கூறும். திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தரிலும் சில ஆண்டுகள் மூத்தவர்: எனவே சாசனச் சான்றுகள் இவ்விருவர் காலத்தையும் வரையறுக்க உதவுகின்றன; சுந்தரமூர்த்தி சுவாமிகளாற் 'காடவர்கோன் கழற்சிங்கன்' எனப்பட்டவன் இராசசிம்மன் எனப்பட்ட இரண்டாம் நரசிம்மவர்மனாக இருக்கவேண்டும். முதலாம் இராசராசன் காலத்திலிருந்து தேவாரம் பாடிய மூவர் பற்றிய செய்திகள் சாசனங்களிற் பயின்று வந்துள்ளன. தேவாரப் பதிகங்களிற் சில, அவ்வக் கோயில்களிலே, அவை பாடிய நாயன்மார் காலங்களிலிருந்து ஓதப்பட்டு வந்திருக்கவேண்டும். ஒன்பதாம் பத்தாம் நூற்றாண்டுச் சாசனங்களிலே திருப்பதிகங்கள், சில கோவில்களில் ஓதப்பட்டு வந்தமைக்குச் சான்றுகளுண்டு.

சங்க காலத்துக்குப் பின்பு சோழப் பெருமன்னர் காலமே தமிழ் மொழி வளமுற்று ஓங்கிய காலமாகும். இவ்விரண்டு காலங்களுக்கும் இடைப்பட்ட காலத்திலே தமிழ் நாட்டின் பெரும்பகுதியைப் பல்லவர் ஆளத் தொடங்கினர். பல்லவமன்னர் தமிழினத்தவர் அல்லர் என்பது இன்று பொதுவாக ஏற்கப்படுகின்றது. பல்லவர்கால முடிவில் ஆண்ட பல்லவ மன்னர் தமிழில் ஈடுபாடுகாட்டித் தேர்ச்சியுற்றனர். தெள்ளாற்றுப் போர் வென்ற பல்லவனைப் புகழ்ந்து பாடுகின்றது அவன் காலத்திலெழுந்த பாரதவெண்பா. நந்திக்கலம்பகம் தெள்ளாற்றுப் போர் வென்றவன் நந்திவர்மன் என்று கூறி அவனுடைய தமிழறிவையும் தமிழ்ப் புலவரை ஆதரிக்கும் தன்மையையும் வியந்து கூறுகின்றது. ஒன்பதாம் நூற்றாண்டு நடுப்பகுதியில் வாழ்ந்த மூன்றாம் நந்திவர்மனே 'தெள்ளாறெறிந்து வென்று கொண்ட நந்திப் போத்தரையன்' என்று சாசனங்களிற் புகழப்

பட்டுள்ளான்: எனவே, இவ்விரு நூல்களும் மூன்றும் நந்திவர்மன் காலத்தவை என்று நிறுவப்படுகின்றன. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் ஆண்ட அபராசித வர்மன் என்ற கடைசிப் பல்லவமன்னன் தமிழ்ச் செய்யுள் செய்யும் ஆற்றல் பெற்றிருந்தான்; திருத்தணிகை வீரட்டானேசுவரம் கோயிலுக்குத் திருப்பணி செய்த நம்பி அப்பி என்பவனை இந்தப் பல்லவ மன்னன் பாடியுள்ளான். அந்தச் செய்யுள் கோயிற் சுவரிற் சாசனமாக வரையப்பட்டு இன்றுவரை பாதுகாக்கப்பட்டுள்ளது. எனவே, பல்லவர் கால இறுதியிலே பல்லவமன்னரும் தமிழ்மொழியில் ஆர்வமுடையோராயினர் என்ற வரலாற்றுண்மை தெரியவருகின்றது.

யாப்பருங்கலக்காரிகை இயற்றிய அமிதசாகரர் கி. பி பதினோராம் நூற்றாண்டைச் சேர்ந்தவரென்பதும் வீரசோழியம் இயற்றிய புத்தமித்திரனார் அதே நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்தவரென்பதும் கலிங்கத்துப்பரணி பாடிய சயங்கொண்டார் பதினொன்று பன்னிரண்டாம் நூற்றாண்டுகளைச் சேர்ந்தவரென்பதும் பெரிய புராணம் பாடிய சேக்கிழார் பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவரென்பதும் நன்னூல் ஆக்கிய பவணந்தி முனிவர் பதின்மூன்றும் நூற்றாண்டைச் சேர்ந்தவரென்பதும் சிவஞானபோதம் இயற்றிய மெய்கண்டதேவரும் அதே நூற்றாண்டினரென்பதும் சேனாவரையர், பரிமேலழகர் முதலியோரும் அதே நூற்றாண்டினரென்பதும் பெரும்பற்றப்புலியூர் நம்பி, இரட்டையர் முதலியோர் பதினான்காம் நூற்றாண்டினரென்பதும் அருணகிரிநாதர், காளமேகப்புலவர் முதலியோர் பதினைந்தாம் நூற்றாண்டினரென்பதும் வாமன முனிவர், அதிவீரராமபாண்டியன் முதலியோர் பதினாறும் நூற்றாண்டினரென்பதும் துறைமங்கலம் சிவப்பிரகாசர் பதினேழாம் நூற்றாண்டின

ரென்பதும் திருக்குற்ருலம் இராசப்பக்கவிராயர் பதி னெட்டாம் நூற்ருண்டினரென்பதும் சாசனச் சான்ருக ளாலேயே நிறுவப்படுகின்றன [39]

சாசனங்களிலிருந்து மட்டுமே அறியப்படும் தமிழ்ச்செய்யுள்கள், நூல்கள், புலவர்கள் பெயர்கள் உள: பெயர் தெரியாப் புலவர்கள் பாடிய செய்யுள்கள் சில. மெய்க்கீர்த்திகளைப் பாடிய புலவர் பெயர்கள் குறிப்பி டப்படவில்லை. வீரத்தையும் சமயத்தையும் பொருளாகக் கொண்ட செய்யுள்கள் சில, யாரால் இயற்றப்பட்டன என்பது தெரியப்படவில்லை. புலவர்கள் சிலரின் பெயர் கள் கிடைத்தபோதும் அவர்கள் காலத்தை வரையறுக் கத்தக்க பிற சான்ருகள் கிடைக்கவில்லை. சாசனங்களி லிருந்து கிடைக்கும் இலக்கியம் பற்றிய பிற குறிப்பு களையும் அரசர்களைப்பற்றிப் பாடியவை, சமயத்தைப் பற்றிப் பாடியவை என இருவகைப்படுத்தலாம். சிற்றரச ஞன பெரும்பிடுகு முத்தரையனைப் பாடிய பாச்சில் வேள்நம்பன், ஆசிரியர் அநிருத்தர், கோட்டாற்றிளம் பெருமாஞர், குவாவங்காஞ்சன் என்போர் பாடல்கள் ஒரு சாசனத்திற் கண்டெடுக்கப்பட்டன.[40] வேள்விக் குடிச் சாசனத்திலுள்ள தமிழ்ப் 'பிரசஸ்தி'யைப் பாடிய வன் ஏஞதி சாத்தஞ் சாத்தன் என்பது அச்சாசனத்தின் இறுதியிற் குறிக்கப்பட்டுள்ளது. சோழப்பெருமன்னர் காலம் காவியகாலம் என இலக்கிய வரலாற்றிற் குறிப் பிடப்படும்போது சோழப் பெருமன்னருள் எவர் மேலும் காவியம் பாடப்படவில்லையா என்ற வினு எழுவது இயல்பு. சோழப்பெருமன்னருள்ளே தன்னிகரற்றவஞகக் கணிக்கப்படும் முதலாம் இராசராசனைப்பற்றி நாரா

---

39. பேராசிரியர் மு. இராகவையங்கார் - சாஸனத் தமிழ்க் கவி சரிதம்.

40. செந்தமிழ் தொகுதி 6, பக்கம் 6.

யனை பட்டாதித்தன் என்பவன் ஸ்ரீ ராஜராஜ விஜயம் என்ற காவியத்தை இயற்றினன் என்பது சாசனத்திலிருந்தே தெரியவருகின்றது; முதலாம் இராசேந்திரனுடைய மக்களுள் ஒருவனைப் பற்றிப் பூங்கோயில் நம்பி பாடிய வீரணுக்கவிஜயம் என்ற நூலும் ஒரு காவியமாகவே இருந்திருக்கவேண்டும். நாடகத் தமிழைப்பற்றிய பிரஸ்தாபம் தமிழில் நெடுங்காலமாக இருந்துவருகிறபோதிலும் நாயக்கர் காலப் பிற்பகுதியிலேயே தமிழில் நாடக இலக்கியங்கள் தோன்றத் தொடங்கின என்ற கூற்றை மறுத்துச் சோழப்பெருமன்னர் காலத்திலும் தமிழ் நாடகங்கள் இருந்தன என்று கூறுவதற்குச் சாசனச் சான்றுகளே துணையாக அமைகின்றன. முதலாம் இராசராசனைப் பற்றி இராஜராஜேசுவர நாடகம் தோன்றியிருக்கிறது.[41] வீரைத்தலைவன் பரசமயகோளரி மாமுனி என்பவர் பூம்புலியூர் நாடகத்தைப் பன்னிரண்டாம் நூற்றாண்டில் இயற்றியிருக்கிறார். மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்து அவன் தலைமையதிகாரியாகிய கண்டன் உதயஞ் செய்தான் காங்கேயன் என்பவனைப் பாராட்டிச் சிறுபெருச்சியூர்க் கொடிக் கொண்டான் பெரியான் ஆதிச்சதேவன் பிள்ளைக்கவிப் பிரபந்தஞ் செய்தான்.[42] பதினான்காம் நூற்றாண்டிலே கப்பலூரிலிருந்த கருமாணிக்கன் என்ற பாண்டியனுடைய அதிகாரியைப் பாராட்டிய கப்பற்கோவை அல்லது கருமாணிக்கன்கோவை எழுந்தது; காசிக்கலியன் கவிராயன் பதினாறு பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்த வரதுங்க

---

41. South Indian Inscriptions Vol. II, p. 306.

42. ரி வி. சதாசிவபண்டாரத்தார் தமிழ் இலக்கிய வரலாறு, 13, 14, 15-ம் நூற்றாண்டுகள், 1955 என்ற நூலிலும் மயிலை. சீனி. வேங்கடசாமி மறைந்துபோன தமிழ் நூல்கள், 1959 என்ற நூலிலும் இதுபோன்ற சில நூல்களைச் சாசனச் சான்றுகளிலிருந்து காட்டியுள்ளனர்.

ராமபாண்டியன் மேல் முடி சூட்டுமங்கலப் பாடல்கள் பாடியுள்ளான். அனதாரியப்பன் என்ற சமகாலப் புலவரின் கற்பனை பௌராணிக உலகிற்குப் போகிறது. பாண்டிய நாட்டிலே தடாதகைப் பிராட்டி ஆட்சியைப் பற்றி எழுந்த அவரது நூல் சுந்தரபாண்டியமாகும்.

சமயத் தொடர்பான செய்யுள் செய்த புலவர் சிலர் பெயரும் சாசனங்களிலிருந்து தெரியவருகின்றது: தம்பிரான் றோழர் மானக்கஞ்சாறர் என்ற ஒன்பதாம் நூற்றாண்டுப் புலவர் திருமுட்டத் திருப்பதிகம் பாடியுள்ளார்; திருப்பதிகம் என்ற பெயர் திருமுறைகளிலுள்ள பதிகங்களுக்கு மட்டும் வழங்கவில்லை என்பதற்கு இது சான்று. விரத்தலைவன் பரசமயகோளரிமாமுனி என்பவர் அஷ்டதச புராணம், கன்னிவன புராணம் என்பனவற்றையும், 11, 12 ம் நூற்றாண்டைச் சேர்ந்த நெற்குன்றங்கிழார் களப்பாளராசர் என்பவர் புகலூரந்தாதியையும் பதின்மூன்றும் நூற்றாண்டைச் சேர்ந்த அருணிலைவிசாகன் என்பார் தமிழ்ப்பாரதம் ஒன்றனையும் அதே நூற்றாண்டைச் சேர்ந்த திருவம்பலமுடையார் மறைஞானசம்பந்தர் ஓங்குகோயில் புராணம் என்பதனையும் பதினாறும் நூற்றாண்டைச் சேர்ந்த திருமலை நாதன் சந்திரசேகரர் என்பவர் இறைவளரசூர்ப்புராணம் என்பதையும் உத்தண்ட வேலாயுதகவி என்பவர் திருவதிகைக்கலம்பகம் என்பதையும் இயற்றியுள்ளார்கள்.[3]

### 3. தமிழ் உரைநடை

தமிழ் உரைநடை வரலாற்றை அறிந்துகொள்வதற்கும் சாசனம் மிக முக்கியமான மூலாதாரமாகும்: பேராசிரியர் செல்வநாயகம் எழுதிய 'தமிழுரை நடை

43. பேராசிரியர் மு. இராகவையங்கார் - சாசனத் தமிழ் கவிசரிதம்

வரலாறு (1957) என்ற நூல் இந்த முக்கியத்துவத்தை ஓரளவு எடுத்துக்காட்டுகின்றது. தமிழுரைநடை பற்றி யெழுந்த பிறநூல்களும் கட்டுரைகளும் சாசனத்தின் முக்கியத்துவத்தை அந்த அளவுக்குத் தானும் எடுத்துக் காட்டவில்லை; இலக்கண நூலாகிய தொல்காப்பியத் தில் உரைநடைக்குச் சான்று கண்டுபிடித்து உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுளாகிய சிலப்பதிகாரத்தில் உள்ள உரையை உதாரணம் காட்டி, இறையனாரகப் பொருளுரையையும் உரையாசிரியர்கள் இயற்றிய உரை யையும் விரிவாக ஆராய்ந்து இக்கால உரைநடைபற்றி மேலைநாட்டுச் செல்வாக்கை விளக்குவனவே பெரும்பா லான ஆராய்ச்சிகளின் பொருளடக்கமாகும்.[44] ஒரு மொழியில் இலக்கியம் தோன்றும்போது முதலிற் செய் யுள் வடிவத்திலும் பின்பு உரைநடை வடிவத்திலும் தோன்றுகின்றதெனப்படுகின்றது. இலக்கியம் உரை நடையில் அமைவது செய்யுள் வடிவத்தில் அமைவதி லும் பிந்தியதாகலாம். ஆனால் வசனநடை செய்யுள் நடையிலும் பிந்தியதென்பதை நிரூபிக்கவியலாது. பல் லவர் காலத்துக்கு முந்திய தமிழ்ச்சாசனங்கள் அறியப் படுவதற்கு முன்னர், தமிழிலும் செய்யுள் நடையே முந்தியதென்றும் செய்யுளின் ஒரு வகையாகவே உரை தோன்றிவளர்ந்ததென்றும் தொல்காப்பியம், சிலப்பதி காரம் என்பவற்றிற் காணப்படும் குறிப்புகளைக்கொண்டு வற்புறுத்தப்பட்டுவந்தது.

தொல்காப்பியம், சிலப்பதிகாரம் என்பனவற் றுக்குக் காலத்தால் முற்பட்ட தமிழ்நாட்டுக் குகைச் சாசனங்கள் வசனங்களாக அமைந்துள்ளன. தொல்

44. அ. மு. பரமசிவானந்தம் - தமிழ் உரைநடை (1959) கல்வெட்டுக களைப்பற்றி இவர் கூறியவற்றுட் பெரும்பகுதி உரைநடைபற்றிய ஆராய்ச்சிக்கு வேண்டாதது. சிறுபகுதி சாசன உரைநடையில் இவ ருக்குள்ள வெறுப்பைப் புலப்படுத்துவது.

காப்பியம் நான்கு உரைநடைவகைகளைச் செய்யுளியலிற் குறிப்பிடுகின்றது. இடைக்கால உரையாசிரியர்களாகிய இளம்பூரணர், நச்சினார்க்கினியர் என்போர் இவ்வுரை நடைவகைகளை விளக்க முயன்றுள்ளனர். தொல்காப்பியர் காலத்திற்கு மிகவும் பிந்திய உரைநடையிலக்கியங்களே இளம்பூரணர், நச்சினார்க்கினியர் என்போர் காலத்திற் காணப்பட்டமையால் இவ்வுரையாசிரியர்கள் அவ்விலக்கியங்களை உதாரணங்களாகக் கொண்டே உரை நடை வகைகளை விளக்கினர்: எனவே உரையாசிரியர்களுடைய விளக்கங்கள் தொல்காப்பியர் கருதியவற்றைக் கூறுகின்றனவா என்பது பிரச்னையாகின்றது:

குகைச்சாசனங்களிலுள்ள உரைநடை தொல்காப்பியத்திற் குறிப்பிடப்பட்டுள்ளதாவென்பதை நிச்சயமாகத் தீர்மானிக்கமுடியவில்லை. தொல்காப்பியத்திற் குறிப்பிடப்படும் 'பாவின்றெழுந்த கிளவி' யென்பது பாக்களோடு தொடர்பற்றதாய்த் தோன்றிய சொற்களாலான உரையைக் குறிப்பதாக வேண்டும். குகைச் சாசனங்களிற் காணப்படும் வசனங்கள் இவ்வகை உரையைச் சேர்ந்தன. தொல்காப்பியம் செய்யுளியலில் உரை ஒருவகைச் செய்யுளாகக் கூறப்பட்டுள்ளது. அப்படியானால், செய்யுள் என்றால் என்ன என்ற வினா எழுகிறது. செய்யப்படுவதே செய்யுள் என்றால் வசனம் செய்யுளில் அடங்கும். தொல்காப்பியம் பாயிரத்தில் வழக்கும் செய்யுளும் வேறாகக் கூறப்பட்டிருத்தலாலும் இலக்கணம் பிழையாமற் கூறப்படுவதும் ஒரு பொருளைக் குறித்துச் செய்யப்படுவதுமாக அமைவதே செய்யுள் என இளம்பூரணர் செய்யுளுக்குக் குறுகியபொருள் கூறியிருத்தலாலும் செய்யுள் என்பதில் குகைச்சாசன வசனங்கள் அமையாவென்று வாதிக்கலாம். குகைச் சாசனங்களிற் சிறு சிறு வாக்கியங்களே அமைந்துள்ளன. சி. வி மகாலிங்கம் அவர்கள் வாசித்தபடி,

சந்தரிதன் கொடுபிதோன்———மாங்குளச்சாசனம்.
எடுயூர் அரிதின் பாளி———கருங்காளக்குடிச்சாசனம்;
வேண்கோசிபன் குடுபித கல்கஞ்சணம்——மருகால்தலைச்
சாசனம்,
மத்திரைய்ப் பொன்குலவன் அதன் அதன்————அழகர்
மலைச்சாசனம்.

விளக்கம்:- சந்தன் அரிதன்—சந்தரிதன்; சந்தனுடைய மகன் அரிதன்; கொடுபிதோன்-கொடுப்பித்தோன்; எடு யூர் - எட்டியூர், பாளி - படுக்கை; குடுபித – குடுப்பித்த கம் சணம் - கஞ்சணம்; சணம் - படுக்கை; மத்திரைய் - மதுரை. குலவன் - வணிகன்; அதன் - ஆதன்.

கி. பி. இரண்டாம் நூற்றுண்டைச் சேர்ந்ததாகக் கணிக் சப்படும் அரிச்சலூர்க் கல்வெட்டு, இரா; நாகசாமி அவர் கள் வாசித்தபடி,

எழுத்துப் புணருத்தான் மணிய்வண்ணக்கன் தேவன் சாத்தன்;

கி. பி: நான்காம் நூற்றுண்டைச் சேர்ந்ததாகக் கணிக்கப்படும் திருநாதர் குன்றுச் சாசனத்து வாக்கியம்:-

ஐம்பத்தெழனசனந் நோற்ற சந்திரநந்தி ஆசிரிகர் நிசிதிகை;

விளக்கம்:- ஆசிரிகர் - ஆசிரியர். நிசிதிகை - சமாதி. அனசனம் - உண்ணாவிரதம்.

குகைச்சாசனங்கள் அறிஞர்கள் யாவரும் உடன் படத்தக்க வகையிலே திருப்திகரமாக வாசிக்கப்பட்டாலும் வசனத்தின் அளவும் பொதுவியல்பும் மாற இட

மில்லை. எனவே, மேலே காட்டப்பட்ட சாசன வசனங்களை ஆராயலாம். இந்த வசனங்கள் பேச்சுவழக்கை ஒட்டியனவாம். மக்களின் பேச்சுவழக்கே இயற்கையான மொழியாகும். எழுத்து வழக்குக்கும் பேச்சுவழக்குக்கும் இடையிலான வேறுபாட்டிற் பெரும்பகுதி காலப்போக்கி லேற்பட்ட வளர்ச்சியாகும்; பேச்சுவழக்கே ஒரு காலத்தில் இலக்கிய வழக்காக உருப்பெறுகின்றது; இலக்கிய வழக்குக்கு இலக்கணம் வகுக்கப்படுகின்றது; கற்றவர் மரபு தழுவி எழுதிவந்திருக்கின்றனர்; பொதுமக்கள் வழக்கு, சமகாலப் பேச்சுவழக்கு என்பவற்றிலில்லாத வழக்காறுகளைக் கையாள்வது கற்றமைக்கு அடையாள மாகவும் கொள்ளப்படுகின்றது; தொல்காப்பியர் 'வழக்கும் செய்யுளும்' ஆராய்ந்து நூல் இயற்றியுள்ளார். இத் தொடரில் வழக்கு பேச்சுவழக்கையும் செய்யுள் எழுத்து வழக்கையும் குறிக்கின்றன; செய்யுள் என்ற சொல்லும் செயற்கை என்ற சொல்லும் பொருளில் நெருங்கிய தொடர்புடையன. பழைய காலத்திலும் இடைக்காலத்திலும் நூல்களில் இடம்பெற்ற உரைகள் செயற்கைத் தன்மை வாய்ந்தன சாசனங்களின் வாசகங்கள் கற்றவர்களால் மட்டும் வரையப்படவில்லை. கற்றவர்கள் மட்டுமின்றி மற்றவர்களும் விளங்கிக்கொள்ளவேண்டு மென்ற நோக்கம் சாசனவாசகங்களை வரைந்தவர்களுக்கு இருந்திருக்கிறது அதனால், சாசனமொழிவழக்குப் பேச்சு வழக்கிலிருந்து அதிக தூரம் விலகிச் செல்லவில்லை;

பல்லவர் காலத்திலெழுந்த களவியலுரையில் இருவகை நடைகள் அமைந்துள்ளன; அவற்றில் ஒன்று சிலப்பதிகாரப் பாட்டுகளிடையே காணப்பட்ட உரையி லிருந்து வளர்ந்த கவிதைப் பண்புள்ள நடை; மற்றது. ஆசிரியர்-மாணாக்கருக்கிடையே நிகழும் கலந்துரையாடல் போன்ற வினாவிடை நடை; இந்த நடைகள் கற்றவர் களாற் போற்றப்பட்ட நடைகள் என்பதுதெளிவு. முந்திய

நடை உணர்ச்சியைத் தூண்டும் நோக்கமுள்ள போதிலும் பிந்தியநடை பொருளை விளக்க வேண்டியபோதிலும் சிறப்பாக அமைபவை. சாசனங்களில் இந்த நடைகள் வேண்டியிருக்கவில்லை; செய்யுளோசையில் அமைக்கப்பட்ட சாசனப்பகுதிகளும் செய்யுளோசை தழுவிய உரைநடையில் அமைக்கப்பட்ட சாசனப் பகுதிகளும் சில உள. எனினும் பொதுவாக நோக்கும்போது சாசனங்களிற் கையாளப்பட்ட நடை பொதுமக்கள் பேச்சு வழக்கை ஆதாரமாகக் கொண்டெழுந்ததெனக் கூறலாம்;

இடைக்காலச் சாசனங்கள் நீண்ட வாக்கியங்களைக் கொண்டமைந்தன வெனப்படுகின்றது நீண்ட வாக்கியங்கள் பொதுமக்கள் பேச்சுவழக்கில் இயற்கை நடையாக அமையுமா என்ற ஐயம் எழுகின்றது. சாசனம் எடுத்துக்கொண்ட விடயத்தைத் தொடர்புபடுத்தி ஒரே வாக்கியமாக அமைக்கும் இயல்பு சாசனங்கள் பலவற்றிலே காணப்படுகின்றது மங்கலவார்த்தையும் அரசனுடைய ஆட்சியாண்டும் ஓம்படைக்கிளவியும் தவிர இவற்றுக்கிடையே அமைந்துள்ள பகுதி ஒரே வாக்கியம் என்றுகொள்ளத் தக்க வகையிலான சாசனங்கள் பலஉள. ஒரு நீண்ட வாக்கியம் தனித் தொடர்கள் பலவற்றைக் கொண்டதாக அமைகின்றது. மேலும் அது ஆற்றொழுக்காகப் பொருள்கொள்ளவும் இடம் தருகின்றது; நிறுத்தக் குறிகள், பந்தியமைப்பு என்பன சாசனத்தமிழில் நன்கு இடம்பெறவில்லை. இதனால் வாக்கியத்தைப் பிரித்தறிவது சிக்கலாக இருக்கிறது. ஐரோப்பிய மொழிகளின் செல்வாக்கினாலேயே பொருட்டெளிவுக்குப் பெரிதும் வேண்டப்படும் நிறுத்தக்குறிகள் பந்தியமைப்பு என்பன தமிழ்மொழியில் வழங்கத் தொடங்கின: குகைச் சாசனங்களிற் காணப்படும் வாக்கியங்களின் அமைப்பையும் இக்காலத்தவர் சிலர் எழுதும் வாக்கியங்கள் சிலவற்றின் அமைப்பையும் சாசனத்திற் காணப்படும்

நீண்ட வாக்கியத்தோடு ஒப்பிடும்போது, அந்நீண்ட வாக்கிம் சிறு சிறு வாக்கியங்கள் பலவற்றை உள்ளடக்கியதென்று கூறலாம்;

பல்லவர் காலத்துக் கம்பவர்மனுடைய காலச் சாசனம்:-
ஸ்வஸ்தி ஸ்ரீ/கம்பவர்ம்மற்கு யாண்டு பத்தாவது/உட்கர் சபையார்க்கு சடையன் குடுத்த நெல் நானூற்றுக்காடி/ நெல்லால் பொலியூட்டு ஆண்டுவரை நூற்றுக்காடிநெல்/ பலிசையால் நிசதி இருவர் பிராமணரை நிலமும் நாயறும் உள்ள அளவும் ஊட்டுவோமானோம் உட்கர்சபையோம்/ இவ்விருந்தூட்டு முட்டில் கங்கையிடைக் குமரி இடை எழுநூற்றுக்காதத் துள்ளும் செய்தார் செய்த பாவம் படுவோமானோம் சபையோம்/

சிறுசிறு வாக்கியங்களாகப் பிரிப்பதற்கு இடந் தராத நீண்ட வாக்கியமும் பல்லவர்காலச் சாசனங்களில் உண்டு. உதாரணமாக, மூன்றும் நந்திவர்மன் காலத்துச் சாசனம் ஒன்று:—

ஸ்வஸ்தி ஸ்ரீ/நந்திவர்ம்மற்கு யாண்டு இருபத்திரண்டாவது/ திருவைக்காவுடைய மகாதேவற்கு திருநொந்தா விளக்கும் அமுது படிக்கும் உபையம் வைய்க்க சந்திப் பெலியார் திரிபுவனமாதேவிச்சருப்பேதி மங்கலத்து சபையார் பக்கல் பொன்குடுத்துப் பொலிகூலிக்குச் செலவாக காசுகொள்ள ஊற்கீழ் இறையிலியாக மணலிடில்வேலியாகக் கொண்டுவிட்ட வண்ணக்கவிளாகம் நிலம் $1\frac{1}{2}$/ இந்நிலம் ஒன்றரையும் இறக்காதான் திருவடி இரண்டும் என் தலைமேலின/ இது இறக்குவான் தங்கள் அம்மைக்குந்தானே மிணளன்/

---

45. South Indian Inscriptions, Vol. III, p. 15.

முதலாம் பராந்தக சோழன் காலத்துச் சிறு சாசன மொன்றிலுள்ள வாக்கியம் சிறுசிறு வாக்கியங்களாகக் கொள்ளப்பட இடந்தருகின்றது:-

ஸ்வஸ்திஸ்ரீ/ மதிரைகொண்ட கோப்பரகேசரி பன்மர்க்கு யாண்டு 12ஆவது/ தஞ்சாவூர்க் கூற்றத்து நாட்டமங் கலத்து மன்றுடி பவதாயன் வைத்த பகல் விளக்கு ஒன் றினுல் நெய் ஆழாக்கு/ விட்ட சாவாமூவாப் பேராடு 45/ சந்திராதித்தவல்/ பன்மாகேசுவரரக்ஷ.

சோழப்பெருமன்னர் காலத்திலே சாசனங்கள் பெருந் தொகையாகத் தோன்றின; அவற்றுட் பெரும்பாலன நீண்ட சாசனங்களாகவும் அமைந்துள்ளன; நீண்ட சாசனங்களில் மிக நீண்ட வாக்கியங்கள் காணப்படு கின்றன. நூற்றுக்கணக்கான அடிகளைக் கொண்ட மிகநீண்ட வாக்கியம் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் முதலியவற்றிற் காணப்படுகின்றது; சாசனங்கள் சில வற்றிற் காணப்படும் மிகநீண்ட வாக்கியம் சிறுசிறு வாக்கியங்களாகப் பிரிப்பதற்கு இயலாதது. வேறு சில சாசனங்கள் மன்னரும் பிறரும் செய்த தானங்களின் நீண்ட பட்டியலைத் தருவன;

சாசனங்களில் நீண்ட வாக்கியங்கள் காணப்படு வது உண்மை. ஆனுல் நீண்ட வாக்கியங்களையுடைமை சாசன உரைநடையின் பண்புகளிலொன்று என்று கூறமுடி யாது. சாசன உரைநடையிலே சிறுவாக்கியங்கள், நீண்ட வாக்கியங்கள், மிகநீண்டவாக்கியங்கள் என்பன உள. சங்ககால இலக்கியத்திலே சிறுசெய்யுள், நீண்ட

46. South Indian Inscriptions, Vol. XII, p. 24.
47. South Indian Inscriptions, Vol. V, p. 2761

செய்யுள், மிகநீண்ட செய்யுள் என்பன உள; நீண்ட செய்யுள்களையுடைமை சங்ககால இலக்கியத்தின் பண்பு என்றுகூற முடியாததுபோல நீண்டவாக்கியத்தையுடைமை சாசன உரைநடையின் பண்பு என்றுகூற முடியாது;

சோழப் பெருமன்னர் காலத்திலும் நாயக்கர் கால முற்பகுதியிலுமே இளம்பூரணர், பேராசிரியர், பரிமேலழகர், அடியார்க்குநல்லார், நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்கள் வாழ்ந்தனர். இவர்களுள் ஒவ்வொருவரும் கையாண்ட நடைக்குத் தனித்தன்மை இருந்தபோதிலும் இவர்கள் அனைவரும் கைக்கொண்ட உரைநடைக்குப் பொதுத்தன்மை மிகுதியாகக் காணப்பட்டது. இவர்கள் கற்றோரை மனதில்வைத்து வரைந்த ஒருவகைச் செயற்கை நடையே அப்பொதுத் தன்மையென்று கூறலாம்; சாசனங்கள் பேச்சுவழக்கையொட்டிய இயற்கை நடையையே கொண்டுள்ளன;

தமிழுரைநடைவரலாற்றில் ஐரோப்பியர் ஆற்றிய பணியைக்குறைத்து மதிப்பிடுவது தக்கதன்றாயினும் அவர்களுக்கு உரியதல்லாத பெருமையை அவர்களுக்கு அளிப்பதும் அத்தகையதே; தத்துவபோதக சுவாமிகள் வீரமாமுனிவர், சீகன் பால்குஐயர் எஸ்போர் தமிழுரை நடைவளர்ச்சிக்கு ஆற்றிய பணியை இலக்கிய இலக்கண உரைகளின் பகைப்புலத்தில் மட்டுமல்லாது சாசன உரைநடையின் பகைப்புலத்திலும் வைத்து நோக்கவேண்டும்; சாசன உரைநடை மரபு ஐரோப்பியர் காலத்திலும் வழக்கிலிருந்திருக்கிறது. எனவே அந்த உரைநடையை அறிந்துகொள்வதற்கு ஐரோப்பியர்கள் சாசனங்களைக் கற்கவேண்டிய அவசியம் இருக்கவில்லை. சூத்திரங்களையும் செய்யுள்களையும் விளக்கும் வெறும் உரைகளாக அமையாத தனிவசன நூல்களை முதலிலே தோற்று

வித்தவர்கள் ஐரோப்பியர்களே; சாசனங்களில் மட்டும் வழங்கியதாக இன்று தெரியவருகின்ற இயற்கை நடையை நூல் வழக்குக் கொண்டுவந்தவர்களும் அவர்களே. நூல்களைக் கற்பது சுலபம், நூல்களுக்கு எழுந்த உரைகளை விளங்கிக்கொள்வது வில்லங்கம் என்ற நிலை அவர்களாலேயே மாறியது.

தத்துவபோதக சுவாமிகளுடைய வசனநடையின் பண்புகளான - பேச்சுவழக்கிற் காணப்படும் சொற்றொடர்கள், இலக்கண அமைதிகள், பெருந்தொகையான வடசொற்கள், நீண்ட வாக்கியம் என்பன, அவர் காலத்திலும் அவர்காலத்திற்குச் சிறிது முன்பும் தோன்றிய சாசனங்களிலே காணப்படுகின்றன. வீரமாமுனிவர் பேச்சுவழக்கிலுள்ள சொற்கள், சொற்றொடர்கள் என்பவற்றோடு ஓசையையும் கையாண்டதை அவருடைய பரமார்த்த குருவின் கதையென்ற நூலிலே காணலாம். எனினும் வீரமாமுனிவருடைய நடையைப் பொதுவாக நோக்கும்போது சிறுசிறு வாக்கியங்கள் அமைந்திருப்பது உரைநடை வளர்ச்சியிலே குறிப்பிடக்கூடிய ஓர் அமிசமாகும்; தமிழ் மொழியைக் கற்றுத்துறைபோகிய வீரமாமுனிவர் இலக்கிய வழக்குக்குரிய இலக்கண அமைதியையும் அனுசரிக்க முயன்றுள்ளார். சீகன்பால்குஐயர் கையாண்ட உரைநடைக்கும் சாசன உரைநடைக்கும் அதிக பேதமில்லை. பேச்சு வழக்குக்குரிய இலக்கண அமைதியையே இவர் பின்பற்றியதனுல் வீரமாமுனிவர் இவருடைய வசனநடையை 'வழுக்கள் நிறைந்த நடை' யெனக்கண்டித்துள்ளார். இந்த ஐரோப்பியர்கள் கையாண்ட வசனநடையிலிருந்தே இன்றைய வசனநடை வளர்ந்த தென்பதனைப் பற்றிக் கருத்து வேறுபாடு இல்லை;

# சாசனத்துத் தமிழ் வழக்காறுகள்

எழுத்துத்தமிழ் வழக்காறுகளில் ஒரு பகுதியை இலக்கியத் தமிழ் வழக்காறுகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதற்காகச் சாசனத்தமிழ் வழக்காறுகள் என்னும் தொடர் வழங்கப்படுகின்றது தமிழ்மொழி ஒரே மொழியாக இருப்பதால், பேச்சுவழக்குத் தமிழுக்கும் இலக்கியவழக்குத் தமிழுக்கும் ஒற்றுமைகள் இருப்பது போல, சாசன வழக்குத் தமிழுக்கும் இலக்கிய வழக்குத் தமிழுக்கும் ஒற்றுமைகள் உள. தமிழ் இலக்கியத்துக்கு எவ்வளவு தொன்மையுண்டோ, தமிழ்ச் சாசனத்துக்கும் அவ்வளவு தொன்மையுண்டு. மிகப்பழைய தமிழ்ச் சாசனங்களாகிய பாண்டிநாட்டுக் குகைச்சாசனங்கள் இன்னும் திருப்திகரமாக வாசிக்கப்படவில்லை. அக்குகைச் சாசனங்களின் காலத்துக்கும் கி. பி. ஏழாம் நூற்றாண்டுக்கும் இடையிலே தோன்றிய தமிழ்ச்சாசனங்கள் மிகச் சிலவே. கி. பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து கடந்த நூற்றாண்டு வரையிலே தோன்றிய சாசனங்களிற் காணப்படும் வழக்காறுகள் சில, இலக்கிய வழக்கில் அனேகமாக இடம்பெறாதவை என்று கூறத்தக்கவையே இக்கட்டுரையில் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன:

சாசன வழக்குப் பேச்சு வழக்கை ஒட்டி இயல்வது. அண்மைக்காலம் வரையிலான இலக்கிய முயற்சிகளிலே பேச்சுத் தமிழ் வழக்காறுகள் அருகியே இடம்

பெற்றுள்ளன. இலக்கிய வழக்கிலே பழைமை போற்றும் பண்பு அதீத முக்கியத்துவம் வகித்து வந்தது. எனவே தமிழ் மொழியின் உண்மையான வரலாற்றை உணர்ந்து கொள்ளச் சாசனத்தமிழ் பயன்படுகின்றது. இன்றைய பேச்சுத்தமிழ் வழக்காறுகள் சில, மிக நீண்டகால வரலாறுடையன என்பது சாசனத் தமிழிலிருந்து புலப்படுகின்றது.

மொழியில் நிகழும் ஒலிமாற்றம் மொழியாராய்ச்சியில் முக்கியத்துவம் பெறுகின்றது. ஒலிமாற்றம் தமிழ்ச் சொற்களிலும் காணப்படும்; பிறமொழிச் சொற்களிலும் காணப்படும். சாசனங்களில் எழுத்துப்பிழைகள் சில, இடம்பெறுவதுண்டு. எழுத்துப் பிழை எது, மாறி ஒலிக்கும் இடம் எது என்பன, சில இடங்களிலே தெளிவாகத் தெரியமாட்டா. எழுத்தொலிமாற்றங்கள் ஒழுங்கு முறைகளைத் தெளிவாக வகுத்துக்கொண்டால், ஒலி மாற்றத்தையும் எழுத்துப் பிழையையும் பிரித்துக்காணலாம். மேலும் இக்காலப்பேச்சிற் காணப்படும் வழக்காறுகள் சாசனத்திற் காணப்பட்டால், அவை ஒலிமாற்றங்களே எனவும் பிழைகளல்ல வெனவும் முடிவுசெய்யலாம். தமிழ்ச்சொற்களின் ஒலி மாற்றங்களை ஆராயும்போது இன்னொரு பிரச்சினை தோன்றுகின்றது. ஒலி வேறுபட்ட இரண்டு வடிவங்களில் முந்தியது எது, பிந்தியது எது என்பன அவை. இலக்கிய வழக்கு முந்தியது, பேச்சு வழக்கு அதன் திரிபு என்பதை இன்றைய மொழியறிஞர் ஏற்பதில்லை. ஒரு சாராரின் பேச்சு வழக்கு அல்லது பேச்சுவழக்கின் திருந்திய வடிவமே இலக்கிய வழக்காக வந்திருக்கவேண்டும் என்று இன்று கருதப்படுவதால், எந்த வடிவம் முந்தியது என அறிவியல் முறையிற் கூறமுடியாதுள்ளது. எனினும் இக்கட்டுரையில், எழுதும் முறையைச் சுலபமாக்குவதற்காக இலக்கிய

வழக்கே பேச்சு வழக்கிலே திரிபுகள் பெற்றது என்று கருதத் தக்கமுறையிலே, ஒலி மாற்றங்கள் கூறப்படுகின் றன:

உயிர் எழுத்துக்கள் :

*(1) ஓர் ஒலி இன்னோர் ஒலியாக மாறுதல்:*

*அ - இ:* *மடவளாகம்-மடை விளாகம் (கோவிலைச் சூழ்ந் துள்ளதும் கோயில் பரிவாரத்தார் குடியிருப் பதுமான இடம்)*
*புதியது - புதியிது (அறுவடையானதும் புதிய நெல்லைக் கடவுளுக்குப் படைப்பது)*
*மலாடு - மிலாடு (மலையமான் நாடு)*
*நவரை - நவிரை (ஆடிமாதத்தில் அறுவடை யாகும் ஒருவகை நெல்)*

*அ - எ:* *சண்டை - செண்டை (வாத்தியவகை)*

*அ - ஐ:* *மடவளாகம் - மடை விளாகம்.*

*தஞ்சை - தைஞ்சை (தஞ்சாவூர்)*
*கச்சோலம் - கைச்சோலம் (பாத்திரவகை)*
*கழஞ்சு - கழைஞ்சு (ஓர் அளவு)*

*ஆ - ஐ:* *வெட்டி முட்டாவாள் - வெட்டி முட்டையாள் (கிராமத்தின் பொதுவேலைக்கு அது முடியும் வரையில் இடையறாமல் வேலை செய்வதற்கு அனுப்பப்பெறும் ஆள்)*

*இ - அ:* *அடியிறை - அடியறை:*

*இ - உ:* *தூசிப்படை - தூசுப்படை: (படையின் பகுதி களிலே முதலிலே செல்வது)*

ஈ-எ(ய்): மீயாட்சி - மெய்யாட்சி (மேலதிகாரம்)

உ - அ: அச்சுத்தறி - அச்சதறி (தறிவகை)

பதுவாரம் - பதவாரம் (நிலப் பரிவர்த்தனைக்காக அளிக்கப்பெறும் வரி)

தலைச்சும்மாடு - தலைச்சம்மாடு (தலைப்பாரம்: பொறுப்பு)

நட்டுவம் - நட்டவம் (நாட்டியம் கற்றுக் கொடுத்தல்)

திருவுண்ணாழிகை - திருவண்ணாழிகை (கர்ப்பக் கிருகம்)

நுந்தாவிளக்கு-நந்தாவிளக்கு (தூண்டாவிளக்கு)

அடியுறை - அடியறை (பாதகாணிக்கை)

உ - இ: கருவி - கரிவி (நாவிதர் கத்தி)

அடியுறை - அடியிறை.

உ - ஐ: இரவு - இரவை;

உ - ஒ: உபாதி - ஒபாதி (கடமை)

குடவர் - கொடவர் (கோயிற் கொத்துக்களுள் ஒரு பகுதியார்)

புத்தகம் - பொத்தகம்.

நுந்தாவிளக்கு - நொந்தாவிளக்கு.

எ - அ: வெள்ளான்வகை - வள்ளான்வகை.

தெளித்தல் - தளித்தல் (நீர்தெளித்தல்)

எ - இ: பெயர் - பியர்.

ஐ - அ: கைச்சாத்து - கச்சாத்து (கையெழுத்திட்ட ரசீது

ஐ - எ: வைச்சமுது - வெச்சமுது.

ஐ-அ(ய்): தையான் - தய்யான் (தையற்காரன்)

ஓ - அ: பொலிகை - பலிகை (வட்டி)

(2) ஒலியின் அளவு வேறுபடுதல்.

ஆ - அ: சாந்திக் கூத்து - சந்திக் கூத்து; சந்திக் குனிப்பம்

ஈ - இ: டஞ்சுப்பீலி - பஞ்சுபிலி (பஞ்சின் மீது இறுக்கும்) வரி)

உ - ஊ: குற்றரிசி - கூற்றரிசி

குற்றுநெல்லு - கூற்றுநெல்லு;

மெய்யெழுத்துக்கள் :-

க் - ச்: பொலிகை - பொலிசை (வட்டி)
க் - ய்: திருக்கைக்கோட்டி - திருக்கையோட்டி (கோயி லில் திருமுறை ஓதும் மண்டபம்)
ச - த: பரிசு - பரிது;
ச் - ய்த்: திருக்கொற்ற வாசல் - திருக்கொற்ற வாய்தல்;
ஞ் - ந்: ஞாழி - நாழி;
ஞாயிறு - நாயிறு.
ஞாடு – நாடு.
ஞ்ச் - ந்த்: கழஞ்சு - கழைந்து;
த் - ச்: நிறைந்தளவு - நிறைச்சளவு
இழித்து - இழிஞ்சு (குறைத்து)
ப் - ம்: பரப்பு - பரம்பு.
ம் - ண்: கம்மாளர் – கண்மாளர்.
ம் - ன்: கலம் - கலன்
வட்டம் - வட்டன் (வீதம்)
ய் - ச்: ஈயோட்டி - ஈய்ச்சோப்பி (சாமரை)
ய்ச் - ட்: ஆராய்ச்சி - ஆராட்சி.
யி - ச: வாயில் - வாசல்.
ல் - ர்: திடல் – திடர்.
ல் - ள்: ஈரங்கொல்லி - ஈரங்கொள்ளி,
ன் - ற்: வெள்ளிலையமுது - வெற்றிலையமுது.
ற் - ச்: எற்சோறு - எச்சோறு (பகற்சாப்பாடு)
ற் - த்: ஏற்றம்புலம் - ஏத்தம்புலம் (ஏற்றம்போட்டு நீர் இறைத்துப் பயிர் செய்யும் நிலம்)
ஏற்றபாடம் - ஏத்தபாடம் (ஏற்றம்புலம்)
சிற்றுயம் – சித்தாயம் (சிறுவரிகள்)
சாற்றுபட்டி - சாத்துப்பட்டி.
குற்றலரிசி - குத்தலரிசி;

சொற்கள் சொற்றொடர்களிடையில் எழுத்துக் கள் கெடுதலுமுண்டு; தோன்றுதலுமுண்டு.




எழுத்துக்கள் மறைந்தமை:

பெயரெச்ச ஈறுகிய அகரம்:

நிறைச்ச அளவு - நிறைச்சளவு
சுட்ட ஓடு - சுட்டோடு
மூத்த அதிகாரம் - மூத்ததிகாரம்
சுட்ட இட்டிகை — சுட்டிட்டிகை
வெச்ச அமுது - வெச்சமுது

இந்த ஈறுகளில் வரும் அகரம் உயிர் முதன் மொழிவர மறைந்துவிடுகின்றது:

'ர'கர மெய்:-

வர்த்தனை - வத்தினை (குறிப்பிட்ட அதிகாரிகள் ஊழியர் முதலியோருக்கு மானியமாக அளிக்கப் பெறுவது)
மயிலார்ப்பில் - மயிலாப்பில் (மயிலாப்பூர்)
துர்க்கை - துக்கை;
'ர'கரம் மிகவும் நுண்ணிய ஒலியாகும்;

எழுத்துக்கள் புதியனவாகத் தோன்றியமை:

'ர'கரம் புதிதாக இடம்பெறுவதுமுண்டு:—

சதாசேவை — சதாசேர்வை.

உயிரீற்றுச் சொற்கள் சிலவும் இறுதியில் உகரம் பெற்று உடம்படுமெய்யோடு 'வு'கரவீறு பெறுகின்றன:-

நல்லா - நல்லாவு
செறு - செறுவு

தவனம் என்னும் சொல் இடையிலே ககரம் பெற்றுத் தவனகமென்றும் அண்ணுவி என்னும் சொல் ழகரம் பெற்று அண்ணழ்வி யென்றும் திருநல்யாண்டு என்னுந்

தொடர் லகர இகர வுயிர்மெய்பெற்றுத் திருநல்வி யாண்டு எனவும் வந்துள்ளன;

வடமொழிச் சொல்லும் தமிழ்மொழிச்சொல்லும் சேர்ந்து தொடராக வழங்குவதற்கும் சாசனங்களிலே பல உதாரணங்கள் காட்டலாம்:-

சீவிதப்பற்று (சீவியத்துக்கு மட்டும் விடப்பட்டநிலம்)
யக்கிப்பட்டி (யக்கிதேவிக்கு வரியில்லாமல் விட்ட நிலம்.)
தீபமாலை (சரவிளக்கு).
சரவிளக்கு;
லாஞ்சினைப்பேறு.
மூத்ததிகாரம் (தலைமை அதிகாரம்).
உதிரப்பட்டி (போரில் இறந்து பட்டோரின் வழிவந்தோருக்கு வழங்கப்பட்ட நிலம்);
விப்பிரவினோதிவரி (பிராமண மாந்திரீகரிடமிருந்து பெற்றவரி).
விபூதிக்காணிக்கை (விபூதி வழங்கும்போது கோவிலுக்கு கொடுக்கவேண்டிய பணம்);
கணவாரியம் (சபையின் குழு).
அல்பமிறை (சிறுவரி).
வழுதியச்சுவர்க்கம் (பாண்டியருக்கு அவர் காசிற் கொடுக்கவேண்டிய வரிவகை).
துலாக்கூலி (தராசுக்கு வரி)
சூலவரி (ஒருவகை வரி)
அதிகாரமேலெழுத்து (அதிகாரியின் உடன்பாடு).
ஜன்மக்காணி (சீவிதப்பற்று?)
கோபுரவாசல்.
பிரசண்டக்காணிக்கை (இராணுவத்துக்குரிய ஒருவகை வரி).
பரகேசரி நாழி (மன்னர் பெயரில் வழங்கிய ஓரளவு
பரகேசரிக்கால் (மன்னர்பெயரில் வழங்கிய ஓரளவு);

பட்டாடை ஆயம்
நூலாயம்.
மூலவோலை.
பண்டாரக்கணக்காணி (திறைச்சேரியை மேற்பார்வை செய்பவர்).
ஜாதகக்குடி (கோவிலுக்கு வாழ்க்கை முழுவதும் தொண்டுசெய்ய முன்வந்தோர்).
நாட்டுவினியோகம் (நாட்டாரால் வரிவிலக்கு அளிக்கப்பட்ட நிலங்களால் குறைவுபட்ட நிதியை நிரப்புவதற்காக தனிப்பட்டவர் வழங்கும்பங்கு).
உபயபலிசை (பொருளாகவும் பணமாகவும் வரும் வட்டி).
சண்டேசுவரப்பெருவிலை (சிவன்கோவில் நிலத்தின் விலை).
ஏகபோகஇறையிலி (தனியொருவர் பயன்பெற வரியில்லாமல் வழங்கப்பட்ட நிலம்).
தர்மவாரியம் (அறச்செயல்களை மேற்பார்வையிடும் குழு).
பிரமதேயக்கிழவர் (பிராமணர் குடியிருப்பு நிலவுடைமையாளர்).
தேவகுடிமை (கோவிலின் குடிமை).
கணப்பெருமக்கள் (சபைக்காரியங்களை நடத்தும் முதியோர்).
ஏரியாயம் (குளத்தை உபயோகிப்பதற்கான வரி).
எழுத்துவினியோகம் (ஊர்க்கணக்கருக்கான வரியை ஊரார் பங்கு பங்காக இறுத்தல்).
சேனாபதி ஆள்வார் (திருமால்கோவில்களின் சேனை முதலியார்).
சேனாபதிப்பெருவிலை (திருமால்கோவில்களின் நிலவிலை).

தமிழில் வந்தமைந்த பிறமொழிச் சொற்களில் ஏற்பட்ட ஒலி மாற்றங்களை ஆராய்வது பயனுடையது. பிறமொழிச் சொற்களின் மூலவடிவம் எதுவெனத் தெரியுமாதலால், எந்த ஒலி எவ்வாறு மாறியுள்ளதென நிச்சயப்படுத்திக் கூறமுடியும். தமிழ்ச் சொற்களின் ஒலி மாற்றங்களை முன்னோர் எப்பொழுதும் குறித்துவந்திருப்பரென எதிர்பார்க்கமுடியாது. தமிழ் நெடுங்கணக்கு காலப்போக்கில் மாறிச்செல்லாததால், முன்னோர் எழுதி வரும்போது பழைய எழுத்து மரபையே பெரும்பாலும் பின்பற்றியிருப்பர். இன்றும் பேச்சுவழக்கிற் காணப்படும் கிளைமொழி வழக்காறுகள் எழுத்துவழக்கில் அருகியே இடம்பெறுதல் கவனிக்கக்கூடியது. தமிழ்மொழி பிறமொழிகளில் வடமொழிக்கே மிகவும் கடமைப்பட்டுள்ளது. சாசனங்களில் இடம்பெறும் வடமொழிச் சொற்கள் சொற்றொடர்களில் ஒலிமாற்றங்கள் வெவ்வேறு அளவில் இடம்பெற்ற வழக்காறுகள் சில, காணப்படுகின்றன. வீரசோழியம், நன்னூல் முதலிய இலக்கண நூல்களிற் குறிப்பிடப்படும் மாற்றங்கள் சிலவும் சாசனவழக்காறுகளில் இடம்பெற்றமையைக் காணலாம். தமிழிலக்கண மரபின்படி, ரகரம் மொழிக்கு முதலில் வராது. ஆனால் வடமொழிச் சொற்கள் பலவற்றில் ரகரம் மொழிக்கு முதலில் வருகின்றது. அத்தகைய சொற்கள், சொற்றொடர்கள் தமிழில் வந்தமையும் போது இகரம் அல்லது உகரம் மொழிக்கு முதலில் வரும் என்று தமிழிலக்கண நூல்கள் கூறும். சாசனங்களில் இருவகை வடிவங்களும் காணப்படும்:—

ராசகரம் – இராசகரம் (அரண்மனை),

ரத்தமானியம் - இரத்தமானியம் (இறந்த போர்வீரனுடைய குடும்பத்தினருக்கு விடப்பட்ட நிலம்);

ரத்தக்காணிக்கை - இரத்தக்காணிக்கை (இரத்த மானியம்).

ருத்திரர் - உருத்திரர் (சிவனடியார்).

ருத்திரகணிகை - உருத்திரகணிகை (சிவன்கோவில் தேவரடியார்).

ருத்திரகணம் - உருத்திரகணம்.

டங்கசாலை என்பது இடங்கசாலை (நாணயம் அச்சிசிடும் இடம்) எனவும் எழுதப்படுகின்றது.

சங்கதமொழி ஆகாரவீற்றுச்சொற்கள் ஐகார வீற்றுச் சொற்களாகத் தமிழிலே திரியும். அஃறிணை ஒன்றன் பாற் பொருளையுணர்த்தும் சங்கதமொழிச் சொற்கள் தமிழிலே வந்தமையும்போது, அம்விகுதிபெறும்; எனவே ஒரு சங்கதமொழிச்சொல் தமிழில் இரண்டுவடிவம் பெறுவதுண்டு:—

வேதனம் — வேதனை (கூலி)

சிராவணம் — சிராவணை (ஆவணம்);

கலாபம் - கலபை (கலகம்).

ஆண்பாலையுணர்த்தும் சங்கதமொழிச் சொற்கள் தமிழில் வந்தமையும்போது ஆண்பால் விகுதிபெறும். இகரவிகுதி வினைமுதற் கருத்தாவையுணர்த்த உதவும்; எனவே, இங்கும் இரண்டு வடிவங்கள் அமைகின்றன:-

மகாவிரதன் - மகாவிரதி;

மகாப்பிரதானன் - மகாப்பிரதானி(சேனைத்தலைவன்)

வடமொழிக்குச் சிறப்பாக உரிய எழுத்துக்களாலாய சொற்கள் தமிழில் வந்தமையும்போது ஒலித்திரிபுகளை அடைகின்றன அவை பெரும்பாலும் தமிழ்நெடுங்கணக்கிலுள்ள எழுத்துக்களால் எழுதப்படுகின்றன. சில ஒலிகள் மட்டும் சில சந்தர்ப்பங்களிற் கிரந்த எழுத்துக்க

ளால் தமிழ்மொழியிலும் எழுதப்படுகின்றன: இவ்விரு வகையிலும் தமிழில் அமையும் வடமொழிச் சொற்கள்:-

பரிவாரம் — பரிகாரம்;
பிரமஸ்தானம் - பிரமத்தானம் (பிராமணர் குடியிருப்பு);
மத்தியஸ்தன் - மத்தியத்தன்.
மஹா - மகா.
ராஜகரம் - ராசகரம் (அரண்மனை);
மரிஜாதி - மரிசாதி (எல்லை, வரம்பு, வீதம்);
பிரம்மாதிராஜர் - பிரம்மாதிராயர் (பிராமணமந்திரி)
ஜோடி - சோடி.
சோமயாஜி - சோமயாசி (ஒருவர் பெயர்);
வித்துவஜனம் - வித்துவசனம் (வித்துவான்கள் கூட்டம்);
ஸ்தூபி - தூபி (கோயில் விமானத்தின் உச்சி).
ஸ்நபனமண்டபம் - நபனமண்டபம் (குளிக்கும் மண்டபம்
ஸ்வாமி - சுவாமி;
ஸ்வருவம் - சொரூபம்;
மோக்ஷம் - மோட்சம், மோக்கம்;
பக்ஷம் - பட்சம், பக்கம்.
ராஜக்ருகம் - ராசகரம்;

சங்கதமொழியிற் கூட்டெழுத்து இடம்பெறுவது போலத் தமிழில் இடம்பெறுவதில்லை. கூட்டெழுத்துக் களையுடைய சங்கதமொழிச் சொற்கள் தமிழில் வந்தமையும்போது, அக்கூட்டெழுத்துக்களிடையில் இகர அல்லது உகர உயிர் புகும். தமிழ் இலக்கண மரபுப்படி மெய்யோடு மெய் மயங்கமாட்டாத இடங்களில், அவை மயங்கி வரத்தக்க வகையிலே திரிபு பெறும்:

ப்ராப்தி - பிராப்தி, பிராத்தி.
தர்மாசனம் - தருமாசனம்.
ஆஜ்ஞப்தி - ஆணத்தி (கட்டளை).
வங்சம், வம்சம் - வங்கிசம், வம்மிசம்.
தயிரமிர்து, தயிரமுர்து.

ஸ்ரீ என்னும் சொல் சிரீ, சிரி, சீ, திரு எனப் பலவகையாகத் திரிவதைச் சாசன வழக்காறுகளில் காணலாம்:-

ஸ்ரீ காரியம் — சீகாரியம் (கோயிற்காரியம்).
ஸ்ரீ ருத்திரர் - சீருத்திரர் (சைவத்துறவிகள்).
ஸ்ரீ பாதந்தாங்கி - சீபாதந்தாங்கி (விழாக்காலங்களிற் சுவாமி காவுபவர்கள்)
ஸ்ரீ பண்டாரம் - சீபண்டாரம் (கோயிற் பண்டங்கள் வைக்குமிடம்).
ஸ்ரீ வைணவர் - சிரிவைணவர்.
ஸ்ரீ முகம் - சிரிமுகம், சீமுகம், திருமுகம்.

மூலபரிஷத் என்ற சங்கதமொழித் தொடருக்கு மூலபரிஷை, மூலபருஷை, மூலபருடை, மூலபரிடை முதலிய திரிபுகள் வழங்கியுள்ளன. தமிழ் மொழியிலே தமிழொலிக்கேற்ப வந்தமைந்த வடசொற்கள் திரிந்து வழங்குவதற்கும் சாசனச் சான்றுகளுண்டு:-

மைத்துனர் — மைச்சுனர்.
வித்தியாதரன் - விச்சாதிரன்.
நாயனார் - நயினார்.
கல்லாணைக்காணம் - கல்லாலக்காணம், கண்ணாலக்காணம் (கல்யாண வரி).
அகிதம் - அகுதம் (இடையூறு).
அவதானம் - அவசானம் (முடிவு).

நாவிதம் - நாவிசம்;
அங்கவைத்தியர் - அங்கவயிச்சியர் (ஆயுர்வேத வைத்யர்).
வாத்தியமாராயன் - வாச்சியமாராயன் (கோயில் மேளத்தலைவன்).
அபரபக்ஷம் - அமரபக்ஷம் (தேய்பிறை);
நிபந்தம் - நிவந்தம்.
நபனபண்டபம் - நமனமண்டபம்.
நிபந்தம் - நிமந்தம்.
தபசி - தவசி.
தசபந்தம் - தசவந்தம் (பொதுக்காரியங்களுக்காகப் பத்தில் ஒருபங்கு வரி:
நியதி - நிசதி;
சீவிதம் - சீவியம்.
நாராயநாழி - நாராசநாழி (இரும்பாலான ஓர் அளவு)
வைத்திய விருத்தி - வயித்தியவிருத்தி (வைத்தியருக்குக்கு விடப்பட்ட நிலம்);
சம்படம் - சம்பளம், சம்மாதம்;
வியஞ்சனம் - வெஞ்சனம் (சோற்றுடன் வழங்கப்படும் கறி முதலியவை).
சந்திராதித்தவத் - சந்திராதித்தவற், சந்திராதித்தவல் (சந்திரசூரியர் உள்ளவரை).
சபாவிலை - சபைவிலை,
சாசுவதம் - சாசுவதியம் (நித்தியம்).
தமனகம் - தவனகம் (மருக்கொழுந்து).
பரிவட்டம் - பரிசட்டம், பரியட்டம் (ஆடை?).
திகதி - தியதி, தேதி.
உபத்திரவம் - உபத்திரகம்.
தர்மவாணிகர் - தர்மவாணியர் (வணிகர்).
விகிதம் - விசதம், விசம்;
பஞ்சாளர் - பஞ்சாளத்தார், பஞ்சலத்தார் (கம்மாளர்).

டங்கசாலை, தங்கசாலை (நாணயசாலை).
சந்ததி - தந்ததி;
சண்டேசுரன் - தண்டேசுரன், தண்டீசுரன்;

வடமொழிச்சொற்கள், சொற்றொடர்கள் தமிழாக்கம் செய்யப்பட்டுள்ளன. சாசனங்களில் வடமொழி வழக்காறுகளையும் அவற்றின் தமிழாக்கங்களையும் காணலாம். பிறமொழிச்சொற்களைத் தமிழாக்கம் செய்ய வேண்டியது முக்கியத்துவம் பெற்றுள்ள இக்காலத்திலே சாசன வழக்காறுகளை உணர்ந்துகொள்வது பயனளிக்கும்:

ஏகபோகம் - ஒரு பூ;
அந்தப்புரம் - அகம்படி;
வித்தியாத்தி, விச்சாத்தி - மாணவன்.
தாம்பூலம் - சுருளமுது;
திருமேனி - திருவுடம்பு;
தானசாசனம் - திருவிடு;
கோகுலம் - திருவாய்ப்பாடி;
கர்ப்பக்கிருகம் - உட்கோயில், அகநாழிகை, திருவுண்ணாழிகை;
தாமம் - தொங்கல்;
பரிவர்த்தனை - தலைமாறு.
மார்க்காதாயம் - வழியாயம்;
சாத்திரர் - கேட்போர்.
சுவர்ணாதாயம் - சுவர்ணவரி, சொனவரி;
சுவர்ணதண்டம் - தட்டார்பாட்டம்.
செக்காயம் - செக்கிறை, செக்குக்கடமை;
சிற்றாயம் - சிறுவரிகள்.
சில்லாயம் - சில்லிறை, சில்வரி.
பரிவட்டம்—சாத்துக்கூறை.
நிருத்தியபோகம் - சாக்கைக்காணி.
சர்வமானியம் - முற்றூட்டு;

சபை - குறி:
சபாமத்யமம், சபாமஞ்சிக்கம் - ஊர்ப்பொது;
சந்தியாதீபம் - சந்திவிளக்கு.
சக்கரக்கல் - ஆழிக்கல்.
உற்சவமூர்த்தி - எழுந்தருளும் திருமேனி;
அந்தராயம் - உள்வரி.
அரசன் - உடையார், உலகுடையபெருமாள்.
இறைதிரவியம் - இறைபொருள்.
பாலாலயம் - இளங்கோயில்.
சம்வத்சரவாரியர் - ஆட்டைவாரியர்.
தர்மசாசனம் - அறவோலை;
நைவேத்யம் - அமுதுபடி;
அவனிவேதனம் - பாடிகாவல், ஊர்க்காவல்.
தவளசத்திரம் - வெண்குடை.
அபயம் - அஞ்சினான்புகலிடம்;
கவசம் - திருக்கொள்கை.
குமாரவிருத்தி - பிள்ளைவரி;
குமாரவர்க்கம் - பிள்ளைகள்தனம்.
அபிசேகமண்டபம்-திருமஞ்சனசாலை,குளிக்கும்இடம்;
அகோவனம் - பாழ்பூமி, தரிசுநிலம்.
ஆசனம் - மெய்தாங்கி.
பத்திரம் - முறி.
நெல்லாயம் - நெற்கடமை.
ஹவிர்பலி - தீயெறிசோறு.
காலதோஷம் - காலப்பொல்லாங்கு.
நஷ்டம் - உள்ளிட்டம்.
தக்ஷிணபுஜம் - வலதுகை.
சீபாதம், சீபாதந்தாங்கியள் - திருவிழாதூக்குவோர்.
கும்பாபிஷேகம் - கலசமாட்டுதல்.
குதிரை விலாடம் - குதிரைப்பந்தி, குதிரைமாற்று.
ஆஜ்ஞாகிரயம் - ஆணைவிலை.
திருநந்தவனம் - திருத்தோப்பு.

திருப்பட்டம் - திருநெற்றித் திரளை:
துவஜ ஆரோகணம் - ஏறுசாத்து;
துவஜ அவரோகணம் - இறங்குசாத்து.

தமிழ் இலக்கணம் கூறுகின்ற புணர்ச்சி விதிகளைச் சாசனத் தொடர்கள் சில அனுசரிக்கவில்லை;

காசுகல் (தங்கம் முதலியவற்றை நிறுக்கும் எடை)
கோல்கூலி (அளவு கோலுக்கான கூலி).
கோல்நிறைகூலி (கோலால் நிறுத்துவிற்கும் பொருள்கள் மீதுவரி).
கடமை காரியம் (அரசாங்கத்தின் நிர்வாக அலுவல்).

சாசனச் சொற்றொடர்களிற் சில, சில சந்தர்ப்பங்களிலே திரிபுவிகாரம் பெற்றும் வேறுசில சந்தர்ப்பங்களிலே திரிபுவிகாரம் பெறுமலும் எழுதப்பட்டுள்ளன.

நல்கிடா - நற்கிடா.
நல்பசு - நற்பசு.
ஆடிறைப்பாட்டம் - ஆட்டிறைப்பாட்டம்.
கல்நாடு - கன்னாடு (இறந்தவர் ஞாபகார்த்தமாகக் கல் எழுப்புதல்).
முதல்திரமம் - முதற்றிரமம்;
நாடுவாரியம் - நாட்டுவாரியம்.
குரால்பசு - குராற்பசு (கபிலை நிறப்பசு).
உள்நிலம் - உண்ணிலம்.
ஆள்நெல் - ஆணெல் (நெல்லாக இறுக்கும் வரிவகை).
இருவகையாகப் புணர்ந்த தொடர்களும் சில உள;
தட்டாரி பட்டம் - தட்டாரப்பட்டம்.
தண்டக்குற்றம் - தண்டங்குற்றம் (குற்றம் இழைத்ததிற்கு அபராதம்.)
காசாயம் - காசு ஆயம்.

வீரகல் - வீரக்கல்:
வலங்கை - வலதுக்கை:

திருநாமக்காணி — திருநாமத்துக்காணி(சிவன் கோயில் நிலம்):

சொற்கள் தொடர்ந்து வந்து புணர்ந்து காணப் படும்போது சுலபமாகப் பொருள் புலப்படாது: பொருள் மயக்கம் ஏற்படக்கூடிய இடங்களிலும் சொற் கள் புணர்ந்து காணப்படும் தொடர்கள்:-

நாட்டுபாதி - நாட்டு உபாதி (நாட்டுக்குச்செலுத்த வேண்டிய கடமைகள்):
நாட்டிருவமுது - நால் திருவமுது.
திருவிளக்குடையார் - திருவிளக்கு உடையார்:
கரைக்கூறுசெய்வார் - கரை கூறுசெய்வார்:
தேசவாளி - தேச ஆளி (தேசத்தை ஆளும் அதிகாரி).
திருவிருப்பு - திரு''இருப்பு (கோயில் அமைந்துள்ள இடம், கோயில் கட்டிடம்).
உல்கூட்டுச் சரக்கு - உல்கு ஊட்டுச்சரக்கு (சுங்கம் வசூலிக்கக்கூடிய பண்டம்)
நிலமடக்குதல் - நிலம் அடக்குதல்.
வரிசையிலிட்டபடி - வரிசையில் இட்டபடி.
ஆட்டிறை — ஆடு இறை:
வரிக்கூறுசெய்வார் - வரி கூறு செய்வார்.

பொருள் மயக்கத்தை நீக்குவதற்காகக் கடைசியிலுள்ள இரு தொடர்கள் ஆட்டுக்கிறை, வரிக்குக்கூறுசெய்வார் என விரித்தெழுதப்படுவதும் உண்டு:

ஒரு பொருட் பன்மொழிகள் பல வழங்குவ தைச் சாசனங்களிலே காணலாம்: வரிகளில் ஒவ்வொன்

றின் பெயரைக் குறிப்பிடும்போதும், பெரும்பாலும் இவ்வழக்காறு அமைவதைப் பின்வரும் எடுத்துக்காட்டுகளிலிருந்து உணரலாம்.

வெட்டிக்காசு, வெட்டிவரி, வெட்டிப்பாட்டம் (கூலி இல்லாமற்செய்யும் ஊழியம் பற்றி ஊர்ச்சபைக்கு இறுக்கும் கடமை);
வாசல் காணிக்கை, வாசல் நிர்வாகம்;
வாசல் திரமம், வாசல் பணம், வாசல் வினியோகம்;
மனையிறை, மனைப்பணம், மனைவரி.
இரத்தமானியம், இரத்தக்காணிக்கை;
பச்சைப்பணம், பச்சைப்பாட்டம்;
தறிக்கடமை, தறியிறை, தறிதளை, தறிக்கூறை, தறிப்புடைவை;
தட்டுக்காணம், தட்டுக்காயம், தட்டொலி, தட்டார் பாட்டம்;
குடிக்காசு, குடிப்பணம், குடிக்காணம்;
கார்த்திகைக்காசு, கார்த்திகைக் காணிக்கை, கார்த்திகைப்பச்சை);
கார்த்திகையரிசி (கார்த்திகையில் அறுவடைக்காலத்தில் தானியமாகச் செய்யும் செலவு);
ஓலைச்சம்படம், ஓலைச்சம்மாதம், ஓலைச்சம்பளம்;
நெல்லாயம், நெற்கடமை;
கண்டாயம், கட்டாயம்;
அச்சுவரி, பொன்வரி.
தலையாரிக்காணி, தலையாரிக்கம்.
கணக்கப்பேறு, கணக்கக்காணி;
காணிக்கடன், காணிக்கூலி (நிலவரி);
அந்தராயக்காசு, அந்தராயப்பாட்டம்;
கடையிறை, கடைப்பாட்டம்;
ஏரிமீன்காசு, ஏரிமீன்பாட்டம், ஏரிமீன் விலைப்பாட்டம்;

ஏர்க்காடி, ஏர்க்காணிக்கை, ஏர்ப்பொன், ஏர்க்கடமை;
மேலொடி, மேற்பாதி, மேல்வாரம்;
விவாகப்பணம், கன்னலக்காணம்;
வெட்டிப்பேறு, வெட்டியாள், வெட்டிவரி;
வண்ணாரப்பாறை, வண்ணான் வரி, பாறைக்காணம்,
வண்ணான்பாறை;
படைப்பணம், படைக்காணிக்கை.
உப்பாயம், உப்புக்காசு;
ஆற்றுக்குலை, ஆற்றுப்பாட்டம், ஆற்றங்கரைத்
தேவை;
ஆடிப்பச்சை, ஆடிநவிரை, ஆடிக்குறுவை;
பச்சைப்பணம், பச்சைப்பாட்டம்.
ஆட்டைச்சம்மாதம், ஆட்டைக்காணிக்கை (வருடந்
தோறும் செலுத்தவேண்டிய காணிக்கை);
ஆட்டுக்கிறை, ஆட்டுவரி, ஆட்டிறை;
அங்காடிக்கூலி, அங்காடிப்பாட்டம்;
மீன்கடமை, மீன்பாட்டம், பாசிப்பாட்டம்;
நீர்க்காணம், நீர்விலை;
அதிகாரவர்த்தனை, அதிகாரப்பேறு, அதிகாரப்
பொன்;
இடைப்பாட்டம், இடைப்பூட்சி, இடையர்வரி;
தெண்டகுற்றம், தெண்டந்தீர்வை.
கோட்டைக்கூலி, கோட்டைமகமை;
குசக்காணம், திரிகை ஆயம்.

கோவிலில் ஒரு பகுதியைக் குறிப்பிடத் திருச்சுற்றுலை, திருச்சுற்றாலயம், திருச்சுற்றுமாலை, திருச்சுற்றுமாளிகை, திருச்சுற்று மண்டபம் என ஐந்து பெயர்கள் வழங்கியுள்ளன. அதே போல விலைச்சிராவணை, கிரயசாசனம், விலையாவணம், விலையோலை, விலைப்பிரமாணம், விலைத்தரவு என்பன ஒரு பொருட் பன்மொழிகளாகக் காணப்படுகின்றன;

வரியைக் குறிக்கும் சொல் இடம் பெறாத சொற்றொடர்கள் வரிகளைக் குறிக்க வழங்கியுள்ளமையைச் சாசனங்களிலே காணலாம்; சொற்றொடருக்குப் பிறிதொரு சொல்லைச் சேர்த்து நீட்டிச்சொல்ல விரும்பாமை இத்தகைய தொடர்கள் வழங்கக் காரணமாகலாம்:–

| | |
|---|---|
| துலாபாரம் | உறைநாழி |
| சபா விநியோகம் | உறுபாதை, கெடுபாதை; |
| கைவாசி | உழுகுடி, உழவுகுடி; |
| பாடிகாவல் | எற்சோறு |
| அருந்தோடு | தாசகத்தறி |
| கொடைவடக்காய் | தோலொட்டு |
| பட்டிக்கால் | பட்டிக்காடி. |
| உப்புக்கோச்செய்கை | வட்டி நாழி |
| பழநெல் | மூத்தவாணம் |
| சேவகத்தேவை | பறைத்தறி |
| ஆற்றங்கரைத்தேவை | ஆண்டெழுத்துத்தேவை |
| எற்சோற்றுக்கூற்றுநெல் | யானைச்சாலை, ஆனைச்சாலை |
| குடநாழி | முகம்பார்வை |
| திரிகை | பணிக்கொத்து |
| நாடுகாவல் | கூலம் |
| தரகு | கையேற்பு |
| எழுத்துவிநியோகம் | ஊடுபோக்கு |

காலத்தால் மாறாது என்றும் ஒரே நிலையிலிருக்கவேண்டும் என்ற பொருளை உணர்த்த வேண்டியதேவை சாசனங்களைப் பொறிப்பவருக்குப் பலமுறை ஏற்பட்டது; அத்தகைய சந்தர்ப்பங்களில், சந்திராதித்யவத், 'சந்திர சூரியர் உள்ளவரை' ஆசந்திரதாரம், 'சந்திரனும் நட்சத்திரங்களும் உள்ளவரை' என்னும் வடமொழித்

தொடர்கள் வழங்கப்பட்டுள்ளன; வாடு என்பதன் எதிர் மறை வடிவமான வாடா என்பது இப்பொருளை உணர்த் தப் பெயரடையாக வழங்கப்படுவதுண்டு:

வாடாக்கடன்
வாடாக்கடமை

உடை என்னும் சொல் ஓரிடத்தில் மட்டும் அடையாக உடைப்படை என வழங்கப்பட்டுள்ளது. ஆனால் பெரும் பாலும் நிலை என்ற சொல் அடையாக வழங்கியது:—

நிலையிறை
நிலைப்பொலியூட்டு
நிலையாள்
நிலைப்பந்தம்
நிலைப்படை

ஆகும் தொறுநிலை என்று வரும்போது தொறு அலைந்து திரியாது தங்கியிருக்கும் இடம் என்ற பொரு ளில் தொழுவத்தைக் குறிக்கிறது.

கல்வி, சமய, சமூகச் சேவைகளுக்கான வசதி கள் கொடைகள் மூலம் செய்யப்பட்டன. இச்சேவை களின் வளர்ச்சிக்காக நிலங்கள் விடப்பட்டதால், சேவை யின் வகையோடு விருத்தி என்பதைச் சேர்த்துக்கூறும் வழக்கம் காணப்பட்டது.

வேதவிருத்தி
விஷவிருத்தி
வியாக்யானவிருத்தி
வயித்தியவிருத்தி
அத்தியயன விருத்தி

தலவிருத்தி
தேவவிருத்தி
மகாபாரதவிருத்தி, பாரதவிருத்தி
பூஜா விருத்தி
பாஷிய விருத்தி
பாட்டவிருத்தி, பட்டவிருத்தி, பட்டவிருத்தி
மானியம்
அர்ச்சனுவிருத்தி

சேவையின் வகையோடு ஜீவிதம் என்பதைச் சேர்த்துக் கூறினர்:

தண்டிகை ஜீவிதம்
உவர்க்கணக்கர் ஜீவிதம்

சேவையின் வகையோடு போகம் என்பதைச் சேர்த்துக் கூறினர்:

இறைபோகம் வீரபோகம்
தலபோகம் திருத்தியபோகம்
விஷஹரபோகம் சிபலிபோகம், ஸ்ரீ பலிபோகம்
வித்தியானுபோகம் வைத்தியபோகம், வைத்திய பாகம்
அர்ச்சனுபோகம்,
சாலாபோகம், அறச்சாலாபோகம்.

வடசொற்களை மட்டுமன்றி, பேறு, புறம், பட்டி, விளாகம், பாத்தி, பற்று, காணி என்னும் தமிழ்ச் சொற்களையும் சேர்த்து வழங்கினர்:—

மருத்துவப்பேறு, சோரியப்பேறு சண்டாளப்பேறு, அட்டிற்பேறு, அதிகாரப்பேறு, பாரதப்புறம், தயித்

திரியக்கிடைப்புறம், மெழுக்குப்புறம், அடுக்களைப் புறம், திருவிழாப்புறம், திருஞானப்புறம், கிடைப் புறம், பவிஷ்யக்கிடைப்புறம், திருமடைப்பள்ளிப் புறம், மடப்புறம், திருப்போனகப்புறம், அவல முதுப்புறம், அம்பலப்புறம், அர்த்தசாமப்புறம்.
ஏரிப்பட்டி, யக்கியப்பட்டி, சீபலிப்பட்டி (ஸ்ரீபலிப் பட்டி), பிடாரிப்பட்டி;
ஐயன்பாத்தி (ஐயனார் கோவிலுக்கு விட்டமானி யம்)
அகரப்பற்று, இராசகுலம் காணிப்பற்று;
பிடாரி ஸ்ளாகம்
அர்ச்சனுவிபாவக்காணி

சேவையென்று சுட்டிக்கூறுமலும் சிலதொடர்கள் வழங் கின:-

புரோகிதக்காணியாட்சி
சரோத்திரியம்

சேவைகள் நடைபெறுவதற்கான இடவசதிகளும் செய்து கொடுக்கப்பட்டன.

வியாகரணத்தான மண்டபம்
வக்காணிக்கு மண்டபம்

சொற்களிலிருந்து பிறசொற்கள் ஆக்கப்படுவதற்கும் சாசன வழக்காறுகள் பல உள.

பெயர்ச்சொல்லாக்கம்

கருத்தாப்பெயர்:

வாரியம் - வாரியன் - வாரியப்பெருமக்கள்
வாய்க்கேள்வி - வாய்க்கேள்வியார் - வாய்க்கேட்பார்
புரவுவரி - புரவுவரியார் (அரசாங்கத்து வரிக்கணக்கு நிர்வகிக்கும் அதிகாரி)

பதினாறு - பதினறுமார் (கோவில் விசாரணைச்சபை)
நிமந்தம் — நிமந்தகாரர்
நம்பு - நம்பி - நம்புசெய்வார் (கோவில் பூசைசெய்பவர்)
அம்பலம் - அம்பலத்தார் (சபையார்)
நியாயம் - நியாயத்தார்;
பாட்டம் - பாட்டமாளன் (வரிவசூலிக்கும் அதிகாரி)
திருமெய்காப்பு - திருமெய்காப்பான்
எரிமருந்து - எரிமருந்தன்;
கடிகை - கடிகையார்
திருக்கைக்கோட்டி — திருக்கைக்கோட்டியோதுவார்
தலம் - தலத்தார் (கோவில் அதிகாரிகள்)
உள்ளிட்டு - உள்ளிட்டார் (அந்த வமிசத்தவர்கள்)
ஊர் - ஊரோம், ஊரவர், ஊராளர்.
உவச்சு - உவச்சன் (கோவில் மத்தளம் கொட்டுபவன்)
செம்மருதம் - செய்மருதர் (நல்ல விவசாயிகள்)
சவை - சவையார்.
சந்திவிக்கிரகம் - சந்திவிக்கிரகி
கரணம் - கரணத்தார், காரணவர்;
கண்காண் - கண்காணி (சீகாரியக்கண்காணி)
குரு - குரவடிகள், குரத்தி
ஆள்(ழ்) - ஆழ்வார், ஆழ்வி
பதி - பதியார்
மண்டலமுதல் - மண்டலமுதலியார்.
தானம் - தானத்தார்
சாத்த கணம் - சாத்தகணத்தார்;
காளிகணம் - காளிகணத்தார்
சமயமுதல் - சமயமுதலி (சமயத்தலைவர்)
கேள்விமுதல் — கேள்விமுதலி (அரசன் வாய்மொழியாக இடும் உத்தரவுகளை உரியவர்களுக்கு அனுப்பும் அதிகாரி)

மாணிக்கம் - மாணிக்கத்தார் (தேவரடியார்)
ஆளும் கணம் - ஆளும் கணத்தார்
அட்டகம் - அட்டகத்தார்
பட்டோலை - பாட்டோலை
தண்டு - தண்டல், தண்டாளர்
(உப்பு) அளம் - அளவர்
அகநாழிகை - அகநாழிகையார் (கர்ப்பக்கிருகத்தை நிர்வகிப்பவர்)
உண்ணாழிகை - உண்ணாழிகையார் (,, ,, )
அணுக்கம் — அணுக்கர், அணுக்கியர் (அந்தரங்க ஊழியர்)
அழிவுசெய் - அழிவு செய்வான்
அடைப்பம் - அடைப்பக்காரன் (அடைமானம் பிடிப்பவன்)
தழையிடு - தழையிடுவார் (கோவிலில் வில்வம், திருத்துழாய் முதலிய பச்சிலைத் திருப்பணி செய்வார்)
தருமாசனம் - தருமாசனத்தார்
நந்தவனம் - நந்தவனக்குடி
விளக்கு - விளக்குக்குடி
கைவினை - கைவினைக்குடி
வகைசெய் - வகைசெய்கிறவர் (நிலத்தின் தரம் அளவு முதலியவற்றை ஒழுங்கு செய்து தீர்வை விதிக்கும் அதிகாரி)
தண்டெடு - தண்டெடுப்பார்
தண்டம் - தண்டாளர்
பாட்டம் - பாட்டமாளன் (வரி வசூலிக்கும் அதிகாரி)
சீபலி கொட்டு — சீபலிகொட்டுவார்

தொழிற்பெயர், வினையடிப்பெயர்;

வா - வரவை; வரத்து; வாரரவைகள்; (பல) வரவை.
வரி - வரிசை.
மன்று - மன்றுதல், மன்றுபாடு (அபராதப்பணம்)
பகுற்று - பகுற்றுதல் (பங்கிடுதல்)
நீர்க்கோர் - நீர்க்கோர்வை; நீர்க்கோப்பு;
நாடுகா - நாடுகாவல்
நாடுவகு - நாடுவகை
தூங்கு - தூக்கம்
தீண்டு - தீண்டல்
தீகரி - தீகரிப்பு (பயிர் முதலியன தீய்ந்துபோய்க் கேடுறுதல்)
ஏற்று - ஏற்றுதல், ஏற்றம்
திருந்து - திருத்தம்
உழ - உழத்தல், உழப்பம்
கொள் - கொள்கை (கொள்கலம்)
கல்நடு - கல்நாடு;
தா - தரவு
புர - புரவு
தண்டு - தண்டுதல், தண்டல்
உட்கொள் - உட்கொள்ளுதல்
இறு - இறை, இறுப்பு
காணியாள் - காணியாட்சி; காணியாண்மை (பரம்பரையாக அனுபவிக்கும் உரிமை)
அரக்கு - அரக்கல் (அரசாங்கத்துக்குச் செலுத்தும் இறையைச் சிறுபகுதிகளாகக் கட்டுவதற்கான தவணை)
அடை - அடைப்பு (அடையாளர் பெற்றுள்ள நிலம்)
அடைகொள் - அடைகொள்ளுதல் (ஒற்றியாகப் பெறுதல்)

நாடுகண்காண் - நாடுகண்காட்சி.
காடுகொள் - காடுகோள் (விளைநிலம் காடுமண்டிப் போதல்)

பெயர்ச்சொற்கள் துணைவினைகொண்டு தொழிற்பெயர் விகுதியும் பெறுவதுண்டு:-

பிரசாதம் - பிரசாதம் செய்தல், பிரசாதப்படுதல்
உதகம் - உதகம்செய்து, உதகம் பண்ணி
பாரிசம் - பாரிசஞ்செய்தல் (பொறுப்பாக்குதல், ஒப்படைத்தல்)
திருநிறம் - திருநிறஞ்செய்தல் (பொன்முலாம் இடுதல்)
வகை - வகைசெய்தல், வகைந்த காசு என்பதில் வகை வினைப் பகுதியாக வருகின்றது:
போகி - போகியார் (காதற்கிழத்தி, மனைவி),

மாமன் - மாமடி என்பன மரியாதையை உணர்த்துவதற்காக அடைந்த மாற்றங்கள்:

நல்ல, தூய பொன் என்பதை உணர்த்துவதற்கு உலவிபொன், தீப்போக்குச் செம்பொன், இராசிப்பொன், ரேகைப்பொன் என்னும் தொடர்கள் வழங்கியுள்ளன; நன்கு குற்றித்தீட்டிய அரிசி என்பதை உணர்த்துவதற்குப் பூரிக்குத்தலரிசி, தூக்குத்தலரிசி, கூற்று நெல்லு, கூற்றரிசி, குற்றுநெல் என்னுந்தொடர்கள் வழங்கியுள்ளன.

பெயரைத் தொடர்ந்து ஏழாம் வேற்றுமைப் பொருளை உணர்த்தும் இல்லுருபும் அதனைத் தொடர்ந்து பலர்பால் விகுதியாகிய ஆரும் இடம்பெறும் சொற்கள் சில காணப்படுகின்றன;

வாளிலார் - வாள் + இல் + ஆர்
வழியிலார் (வழிக்கண்ணார்) - வழி + இல் + ஆர் (வழி + கண் + ஆர்)
வரியிலார் - வரி + இல் + ஆர்
பதியிலார் - பதி + இல் + ஆர்
நியாயங்களிலார் - நியாயங்கள் + இல் + ஆர்
நகரங்களிலர் — நகரங்கள் + இல் + ஆர்
தளியிலார் - தளி + இல் + ஆர்
குடியிலார் - குடி + இல் + ஆர்

பெயரைத்தொடர்ந்து எதிர்மறை இல்லும் இகரவிகுதியும் இடம்பெறும் சொற்கள்:-
இறையிலி - இறை + இல் + இ
தரமிலி - தரம் + இல் + இ

பெயரைத் தொடர்ந்து வினையும் இகர விகுதியும் பெற்று ஒரு சொல்லைப்போல வழங்குவது:—
மன்றாடி (இடையன்) - மன்று + ஆடு + இ.

சொற்களும் சொற்றொடர்களும் மருஉவாக வழங்கும் இடங்கள் பல, சாசனங்களில் முழுவடிவங்களும் மருஉவடிவங்களும் காணப்படும் எடுத்துக்காட்டுக்களிற் சில வருமாறு:-

குன்றுமணி - குன்றி
காராண்கிழமை - காராண்மை (பயிரிடும் உரிமை)
(பொன்) மாற்று - மாறி.
ஜினநகரம் - சினகரம்
தண்டிகை - தண்டு (பல்லக்கு)
சாலிகைத்தறி — சாலியத்தறி (துணிநெய்யும் தறி)
திருமந்திரபோனகம் - திருப்போனகம்
ஊராண்மை - ஊரமை
ஒரு தடவை - ஒருதடை
உத்தரவாதம் - உத்தாரம்

சீபாதந்தாங்கிகள் - சீபாதம்
உகப்பார்பொன் - உகவை (சந்தோஷக்காரியங்களுக்குச் செலுத்தும் வரி)
ஈழக்கருங்காசு - ஈழக்காசு, கருங்காசு (ஒருவகை நாணயம்)
ஆதுலர்சாலை - ஆதுரசாலை (வைத்தியசாலை)
அடைக்காயமுது - அடையமுது (தாம்பூலம்)
காசாயவர்க்கம் - காசாயம், காசுவர்க்கம்
கொட்டகாரம் - கொட்டாரம்
ஆசிவகர்காசு - ஆசிவக்காசு (ஆசிவகர் என்ற சமயப் பிரிவினர் மேல் விதித்த வரி);
புதாநாழி - புதாழி (வரிவகை)
திருவுண்ணாழிகை - திருவுண்ணாழி
நிர்ணயம் - நின்றயம்
சதுர்வேதிமங்கலம் - சதுர்பேதிமங்கலம், சருப்பேதி மங்கலம், மங்கலம், (நாலு வேதங்கள் அறிந்த பிராமணர் இருக்கும் இடம்):
பொலிசையூட்டு — பொலியூட்டு (வட்டிப்பெருக்கம்)
புரவுவரி - புரவரி (நிலவரி)
தண்டலிற்கடமை - தண்டற்கடமை
அபிஷேகக்காணிக்கை - அபிஷேகக் காணி;
வாசல்காரியம் - வாசல்
சிறு கூலவிசேஷம் - சிறுகுலம்.
பறைத்துடைவை - பறைமை(பறையருக்கு மானியம்)
நாட்டாண்மை - நாட்டாமை.
துலைநிறை செம்பொன் - துலைநிறைபொன், துலைநிறை (சுத்தமான பொன்).
தலையாரிக்காணம் — தலையாரிக்கம் (தலையாரிக்குக் கொடுப்பதற்காக விதிக்கப்பட்ட வரி).
செட்டியிறை - (வியாபாரிகள் இறுக்கும் வரி)
குடிநற்கல் - குடிஞைக்கல், குடிஞை (நிர்ணயிக்கப் பெற்ற நிறையுடைய நற்கல்);

அள்ளாயம் - அள்ளு, அளு (சந்தை விற்பனைப் பொருள்களின் ஒரு அள்ளு).

அபிஷேகக் காணிக்கை - அபிஷேகக்காணி

பதிபாத மூல பஞ்சாசாரியர் - பதிபாத மூலப்பாடுடையர், பதிபாத மூலத்தார், பதிபாத மூலம் (சிவன் கோவிலை நிர்வகிப்பதற்காகப் பூசைசெய்வோரைக் கொண்டசபை).

பஞ்ச சலாகை அச்சு - பஞ்சால அச்சு (நாணயம்);

ஸ்ரீயக்கி பழஞ்சலாகை - பழஞ்சலாகை, சலாகை;

தேவரடியார், தேவடிமை - தேவடியார்

அங்கரங்க வைபவம் - அங்கரங்க வைபோகம் (சகல உபசாரங்களும் கூடிய பூசை).

அபூர்வி - அபூரி (வேதம்வல்லவர்)

உடன்படிக்கை - ஓடம்படி

கோளகை - குளிகை (ஒருவகை நாணயம்)

சாசன வழக்காறுகளுள் அழகான சொற்றொடர்கள் பல உள. அவற்றுள் நிலம் சம்பந்தப்பட்டன பல:-

செந்நீர்ப் பொதிவி (நல்ல நீர் ஓடும்கால்)

தேன்பயில் பொதும்பு (தேன்கூடுகட்டும் சோலை)

மேனடை நீர் (அதிகப்படியாக உள்ள நீர்)

களர்ப்பாழ் (உப்புப்படிந்த பாழ்நிலம்)

கன்றுமேய் பாழ் (கிராமத்தில் கால்நடை மேய்வதற்கான நிலம்)

கார்மறுநிலம் (இருபோக சாகுபடி உள்ள நிலம்)

குளக்கீழ்(அந்தக் குளத்தின் பாய்ச்சலில் உள்ள நிலம்)

தலை, கடை என்னும் காலப்பெயர்களோடு ஈடு, ஊறு முதலிய சொற்கள் வந்தன:-

தலையீடு

கடையீடு (அரசனது முடிவான உத்தரவு)

கடையூறு (முடிவாக வரும்தடை)

முற்பணம் என்று இன்று வழங்கும் தொடர்

முன்னிடும் பணம் என்று வழங்கியுள்ளது. கடந்த ஆண்டு என்பது முன்பிலாண்டு எனவும் வருகிற ஆண்டு என்பது எதிராமாண்டு எனவும் வருடவருமானம் என்பது ஆண்டு கள்ளடவு எனவும் பிரேரித்தல் அல்லது விற்பவன் விலை கூறுதல் முற்கூறுதல் எனவும் ஆமோதித்தல் அல்லது வாங்குபவன் விலை கூறுதல் பிற்கூறுதல் எனவும் வழங்கி யுள்ளன. கையெழுத்திடுதல் திருவெழுத்துச் சாத்துதல் எனவும் கோயிலுக்குக்கொடுக்கப்பட்ட அரிசி முதலியன திருப்படி மாற்று எனவும் கோவிலில் அமுது முதலியன படைத்தல் திருப்படி மாற்று என்றும் அரசனுடைய ஆட்சியாண்டைச் சாசனங்கள், பத்திரங்கள் முதலிய வற்றிற் குறித்தல் திருவாண்டெழுத்திடுதல் எனவும் சில சாசனங்களிற் குறிக்கப்பட்டுள்ளன. குறிப்பிடக் கூடிய வேறு சில தொடர்கள்:—

சாவேறு (பகையரசனைச் சூழ்ந்து காக்கும் படைமீது ஊடறுத்துச் செல்லமுயன்று அந்நிலையில் உயிர் துறத்தலையே விரதமாகக்கொண்ட வீரர்)

வரியிலீடு (அரசிறைக் கணக்கிற் சேர்த்தல்)
மெய்வேறு (தனித்தனியாய்)
மெய்க்காட்டு (நேரில் வந்திருத்தல்)
சாவா மூவாப்பேராடு, சாவா மூவாப்பேருரு (சாகாத முதுமையடையாத, இளமைப்பருவத்தைக் கடந்த ஆடு) என்பனவாம்.

சாசனத் தமிழில் ஒருவருடைய விலாசம் குறிக் கப்படுமுறைக்கும் இன்றைய தமிழில் ஒருவருடைய விலாசம் குறிக்கப்படுமுறைக்கும் வேறுபாடு உண்டு. ஆளைப்பற்றி இங்கு கூறப்படுவது கோயில் முதலிய இடங்களைப்பற்றிக் கூறப்படும் சந்தர்ப்பங்களுக்கும்

பொருந்தும்: ஒருவருடைய பெயர், அவர் செய்யும் தொழில், தொழில் நிலையம் உள்ள ஊர் என்ற முறையில் அல்லது ஒருவருடைய பெயர், அவர் வாழும் வீதி, அந்த வீதி உள்ள ஊர் என்ற முறையில் விலாசமெழுதுவதே இக்கால முறையாகும். சாசனத்தமிழில் ஆள் அல்லது இடத்தினுடைய பெயர் கடைசியாக வருகின்றது: கீழ்முக வெட்டிதேவன் கமலன் என்ற உதாரணத்தில், கமலன் என்பதே சம்பந்தப்பட்டவருடைய பெயராகும். தேவன் என்பது அவர் தந்தைபெயராகும்.

முகவெட்டி என்பது சோழப்பெருமன்னர்கால அதிகாரி ஒருவரின் தொழிற் பெயராகும்: முகவெட்டிகள் முகவெட்டி, கீழ்முகவெட்டி என இரு வகையினராவர். எனவே, இங்குக் குறிப்பிட்டவர் கீழ்முகவெட்டி என்னும் தொழிலைச் செய்தவரும் தேவடி மகனுமான கமலனுவர். அருமொழி தேவ வளநாட்டு ஆர்வலக்கூற்றத்துக் கச்சிரமுடையான் பகவன் அங்கி என்னும் உதாரணத்தில் அங்கி என்பதே சம்பந்தப்பட்டவருடைய பெயராகும். பகவன் என்பது தந்தை பெயராகும். அங்கி கச்சிரம் என்ற ஊரைச்சேர்ந்தவர்; உடையான் என்பது ஆறும் வேற்றுமைப் பொருளில் வழங்குகின்றது; கச்சிரம் என்பது ஆர்வலக்கூற்றத்தைச் சேர்ந்த ஊராகும். ஆர்வலக்கூற்றம் அருமொழி தேவவளநாட்டின் ஒரு பகுதியாகும். அருள்மொழித்தேவன் என்பது முதலாம் இராசராசனுடைய இயற்பெயராகும். மன்னர்களுடைய இயற்பெயர்களும் பட்டப்பெயர்களும் சோழப் பெருமன்னர் காலத்தில் அவர்கள் ஆட்சிக்கு உட்பட்ட பகுதிகளுக்கு வழங்கப்பட்டன; அவ்வக் காலச் சோழப்பெருமன்னர் ஆட்சிக்கேற்ப, இப்பெயர்கள் காலப்போக்கில் மாற்றமுற்று வந்ததற்கும் சாசனச் சான்றுகள் உண்டு. வளநாடு என்பது இன்று தமிழ்நாட்டிலுள்ள ஜில்லா அல்லது மாவட்டத்தை ஒத்தது. கூற்றம் என்பது இன்று தமிழ்

நாட்டிலுள்ள தாலுகா அல்லது வட்டத்தை ஒத்தது; வளநாடு என்பதற்குப் பதிலாக மண்டலம் என்பதும் கூற்றம் என்பதற்குப் பதிலாக நாடு, கோட்டம் என்பனவும் வழங்கின; 'நம் ஓலை எழுதும் உய்யக்கொண்டார் வளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டுத் துளாருடையான் நாராயணன்கற்றளியான உத்தமசோழத் தமிழதரையன்', 'புரவுவரித்திணைக்களம் சயங்கொண்ட சோழமண்டலத்து எயிற்கோட்டத்து எயினுட்டு நகரம் கச்சிப்பேட்டு வெட்சிகிழான் சோலை குமரன்' என்னும் திருவாலங்காட்டுச் செப்பேடுகளிலுள்ள உதாரணங்களிருந்து இவ்வுண்மைகளை உணரலாம். வட்டத்தைக் கூறியபின்பு, ஊரை வேண்டிய இடத்திற் சிறப்பித்துக் கூறும் பகுதி இடம் பெற்றதையும் மேலே காணலாம். உத்தம சோழத் தமிழதரையன் என்ற பட்டப்பெயர் கற்றளியென்ற இயற்பெயரைத் தொடர்ந்து வந்துள்ளது. மாவட்டம் கூறப்படுவதற்கு முன்பே, 'நம் ஓலை எழுதும்' எனத் தொழில் அல்லது புரவுவரித்திணைக்களம் எனத் தொழில் செய்யும் இடம் குறிக்கப்படுவதைக் கவனிக்கலாம்; நாள் - மாதம் - ஆண்டு என்ற முறையிலே திகதியைக் குறிப்பது ஆங்கில முறையைத் தழுவிய தற்காலத் தமிழ் முறையாகும்; ஆண்டு - மாதம் - நாள் என்பதே பழைய தமிழ் முறையாகும். பிற்காலப் பாண்டியர் சாசனங்களிலே ஆட்சியாண்டு – மாதம் (ஞாயிறு) – நாள் என்ற முறை காணப்படுகின்றது.

# சாசனத்துத் தமிழ் இலங்கை

ஈழநாடு தமிழ்நாட்டுக்கு அண்மையில் அமைந்துள்ளது. இந்தியாவின் ஏனைய பகுதிகளும் உலகின் ஏனைய பகுதிகளும் ஈழ நாட்டிலிருந்து தூரத்திலேயே அமைந்துள்ளன. தமிழ்நாட்டுக்கும் ஈழநாட்டுக்குமிடையிலான தொடர்பு பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் பழமையுடையதாக இருக்கவேண்டும். நாகரிக வாழ்வில் மிகவும் பின்தங்கிவிட்ட இனமாக இலங்கையில் வாழும் வேடர், இலங்கையின் ஆதிப் பூர்வகுடிகளாக இருக்கவேண்டும் என்பது இன்று பொதுவாக ஏற்கப்படுகின்றது. வேடர் இந்தியாவிலிருந்து வந்தவர்களா என்பதைப்பற்றி ஒன்றும் நிச்சயமாகக் கூறமுடியாது; சிங்களவரும் தமிழரும் இலங்கையில் நீண்டகாலமாக வாழ்ந்துவருகின்றனர்; சிங்களவர் பேசும் மொழி வட இந்திய மொழிகளின் இனமொழியாகும். சிங்களவர் தமிழரிலும் அதிக அளவு வரலாற்றுணர்ச்சியுடையோராக வாழ்ந்திருக்கின்றனர். மகாவமிசம், சூலவமிசம் என்பன சிங்களவருடைய இரண்டாயிரமாண்டுக்கு மேலான பாரம்பரியத்தைத் தொடர்ச்சியாக எடுத்துக் கூறும் வரலாற்றமிசம் பொருந்திய நூல்களாகும்; காலத்துக்குக்காலம் பௌத்த பிக்குகள் மகாவிரையின் வரலாற்றைக்கூறும் நோக்கத்தை மையமாக வைத்துப் பாளி மொழியிலே பாடிவந்துள்ளார்கள். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகச் சிங்களச் சாசனங்கள் தொடர்ச்சியாகப் பொறிக்கப்பட்டுவந்துள்ளன. சிங்கள இனத்துக்கு இப்பெருமைகள் உண்டு. பௌத்த மதம் அது தோன்றிய நாட்டில் அழிந்து அங்கு இக்காலத்திலேயே

சிறிது மறுமலர்ச்சி பெற்றுவருகின்றது; பௌத்த மதமும் காலப்போக்கிலே தேரவாத பௌத்தம், மகாஞான பௌத்தம் என்று இரண்டு பெரும் பிரிவுகளாக அமைந்தது. தேரவாத பௌத்தம் பழமையைப் பேணிவந்த பௌத்தம் எனவும் மகாஞான பௌத்தம் காலத்தால் ஏற்பட்டுவந்த மாற்றங்களை அனுசரித்து வந்த பௌத்தம் எனவும் சுருக்கமாகக் கூறலாம். தேரவாத பௌத்தத்தைப் போற்றிவந்த இலங்கை, பர்மா, தாய்லாந்து முதலிய நாடுகளிலே இலங்கையே அவ்வகைப் பௌத்தத்தை தூயமுறையிலே பேணி வருகின்றது. இன உணர்ச்சி மிகுந்துள்ள இக்காலத்திலே சிங்கள மக்களிலே ஒரு சாரார் இலங்கை சிங்களவருக்கு மட்டும் உரிய நாடு என்று காட்ட முனைகின்றனர்; தமிழருள் ஒரு சாரார் தமிழரே இலங்கையின் பூர்வ குடிகள் எனச் சாதிக்க முயல்கின்றனர்.

இலங்கை வரலாற்றைப் பற்றிச் சமீப காலத்திலே எழுந்துள்ள நூல்கள் கட்டுரைகள் என்பனவற்றிலும் அவற்றைப்பற்றி யெழுந்துள்ள விமரிசனங்களிலும் தமிழர் - சிங்களவர் பிரச்சினை தலைதூக்குவதைக் காணலாம். வரலாற்றாசிரியர் ஏற்கமுடியாத சான்றுகளைக் காட்டி இலங்கையிலே தமிழருடைய தொன்மையை ஒரு சாரார் நிறுவ முயற்சிக்கின்றனர். சான்றுகள் வலுவற்றன எனக்காட்டமுயலும் அறிஞர்களைத் தமிழ்ப் பற்றற்றவர்களாக அவர்கள் இகழுகின்றனர். மறுபக்கத்தில், சிங்களவருக்குத் தமிழரோடு ஏற்பட்ட தொடர்புகள் சிங்களவருடைய பழைய நூல்கள், ஆவணங்களிற் குறிக்கப்பட்டபோதிலும், சிங்கள அறிஞர்கள் சிலர் தம்முடைய அறிவாற்றல்களைப் பயன்படுத்திப் புதிய விளக்கங்கள் தந்து தமிழருக்குத் தரவேண்டிய இடத்தையும் மறுக்கின்றனர்; வரலாற்றுண்மை புதிய சான்றுகளைக் கொண்டு நிறைவெய்துதல் வேண்

டும் என்ற நோக்கம் மறக்கப்பட்டுவிடுகின்றது; தம்ம வருள் ஒரு சாராரை மகிழ்விக்க வேண்டும் என்ற நோக் கத்திலே தாம் பிறருடைய நகைப்புக்கிடமாவதை அவர்கள் உணர்வதாகத் தெரியவில்லை.

இவற்றைப் பற்றி ஆராய்வது, இங்கு நோக்க மன்று. சாசனச் சான்றுகளை மட்டும்கொண்டு இலங் கையிலே தமிழர் செல்வாக்குப் பெற்றிருந்தமையைக் கூறுவதே இங்கு நோக்கமாகும். இலங்கைச் சாசனங் கள் சிங்களம், பாளி, சங்கதம், தமிழ் என்னும் மொழி களிலேயே பெரும்பாலும் அமைந்துள்ளன. பிறமொழிச் சாசனங்களிலே தமிழரைப்பற்றிய குறிப்புகள் உண்டு. ஆனால், இங்கு இலங்கைத் தமிழ்ச்சாசனங்கள் எவ்வெப் பிரதேசங்களிலே காணப்படுகின்றனவென ஆராயப்படு கின்றது. தமிழர் குறிப்பிட்ட தொகையினராகவாவது வாழாத பகுதிகளிலே தமிழ்ச்சாசனங்கள் காணப்படா. இவ்வாறு கூறுவதினாலே தமிழர் குறிப்பிட்ட தொகை யினராகக் காணப்பட்ட இடங்களிலெல்லாம் தமிழ்ச் சாசனங்கள் இருந்திருக்கவேண்டுமெனக் கொள்ளமுடி யாது. ஆனால் தமிழ்ச் சாசனங்கள் காணப்படும் இடங் களிலே, தமிழர் ஒரளவு செல்வாக்குடன் அச்சாசனங் கள் எழுந்த காலத்திலாவது வாழ்ந்திருப்பரெனக் கூற லாம். சாசனங்கள் பலவாக, நீண்ட காலப் பிரிவுக்குரி யனவாகக் காணப்பட்டால், தமிழர் அப்பிரதேசத்தில் நீண்ட காலம் வாழ்ந்தனரெனக் கொள்ளலாம். இலங் கையின் எல்லாப் பகுதிகளிலும் சிங்கள மொழிச் சாச னங்கள் காணப்படுகின்றன. சிங்களவர் இலங்கையின் எல்லாப் பகுதிகளையும் ஒரு காலத்தில் ஆண்டிருக்கின் றனர் அல்லது இலங்கையின் எல்லாப் பகுதிகளிலும் ஒரு காலத்தில் வாழ்ந்திருக்கின்றனரெனக் கொள்ள வேண்டும். சிங்கள மொழிச் சாசனங்கள் ஆயிரக்கணக் கிலே கிடைத்துள்ளன; தமிழ்மொழிச் சாசனங்கள்

நூற்றுக்கு மேற்பட்டன, கண்டுபிடிக்கப்பட்டுள்ளன; எல்லாச் சாசனங்களும் இதுவரையிலே அறியப்பட்டுள்ளனவெனக் கூறமுடியாது. இந் நிலைமை சிங்களம் தமிழ் முதலிய அனைத்து மொழிச் சாசனங்களுக்கும் பொருந்தும். சாசனங்கள் சில, இன்றும் கண்டுபிடிக்கப் பட்டுவருகின்றன.

கடந்த மூன்று ஆண்டுகளுக்கு முன்பு இலங்கைத் தமிழ்ச்சாசனங்களை ஆராயத் தொடங்கியபோது ஒரு பிரச்சினை தோன்றியது; இலங்கைப் புதைபொருளாராய்ச்சித் துறைத் திணைக்களத்திலேயுள்ள தமிழ்ச் சாசனங்களை அட்டவணைப் படுத்திப் பார்த்தபோது எண்பத்தைந்து சாசனங்களையே காணக்கூடியதாயிருந்தது. அங்கு தமிழ்ச் சாசனங்கள் தனியாகப் பிரித்து வைக்கப்பட்டிருக்கவில்லை. தமிழ்ச்சாசனங்கள் பல, கண்டெடுக்கப்பட்ட இடங்களைப் பற்றியும் குறிப்புகளில்லை; சாசனங்கள் எழுந்த இடங்கள் சிலவற்றைச் சாசனங்களிலுள்ள அகச் சான்றுகளைக்கொண்டே அறியவேண்டியிருந்தது. சாசனங்கள் சிலவற்றில் அத்தகைய அகச் சான்றுமில்லை புதைபொருளாராய்ச்சித் திணைக்களம் குறிந்துவைத்திருக்கும் இலக்கங்களைக்கொண்ட சாசனங்கள் எவையெவை அத்திணைக்களத்திலுள்ளனவெனக் கண்டுபிடிப்பதே வில்லங்கமாக இருக்கின்றது. இதுவரையிலே வெளிவந்துள்ள சாசனங்கள் எவையெவை என்பதுதானும் சாசனங்களை வாசித்தே அறியவேண்டியுள்ளது.

முன்பு இலங்கையிலே கண்டுபிடிக்கப்பட்ட பழைய தமிழ்ச் சாசனங்கள் வாசிப்பதற்காக இந்தியாவுக்கு அனுப்பப்பட்டன. இவை, இலங்கையிலே கண்டுபிடிக்கப்பட்டதை இலங்கைப் புதைபொருளாராய்ச்சி

ஆண்டறிக்கை[1] குறிப்பிடுவதுண்டு: சில இலங்கைத் தமிழ்ச்சாசனங்களைச் சென்னைச் சாசனவியல் அறிக்கையே[2] குறிப்பிட்டுள்ளது. சில சாசனங்களைப்பற்றி இவையிரண்டும் குறிப்பிடுகின்றன. 1911 - 12ல், பெல் என்பவர் நாற்பத்தெட்டு இலங்கைத் தமிழ்ச் சாசனங்களைக் குறிப்பிட்டுள்ளார்.[3] தென்னிந்தியச் சாசனவியலாளரான கிருஷ்ண சாஸ்திரி இச்சாசனங்களைப்பற்றி எழுதிய குறிப்புகளும் இப்பிரசுரத்திலே இடம்பெற்றன. தென்னிந்தியச் சாசனங்களின் நான்காம் தொகுதியை 1923ம் ஆண்டு பதிப்பித்த கிருஷ்ணசாஸ்திரி அந்நாலின் இறுதியிலே இருபத்தெட்டு இலங்கைத் தமிழ்ச் சாசனங்களை வெளியிட்டுள்ளார். இலங்கைப் புதைபொருளாராய்ச்சித்துறைத் திணைக்களத்திலே சாசனங்கள் கண்டுபிடிக்கப்பட்ட ஆண்டுகளைக் குறிப்பிடும்போது 1911க்குப் பிந்திய ஆண்டுகளையே குறிப்பிடுகிறார்கள். பெல் குறிப்பிட்ட நாற்பத்தெட்டுச் சாசனங்களிற் சில, பிந்திய ஆண்டுகளிற் கண்டுபிடிக்கப்பட்டனவாக அவர்களாற் குறிப்பிடப்படுகின்றன. வேறு சிலவற்றுக்குக் கண்டுபிடித்த ஆண்டு குறிப்பிடப்படவில்லை; பெல் குறிப்பிட்ட மிகுதித் தமிழ்ச் சாசனங்களைப்பற்றி அறிய முடியவில்லை; அந்த நாற்பத்தெட்டில் இருபத்தெட்டையே கிருஷ்ணசாஸ்திரி வெளியிட்டிருக்கக்கூடுமாயினும் மிகுதிக்கு என்ன நடந்ததெனை நிச்சயிக்கமுடியவில்லை.

புதைபொருளாராய்ச்சித்துறைத் திணைக்களத்திலுள்ள சாசனங்கள் மட்டுமே இங்கு ஆராய்ச்சிக்கு எடுத்

---

1. Archaeological Survey of Ceylon, Annual Report.
2. Madras Epigraphical Report.
3. Bell, H. C. P. - Tamil Inscriptions, A. S. C. A. R. 1911-12.

துக்கொள்ளப்படுகின்றன. அங்கு சாசனங்களுக்கு வழங்கிய எண்களே இங்கும் வழங்கப்படும். தமிழ்ச் சாசனங்களை நன்கு பதிப்பித்தவர்கள், ஆராய்ந்தவர்கள் பற்றியும் கூறப்படும். அதற்கு 'இலங்கைச் சாசனவியல் பற்றி எழுதியவை'[4] என்ற கட்டுரை பயன்படுத்தப்படுகின்றது. இலங்கைத் தமிழ்ச் சாசனங்கள் பெரும்பாலும் கல்வெட்டுக்களாகக் காணப்படுகின்றன. இலங்கைத் தமிழ்ச் செப்பேடுகளும் சில உள. புதைபொருளாராய்ச்சித்துறைத் திணைக்களம் இலங்கையின் பழைய வரலாற்றுச் சான்றுகளாகக் கிட்டதட்ட கி. பி. 1500 க்கு முந்திய ஆவணங்களிலேயே கருத்தைச் செலுத்துகின்றது. கி. பி. 1500 க்குப் பிந்திய ஆவணங்கள் இலங்கைத் தொல்லாவணக் களரியிலே[5] சேகரிக்கப்படுகின்றன. ஆனால் கி. பி. 1500 க்கு பிந்திய கல்வெட்டுக்கள் பல, புதைபொருளாராய்ச்சித்துறைத் திணைக்களத்திலே காணப்படுகின்றன.

தமிழ்ச் சாசனங்கள் தமிழரின் பாரம்பரிய பிரதேசம் எனப்படும் வடக்குக் கிழக்கு மாகாணங்களிலேயே பெரும்பாலும் காணப்படுமென எதிர்பார்ப்பது இயல்பு. வட இலங்கை தமிழர் பிரதேசமெனவும் தென்னிலங்கை சிங்களவர் பிரதேசமெனவும் கூறப்படுவதுண்டு. யாழ்ப்பாணத்திலே சில நூற்றாண்டுகளாகத் தமிழரசு நிலவியது. எனினும் யாழ்ப்பாணத்தில் மிகச் சில சாசனங்களே கிடைத்துள்ளன. 1967 வரையில் யாழ்ப்பாணப் பகுதியிலே கிடைத்துள்ள ஒரே தமிழ்ச்சாசனமாக நயினாதீவு நாகபூசணி அம்மன்

---

4. Goonetilleke, H. A. I. Writings on Ceylon Epigraphy. Ceylon Historical Journal 1960/61.
5. Ceylon Archives.

கோயிற் சாசனம்[6] விளங்கியது. யாழ்ப்பாணத்திற் காணப்படும் கற்கள் சாசனங்கள் பொறிப்பதற்கு ஏற்றவையல்ல. யாழ்ப்பாண அரசின் சாசனமாக இதுவரையில் எதுவும் அகப்படவில்லை நயினுதீவுச் சாசனம் இன்று இந்துக் கோவிலிலே காணப்பட்டாலும் அச்சாசனத்துக்கும் அந்த இந்துக் கோயிலுக்கும் சம்பந்தம் கிடையாது. அது முதலாம் பராக்கிரமபாகுவின் சாசனமாகும். இலங்கை முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆண்ட முதலாம் பராக்கிரமபாகு ஊர்க்காவற்றுறைப் பகுதியில் நடந்த வணிகத்தை நெறிப்படுத்துவதற்காக அச்சாசனத்தைப் பொறித்துள்ளான். காலம் மாறி எழுத்தை விளங்கிக் கொள்ளமுடியாத நிலையேற்பட்டபோது இச்சாசன மிருந்த தனிக்கல் கோவிலைப் பற்றிய செய்தி ஏதோ கூறுவதாகக் கருதப்பட்டுக் கோவிலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கவேண்டும்.

மன்னார் மாவட்டத்திலுள்ள சில பகுதிகள் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தவை. புதைபொருளாராய்ச்சித்துறைத் திணைக்களத்திலே மூன்று சாசனங்கள் கிடைத்துள்ளன[7] இரண்டு சாசனங்கள் மன்னார்க் கச்சேரி நிலத்திற் காணப்படுபவை. அவை இரண்டும் உடைந்த சாசனத் துண்டுகளாகும். அத்துண்டுகள் திருக்கேதீச்சரப் பகுதியிலிருந்து கொண்டுவரப்பட்டனவாக நம்பப்படுகின்றன. அவை கூறும்பொருளை அனுமானிப்பதற்குத் தேவையான எழுத்துக்கள் அந்தச் சாசனங்களிலில்லை. மூன்றுவது சாசனம் முருங்கன் பகுதியிலே கட்டுக்கரைக்குளத்துக்கு அண்மையிலே கண்டெடுக்கப்பட்டது. தென்னிந்தியச் சாசனங்கள் நான்காம்

---

6. 2067 of 1949.
7. 353 of 1926; 354 of 1926; 2024 of 1947.

தொகுதியிலே[8] மாதோட்டச் சாசனமொன்று வெளி யிடப்பட்டுள்ளது. மாதோட்டம் என்பது மன்னார் மாவட்டத்திலிருந்த பழைய பிரபலமான துறைமுகமா கும். திருக்கேதீசுவரம் இத்துறைமுகப் பட்டினத்தி லேயே இருந்தது; திருஞானசம்பந்தரும் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் இத் தலத்தைப் பாடியுள்ளனர். சாசனத் தின் மேற்பகுதிமட்டுமே கிடைத்துள்ளது. முதலாம் இராசேந்திரசோழனுடைய மெய்க்கீர்த்தியில் ஒரு பகுதி ஒரு பக்கத்திற் காணப்படுகின்றது. கல்லின் மற்றப் பக் கத்திலுள்ள சாசனம் வரலாற்றுக்குப் பயன்படுகின்றது. மாதோட்டம் சோழப் பெருமன்னர் காலத்திலே இராச ராசபுரம் என வழங்கப்பட்டது, இச்சாசனத்திலிருந்து தெரியவருகின்றது. மாதோட்டத்துக்கோவில் இராமீசு வரம் என்று இச்சாசனத்திற் குறிக்கப்படுகின்றது. இரா சேந்திரசோழனுடைய பணிமகன் காசுகொடுத்து நிவந் தத்துக்கான ஒழுங்கு செய்த நிகழ்ச்சி கூறப்படுகின்றது.

வவுனியா மாவட்டத்திலே பழைய தமிழ்ச் சாசனங்கள் அதிகமாகக் கிடைக்கவில்லை. வவுனியா மாவட்டம், திருகோணமலை மாவட்டம், அனுராதபுர மாவட்டம் என்பன சந்திக்குமிடத்திலே பதவியாக் குளம் அமைந்து காணப்படுகின்றது: பதவியாக்குளம் இன்று திருத்தப்பட்டு ஸ்ரீபுர என்ற ஊர் உருவாகி வரு கின்றது. அங்கு அண்மையிலே காணப்பட்ட ஒரு சின் னத்தைக்கொண்டு அவ்வூரின் பழைய பெயர் ஸ்ரீபதிக் கிராமம் என்று அறியப்படுகின்றது. அவ்வூரிலே ஒன் பது பழைய சாசனங்கள்[9] கண்டுபிடிக்கப்பட்டுள்ளன;

---

8. South Indian Inscriptions Vol. IV, No. 1414.
9. 2240 of 1953; 2241 of 1953; 2242 of 1953; 2234 of 1961 2435 of 1961, 2436 of 1961; 2437 of 1961; 2438 of 1961 and 2439 of 1961.

புதைபொருள்கள் புதியனவாகக் கண்டுபிடிக்கப் படுவதாக அண்மையிலும் செய்திவந்துள்ளது. புதைபொருள்களும் சாசனங்களும் பழைய சிவன்கோவிலுடன் பெரும்பாலும் தொடர்புடையனவாகக் காணப்படுகின்றன. சாசனங்கள் பொதுவாகப் பதினொன்று, பன்னிரண்டு, பதின்மூன்றும் நூற்றாண்டுகளைச் சேர்ந்தவையெனலாம். இந்த நூற்றாண்டுகளிலே பதவியாப் பகுதியிலே தமிழும் சைவமும் நல்ல நிலையிலிருந்திருக்கவேண்டும். இங்கு காணப்பட்ட சாசனங்களிலொன்று[10] வீரவலஞ்சியர் எனப்படும் திசையாயிரத்து ஐந்நூற்றுவரதாகும். திசையாயிரத்தைஞ்நூற்றுவர் என்ற வணிக குழுவினர் இந்தியத் தீபகற்பம், இலங்கை, கிழக்கிந்தியத் தீவுகள் என்பனவற்றின் பல பகுதிகளிலும் பரந்து வணிகம் செய்திருக்கின்றனர். அக்குழுவினருள் ஒரு சாரார் ஸ்ரீபதிக்கிராமத்திலுமிருந்து வணிகம் செய்தது, இச்சாசனத்திலிருந்து தெரியவருகின்றது.

கிழக்கு மாகாணம் திருகோணமலை மாவட்டம், மட்டக்களப்பு மாவட்டம், அம்பாறை மாவட்டம் என்று மூன்று பகுதிகளையுள்ளடக்கியது. யாழ்ப்பாண மாவட்டத்துக்கு அடுத்ததாக இலங்கைத் தமிழர் இன்று பெருந்தொகையாக வாழும் மாவட்டம் மட்டக்களப்பு மாவட்டமாகும். மட்டக்களப்பு மாவட்டத்தைச்சேர்ந்த தமிழ்ச் சாசனமெதுவும் இதுவரையில் வெளிவரவில்லை. மட்டக்களப்பு மாவட்டத்தைச் சேர்ந்த இந்துக்கோவில்கள் சிலவற்றிலே செப்புப் பட்டயங்கள் இருப்பதாகக் கூறப்படுகின்றது. ஆனால் இதுவரையில் அவற்றுள் எதுவும் வெளிவந்திருப்பதாக இந்நூலாசிரியர் அறியவில்லை. பழைய மட்டக்களப்பு மாவட்டம் அண்மையிலேயே

10. 2240 of 1953.

அம்பாறை மாவட்டம், மட்டக்களப்பு மாவட்டம் என இரண்டாகப் பிரிக்கப்பட்டது: இதுவரை மட்டக்களப்பு மாவட்டத்தைச் சேர்ந்தனவாக வெளிவந்த அல்லது குறிக்கப்பட்ட சாசனங்கள் யாவும் இன்றைய அம்பாறை மாவட்டத்தைச் சேர்ந்தனவாகக் காணப்படுகின்றன: அக்கரைப்பற்றைச் சேர்ந்த திருக்கோவிற் சிவன் கோவிலின் முன்பிருந்த சாசனமும்[11] அதே ஊரைச் சேர்ந்த சித்திரவேலாயுத சுவாமி கோவிற் சாசனமுமே[12] அம்பாறை மாவட்டத் தமிழ்ச் சாசனங்களாகப் புதைபொருளாராய்ச்சித் துறைத் திணைக்களத்தினரால் குறிப்பிடப்படுகின்றன:

கிழக்கு மாகாணமும் வடக்கு மாகாணமும் சந்திக்கும் கோணமாகத் திருகோணமலை மாவட்டம் விளங்கி வருகின்றது. இலங்கைத் தமிழ்ச் சாசனங்கள் காணப்படும் பகுதிகளை ஆராயும்போது திருகோணமலை மாவட்டம் தனிச் சிறப்புப் பெறுகின்றது: திருகோணமலை மாவட்டம் சாசனங்களும் பிற புதைபொருள்களும் மிகுந்து காணப்படுகின்றது. சிங்கள மொழிச் சாசனம், சங்கதமொழிச் சாசனம், பௌத்த சமய சின்னங்கள் என்பன திருகோணமலையிலே கண்டெடுக்கப்பட்டுள்ளன; இன்றும் கண்டெடுக்கப்பட்டு வருகின்றன; எனவே திருகோணமலை மாவட்டம் தமிழர் அல்லது இந்துக்கள் மட்டும் வாழ்ந்த பகுதியென்று நிரூபிக்கவியலாது. ஆனால் தமிழர் பல நூற்றாண்டுகள் காலமாகத் திருகோணமலை மாவட்டத்திலே செல்வாக்குடன் வாழ்ந்து வந்திருக்கிறார்களென்பதைச் சுலபமாக நிரூபிக்கலாம்; கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞானசம்பந்தர்

---

11. 485 of 1929.
12. 2701 of 1967.

கோணேசரைப் பாடும்போது 'குடிகளை நெருக்கிப் பெருக்கமாய்த்தோன்றும்' திருகோணமலை நகரைப் பாடியுள்ளார். திருகோணமலை மாவட்டத்தில் மட்டும் இருபத்தைந்து தமிழ்ச் சாசனங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளனவாகத் தெரியவருகின்றன. இவற்றுள்ளே பதினறு தமிழ்ச் சாசனங்கள் பௌத்த மதத் தொடர்புள்ளனவாக இருப்பது கவனிக்கப்படத்தக்கது. இந்தப் பதினறும் இராசராசப் பெரும்பள்ளி சம்பந்தப்பட்டன.[13] வெல்கம் விகாரை சோழப் பெருமன்னன் முதலாம் இராசராசனலே புதுப்பிக்கப்பட்டு இராசராசப் பெரும் பள்ளியென்று பெயரிடப்பட்டிருக்கின்றது. சோழப் பெருமன்னர் நாகப்பட்டினம் சூடாமணி விகாரத்தைப் பேணியதுபோலத் திருகோணமலை இராசராசப் பெரும் பள்ளியையும் பேணியிருக்கிறர்கள். சோழப்பெருமன்னர் காலத்திலே தமிழ் நாட்டிலே பௌத்தம் ஒடுங்கிவிட்டது. நாகப்பட்டினம் சூடாமணிவிகாரம் பிற நாட்டு வணிகருடைய தேவைக்காகவே கட்டப்பட்டது. இராசராசப் பெரும்பள்ளி உள்நாட்டுப் பௌத்தருடைய தேவைக்காகவும் பிறநாட்டு வணிகருடைய தேவைக்காகவும் கட்டப்பட்டிருக்கவேண்டும். சைவராகிய சோழப் பெருமன்னருடைய சமயப் பொறைக்கு இந்தப்பள்ளி ஒரு முக்கிய சான்று. இராசராசப் பெரும்பள்ளியின் சிதைந்த கட்டிடங்களிலே காணப்பட்ட சாசனங்களில் ஒரு சிலவே, இலங்கையிற் சோழராட்சி நிகழ்ந்த காலத்துக்குரியன

13 2230 of 1953; 2232 of 1953; 2233 of 1953; 2234 of 1953; 2235 of 1953; 2236 of 1953; 2245 of 1953; 2246 of 1953; 2247 of 1953; 2248 of 1953; 2249 of 1953. 478 of 1929; 596 of 1929; 597 of 1929; 775 of 1932; 776 of 1932.

வாகும்; ஏனைய சாசனங்கள் காலத்தாற் பிந்தியன. பள்ளியிருந்த பிரதேசத்திலே சோழப் பெருமன்னர் காலத்திலிருந்தாவது தமிழ் மக்கள் பெருந்தொகையாக வாழ்ந்துவந்திராவிட்டால், சாசனங்கள் தமிழில் எழுந்திரா. சாசனங்களுட் பெரும்பாலன, பள்ளிக்கு வழங்கப்பட்ட தானங்களைக் கூறுவன. தானங்களை வழங்கியவர்களுள் ஒரு சிலராவது தமிழ்ப் பௌத்தர்களாக இருந்திருக்கவேண்டும்; பள்ளி நிர்வாகம் தமிழ்ப் பௌத்த பிக்குகளிடம் இருந்திருக்கவேண்டும்; அல்லது தமிழிலே சாசனங்களைப் பொறிப்பதால் எவ்வித பயனுமேற்பட்டிருக்காது. திருகோணமலையிலே முதல் முதலிற் கண்டு பிடிக்கப்பட்ட தமிழ்ச்சாசனங்கள் பிரெடெரிக் கோட்டை வாசலுக்கு வலப்புறமும் இடப்புறமும் மதிற் சுவரிலே காணப்பட்டனவாகும்.[14] அவை கோணேசர் கோவிலைச் சேர்ந்த மிகப் பழைய சாசனங்களின் பகுதிகள் என்று ஒரு காலத்திலே நம்பப்பட்டன. ஆனால் அவை மிகவும் தொன்மையுடைய சாசனங்களல்ல. தம்பலகாமம் வயல் நிலத்தில் ஒரு சாசனமும்[15] அதே இடத்தைச் சேர்ந்த இடிந்த பல்மோட்டைச் சிவன்கோவிலுக்கு அண்மையில் இன்னொரு சாசனமும்[16] காணப்பட்டன. இரண்டாவது சாசனம் விசயராசேசுவரம் என்ற சிவன் கோவிலுக்கு வழங்கப்பட்ட சில தானங்களைக் குறிப்பிடுகின்றது. கந்தளாய்ப் பகுதியிலே பிராமணர் குடியிருப்பான அகரம் ஒன்று இருந்ததற்கும் இச் சாசனம் சான்றுபகருகின்றது. இந்துக்கள் பெருந்தொகையாக வாழாத பகுதியிலே பிரமதேயம் இருந்திருக்க முடியாது. கந்தளா

---

14. 346 of 1911; 347 of 1911.
15. 599 of 1930.
16. 831 of 1933
17. 2028 of 1947.

யில் இரண்டு சாசனங்கள் இருந்தன: ஒன்று[17] பௌத்தருடைய டகோபாவுக்கு அண்மையிலே இருக்கிறது. மற்றது[18] எழுத்துக்கள் தெளிவாக இல்லை. கொட்டியாரம்பற்றைச் சேர்ந்த சாசனங்கள் இரண்டும் கிடைத்துள்ளன. ஒன்று[19] ஏரியதுவுமலையிலுள்ள பாறையொன்றிலே காணப்படுகின்றது. திரிசூல அடையாளத்துக்குப் பக்கத்திலே சிவன்கோவிலொன்று குறிப்பிடப்படுகின்றது. மற்றது[20] வெருகலிலே சில நூற்றாண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட கோவிலிற் காணப்படுகின்றது.

கிழக்கு மாகாணத்துக்கு அடுத்ததாக மிக அதிக சாசனங்கள் உள்ள மாகாணம் வடமத்திய மாகாணமாகும். இலங்கையிலே மிகவும் அதிகமான சாசனங்கள் உள்ள மாகாணம் இதுவேயாகும். இந்த மாகாணம் சிங்களவருடைய பழைய இராசரட்டையாகும். கிட்டத்தட்ட ஆயிரத்தைஞ்நூறு ஆண்டுகள் வரை, இலங்கையின் தலைநகரமாக அனுராதபுரம் திகழ்ந்தது. கி. பி. பத்தாம் நூற்றாண்டு முடியும் வரையிலே அனுராதபுரம் சிங்களவருடைய தலைநகராக இருந்தவரையில் வடமாகாணத்திலே தமிழர் பெருந்தொகையாக இருந்திருந்தாலும் அவர்கள் தனியரசு அமைக்கத்தக்க வகையிலே தலையெடுத்திருக்க முடியாது. வடமத்திய மாகாணம் சிங்களவருடைய முக்கிய குடியிருப்பாக விளங்கிய காலத்திலே வடபகுதியிலே குடியேறியிருக்கக்கூடிய தமிழரைக் கட்டுப்படுத்துதல் அவர்களுக்கு வில்லங்கமாக இருந்திருக்காது. சங்க காலத்திலேயே கடற்செலவிலும் பிறநாட்டு

---

18. 2291 of 1954.
19. 896 of 1933
20. 897 of 1933.

வணிகத்திலும் ஈடுபட்டிருந்த தமிழர் தமிழ்நாட்டுக்கு இவ்வளவு அண்மையிலுள்ள இலங்கையிலே குடியேருமல் இருந்திருப்பரெனக் கொள்ளமுடியாது.

அனுராதபுரக் கால இலங்கையிலே தமிழர் குடியேற்றங்கள் இருந்திருக்கும். ஆனால் தமிழர் தனியரசு இருந்ததற்கு எவ்வித சான்றுமில்லை. இலங்கையிலே தமிழர் குடியேற்றங்கள் இரண்டுவகையான இடங்களிலே நடைபெற்றிருக்கும். தமிழ்நாட்டுக் கடற்கரைக்கு எதிர்ப் பக்கத்தில் அமைந்துள்ள யாழ்ப்பாணம், மன்னார், புத்தளம் கடற்கரைகளிலே தமிழ் மக்கள் குடியேறியிருப்பர். சிங்கள மக்கள் சிறப்பாக வாழ்ந்த பகுதிகளிலும் தமிழ் மக்கள் குடியேறியிருப்பர். வணிகம் முதலிய தொழில்கள் செய்வதற்கு இத்தகைய இடங்களே ஏற்றனவாக இருந்திருக்கும்; தென்னிந்தியப் படையெடுப்புகள் மிகப் பழைய காலத்திலிருந்தே இலங்கையிலே ஏற்பட்டுவந்தன. சோழ நாட்டவர்களும், பாண்டி நாட்டவர்களும் மாதோட்டத்தில் வந்து இறங்கி மல்வத்து ஓயா எனப்படும் அருவியாற்று வழியாக அனுராதபுரத்தை அணுகிச் சிங்கள அரசை வீழ்த்தித் தம்மரசை ஏற்படுத்தினர். சிங்கள அரசை ஆள இவ்வாறு பலமுறை முயன்ற தமிழர் நிலையாகத் தம்முடைய ஆட்சியை நிறுவமுடியவில்லை. எனினும், தமிழர் இவ்வாறு படையெடுத்து வந்தபோது தமிழ்ப்படைகளும் தமிழ்க் குடிகளும் இலங்கைக்கு வந்திருக்கவேண்டும். சிங்களவர் தம்முடைய ஆட்சியைத் திரும்பவும் ஏற்படுத்திக்கொண்டபோது, தம்முடைய நாட்டிலிருந்த தமிழர் அனைவரையும் அழித்துவிட்டனரெனக் கூறுவது உலக இயல்புக்குப் பொருந்தாது; வந்துசேர்ந்த தமிழர்களுள்ளே ஒரு பகுதியினராவது எஞ்சியிருந்திருப்பர். இத்தகையோர் காலப்போக்கிலே சிங்களவராக மாறியிருக்க வேண்டும். உடற் கூறுகளைக்கொண்டு மக்களினங்களை வகுக்கும்

அறிஞர்கள் இலங்கைத் தமிழரும் சிங்களவரும் முற்றிலும் வேறுபட்ட இனத்தவர்கள் என்று கூறமாட்டார்கள். பேசும் மொழியே தமிழரையும் சிங்களவரையும் பிரித்து நிற்கிறது. மொழியோடு பாரம்பரியம் பண்பாடு என்பன நெருங்கிய தொடர்புடையனவாதலாலே இவர்களுக்கிடையிலான வேறுபாடு பெரியது போலத் தோன்றுகின்றது. சில ஆண்டுகளுக்கு முன்பு இலங்கையிலே சிங்கள 'ஸ்ரீ' எழுத்துக்கு எதிராகத் தமிழர் நடத்திய போராட்டம் ஒருவகையிலே விநோதமானது; கிரந்தலிபி என்பது சங்கதமொழியை எழுதுவதற்காகத் தமிழ்நாட்டுப் பிராமணர் முதலியோர் வழங்கிய எழுத்து முறையாகும். அது சங்கதமொழியைச் சிறப்பாக எழுதுவதற்குப் பயன்பட்டபோதும் தென்னிந்தியாவுக்கே சிறப்பாக உரியது. திருவாங்கூர்ப் புதைபொருளாராய்ச்சி முதலாம் வெளியீட்டில், கோபிநாதராவ் அவர்கள் தமிழ் — கிரந்த எழுத்துமுறை பற்றிய தம்முடைய கட்டுரையிலே கி.பி. ஏழாம் நூற்றாண்டுப் பல்லவ சாசனங்களிலே 'ஸ்ரீ' எழுதப்பட்ட முறையைக் காட்டியுள்ளார். அதற்கும் சிங்கள 'ஸ்ரீ'க்கும் பெரிய வேறுபாடு இல்லை. பல்லவர் காலத் தமிழ் நாட்டுச் 'ஸ்ரீ' இலங்கைக்கு வந்து சிங்கள 'ஸ்ரீ'யாக நிலைபெற்றுவிட்டது. தமிழ்நாட்டிலிருந்து சிங்களவர் பெற்ற 'ஸ்ரீ' வடிவத்துக்கெதிராகவே தமிழர் போராட்டம் நடத்தியுள்ளனர்.

அனுராதபுர மாவட்டத்திலே ஏழு தமிழ்ச் சாசனங்கள் கிடைத்துள்ளன.[20a] அவற்றுள் இந்து சமயம், பௌத்த சமயம் என்ற இரண்டு சம்பந்தமானவையும் உள; இவற்றுள் அனுராதபுரம் இந்து அழிபாடுகளிடையே காணப்பட்ட மூன்று தமிழ்ச் சாசனங்கள்

20a 112, 113; 418; 419; 420; 1408 of 1934; 2141 of 1950.

தென்னிந்தியச் சாசனங்கள் நான்காம் தொகுதியிலே வெளியிடப்பட்டுள்ளன. நான்கு நாட்டார் என்ற தென்னிந்திய வணிக குழுவினர் பௌத்தப்பள்ளியொன்றினை அனுராதப்புரத்திலேயமைத்து அதனை ஓம்புவதற்கு வசதிகள் செய்துள்ளனர் [21] இந்தச் சாசனத்திலே தமிழ்ச் செய்யுளொன்று இடம்பெற்றுள்ளதை மயிலை. சீனி. வேங்கடசாமி 'சாசனச் செய்யுள் மஞ்சரி'யென்ற தம்முடைய நூலிலே காட்டியுள்ளார். ஈழத்துப் பூதந்தேவனார் என்ற சங்ககாலப் புலவர் ஈழநாட்டைச் சேர்ந்தவரெனக் கூறப்படுகிறது. அவரை நீக்கிவிட்டால், இன்று நமக்குக் கிடைக்கிற மிகப்பழைய இலங்கைத் தமிழ்ச் செய்யுளொன்று 'போதிநிழலமர்ந்த புண்ணியன்' என்று தொடங்கும் இச்செய்யுளைக்கூறலாம்; இலங்கையிலெழுந்த இச்செய்யுள் பௌத்த சமயத் தொடர்புடையதாக இருப்பது கவனிக்கத்தக்கது. வணிகர் குழுவினர் பௌத்தராக இருந்திருக்கலாம். அல்லது அவர்கள் சிங்கள மக்களுக்குப் பௌத்த மதத்திலுள்ள ஈடுபாட்டைக் கண்டு இதை ஒரு 'வணிக தந்திர'மாகச் செய்திருக்க வேண்டும் அனுராதப்புரத்திலுள்ள தமிழ்ச் சாசனங்களின் காலம் கி. பி. ஒன்பதாம், பத்தாம் நூற்றாண்டுகளாக இருக்கவேண்டும். சிங்கள மன்னர்கள் கூலிப் படைகளாகத் தமிழ்ப் படைகளை அனுராதபுரத்திலே வைத்திருக்கும் வழக்கம் தோன்றிவிட்டது. மேலும் தமிழ்நாட்டிலே வலிமைவாய்ந்த அரசுகள் தோன்றத் தொடங்கிவிட்டன. பழைய தென்னிந்தியப் படையெடுப்புகளிலே தனிப்பட்டோர் படைதிரட்டிவந்து சிங்கள அரசைக் கைப்பற்றி ஆளமுயன்றனர். கி. பி. எட்டாம் நூற்றாண்டில் நிலைமை மாறுகின்றது; பாண்டிய அரசு தன்னுடைய ஆட்சியை இலங்கைக்கு விஸ்தரித்

---

21. S. I. I. Vol. IV, No. 1405.

துக் கொள்ள முயல்கின்றது. ஸ்ரீமாற ஸ்ரீவல்லபன் என்பவனே இலங்கைமேலே படையெடுத்த முதலாவது தமிழ் மன்னனுவான். பாண்டியர் செல்வாக்கு அயல் நாடான இலங்கையிலே பெருகிவந்தது. தமிழர் இலங் கையிலே பெருந்தொகையாகக் குடியேறினர். அதனுலே தமிழ்ச் சாசனங்கள் தோன்றத் தொடங்கின. இந்து அழிபாடுகளிடையிலே காணப்பட்ட வேறு இரண்டு கல் வெட்டுகள்[22] குமாரகணம் என்ற வணிக குழுவினர் பொலிசைக்குப் பொருள்கொடுத்துக் கோவிலிலே திரு வமுதுக்கும் நந்தாவிளக்குக்கும் ஒழுங்கு செய்ததைக் குறிப்பிடுகின்றன. பௌத்தப் பள்ளிக்கு நிலதானம் செய்யப்பட்டதை ஒருசாசனம் கூறுகின்றது [23]

புலத்திய நகரம் எனப்பட்ட பொலனறுவையை உள்ளடக்கிய மாவட்டத்திலும் தமிழ்ச்சாசனங்கள் பல கிடைத்துள்ளன சோழப்பேரரசின் வளர்ச்சி அனுராத புரத்தின் அழிவுக்கு வழிகோலியது. தமிழ்நாட்டின் பிற பகுதிகளையும் பிற அயல்நாடுகளையும் வென்றுவிட்ட சோழமன்னர், பகைவராகிய பாண்டியருக்கு உதவிய இலங்கையின்மேலே கவனத்தைச் செலுத்தினர்: முத லாம் இராசராசன் காலத்திலே சோழர் முயற்சி பய னளிக்கத் தொடங்கியது. அனுராதபுரத்தையுள்ளிட்ட இலங்கையின் வடபகுதியை இராசராசன் சுலபமாக வென்முன். சிங்கள மன்னர் தென்னிலங்கைக்கு ஓடி ஒளித்தனர். நாட்டின் இயற்கையமைப்புச் சிங்களவரை அடக்குவதற்குத் தடையாக அமைந்தது. முதலாம் இராசேந்திரன் அந்தத் தடையையும் மீறி வென்றுன். இலங்கை முழுவதையும் சோழராட்சிக்குக் கீழ்க்கொண்டு

---

22. S. I. I. Vol. IV, No. 1403, 1404.
23. 1408 of 1934.

வந்தான்; எனினும் சிங்களவர் உறுகுணைப் பகுதியிலே படைதிரட்டிச் சோழப் பெருமன்னருக்குத் தலைவலி கொடுத்துக்கொண்டிருந்தனர். சோழப்படைகள் இலங்கைக்குப் பலமுறை வரவேண்டியிருந்தது; சிங்களவருடைய பழைய தலைநகரம் படையெடுப்புகளால் அழியத் தொடங்கியது. உறுகுணைச் சிங்களவரை அடக்குவதற்குத் தலைநகர் மாற்றம் உதவும் என்று கருதிய சோழர் அனுராதபுரத்துக்குத் தென்கிழக்குத் திசையிலே புலத்திய நகரம் என்ற தலைநகரைக் கட்டியெழுப்பினர்; இலங்கையிலே சோழராட்சி ஒழிந்த பின்பும் புலத்திய நகரமே பொலனறுவையென்ற பெயருடன் இலங்கையின் தலைநகராக நிலவியது; கிட்டத்தட்ட இரண்டு நூற்றாண்டு காலம் பொலனறுவை தலைநகராக விளங்கியது. சோழப்பெருமன்னர் பொலநறுவையிலிருந்து சிலகாலம் ஆட்சிபுரிந்தனர். சோழராட்சிக்குப் பின்பும் இலங்கையிலே தமிழர் செல்வாக்குக் குறையவில்லை. சிங்களவர் சோழப்பெருமன்னரிடமிருந்து தமது ஆட்சியைப் பாதுகாத்துக்கொள்வதற்காகப் பாண்டியரின் நெருங்கிய நண்பராயினர். அரசகுலங்களுக்கிடையிலே மணவினைத் தொடர்புகள் ஏற்பட்டன; அதனாலே பிற தொடர்புகளும் வளர்ந்தன. பொலனறுவைப் பகுதியிலே பத்துத் தமிழ்க் கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.[24] சோழப்பெருமன்னர் காலத்திலே பொலனறுவையிலே சிவன் கோவில்கள் கட்டப்பட்டன; ஐந்து தமிழ்க் கல்வெட்டுகள்[25] சிவன் கோவில்களிலேயே காணப்படுகின்றன. இலங்கையிலுள்ள பெரிய தமிழ்க் கல்வெட்டுகளுள் ஒன்று வேளைக்காரருடைய சாசனமா

---

24. 2 of 1921; 263; 272; 273; 274; 446; 509 of 1929; 1280 of 1943; 1283 of 1934; 2408 of 1960.

25. 272; 273; 274; 1280 of 1934; 1283 of 1934.

கும்;[26] வேளைக்காரர் என்ற படைப்பிரிவு சோழநாட்டைச் சேர்ந்தது. 'உயிரையும் கொடுத்து மன்னனைக் காப்போம்' என்று வீரசபதம் செய்த படையினரே வேளைக்காரரெனப் பட்டனர். இலங்கையிலே சோழ ராட்சி ஒழிந்தபின்பும் வேளைக்காரப் படை செல்வாக்குடன் விளங்கியது. முதலாம் விஜயபாகுவின் ஆட்சி முடிந்தபின்னர், இலங்கையிலே குழப்பம் மிகுந்தது. புத்தர் பெருமானின் புனித தந்தத்தை விலைமதிப்பற்ற பொருளாகப் பேணிவந்த பௌத்த பிக்குகள் அத்தொடர்பில் வேளைக்காரப் படையை வேண்டியதும் வேளைக்காரப் படை அவ்வேண்டுகோளை மனமுவந்து ஏற்றதுமாகிய விபரங்கள் இச்சாசனத்திலே கூறப்பட்டுள்ளன. சிவன்கோவிலொன்றிலுள்ள நான்கு தூண்களிலே காணப்படும் சாசனங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொருவருடைய பெயர் பொறிக்கப்பட்டுள்ளது.[27] ஏன் பொறிக்கப்பட்டதென்பது குறிக்கப்படவில்லை. ஒவ்வொரு தூணையும் ஒவ்வொருவர் நாட்டியிருக்கவேண்டும். கற்பகம் என்னும் பெண்மணி ஒரு தூணை நாட்டியுள்ளாள். முதலாம் இராசேந்திரனுடைய மெய்க்கீர்த்தியின் ஒரு பகுதி ஒரு சாசனத்திற் கிடைத்துள்ளது.[28] சிவன்கோவிலிலுள்ள கல்வெட்டொன்று அதிராசேந்திரனுடைய மூன்றுவது ஆண்டு மெய்க்கீர்த்தியைக் கொண்டுவிளங்குகின்றது. அவனுடைய மெய்க்கீர்த்தி 'திங்களேர் மலர்ந்து வெண்குடை மண்டல மன்னுயிர் தொறும்' என்று தொடங்குகின்றது. மெய்க்கீர்த்திக்குப் பின்புள்ள பகுதி நன்கு வாசிக்கப்

---

26. 2 of 1921.
27. S. I. I. Vol IV, No. 1393
28. S. I. I. Vol IV, No. 1394.

படவில்லை. மாணிக்கம் என்ற சிறப்புப் பெயராலே குறிப்பிடப்படும் தேவரடியார் பலர் இடம்பெறுகின்றனர்.

வடமேல் மாகாணம் ஓரளவு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்தது. கலிங்கத்து மாகன், தமிழ்ப்படைகள் முதலிய இந்தியப் படைகளோடு வந்து வட இலங்கையைக் கைப்பற்றி ஆளத் தொடங்கியதும் இலங்கை வரலாற்றிலே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த நிகழ்ச்சி இடம் பெறுகின்றது. சிங்கள மன்னர்கள் இலங்கையின் தென்மேற்றிசையை நோக்கி இடம்பெயருகின்றனர். சிங்கள மன்னர் தலைநகரம் தென்மேற்றிசையிலே மாறி மாறிச் செல்கின்றது. சிங்கள மக்களும் தம்மன்னரோடு அத்திசைக்கே இடம்பெயர்ந்து செல்கின்றனர். தமிழர் படைகளின் தாக்குதல்களுக்கு எதிர்நிற்க முடியாமலும் தமிழர் படைகள் வட இலங்கையிலிருந்த நீர்நிலைகளின் அணைகளைச் சிதைத்து மலேரியா தோன்ற வழிவகுத்ததாலுமே சிங்களவர் தென்மேற்றிசைக்கு இடம்பெயர வேண்டி வந்ததென்று இன்றையச் சிங்கள வரலாற்றறிஞர் சிலர் கூறுகின்றனர். நீர்நிலைகள் சிதைந்ததும் மலேரியா தோன்றியதும் சிங்களவர் தென்மேற்றிசைக்கு இடம்பெயரத் தொடங்குமுன்பா அல்லது இடம் பெயர்ந்தபின்பா என்று தீர்மானிக்கக்கூடிய சான்றுகள் இன்று கிடைக்கவில்லை. ஆனால் அரசதானிப் பெயர்ச்சி மாகனுடைய படையெடுப்போடுதான் நிகழ்கின்றது. மாகனுடைய காலத்திற்கு முன்பு பல தமிழர் படையெடுப்புக்கள் நிகழ்ந்துள்ளன. படையெடுத்து வருபவர்கள் அழிவுகள் செய்வது இயல்பு. முந்திய தமிழர் படையெடுப்புகளாலே சலிப்படைந்த சிங்களவர் மாகனுடைய படையெடுப்புக் காலத்திலே வட இலங்கையிலே வாழும் எண்ணத்தைக் கைவிட்டிருக்கவேண்டும்.

ஆனால் மாகன் தமிழனல்லன் என்பது கவனிக்கப்பட வேண்டும். வடமேல் மாகாணத்திலே குருணாகல், புத்தளம் என்னும் இரு மாவட்டங்கள் உள.

குருணாகல் மாவட்டத்திலே இயற்கையரண் பொருந்திய இடங்கள் சிங்கள மன்னர் தலைநகர்களாக வருகின்றன. குருணாகல், தம்பதேனியா என்னும் இடங்கள் சிங்களவர் அரசதானிகளாக இருந்துள்ளன. இடம் பெயர்ந்து சென்ற சிங்கள மக்களும் மன்னரும் தமிழ்த் துவேசிகளாக இருக்கவில்லையென்பது கவனித்தற்குரியது. தம்பதேனியாவில் ஆட்சிசெய்த பண்டித பராக்கிரமபாகு தமிழ்ப்புலவரை ஆதரித்துள்ளான். குருணாகல் மாவட்டத்திலே ஏழு தமிழ்ச் சாசனங்கள் கிடைத்துள்ளன.[29] முதல் மூன்று சாசனங்களும் புதுமுத்தாவை என்ற இடத்திலே கிடைத்துள்ளன. சோழன் குலோத்துங்கன் மகளும் விசாகப் பெருமான் மனைவியுமானவள் திருநந்தாவிளக்கு வைத்ததைப்பற்றி இச்சாசனங்களுள் ஒன்று கூறுகின்றது. பண்டுவஸ்நுவர என்ற இடத்திலிருந்து இரண்டு சாசனங்கள் கிடைத்துள்ளன. அவற்றுள் ஒன்று பராக்கிரமபாகு நிஸ்சங்கமல்லனுடைய ஐந்தாவதாண்டிலே மதிமான பஞ்சரனென்பவன் புத்தர் பெருமான் கோவில், இனிய உணவுச்சாலை, சயித்தியம், பராக்கிரம அதிகாரிப் பிரிவேண எனபனவற்றை அமைத்ததைப்பற்றிக் கூறியுள்ளது. பிற்காலப் பாண்டியர் சாசனங்களைப்போல, இச்சாசனமும் வானியற் குறிப்புகளைக் கொண்டது. இன்னொரு சாசனம் தமிழ்வணிகனொருவனைக் குறிப்பிடுகின்றது; இவற்றிலிருந்து சிங்களவர் தென்மேற்றிசைக்குப் புலம்பெயர்ந்தபோது தமிழ

29. 473; 474; 475; 1980 of 1940, 2200 of 1951; 2653 of 1966, 2201 of 1951.

ருள் ஒரு சாராரும் அவருடன் புலம்பெயர்ந்து உடன் வாழ்ந்து வந்திருக்கின்றனரென்ற உண்மை புலப்படுகின்றது.

புத்தளம் மாவட்டத்திலே தமிழ்பேசும் மக்கள் குறிப்பிடத்தக்க பெருந்தொகையினராக வாழ்ந்து வருகின்றனர். தென்பாண்டி நாடாகிய திருநெல்வேலி மாவட்டம், கன்னியாகுமரி மாவட்டம் என்பனவற்றின் கிழக்குக் கரையிலிருந்து தமிழ்பேசும் மக்கள் புத்தளத்திலும் சிலாபத்தின் கரையோரப் பகுதிகளிலும் குடியேறியிருக்கவேண்டும். ஆனால் இம் மாவட்டத்திலே தமிழ்ச் சாசனங்கள் சிலவே கிடைத்துள்ளன.[30] கல்பிட்டியாவிலுள்ள கல்லறையொன்றின் மீது ஒரு சாசனம் காணப்படுகிறது. சிலாபத்திலுள்ள முன்னேசுவரம் கோயிலிலுள்ள சாசனம்[31] கோட்டையை ஆண்ட பராக்கிரமபாகு மன்னர் அக்கோவிலுக்குச் செய்த தானங்களை எடுத்துக் கூறுகின்றது. கோவிற் பூசைக்காக எங்கெங்கு எவ்வளவு எவ்வளவு நிலங்கள் விடப்பட்டனவெனவும் பூசகருக்கு எவ்வெவ்வாறு பணமும் பொருளும் கொடுக்கப்பட்டனவெனவும் இச்சாசனத்திற் கூறப்பட்டுள்ளன. நிலம் சர்வமானியமாகவிடப்பட்டது. இவ்வொழுங்குசந்திராதித்தருள்ளவரை நிலைபெறவேண்டியது.

மத்திய மாகாணத்திலே ஐந்து தமிழ்ச் சாசனங்கள் கிடைத்துள்ளன.[32] சிங்கள மக்கள் புலம்பெயர்தல் வரட்சி பொருந்திய வன்னிப் பகுதியிலிருந்து இயற்கை

---

30. 1916 of 1940; 2181 of 1950; 2687 of 1967.
31. 2181 of 1950.
32. 566 of 1930; 1207 of 1934; 1623 of 1934; 1629 of 1934; 1891 of 1940.

வளம்மிக்க தென்மேல் இலங்கைக்குத் தொடர்ந்து சிங்கள மக்களுடைய முக்கிய இராசதானி மத்திய மாகாணத்திலுள்ள கம்பளைக்குப்போய் அங்கிருந்து கொழும்புக்கு அண்மையிலுள்ள கோட்டைக்குச் சென்று விட்டது; இயற்கையரண்கள் பல பொருந்திய மலை நாட்டிலே கண்டியைத் தலைநகராகக்கொண்ட தனியரசொன்று தோன்றியது. வட இலங்கையிலே நல்லூரைத் தலைநகராகக்கொண்ட யாழ்ப்பாணத் தமிழரசு தோன்றியது. இந்த மூன்று அரசுகளுக்குமிடையே வன்னிக் குறுநில மன்னர் தலையெடுத்தனர்; போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் என்போர் கோட்டை, யாழ்ப்பாணம் என்பவவற்றை அடிப்படுத்த பின்னர் கண்டியரசு ஒன்றே இலங்கையராகிய சிங்களவர் ஆதிக்கத்தில் எஞ்சியது. கண்டிச் சிங்கள மன்னர் மதுரை நாயக்க மன்னரோடு மணவினைத்தொடர்பு கொண்டனர். கண்டி அரசுரிமை நாயக்கமன்னர் பரம்பரையைப் பதினெட்டாம் நூற்றாண்டு பிற்பகுதியிலே சேர்ந்தது. கண்டிக்கடைசி மன்னர் தமிழ் பேசுவோராக அமைந்தனர். கண்டியிலே தமிழர் ஆதிக்கம் நிலவியது. கண்டி மாவட்டத்திலுள்ள உடுநுவரை இலங்காதிலக விகாரைச் சாசனம் அவ்விகாரைக்கு அயலிலே பாறை ஒன்றிலே காணப்படுகின்றது. மாத்தளை மாவட்டத்திலுள்ள மொரகொல்லைக்கு அண்மையிலுள்ள விகாரகின்னையென்ற இடத்திலே கண்டெடுக்கப்பட்ட கற்பலகையிலே திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்ற வணிகர் குழுவின் சாசனம் காணப்படுகின்றது. இலங்கையிலுள்ள இவ்வணிகர் குழுச் சாசனங்களுள் மிகவும் பெரியது இதுவே.

இச்சாசனங்களைவிட வேறு இன்னும் பதின்மூன்று சாசனங்கள் உள. இப்பதின்மூன்று சாசனங்களுள்ளே சில, இலங்கையின் பிற மாவட்டங்கள் சிலவற்றிலே ஆங்காங்கு காணப்படுகின்றன. சிலவற்றை எந்த

மாவட்டத்துக்குரியவையென நிச்சயப்படுத்த முடியவில்லை. இரண்டு சாசனங்கள் இரத்தினபுரி மாவட்டத்தைச் சேர்ந்தவை.[33] ஒன்று கேகாலை மாவட்டத்தைச் சேர்ந்தது.[34] எனவே, சப்பிரகமுவா மாகாணத்தைச் சேர்ந்தவையாக மூன்று சாசனங்கள் கிடைத்துள்ளன. இரத்தினபுரி மாவட்டத்திலுள்ள சிவனொளிபாத மலைக்கு அண்மையிலுள்ள பாறையொன்றில் வரையப்பெற்றுள்ள சாசனத்திலே சில எழுத்துக்களே வாசிக்கக்கூடியனவாயுள்ளன. கேகாலை மாவட்டத்துக் கோட்டகம என்ற இடத்தைச்சேர்ந்த தமிழ்ச்சாசனம் பிரசித்தமானது. யாழ்ப்பாண மன்னன் சிங்கள மன்னனைத் தோற்கடித்ததைப் பற்றி ஒரு புலவர் பாடிய செய்யுள் கல்லில் வெட்டப்பட்டுள்ளது. மேல்மாகாணத்திலே, நீர்கொழும்புக்கரையோரங்களிலே தமிழர் நீண்டகாலமாக வாழ்ந்து வருகின்றபோதும் நீர்கொழும்பு மாவட்டத்திலே தமிழ்ச்சாசனமெதுவும் கிடைக்கவில்லை. கொழும்பு மாவட்டத்தில் ஒரு தமிழ்ச் சாசனமும்[35] களுத்துறை மாவட்டத்தில் ஒரு தமிழ்ச்சாசனமும்[36] கிடைத்துள்ளன. களுத்துறை மாவட்ட நீதிமன்றத்திலுள்ள கற்பலகையிலே காணப்பட்ட கல்வெட்டு காளிகோவிலுக்கு முதலிகள் நிலம் கொடுத்ததைக் கூறுகின்றது. கொழும்பு - கண்டி வீதியில் ஏழாவது மைல் தூரத்தில் கண்டெடுக்கப்பட்ட கற்றூண், அக்கற்றூண் கந்தசாமி கோவிலுக்குக் கொடுக்கப்பட்டதைக்கூறுகின்றது. தென்மாகாணத்திலே காலி மாவட்டத்தில் ஒரு தமிழ்க் கல்வெட்டும் மாத்தறை மாவட்டத்தில் இன்னொரு கல்வெட்டும் கிடைத்துள்ளன.

---

33. 580 of 1930; 2670 of 1967.
34. 42.
35. 547 of 1930.
36. 546 of 1929.

காலிச் சாசனம் மும்மொழிச் சாசனமாகும்.[37] பதினைந்தாம் நூற்றாண்டுத் தொடக்கத்திலே சீனாவில் ஆட்சி செய்த சீனப் பேரரசரால் பொறிக்கப்பட்டது. மத காரியங்களுக்காக இலங்கையிலே சீனப் பேரரசர் செய்த தானங்களை இச்சாசனம் கூறுகின்றது. பௌத்த விகாரைக்குச் செய்த தானம் பாரசீக மொழியிலும் இந்துக் கோவிலுக்குச் செய்த தானம் தமிழ்மொழியிலும் பொறிக்கப்பட்டுள்ளன. மாத்தறையில் நைம்மன என்ற இடத்திலுள்ள ஹீங்கங்கொடவத்தை என்ற இடத்திலே கண்டெடுக்கப்பட்ட சாசனம்[38] தேவுந்தர என்ற இலங்கையின் தென்கோடிமுனையிலுள்ள கோவிலுக்குத் தானம் கொடுக்கப்பட்டதைக் கூறுகின்றது. இத்தானம் அக்கோவிற் பிராமணர் பொறுப்பில் விடப்பட்டிருக்கின்றது. தமிழர் மிகவும் சிறுதொகையினராக இன்று காணப்படும் களுத்துறை, காலி, மாத்தறை மாவட்டங்களிலும் முன்பு தமிழர் செல்வாக்கு இருந்திருக்கிறதென்பதற்கு இவ்விடங்களிலுள்ள சாசனங்கள் சான்று பகருகின்றன. ஆறு சாசனங்கள்[39] இலங்கையின் எவ்வெம் மாவட்டங்களுக்குச் சேர்ந்தனவென இந்நூலாசிரியராலே தீர்மானிக்க முடியவில்லை.

1967ம் ஆண்டுக்குப் பின்பும் தமிழ்ச் சாசனங்கள் கண்டெடுக்கப்பட்டு வருகின்றன. புத்தளம் மாவட்டத்தைச் சேர்ந்த சிலாபத்திலுள்ள இலாகத்து எப என்னுமிடத்திலே திசையாயிரத்து ஐந்நூற்றுவர் என்ற வணிக குழுவினர் சாசனமொன்று கண்டுபிடிக்கப்பட்

---

37. 41 of 1911.
38. 598 of 1930.
39. 83; 663 of 1931; 618 of 1931; 2220 of 1952; 2345 of 1956; 234 of 1956.

டுள்ளது; யாழ்ப்பாணத்திலே ஆரும் பராக்கிரமபாகு வின் காலத்தைச் சேர்ந்த தமிழ்ச் சாசனமொன்று கண்டு பிடிக்கப்பட்டது. ஊர்காவற்றுறைக் கடற்கோட்டை யிலே முதலாம் இராசேந்திரசோழன் காலத்துக் கல்வெட் டொன்று கிடைத்துள்ளது. பொலனறுவை மாவட்டத் திலுள்ள மதிரிகிரிய என்னும் ஊரிலே சோழராட்சிக் காலத்திலிருந்த சிவன்கோவிலின் சாசனமொன்று தெரிய வந்துள்ளது. யாழ்ப்பாணம் ஒல்லாந்தர் கோட்டைக் குள் முதலாம் இராசேந்திரசோழன் காலத்துச் சாசன மொன்று புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டது; ஆடுகள் தானமாக வழங்கப்பட்டதை இச்சாசனம் கூறுகின்றது; ஊர்காவற்றுறைக்கு அருகாமையிலுள்ள கரம்பனிலே தெரியவந்துள்ள கல்வெட்டு சிலாபம் அல்லது இந்தியக் கரையிலிருந்து கொண்டுவரப்பட்டதெனப்படுகின்றது; ஒரு மாநிலம் தானம் செய்யப்பட்ட விசயம் இச்சாசனத் திற் கூறப்படுகின்றது. யாழ்ப்பாணத்திலிருந்து இரு செப்பேடுகளும் சமீபத்தில் வெளிக்கொணரப்பட்டுள் ளன. இப்புதிய சாசனங்கள் பற்றிய விபரங்களைப் பேராதனை இலங்கைப் பல்கலைக் கழகத்திலிருந்து வெளி வரும் சிந்தனை என்னும் சஞ்சிகை இதழ்களிலே காண லாம்;

இந்நூலாசிரியர் அறிந்த வரையிலே ஊவா மாகாணம், தென்மாகாணத்து அம்பாந்தோட்டை மாவட்டம், மத்திய மாகாணத்து நுவரெலியா மாவட் டம் என்பனவற்றிலே தமிழ்ச் சாசனங்கள் எதுவும் கண்டுபிடிக்கப்படவில்லை. அம்பாந்தோட்டை மாவட்டத் திலும் ஊவாமாகாணத்திலுள்ள மொனராகலை மாவட் டத்திலும் தமிழர் செல்வாக்கு என்றும் அதிகமாக இருந்ததில்லை. நுவரெலியா மாவட்டத்திலும் ஊவா மாகாணத்திலுள்ள பதுளை மாவட்டத்திலும் மலைநாட் டுத் தமிழர் பெருந்தொகையாக இன்று வாழுகின்றனர்;

நுவரெலியா மாவட்டத்திலே மலைநாட்டுத் தமிழரே பெரும்பான்மைச் சமூகமாவர்.

இலங்கையிலே கண்டுபிடிக்கப்படாத சாசனங்கள் பல, இன்னும் இருக்கவேண்டும். கண்டுபிடிக்கப்பட்ட சாசனங்கள் யாவும் திருப்திகரமாக வாசிக்கப்படவில்லை; வாசிக்கப்பட்ட சாசனங்களுட் பெரும்பாலனவும் இன்னும் நன்கு பதிப்பிக்கப்பட்டு வெளிவரவில்லை. சாசனங்கள் கண்டுபிடிக்கப்பட்ட ஆரம்பகாலத்தில் அவை கிருஷ்ண சாஸ்திரி முதலிய இந்தியச் சாசனவியலாளருக்கு அனுப்பிவைக்கப்பட்டன. அவர்கள் இலங்கைச் சாசனங்களுட் சிலவற்றின் வாசிப்புகளை வெளியிட்டனரே தவிர அவற்றை முறையாகப் பதிப்பிக்கவில்லை. இலங்கைச் சாசனங்களை நன்கு பதிப்பிக்கத் தமிழ்ச் சாசனமொழியுணர்ச்சியும் இலங்கை வரலாற்றுணர்ச்சியும் அவசியம். இரண்டும் ஒருங்கே பொருந்தப்பெற்றவர்கள் மிகவும் அருகிக் காணப்பட்டதால், இதுவரையில் இத்துறையில் போதிய முன்னேற்றம் ஏற்படவில்லை. இலங்கைச் சாசனங்களிற் சிலவற்றின் வாசிப்புகளை வாசித்து நல்லமுறையிலே பதிப்பித்து வெளியிட்டவர்கள் என்று டி. எம். டி. சற். விக்கிரமசிங்க, செனரத் பரணவிதான, க. கணபதிப்பிள்ளை, கா. இந்திரபாலா என்பவர்களைக் கூறலாம்.[40] செனரத் பரணவிதானவும் க. கணபதிப்பிள்ளையும் தமிழ்ச் சாசனங்கள் பலவற்றை நன்கு பதிப்பித்துள்ளனர். ஹியூ. நெவில், ஜி. எம். வவுலர், கே. டி. சுவாமிநாதன், ஆர்.

40. Epigraphia Zeylanica Also now defunct University of Ceylon, Review, etc,

சி. புரக்டர், சி. இராசநாயகம் என்போரும் தமிழ்ச்சாசனங்களைப் பற்றிக் கட்டுரைகள் வரைந்துள்ளனர்.[41]

தமிழ்ச் சாசனங்களை வாசிப்பதும் ஆராய்வதும் வில்லங்கமானது; பொறுமையும் பெருமுயற்சியும் வேண்டும். அவற்றை ஆராய்ந்த பின் வெளியிடுவது இன்னும் கஷ்டமாக இருக்கிறது. அவற்றை வெளியிடுவதிலே பொருட்செலவு அதிகமாகும். இன்று இலங்கைத் தமிழ்ச் சாசனத் துறையிலே உழைத்து வருபவர்களுள்ளே கா. இந்திரபாலா தம்முடைய சாசன ஆராய்ச்சிகளைத் தாம் பதிப்பாசிரியராக இருந்து வெளியிடும் சிந்தனை யிதழ்களிலே வெளியிட்டு வருகின்றார். இந்நூலாசிரியர் இலங்கைத் தமிழ்ச்சாசனங்களை வாசித்து ஆராய்ந்தெழுதிய கட்டுரைகளை இதுவரையிலே வெளியிடும் வசதி கிடைக்கவில்லை. சி. பத்மநாதன், செ. குணசிங்கம் ஆகியோர் சில செப்பேடுகளை நன்கு பதிப்பித்ததன் மூலம் இத்துறையிலே அண்மையிலே பிரவேசித்திருக்கிறார்கள்: சாசனவியலிலே மூவகைப்பணிகள் உள. இதுவரை கண்டுபிடிக்கப்படாத சாசனங்கள் கண்டுபிடிக்கப்பட வேண்டும். கண்டுபிடிக்கப்பட்டும் இதுவரை நன்கு பதிப்பிக்கப்பட்டுவெளியிடப்படாத சாசனங்கள் நன்கு பதிப்பிக்கப்பட்டு வெளியிடப்படவேண்டும். முன்னோர் பதிப்பித்த சாசனங்களின் வாசிப்புகள், விளக்கங்களிலே பிழைகள் இடம்பெற்றிருக்கலாம்; அவை திரும்பவும் ஆராயப்படவேண்டும்;

---

41. Journal of the Royal Asiatic Society (Ceylon Branch) Vol. 10, No 35; Ceylon Historical Journal Vol. 10, pp. 44 - 47; Ceylon Literary Review Vol. II No. 1, No. 5, and No. 7; Taprobanian Vol 1, II and III.

# மேற்கோள்


Burnell, A. C. — *Elements of South Indian Palaeography*, 2nd edition. London, 1878.

Dani, Ahamad Hasan — *Indian Palaeography*, Oxford 1963.

Kannaiyan, V. — *Scripts in and around India*, Government Museum Bulletin, Madras, 1960

Mahalingam, T. V. — *Early South Indian Palaeography*, Madras, 1967.

Meenakshisundaram, T. P. — *A History of Tamil Language*, Poona, 1965.

Nilakanta Sastri K. A. — *Pandyan Kingdom*, London, 1929. The colas 2nd edition Madras, 1955.

Sircar, D. C. — *Indian Epigraphy*, Delhi, 1965.
*Indian Epigraphical Glossary*, Delhi, 1966.

Sivaramamurti, C. — *Indian Epigraphy and South Indian Scripts*. Bulletin of the Madras Government Museum, Madras, 1952.

Shanmugam, S. V. — *Epigraphy and Tamil Linguistics*, Reprinted from Seminar on Inscriptions, 1966, Madras, 1968.

University of Ceylon — *History of Ceylon*, Volume I. Two Parts. Colombo.

Veluppillai, A. — *A study of the Language of Tamil Inscriptions of* Caṭāvarmaṉ Cuntara Pandya and Māṟavarmaṉ Kulacēkaraṉ Unpublished thesis Submitted to the Ph. D. degree of the University of Ceylon in 1962.
*A Study of the Language of Tamil inscriptions of* the period 800 to 920 A. D. Unpublished thesis. Submitted to the D. Phil. degree of the University of Oxford in 1964.

Adjectives in Tamil, Proceedings and Transactions of the First *IATR* Conference-Seminar, Volume II, Kuala Lumpur, 1966; Vīracōḻiyam as a grammar of the language of Tamil inscriptions, Paper to the Second *IATR* Conference-Seminar, Madras 1968, Forthcoming in the University of Ceylon Review; A Review of the Works of the Tamil Palaeography, Second International Conference-Seminar of Archaeology, Colombo 1969; North-Indian Influence on South Indian Scripts, Third *IATR* Conference-Seminar, Paris, 1970.

# தமிழ் நூல்கள்


இராகவையங்கார், மு. — *சாஸனத்தமிழ்க்கவி சரிதம். இரண்டாம் பதிப்பு, சென்னை* 1958.

இராசமாணிக்கனார், மா. — *கல்வெட்டுக்களும் அரசியல் வரலாறும், Reprinted from the Journal of the Annamalai University 1959, 60.*

*சைவசமயவளர்ச்சி, சென்னை,* 1958

*பல்லவர் வரலாறு, சென்னை,* 1952.

பரமசிவானந்தம், அ. மு — *தமிழ் உரைநடை, சென்னை,* 1959.

சுந்தரேசவாண்டையார், வை. — *கல்வெட்டு மூலமும் விளக்கவுரையும், சென்னை,* 1958.

சுப்பிரமணிய அய்யர், ஏ. வி — *தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி, சென்னை,* 1959.

செல்வநாயகம், வி. — *தமிழ் உரைநடை வரலாறு, பேராதனை,* 1957

வேங்கடசாமி, மயிலை சீனி — *சாசனச் செய்யுள் மஞ்சரி, சென்னை,* 1959.

வேலுப்பிள்ளை, ஆ. — *தமிழ் வரலாற்றிலக்கணம், சென்னை,* 1966.

# JOURNALS

Annual Report on South Indian Epigraphy (A.R. on S. I E.).
Archaeological Survey of Ceylon Annual Report (A. S C. A. R ).
Ceylon Historical Journal.
Epigraphia Indica. (E. I ).
Epigraphia Zeylanica.
South Indian Inscriptions (S. I. I.)
South Indian Temple Inscriptions.
Taprobanian.
Travancore Archaeological Series.
University of Ceylon Review.
சிந்தனை.
செந்தமிழ்

# அகரவரிசை




# பிழைதிருத்தம்

பக்: 2. வரி 13, சிலற்றை - சிலவற்றை
பக். 23. ,, 22, சுப்பிரமணிய சாஸ்திரி - சுப்பிரமணிய ஐயர்
பக். 47. ,, 7, ககாக்கள் - சகாக்கள்
பக். 82, ,, 6, அவ்வழியிலும் - அல்வழியிலும்
பக்; 91, ,, 16, எவ - என
பக். 114, ,, 6, சிறு - கிறு
பக். 127, ,, 24, வி - வ்
பக். 131, ,, 21, நிகழ்காலத்தைக்-நிகழ்கால்த்தைச்
பக். 218, ,, 15, அரசனுனை - அரசனுணை
பக். 239, ,, 18, நெடிதிழியு ளூளிடை துறை - நெடிதிய ளூழியு ளிடைதுறை
பக். 261, அடிக்குறிப்பு தமிழ் - செந்தமிழ்
பக். 267, வரி 11, புகழ் - புகத்
பக். 277, ,, 24, மங்கலன் - மங்கலவன்
பக். 278, ,, 15, இவங்கை - இலங்கை
பக். 308, ,, 5, தமிழாச்கம் - தமிழாக்கம்
பக்; 315, ,, 14, ஆகும் - ஆறுல்
பக்; 322, ,, 6, நகரங்களிலர் - நகரங்களிலார்
பக். 328, ,, 20, மகாவிரையின் - மகாவிகாரையின்

(சுலபமாக அறிந்துகொள்ளக்கூடிய நிறுத்தக்குறிகளின் பிழைதிருத்தம் இங்கு இடம்பெறவில்லை.)